ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஸ்ரீலோககுரவே நம:.

ப்ரபந்நஜநகூடஸ்தாம்ஶரான நம்பிள்ளை திருவடிக
ளாகிய வடக்குத் திருவீதிப்பிள்ளை குமாரராய்,
ப்ரணதார்த்திஹராம்ஶஜராய்,
ஸகலஶாஸ்த்ர நிபுணராய்,
ஸகல சேதநோஜ்ஜீவநகாமரான
பிள்ளை லோகாசார்யர்
திருவாய்மலர்ந்தருளிய

# அஷ்டாதஶரஹஸ்யம்

இவை
ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி
பெருமாள்கோவில் அழகிய மணவாள
ராமாநுஜஜீயர் ஸ்வாமி நியமநம் பெற்று
ஸ்ரீமதித்யாதி புதுப்பேர்
இளையவில்லி ராமாநுஜாசார்யர் ஸ்வாமியினுடைய
விஶேஷகடாக்ஷ பாத்ரபூதரான
திருவயோத்யை ராமாநுஜ ஜீயரென்கிற
ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமியால்
அநேக தாளபத்ரகோஶங்களைக்கொண்டு
டிப்பணியுடனும், ப்ரமாணத்திரட்டுடனும்
பரிஶோதிப்பித்துப் படங்களுடன்
ஸ்ரீமதித்யாதி, கோ. க. அண்ணன் ஸ்வாமி
திருவடி ஸம்பந்தியான,

**கா. வெ. திருக்கச்சிநம்பி தாஸரால்,**

ஆநந்த அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.



1911.

ஶ்ரீ

ஶ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஶ்ரீமல்லோககுரவே நம:.

ஶ்ரீமத் வரவரமுநயே நம:.

# அவதாரிகை.

—:o:—

பரமகாருணிகனான ஸர்வேஶ்வரனாலே மயர்வற மதிநலமருள் பெற்று, தத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளை கையிலங்கு நெல்லிக்கனிபோலே விஶத விஶததர விஶததமமாக ப்ரத்யக்ஷீகரித்திருக்கும் பொய்கை பூதம் பேயார் புகழ்மழிசை அய்யன் சேரலர்கோன் துய்ய பட்டநாதன் அன்பர்தாள்தூளி நற்பாணன் நற்கலியன் முதலான திவ்யஸூரிகளுக்கு அவயவிபூதரான மாறனுடைய புநரவதாரபூதரான நம்பிள்ளையினுடைய திருவடிகளாகிய வள்ளல் வடக்குத்திருவீதிப்பிள்ளைக்கு 'ப்ரணதார்திஹராம்ஶாய ப்ரக்ருஷ்டகுணஶாலிநே। லீலயோத்ருதலோகாய லோகார்யகுரவே நம:' என்று ஜீயர் நாயனார் அருளிச்செய்தபடியே ஆர்திதார்யபரிஜாநதீக்ஷிதனான பேரருளாளன் கலி(௪௩௦௭) க்ரோதந வர்ஷத்தில் துலாமாதத்தில் ஶ்ரவண நக்ஷத்திரத்தில், ஶுக்லபக்ஷநவமீதிதியில் திங்கள்கிழமை திநம் கோயிலில் புத்ரனாய் அவதரித்து நாதயாமுநயதிவராதியாசார்ய பரம்பராப்ராப்தார்த விஶேஷங்களை ஸகலசேதநர்களுமறிந்து உஜ்ஜீவிக்கைக்காக அநேக ரஹஸ்யாதிய ப்ரபந்தமுகேந ப்ரகாஶிப்பித்தருளினான்.

அவற்றில் இப்பொழுது அகப்பட்ட ரஹஸ்ய க்ரந்தங்களாவன.—

(௧) முமுக்ஷுப்படி,
(௨) தத்த்வத்ரயம்,
(௩) அர்த்தபஞ்சகம்,
(௪) ஶ்ரீவசநபூஷணம்,
(௫) அர்ச்சிராதி,
(௬) ப்ரமேயஶேகரம்,
(௭) ப்ரபந்நபரித்ராணம்,
(௮) ஸாரஸங்க்ரஹம்,
(௯) ஸம்ஸாரஸாம்ராஜ்யம்,
(௧௦) நவரத்நமாலை,
(௧௧) நவவிதஸம்பந்தம்,
(௧௨) யாத்ருச்சிகப்படி,
(௧௩) பரந்தபடி,
(௧௪) ஶ்ரிய:பதிப்படி,
(௧௫) தத்த்வஶேகரம்,
(௧௬) தநித்வயம்,
(௧௭) தநிசரமம்,
(௧௮) தநிப்ரணவம், குஹ்யத்ரய வ்யாக்யாநம்,

முதலானவை. தத்த்வத்ரயவ்யாவீயாகத்தால் தத்தவத்ரயம் மூன்றுபடியிருப்பதாகவும் தெறியவருகிறது. தத்த்வவிவேகம் என்கிறஸம்ஸ்க்ருதக்ரந்தம் இவர் அருளிச்செய்ததாகவும் பெரியதிருமுடியடவிலிருக்கிறது [அந்த க்ரந்தம் எழும்பூர் லைப்ரரியிலிருக்கிறது.] இதாநீமவைகாணவில்லை. இந்தவஷ்டாதஶரஹஸ்யங்கள் முன்பு பலபேர்களாலும் பலவிடமாக அச்சிட்டு வெளிப்படுத்தியிருந்த போதிலும், அவைகள் ப்ராசீநதாளகோஶங்களுக்கு அநுகுணமாகயில்லாமையாலும், பலவிடப்பிழைகளுடனுமிருப்பதாலும், இவற்றை பரிஶோயித்துத் தரவேணுமென்று கா. வெ. திருக்கச்சிநம்பிதாஸருடைய ப்ரார்த்தனையால், ஸ்ரீபரமஹம் ஸேத்யாதி பெருமாள்கோயில். அழகியமணவாளராமாநுஜ ஜீயர்ஸ்வாமி தாள கோஶங்களைத்தந்து நன்றாக பரிஶோயிக்கநியமிக்க, அந்த நியமநத்தாலும், அநேக ஸாத்வதர்களுடைய ப்ரார்த்தனையாலும் டிப்பணிகளுடனும் ப்ரமாணாகரத்தினுடனும் யதாமதி, ஸ்ரீபெரும்பூதூர் பரமஹம் ஸேத்யாதி வாயலெகுலதிலகமஹாசார்யசரணாரவிந்தஸமாஶ்ரித ஸ்ரீஶைலலக்ஷ்மணமுநீந்த்ர (எம்பார்ஸ்வாமி) சரணாரவிந்தஸமாஶ்ரிதரான புதுப்பேர் இளையவில்லி ராமாநுஜாசார்யஸ்வாமிகளுடைய பரமக்ருபாபாத்ர ஸோதரரான திருவயோத்யையை ராமாநுஜஜீயராலே பரிஶோயிக்கப்பட்டது.

தாளகோஶங்களை உபகரித்த ஸ்வாமிகள் திருநாமம்.

(க) ஸ்ரீபரமஹம் ஸேத்யாதி பெருமாள்கோயில் அழகிய மணவாளராமாநுஜஜீயர் ஸ்வாமிகள். (புஸ்தகம். ௩.)

(௨) திருவல்லிக்கேணி பத்தராவி ஸ்ரீநிவாஸாச்சார்ஸ்வாமிகள், தநிஶ்வயம், தநிசரமம், தநிரப்ணவம், பரந்தபடி, தத்த்வஶேவரம்.

(௩.) ஸ்ரீரங்கம் நம்மாழ்வார் ஸந்நிதி கோவிந்தாசார் ஸ்வாமிகள். (கஅ-ரஹஸ்ய. க)

(௪) ஸ்ரீபெரும்பூதூர் தோமடம். முத்தப்பங்கார் ஸ்வாமிகள். (தநிசரமகோஶம்-க.)

(௫) ஸ்ரீபரமஹம் ஸேத்யாதி திருநாராயணபுரம் யதிராஜ நாராயணஜீயர் ஸ்வாமிகள். [தாளகோஶங்களைக்கொண்டு பரிஶோயித்த வச்சுகோஶம் க.]

(௬) ஸ்ரீபரமஹம்ஸேத்யாதிஸாகேதராமாநுஜஜீயர் ஸ்வாமிகள் [கஅ-ரஹஸ்ய. க.]

---

# அட்டவணை.


| | | பக்கம். |
|---|---|---|
| (௧) முமுக்ஷுப்படி, | ௧-ப்ரகரணம். | ௧. |
| | ௨-ப்ர. | ௭. |
| | ௩-ப்ர. | ௯. |
| (௨) தத்த்வத்ரயம். | ௧-ப்ர. | ௧௪. |
| | ௨-ப்ர. | ௧௭. |
| | ௩-ப்ர. | ௨௦. |
| (௩) அர்த்தபஞ்சகம். | | ௨௪. |
| (௪) ஸ்ரீவசநபூஷணம். | ௧-ப்ர. | ௩௩. |
| | ௨-ப்ர. | ௩௬. |
| | ௩-ப்ர. | ௩௮. |
| | ௪-ப்ர. | ௪௭. |
| | ௫-ப்ர. | ௪௯. |
| | ௬-ப்ர. | ௫௨. |
| (௫) அர்சிராதி. | | ௫௪. |
| (௬) ப்ரமேயசேகரம் | | ௬௮. |
| (௭) ப்ரபந்நபரித்ராணம். | | ௭௦. |
| (௮) ஸாரஸங்க்ரஹம். | | ௭௨. |
| (௯) ஸம்ஸாரஸாம்ராஜ்யம். | | ௭௪. |
| (௧௦) நவரத்நமாலை. | | ௭௬. |
| (௧௧) நவவிதஸம்பந்தம். | | ௭௭. |
| (௧௨) யாத்ருச்சிகப்படி. | ௧-ப்ர. | ௮௨. |
| | ௨-ப்ர. | ௮௩. |
| | ௩-ப்ர. | ,, |
| (௧௩) பரந்தபடி. | ௧-ப்ர. | ௮௯. |
| | ௨-ப்ர. | ௧௧௪. |
| | ௩-ப்ர | ௧௪௪. |
| (௧௪) ஸ்ரியஃபதிப்படி. | ௧-ப்ர. | ௧௭௩. |
| | ௨-ப்ர. | ௧௮௩. |
| | ௩-ப்ர. | ௧௮௯. |
| (௧௫) தத்த்வசேகரம். | ௧-ப்ர. | ௧௯௬. |
| | ௨-ப்ர. | ௨௪௧. |
| | ௩-ப்ர. | ௨௬௦. |
| | ௪-ப்ர. | ௨௬௯. |
| | ௫-ப்ர. | ௨௭௩. |
| (௧௬) தநித்வயம். | | ௨௮௦. |
| (௧௭) தநிசரமம். | | ௩௨௨. |
| (௧௮) தநிப்ரணவம். | | ௩௫௦. |


——:o:——

# பிழை திருத்தம்,

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| க | உரு | ஸூயி | ஸந்யி |
| ரு | உஅ | ஶயஷி | ஶஷி |
| எ | கO | ஆரார் | ஆசார் |
| அ | உரு | மூலையிலை | மூலையிலே |
| கூ | கஎ | ஸர்வேஷி | ஸர்வவேஷி |
| கக | கO | மத்தைச்யொ | மத்தையொ |
| கரு | ரு | ருசு | ருசி |
| கசு | உஅ | இடையும் | எடையும் |
| கஎ | சு | ஏக[illegible]யிக்க | ஏகமாயிருக்க |
| ,, | அ | அஜஊமாய், ஆநந்தரூபமாயி | அஜஊமாயி |
| உO | கO | அஹங்காராதிகளில் | அஹங்காராதிகளிலில் |
| உரு | கசு | ஜ்ஞாநப்ரயாக | தத்வஜ்ஞாநப்ரஷாந |
| ,, | உஉ | திர்யக்த்வம் போலே | திர்யக்த்வம் ஸ்யாவரத்வம் |
| ,, | ௩அ | ஶாபம்வ்யாஜம், அவதாரம் ஜச்சிகமெ | ஶாபம் வ்யாஜம் அவதாரம் ஜச்சிககம்' எ |
| உச | கO | ஜநகத்வமும், அமேஷ | ஜநகத்வமும், ஸூஹாஶ்ரயத்வமும், அமேஷ |
| உஎ | கரு | தஷேவ | தயைவ |
| ,, | உஅ | ஹவம் ஸங்ம | ஹவம் அஸங்ம |
| உஅ | கசு | நிதேரய | நிஶ்ரேய |
| ௩எ | க | க-வது | உ-வது |
| ௩கூ | க | க-வது | ௩-வது |
| ,, | உஉ | சேருமோவென்னில், அது | சேருமோவென்னில், அதுக்கடி-ப்ராவண்யம். அது |
| சக | ,, | உ-வது | ௩-வது |
| சஉ | ௩ | ரமவத | ஹாமவத |
| ச௩ | க | உ-வது | ௩-வது |
| சச | கசு | த்ருதீயப்ரகரணம்॥௩॥ | [எடுத்துவிடுக]. |
| சஎ | க | ௩-வது | ச-வது |
| சஅ | ரு | யுவதம | யுவதயஃ |
| சகூ | க | ௩-வது | ரு-வது |
| ,, | கஉ | ஸ்வஷோஷ | †ஸ்வஷோஷ |
| ,, | உசு | ஸந்யாநம் | ஸந்யாநம் |
| ருO | ச | ௩எO | ௩அO |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௫௦ | ௬ | ௩௭௧. | ௩௮௧ |
| ,, | ,, | ௩௭௨. | ௩௮௨ |
| ,, | ௭ | சதுர்யப்ரகரணம் த்ரிபாத் விபூதிப்ரகரணம்] | [எடுத்துவிடுக] |
| ௫௧ | ௩௮ | யாஹேது, | ஹயஹேது, |
| ,, | ௧ | ௩-வது, | ௫-வது |
| ௫௨ | ௪௦ | ங்கொலேங், | யங்கொலேங் |
| ௫௩ | ௧ | ௩-வது | ௫-வது |
| ,, | ௨௪ | உபாயங் | உபாயாங் |
| ௫௪ | ௬ | ப்ரயம | ப்ரயம |
| ,, | ௧௪ | †ப்ரயம | [௫௫-ம்பக்கத்தில்-௩௮-ம் வரியிலிருக்கும் டிப்பணியை ௫௪.ம் ப-௧௪ம் வரிக்குச் சேர்த்துக்கொள்க] |
| ,, | ௨௧ | ஸ்ரீ | ஶ்ரீ |
| ,, | ௨௬ | வாஜிநா | வாஜிநஃ |
| ,, | ௩௪ | தலேமகள் | தலேமகன் |
| ௫௫ | ௪ | எதஜி | ஏதஜீ |
| ,, | ௩௪ | உச்ஷி | உச்ஷி |
| ,, | ௩௮ | மநுஸந்தா | மநுஸந்யாதா |
| ,, | ,, | ஸவீ | ஸள |
| ௫௬ | ௩௩ | மாநஃ | மானைஃ |
| ,, | ௩௪ | பரஸ்யாம | பரஸ்யாம் |
| ௫௭ | ௩௦ | ஸாரயீயும் | ஸாரயீயம் |
| ௬௧ | ௩௨ | பணிசெய்துன் | பணிசெய்துண |
| ௬௪ | ௨௩ | ஶ ஶோஷிதம் | ஶோஷிதம் |
| ,, | ௩௮ | நித்தமுக்த | நித்யமுக்த |
| ௬௫ | ௩௫ | சிறுற்போ | சிறுற்போ |
| ௬௮ | ௧௪ | மஹமந்ந | அஹமந்ந |
| ,, | ௧௫ | ஒண்டொடியான் | ஒண்டொடியாள் |
| ௭௦ | ௪ | ஷீர்ரா | ஷீரா |
| ௭௨ | ௧௯ | விரும்புநம் | விரும்பும்ந |
| ௭௭ | ௩௩ | மகாாத் | மகாரத் |
| ௯௧ | ௩௨ | ப்ரவ்யூஹ | பரவ்யூஹ |
| ௯௯ | ௧௫ | ஜீயைவ | ஜீயயைவ |
| ௧௦௧ | ௨௯ | ப்ரயமா | ப்ராயமா |
| ,, | ௩௮ | ப்ரணவார்த் | ப்ரணவார்யத் |
| ௧௦௩ | ௧ | ரஸஜ்ஞாஃ | ரஸஜ்ஞஃ |
| ௧௦௫ | ௨௯ | ஹேரமய | ஹேரதீய |
| ௧௦௭ | ௧௫ | விஷ்யாந்யத்வாமாவ | விஷயாந்யத்வாஹாவ |
| ௧௧௮ | ௩௧ | வங்மா | வங்ம |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௧௯ | ௩௩ | நாகர்மண | நகர்மணா |
| ௧௨௫ | ௨௩ | ஶ்லேகா | ஶ்லோகா |
| ௧௩௦ | ௬ | ஸாயநந் | ஸாயநாந் |
| ௧௪௮ | ௧௯ | அபாசா | அபசா |
| ௧௫௮ | ௨௮ | தலையெடுத்நு | தலையெடுத்நு |
| ௧௭௧ | ௧௫ | சொல்லுகிறாப | சொல்லுகிறாப |
| ௧௭௩ | ௫ | உபாயய் வாயவஸக் | உபாயாய் யவஸா |
| ,, | ௩௨ | வி[illegible]தபாக | விபரீதமாக |
| ௧௮௧ | ௧ | கைங்கர்யத்துக்துக்கு | கைங்கர்யத்துக்கு |
| ௧௮௪ | ௨௦ | ப்ரதந்த்ர | பரதந்த்ர |
| ,, | ௨௧ | பாதரந் | பாரதந் |
| ௧௯௬ | ௧௦ | அர்யபஞ்சச | அர்யஞ்சக |
| ,, | ௩௨ | பாயந்தம் | பர்யந்தம் |
| ௧௯௯ | ௪௨ | ஷீ ஹ்மே | ஷீ ரஹ்மே |
| ௨௦௪ | ௧௨ | ஷிஙம் | ஷிஃயம் |
| ௨௦௬ | ௧௬ | நிரஸார்ய | நிராஸார்ய |
| ௨௨௨ | ௧ | ரந்யிஂ | ரந்யிঃ |
| ,, | ௨௬ | ஏகோயயேதঃ | ஏகோய் யேயঃ |
| ௨௨௩ | ௨௫ | உன்று | என்று |
| ௨௨௯ | ௯ | அயிகாரஶ் | அயிகாராஶ் |
| ௨௩௨ | ௪ | ருரஃ | ருஃர |
| ௨௩௫ | ௨௬ | ஶரீராவஸாநத்தாலே | ஶரீராவஸாநத்திலே |
| ௨௩௮ | ௨ | ஸாமந்ய | ஸாம்ாந்ய |
| ௨௪௦ | ௨ | ய் யோ | ய் யேயோ |
| ௨௪௬ | ௨ | ப்ரதிபத்கியும் | ப்ரதிபத்தியுமி |
| ௨௪௭ | ௨௯ | தஸமி | தஸ்மி |
| ௨௪௮ | ௧௨ | ப்ரக்ய | ப்ருயக் |
| ,, | ௧௫ | ஜஞாந | ஜஞாந |
| ,, | ௩௬ | ஜஂ | ஜடம் |
| ௨௪௯ | ௪௧ | ஊர்ஶ்யதி | ஊர்ஶயதி |
| ௨௫௨ | ௨ | தோயேந ம்யாம் | தோயே ஜீவாந் வ்யஸஸர்ஜ ஹ-ம்யாம் |
| ,, | ௧௧ | ஸேஊகம் | ஸஊகம் |
| ௨௬௧ | ௩௮ | ப்ரதிஷோத்ய | ப்ரதிஷேயாத் |
| ௨௬௬ | ௧௭ | மூலஹ-தாஜ | மூலஹ-தாஜ் |
| ௨௬௭ | ௧௬ | ஶரீரங்கூடும் | ஶரீரங்கூடும். |
| ,, | ௩௦ | தச்ஊ | தச்ஊ |
| ௨௭௦ | ௭ | ஶருதீதிஹஸ | ஶ் ருதீதிஹாஸ |
| ௨௭௧ | ௬ | அநருத | அந்ருத |
| ,, | ௭ | ஏதம் | ஏதம் |
| ,, | ௨௧ | பத்தயா | பத்யா |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உ௭உ | ௧0 | ஸத்யம் த்யம் | ஸத்யம்ஸத்யம் |
| ,, | உ௪ | ஊ ராதயயா | ஊ ராத்யயா |
| ,, | ௩௩ | ஶருத | ஶ்ருத |
| உ௭௩ | ௫ | புருஷார்யஸ்வரூப | விரோயிஸ்வரூப |
| உ௭௪ | ௧௧ | க ளுக்கு | களுக்கு |
| உ௭௭ | ௩0 | யாசிறது | யாகிறது |
| உ௮௪ | உஉ | பாலயத்ஸ | பாலயத் |
| உ௮௫ | ௧௭ | தன்னேற்றம். செ | தன்னேற்றம்செ |
| ,, | ,, | (ஸக்ர்மநா-துடங்கிபோ ந்திராமையாலே' என் கிறபர்யந்தமயிகம். [௧௭,௧௮,௧௯,உ0 வரிகள்) | |
| உ௮௭ | ௩௩ | ஒரௌபஜியும் | ஜீரௌபஜியும் |
| உ௮௮ | ௩௭ | மநந்தவித | மநந்வித |
| உ௯0 | ௧௭ | பொறித்தால் | பொறித்தாய் |
| உ௯௧ | உ௩ | ககப்போனேன் | கப்போனேன் |
| உ௯௪ | ௫ | ப்ராப்தன் | ப்ராப்தன் |
| ,, | ௯ | நிர்வந்யமுண்டு | நிர்வந்யமுண்டு |
| உ௯௲ | உ0 | ருசிவிஶ | ருசிவிஶ |
| உ௯௮ | உ௧ | ஹமவத | ஹமவத் |
| ௩0௧ | ௧௭ | செர்க்க | சேர்க்க |
| ௩0௩ | ௧0 | ஸஜீரூஶ | ஸஜீரூஶ |
| ௩0௪ | ௧உ | இவைத்தினனுடை | இவைத்தினுடை |
| ,, | உ௲ | விஷயத்தில் | விஷயத்தில் |
| ,, | ௩௫ | அபக்ருஷ்ட ராடு | அபக்ருஷ்டரோடு |
| ௩0௮ | ௧௪ | நியியில | நியியி |
| ,, | உ௩ | அழித்து | அழைத்து |
| ௩௧0 | உ | புருஷ் | புருஷ |
| ,, | ௫ | விதீரஹத்தையும் | விதீரஹமும் |
| ,, | ௩0 | ஸ்த | ஸ்வ |
| ௩௧உ | ௫ | பரமக் | பரமஹக் |
| ௩௧௪ | ௲ | இற்வறில் | இவற்றில் |
| ,, | உ௫ | ஜீயயா | ஜீயி |
| ௩உ0 | ௧௲ | அச்சிராஜி | அர்ச்சிராஜி |
| ௩உ௧ | ௩௭ | ச்மேத் | ச்ஹேத் |
| ௩உஉ | ௮ | நிவரரண | நிவாரண |
| ௩உ௩ | ,, | ஸௌஉ | உஸௌ |
| ௩உ௪ | ௫ | ல்லுகையாலே | ல்லுகையாலே. |
| ,, | உ௭ | காம்ரூ | காம்யரூ |
| ௩உ௫ | ௲ | யஶ | யஶ |
| ௩உ௲ | ௧௪ | தஸ்மை) (தஜீ॰ | தஸ்மை; தஜீ॰ |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௨௮ | ௭ | ஶ்ரா | ஶ்ரோ |
| ௩௩௦ | ௩௭ | வீரஹ்மா | ஷீரஹ்ம |
| ௩௩௧ | ௭ | இதில் | இதி |
| ,, | ௩௮ | ஶாய | ஸாய |
| ௩௩௩ | ௧௪ | யொலுகிற | சொல்லுகிற |
| ௩௩௫ | ௩௪ | பிராட்டியை | பிராட்டி |
| ௩௩௬ | ௧௭ | ஶ்ணருயாஶ | ஶ்ணபாஶ [பாடாந்தரம்] |

# ரிஜிஸ்டர் அறிவிப்பு.

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில் :— 1867-ம் வருஷத்திய 25-வது ஆக்டின் 20-வது பிரிவின் 6-வது உட்பிரிவின்படி கனம் பொருந்திய இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் அவர்கள் சட்டத்திற்கிணங்க இந்நூலை பிறர் அச்சிடாதபடி காபிரைட்ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறது.

இந்நூலுக்குடையவராகிய என் உத்தரவின்றி இந்நூலையாவது இந்நூலிலுள்ள பாகங்கள் எதையாவது, பிறர் அச்சிடலாகாது.

இதைக்கவனியாது அச்சிடத்துணிவரேல் அதனாலுண்டாகும் நஷ்டத்திற்கும், கவர்ன்மெண்ட் சட்டத்திற்கும் உட்படுவரென்று அறிவிக்கின்றனன்.

இங்ஙனம்,

☞ கா. வெ. திருக்கச்சி நம்பிதாஸர்,

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய புஸ்தகசாலை.

திருவல்லிக்கேணி



ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜ காசார்யராய் எழுந்தருளி யிருக்கும் அயோத்யா ராமானுஜ ஜீ யரென்கிற ஸ்ரீரங்கநாராயணஜீயர்.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ஸ்ரீலோககுரவே நம:.

முமுக்ஷுப்படி.

தனியன்.

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே ।
ஸம்ஸாரபோகிஸந்தஷ்ட ஜீவஜீவாதவே நம: ॥

[மணவாளமாமுனிகளருளிச்செய்தது.]

லோககுரும் குருபி ஸ்ஸஹ பூர்வை: கூரகுலோத்தமதாஸமுதாரம் ।
ஸ்ரீநகபத்யபிராமவரேசௌ * தீப்ரசயாநகுரும் ச பஜேஹம் ॥

கோதிலுலகாசிரியன் கூரகுலோத்தமதாதர்
தீதில்திருமலையாழ்வார் செழுங்குரவைமணவாளர்
ஓதரியபுகழ் † த்திருநாவீறுடையபிரான்தாதருடன்
போதமணவாளமுனி பொன்னடிகள்போற்றுவனே. ‡

வாழியுலகாசிரியன் வாழியவன்மன்னுகுலம்
வாழிமுடும்பையென்னும் மாநகரம்
வாழிமனஞ்சூழ்ந்தபேரின்பம் மல்குமிகுநல்லார்
இனஞ்சூழ்ந்திருக்கு மிருப்பு.

ஓதுமுடும்பை யுலகாசிரியனருள்
ஏதுமறவாத வெம்பெருமான்
நீதிவழுவாச்சிறுநல்லூர் மாமறையோன்
பாதம்தொழுவார்க்கு வாராதுயர்.

உலகாசிரியன் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

* தீப்ரசயம் வரயோகிநமீடே 'என்று மணவாளமாமுனிகளையுஞ்சேர்த்து ப்ரதிவாதிபயங்கரர் அண்ணாவநுஸந்திக்கும்படி.

† புகழ்நாவீறுடையபிரான் என்றிருப்பின் செப்பலோசைமிகாது. சில ஸ்ரீகோசங்களிலும் இப்படியிருக்கின்றன.

‡ இப்பாட்டு புராதந கோசங்களிலும், பெரியோர்களநுஸந்தாநமுமில்லை. 'வாழியுலகாசிரியன்' என்கிறபாட்டும், 'ஓதுமுடும்பை' என்கிறபாட்டுமே அநுஸந்தாநமாகக்கடவது. இதுவே ஸத்ஸம்ப்ரதாயம்.

# திருமந்த்ரப்ரகரணம் ॥ ௧ ॥

## —[உபோத்காதம்.]—

முமுக்ஷுவுக் கறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று. (௧). அதில் ப்ரதம ரஹஸ்யம் திருமந்த்ரம். (௨). திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப்போரும்படி ப்ரேமத்தோடே பேணி யநுஸந்திக்கவேணும். (௩). மந்த்ரத்திலும், மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும், மந்த்ரப்ரதனான வாசார்யன் பக்கலிலும், ப்ரேமங் கனக்க வுண்டானால் கார்யகரமாவது. (௪). ஸம்ஸாரிகள்-தங்களையும் ஈஶ்வரனையும் மறந்து, ஈஶ்வரகைங்கர்யத்தையுமிழந்து, ‘இழந்தோமெ’ன்கிற இழவுமின்றிக்கே, ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலேவிழுந்து நோவுபட, ஸர்வேஶ்வரன் - தன் க்ருபையாலே, இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ்சேரும்படி, தானே ஶிஷ்யனுமாய், ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான். (௫). ஶிஷ்யனாய் நின்றது - ஶிஷ்யனிருக்குமிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தை யறிவிக்கைக்காக. (௬). ஸகல ஶாஸ்த்ரங்களாலும் பிறக்கும் ஜ்ஞானம் - ஸ்வயமார்ஜிதம்போலே, திருமந்த்ரத்தாற் பிறக்கும் ஜ்ஞானம்-பைத்ருகதனம்போலே. (௭). பகவன்மந்த்ரங்கள்தான் அநேகங்கள். (௮). அவைதான் - வ்யாபகங்களென்றும், அவ்யாபகங்களென்று மிரண்டுவர்க்கம். (௯). அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ஶ்ரேஷ்டங்கள். (௧௦). இவைமூன்றிலும் வைத்துக்கொண்டு பெரியதிருமந்த்ரம் ப்ரதாநம். (௧௧). மற்றையவை யிரண்டுக்கும் - அஶிஷ்டபரிக்ரஹமும், அபூர்த்தியுமுண்டு. (௧௨). இத்தை-வேதங்களும், ருஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் விரும்பினார்கள். (௧௩). வாச்யப்ரபாவம்போலன்று வாசகப்ரபாவம். (௧௪). அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டிநின்றுதவும். (௧௫). த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவைசுரந்தது திருநாமமிறே. (௧௬). சொல்லுங்க்ரமமொழியச் சொன்னாலுந் தன்ஸ்வரூபங்கெட நில்லாது. (௧௭). இதுதான் (குலந்தரு) மென்கிறபடியே எல்லா வபேக்ஷிதங்களையுங் கொடுக்கும். (௧௮). ஐஶ்வர்ய-கைவல்ய-பகவல்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும். (௧௯). கர்ம-ஜ்ஞாந - பக்திகளிலே யிழிந்தவர்களுக்கு விரோதியைப்போக்கி அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்கும். (௨௦). ப்ரபத்தியிலே-யிழிந்தவர்களுக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும். (௨௧). (மற்றெல்லாம்பேசிலும்) என்கிறபடியே, அறியவேண்டும் அர்த்தமெல்லாமிதுக்குள்ளேயுண்டு. (௨௨). அதாவது - அர்த்தபஞ்சகம். (௨௩). பூர்வாசார்யர்கள் இதில் அர்த்த மறிவதற்குமுன்பு தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதிலர்த்தஜ்ஞாநம் பிறந்தபின்பு (பிறந்தபின் மறந்திலேன்) என்கிறபடியே இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம்பண்ணி யறியார்கள். (௨௪). வாசகத்திற் காட்டில் வாச்யத்திலே ஊன்றுகைக்கடி ‘ஈஶ்வரனே உபாயோபேய’ மென்று நினைத்திருக்கை. (௨௫).

## —[வாக்யார்த்தாக்ஷரவிபாகாதிகள்.]—

இது தன்னிற்சொல்லுகிறவர்த்தம் - ஸ்வரூபமும், ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்; ஸ்வரூபமும், உபாயமும், பலமுமென்னவுமாம். (௨௬). பல

மிருக்கும்படி-ப்ரமேயஶேஷரத்திலும், அர்ச்சிராதிமதியிலுஞ் சொன்னோம். (உள). இதுதான் - எட்டுத்திருவக்ஷரமாய், மூன்றுபதமாயிருக்கும். (உஅ). மூன்றுபதமும் மூன்றர்த்தத்தைச் சொல்லுகிறது. (உகூ). அதாவது - ஶேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும். (௩௦). இதில் முதற்பதம் ப்ரணவம். (௩க). இது, அ - என்றும், உ - என்றும், ம - என்றும், மூன்று திருவக்ஷரம். (௩உ). மூன்றுதாழியிலே தயிரை நிறைத்துக்கடைந்து வெண்ணெய் திரட்டுமோப்போலே மூன்றுவேதத்திலும், மூன்றக்ஷரத்தையுமெடுத்தது (௩௩) ஆகையாலிது ஸகலவேதஸாரம். (௩ச).

—[அகாரார்த்தம்.]—

இதில் அகாரம் - ஸகலஸ்ருஷ்டிக்கும் காரணமாய், நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமா யிருக்கையாலே, ஸகலஜகத்துக்குங் காரணமாய், ஸர்வரக்ஷகனை எம்பெருமானைச் சொல்லுகிறது. (௩ரு) ரக்ஷிக்கையாவது - விரோதியைப்போக்குகையும், அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும். (௩சு). இவை யிரண்டும் - சேதநர் நின்றநின்ற அளவுக்கீடாயிருக்கும். (௩எ). ஸம்ஸாரிகளுக்கு விரோதி - ஶத்ருபீடாதிகள், அபேக்ஷிதம் - அந்நபாநாதிகள்; முமுக்ஷுக்களுக்கு விரோதி - ஸம்ஸார ஸம்பந்தம், அபேக்ஷிதம்-பரமபதப்ராப்தி. முக்தர்க்கும் - நித்யர்க்கும், விரோதி - கைங்கர்யஹாநி, அபேக்ஷிதம் - கைங்கர்யவ்ருத்தி. (௩அ). ஈஶ்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம். (௩கூ). ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதிவேண்டுகையாலே, இதிலே * ஸ்ரீஸம்பந்தமு மநுஸந்தேயம். (ச௦). அத்ர ஹரவத்ஸேநாபதி மிஶ்ரர்வாக்யம் - அவன்மார்பைவிட்டுப்பிரியி லிவ்வக்ஷரம்விட்டுப்பிரிவது. (சக). ஹர்த்தாவினுடைய படுக்கையையும், ப்ரஜையினுடைய தொட்டிலையும், விடாதே யிருக்கும் மாதாவைப்போலே ப்ரதமசரம பதங்களைவிடாதே யிருக்குமிருப்பு. (சஉ). ஸ்ரீநந்தகோபரையுங், க்ருஷ்ணனையும் விடாத யஶோதைப் பிராட்டியைப்போலே. (ச௩). ஒருவனடிமை கொள்ளும்போது, ஸ்ரீருஹணிக்கென்றன்றே ஆவணையோலை யெழுதுவது, ஆகிலும் பணிசெய்வதுஸ்ரீருஹணிக்கிறே; அதுபோலே - நாம் பிராட்டிக்கடிமையா யிருக்கும்படி. (சச). ஆகப் பிரித்து நிலையில்லை. (சரு). ப்ரபையையும் - ப்ரபாவானையும், புஷ்பத்தையும் - மணத்தையும்போலே. (சசு). ஆகவிச்சேர்த்தி யுக்தியஶஸ்யமாய்விட்டது. (சஎ). [அகாரார்த்தம் முற்றிற்று.]

—[லுப்தவிஹக்த்யர்த்தம்.]—

இதிலே சதுர்த்தியேறிக்கழியும். (சஅ). சதுர்த்தியேறினபடி யென்னென்னில். (சகூ). நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே. (ரு௦). இத்தால் ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது. (ருக). ஶேஷத்வந் ஸ்வரூபமாக வன்றோ நாட்டில் காண்கிறதென்னில். (ருஉ) அந்த நியமமில்லை, உகந்த விஷயத்துக்கு ஶேஷமாயிருக்கு மிருப்பு ஸ்வரூபமாகக் காண்கையாலே. (ரு௩). அகாரத்திலே கல்யாணகுணங்களைச் சொல்லுகையாலே இந்த ஶேஷத்வ

* ஸ்ரீஸம்பந்தம் - என்று பாடஞ்சொல்லுவார்கள் அது வியாக்யாந விருத்தம்.

முங் ப்ரமாணத்தாலே வந்தது. (௫௪). ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம். (௫௫). ஶேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை. (௫௬). ஆத்மாபஹாரமாவது – 'ஸ்வதந்த்ர' மென்கிறநினைவு; ஸ்வதந்த்ரமாம்போது – இல்லையாய் விடும். (௫௭). [லுப்த சதுர்த்யர்த்தம் முற்றிற்று.]

—[உகாரார்த்தம்.]—

ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரமவதாரணார்த்தம். (௫௮). இத்தாற் பிறர்க்கு ஶேஷமன்றென்கிறது. (௫௯). 'பெரியபிராட்டியார்க்கு ஶேஷமென்கிற' தென்றுஞ் சொல்லுவர்கள். (௬௦). அதிலும் அந்யஶேஷத்வங் கழிகையே ப்ரதாநம். (௬௧). தேவர்களுக்கு ஶேஷமான புரோடாஶத்தை நாய்க்கிடுமாப்போலே ஈஶ்வரஶேஷமான ஆத்மவஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு ஶேஷமாக்குகை. (௬௨). ஸ்வஶேஷத்வத்திலும் அந்யஶேஷத்வங் கழிகையே ப்ரதாநம். (௬௩). (மறந்தும்புறந்தொழாமாந்தர்) என்கையாலே. (௬௪). இத்தால் – தனக்கும் பிறர்க்கு முரித்தன்றென்கிறது. (௬௫). [உகாரார்த்தம் முற்றிற்று.]

—[மகாரார்த்தம்.]—

மகாரம் – இருபத்தஞ்சாமக்ஷரமாய், ஜ்ஞானவாசியுமா யிருக்கையாலே, ஆத்மாவைச் சொல்லுகிறது. (௬௬). இதுதான் ஸமஷ்டிவாசகம். (௬௭). ஜாத்யேகவசனம். (௬௮). இத்தால் – ஆத்மாஜ்ஞாதாவென்று தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லித்தாயிற்று. (௬௯). தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வஶேகரத்திலே சொன்னோம். (௭௦) மணத்தையும், ஒளியையுங்கொண்டு – பூவையும், ரத்நத்தையும் விரும்புமாபோலே, ஶேஷமென்று ஆத்மாவை யாதரிக்கிறது; அல்லாதபோது (உயிரினாற்குறைவிலம்) என்கிறபடியே த்யாஜ்யம்; அது தோன்ற ஶேஷத்வத்தைச்சொல்லி பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது. (௭௧). [மகாரார்த்தம் முற்றிற்று.]

—[பதத்ரயஸமுதாயார்த்தம்.]—

ஆகப்ரணவத்தால் (கண்ணபுரமொன்றுடையானுக்கடியே னொருவர்க்குரியேனோ) என்கிறபடியே ஜீவபர ஸம்பந்தஞ்சொல்லிற்று. (௭௨). இத்தால் (தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு) என்றதாயிற்று. (௭௩) அகாரத்தாலும்-மகாரத்தாலும், ரக்ஷகனையும் ரக்ஷ்யத்தையுஞ் சொல்லிற்று, சதுர்த்தியாலும், உகாரத்தாலும்-ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும், ஃபலத்தையுஞ் சொல்லிற்று. (௭௪).

—[விவரணவிபாகம்.]—

இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது. (௭௫). உகாரத்தை விவரிக்கிறது – நமஸ்ஸு. அகாரத்தை விவரிக்கிறது-நாராயணபதம், மகாரத்தை விவரிக்கிறது – சதுர்த்தி, நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள். (௭௬). அடைவே விவரியாதொழிகிறது – விரோதிபோ யநுபவிக்கவேண்டுகையாலே. (௭௭).

—[நமஶ்ஶப்தார்த்தம்.]—

நமஸ்ஸு – ந – என்றும், மஃ – என்றும், இரண்டுபதம். (௭௮). மஃ – என்கிற தித்தால் தனக்குரியனென்கிறது. ந – என்று அத்தைத் தவிர்க்

கிறது. (எகூ). ஆக நம: என்கிற வித்தால் - தனக்குரிய னன்றென்கிறது. (அ௦). பிறர்க்குரியனுன வன்று தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம், தனக்கென்று மன்று யோக்யதையுங்கூட * அழியும் (அக). இத்தால் விரோதியைக் கழிக்கிறது. (அஉ). விரோதி தான் மூன்று. (அங). அதாவது - ஸ்வரூபவிரோதியும், உபாயவிரோதியும், ப்ராப்யவிரோதியும். (அச). ஸ்வரூபவிரோதி கழிகையாவது:— (யானேநீ யென்னுடைமையும் நீயே) என்றிருக்கை; உபாயவிரோதி கழிகையாவது:— (களைவாய்துன்பங் களையாதொழிவாய்களைகண்மற்றிலேன்) என்றிருக்கை; ப்ராப்யவிரோதிகழிகையாவது:— (மற்றைநங்காமங்கள்மாற்று) என்றிருக்கை. (அரு). ம:-என்கை ஸ்வரூபநாஶம்; நம: - என்கை ஸ்வரூபோஜ்ஜீவனம். (அசு). இதுதான் ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையுங்காட்டும். (அஎ). (தொலைவில்லிமங்கலந்தொழும்) என்கையாலே ஸ்வரூபஞ்சொல்லிற்று; (வேங்கடத்துறைவார்க்குநம) என்கையாலே உபாயஞ்சொல்லிற்று; (அந்திதொழுஞ்சொல்லு) என்கையாலே பலஞ்சொல்லிற்று. (அஅ). (உற்றதுமுன்னடியார்க்கடிமை) என்கிறபடியே † யிதிலே பாகவத சேஷத்வமும் அநுஸந்தேயம். (அகூ). இது அகாரத்திலே யென்றுஞ் சொல்லுவர்கள்; உகாரத்திலே யென்றுஞ் சொல்லுவர்கள். (கூ௦). ஈஶ்வரன் தனக்கேயாயிருக்கும், அசித்துப் பிறர்க்கேயாயிருக்கும், ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும் என்று முற்பட்டநினைவு; அங்ஙன்றிக்கே அசித்துப்போலே * தனக்கேயாகவெனைக் கொள்ளவேணுமென்கிறது நமஸ்ஸால். (கூக). அதாவது:— ஸம்ஹாரதசையில் ஈஶ்வரனழிக்கும்போது 'நோக்கவேணு' மென்று அழியாதொழிகை. (கூஉ). அழிக்கைக்கு ஹேதுகீழேசொல்லிற்று; மேலுஞ்சொல்லும். (கூங). இந்நினைவு பிறந்தபோதே க்ருதக்ருத்யன்; இந்நினைவில்லாதபோது எல்லாதுஷ்க்ருதங்களும் க்ருதம்; இந்நினைவிலேயெல்லா ஸுக்ருதங்களுமுண்டு; இதன்றிக்கே யிருக்கப்பண்ணும்-யஜ்ஞாதிகளும், ப்ராயஶ்சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜநங்கள்; இது தன்னாலே எல்லாபாபங்களும் போம். எல்லா பலங்களுமுண்டாம். (கூச).

[நமஶ்ஶப்தார்த்தம் முற்றிற்று.]

---

—[நாராயணபதார்த்தம்.]—

நாராயண னென்றது - நாரங்களுக்கயனமென்றபடி. (கூரு). நாரங்களாவன - நித்ய வஸ்துக்களினுடைய திரள். (கூசு). அவையாவன - ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும், ஜ்ஞாநஶக்த்யாதிகளும், வாத்ஸல்ய ஸௌஶீல்யாதிகளும், திருமேனியும், காந்திஸௌகுமார்யாதிகளும், திவ்யபூஷணங்களும், திவ்யாயுதங்களும், பெரியபிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும், நித்யஸூரிகளும், சத்ர சாமராதிகளும், திருவாசல் காக்கும் முதலிகளும், கணாதிபரும், முக்தரும், பரமாகாஶமும், ப்ரக்ருதியும், பத்தாத்மாக்

* ஒழியுமென்றும் - பாடாந்தரம்.

† என்கையாலே என்கிறபாடாந்தரம் வ்யாக்கியானத்திலில்லை.

களும், காலமும், மஹதாதி விகாரங்களும், அண்டங்களும், அண்டத்துக்குட்பட்ட தேவாதிபதார்த்தங்களும். (கூஎ). [நாரபதார்த்தம் முற்றிற்று.]

—[அயநபதார்த்தம்.]—

அயனமென்றது - இவற்றுக்காஶ்ரயமென்றபடி. (கூஅ). அங்ஙனன்றிக்கே யிவைதன்னையாஶ்ரயமாகவுடைய னென்னவுமாம். (கூகூ). இவையிரண்டாலும் ஃபலித்தது-பரத்வ ஸௌலப்யங்கள். (க00). அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமுமாகவுமாம். (க0க). (எம்பிரானெந்தை) என்கையாலே, ஈஶ்வரனே யெல்லாவுறவும் முறையுமென்று சொல்லும். (க0உ). நாம்பிறர்க்கானவன்றும் அவன் நமக்காயிருக்கும். (க0ங). இரா மடமூட்டுவாரைப்போலே உள்ளேபதிகிடந்து, ஸத்தையேபிடித்து நோக்கிக்கொண்டுபோரும். (க0ச). [அயநபதார்த்தம்முற்றிற்று.]

—[வ்யக்தசதுர்த்த்யர்த்தம்.]—

ஆயவென்கிற வித்தால் (சென்றாற்குடையாம்) என்கிறபடியே யெல்லாவடிமைகளுஞ் செய்யவேணுமென் றபேக்ஷிக்கிறது. (க0ரு). நமஸ்ஸாலே தன்னேடுறவில்லையென்று வைத்து கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக்கூடுமோவென்னில். (க0சு). (படியாய்க்கிடந்துன் பவளவாய்காண்பேனே) என்கிறபடியே கைங்கர்யப்ரார்த்தனை வந்தேறியன்று, ஸ்வரூப ப்ரயுக்தம். (க0எ). ஆகையால் (வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம்) என்கிற ப்ரார்த்தனையைக் காட்டுகிறது. (க0அ). (கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதல்) † என்னுமாப்போலே காண்பதற்குமுன்புறக்கமில்லை; கண்டால் * ஸுகாபஶ்யந்தியாகையாலே உறக்கமில்லை. (க0கூ). (பழுதேபலபகலும்போயின) என்று இழந்தநாளைக்குக் கூப்பிடுகிறவனுக் குறங்கவிரகில்லை. (கக0). (அன்றுநான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்) என்னு நின்றார்களிறே. (ககக). இவ்வடிமைதான் - (ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னி) என்கிறபடியே ஸர்வதேஶ - ஸர்வகால - ஸர்வாவஸ்தைகளிலும் அநுவர்த்திக்கும். (ககஉ.) எட்டிழையாய், மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம்போலே திருமந்த்ரம். (ககங). இத்தாலீஶ்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய்நின்று ரக்ஷிக்குமென்கிறது. (ககச). [வ்யக்தசதுர்த்த்யர்த்தம் முற்றிற்று.]

—[மந்த்ரஸமுதாயார்த்தம்.]—

ஆகத் திருமந்த்ரத்தால் - எம்பெருமானுக்கே யுரியேனான நான், எனக்குரியனன்றிக்கே யொழியவேணும், ஸர்வஶேஷியான நாராயணனுக்கே யெல்லாவடிமைகளுஞ் செய்யப்பெறுவேனாக வேணுமென்றதாயிற்று. (ககரு).

பிள்ளைலோகாசாரியர் திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

---

க-வது ப்ரகரணம் முற்றிற்று.

---

† என்கிறபடியே - என்கிறபாடாந்தரம் வ்யாக்யாநத்திலில்லை.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

முமுக்ஷுப்படி

# த்வயப்ரகரணம். ॥ உ ॥

—[உபோத்காதம்.]—

புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும்நாளுகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே பொழுது போக்காகையும், இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந் துகந்திருக்கையும், திருமந்த்ரத்திலும் - த்வயத்திலும் - நியதனாகையும், ஆசார்ய ப்ரேமங் கநத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் - எம்பெருமான் பக்கலிலுங் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும், ஜ்ஞாநமும், விரக்தியும், ஶாந்தியும் உடையனா யிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும், வைஷ்ணவாதிகாரிக்கு அவஶ்யாபேக்ஷிதம். (க). இந்தவதிகாரிக்கு ரஹஸ்யத்ரயமு மநுஸந்தேயம். (உ). எல்லா ப்ரமாணங்களிலும் ஸ்நேஹத்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது; சரமஶ்லோகத்தில் ஈஶ்வரனாலே பேறென்கிறது; த்வயத்தில் பெரிய பிராட்டியாராலே பேறென்கிறது. (ங). பெரிய பிராட்டியாராலே பேறாகையாவது:—இவள் புருஷகாரமானாலல்லது ஈஶ்வரன் கார்யஞ்செய்யானென்கை. (ச). த்வயத்துக்கதிகாரி - ஆகிஞ்சந்யமும், அநந்ய கதித்வமும் உடையவன். (ரு). இவையிரண்டும் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம். (சு).

—[வாக்யார்த்தம்.]—

இதில் முற்கூற்றால் - பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈஶ்வரன் திருவடிகளை உபாயமாகப்பற்றுகிறது; பிற்கூற்றால் - அச்சேர்த்தியிலே யடிமையை யிரக்கிறது. (எ)

—[ஸ்ரீஶப்தார்த்தம்.]—

[ஸ்ரீ] - என்று பெரியபிராட்டியாருக்குத் திருநாமம். (அ). ஶ்ரீயதே, ஶ்ரயதே. (கூ). இதுக்கர்த்தம்:—எல்லார்க்கு மிவளைப்பற்றி ஸ்வரூபலாபமாய், இவள் தனக்கும் அவனைப்பற்றி ஸ்வரூபலாபமாயிருக்கும்-என்று. (க0). இப்போதிவளைச் சொல்லுகிறது-புருஷகாரமாக. (கக). நீரிலே நெருப்புக் கிளருமாப்போலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பதிவளுக்காக. (கஉ). இவள் தாயாய் இவர்கள் க்லேஶம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்நியாய் இனியவிஷயமா யிருக்கையாலே, கண்ணழிவற்ற புருஷகாரம். (கங). திருவடியைப் பொறுப்பிக்குமவள் தன்சொல்வழிவருமவனைப் பொறுப்பிக்கச் சொல்லவேண்டாவிறே. (கச).

—[மதுப்பினர்த்தம்.]—

மதுப்பாலே இருவர்சேர்த்தியும் நித்யமென்கிறது. (கரு). இவளோடே கூடியே வஸ்துவினுடைய வுண்மை. (கசு). ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்தையும்,

சேதனனுடைய வபராயத்தையுங், கண்டகலமாட்டாள். (கஎ). சேதநனு
க்கிவை யிரண்டையும் நினைத்தஞ்சவேண்டா. (கஅ). இத்தால் - ஆஸ்ரயிக்
கைக்கு ருசியே வேண்டுவது, காலம் பார்க்கவேண்டாவென்கிறது. (ககூ).
இவள் ஸந்நிதியாலே காகந்தலைபெற்றது ; அதில்லாமையாலே ராவணன்
முடிந்தான். (உ0).

—[நாராயணபதவிசார்யம்.]—

புருஷகார பலத்தாலே ஸ்வாதந்த்ர்யந் தலைசாய்ந்தால் தலையெடுக்கு
ங்குணங்களைச் சொல்லுகிறது - [நாராயணபதம்]. (உக). அவையாவன :—
வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌஶீல்யமும், ஸௌலப்யமும், ஜ்ஞாந
மும், ஶக்தியும். (உஉ). குற்றங்கண்டு வெருவாமைக்கு-வாத்ஸல்யம், கார்யஞ்
செய்யுமென்று துணிகைக்கு - ஸ்வாமித்வம், ஸ்வாமித்வங்கண்டகலாமை
க்கு - ஸௌஶீல்யம், கண்டுபற்றுகைக்கு-ஸௌலப்யம், விரோதியைப்போ
க்கித் தன்னைக்கொடுக்கைக்கு - ஜ்ஞாநஶக்திகள். (உங). இங்குச் சொல்லு
கிற ஸௌலப்யத்துக் கெல்லைநிலம் அர்சாவதாரம். (உச). இதுதான் பரவ்
யூஹ விபவங்கள்போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படியிருக்கும். (உரு).
இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம். (உசா). திருக்
கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்தஞ்சலென்றகையும், கவித்த
முடியும், முகமும் முறுவலும், ஆஸந பத்மத்திலே அழுத்தின திருவடிகளு
மாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம். (உஎ). ரக்ஷகத்வ போக்யத்வங்க
ளிரண்டும் திருமேனியிலே தோற்றும். (உஅ).

—[சரணபதவிசார்யம்]—

[சரணௌ]-திருவடிகளை. (உகூ). இத்தால்-சேர்த்தியழகையும், உபாய
பூர்த்தியையுஞ் சொல்லுகிறது. (ங0). பிராட்டியும் அவனும் விடிலும்,
திருவடிகள் விடாது ; * திண்கழலாயிருக்கும். (ஙக). ஶேஷிபக்கல் ஶேஷ
பூதனிழியுந் துறை - ப்ரஜை முலையிலே வாய்வைக்குமாப்போலே. (ஙஉ).
இத்தாற்-பிராட்டிக் கிருப்பிடமாய், குணப்ரகாஶகமுமாய், ஶிஶுபாலனையு
மகப்படத் திருத்திச்சேர்த்துக்கொள்ளுந் திருமேனியை நினைக்கிறது. (ஙங).

—[ஶரணபதவிசார்யம்.]—

[ஶரணம்] - இஷ்டப்ராப்திக்கும், அநிஷ்ட நிவாரணத்துக்குந் தப்பாத
வுபாயமாக (ஙச). இத்தால் - ப்ராப்யந்தானே ப்ராபகமென்கிறது. (ஙரு).
கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமிறே. (ஙசா). இவன்செயலறுதியாலே உபா
யமாக்குகிறானித்தனை. (ஙஎ) [சரணௌ ஶரணம்] - என்கையாலே உபா
யாந்தர வ்யாவ்ருத்தமான உபாயமென்கிறது. (ஙஅ).

—[ப்ரபத்யே பதவிசார்யம்]—

[ப்ரபத்யே]-பற்றுகிறேன். (ஙகூ). வாசிகமாகவும், காயிகமாகவும், பற்றி
னாலும் பேற்றுக்கழிவில்லை. * ஜ்ஞாநாந்மோக்ஷமாகையாலே மாநஸமாகக்
கடவது. (ச0). உபாயமவனாகையாலும், இவை நேரே யுபாயமல்லாமையா
லும், இம்மூன்றும் வேணுமென்கிற நிர்பந்தமில்லை. (சக). வர்த்தமாந நிர்
தேஶம் - ஸத்வந்தலை யெடுத்தஞ்சினபோதநுஸந்திக்கைக்காக. (சஉ). உபா

ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ। அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:॥




அஷ்டாக்ஷரரஹஸ்யம்.

யாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும், காலக்ஷேபத்துக்கும் இனிமையாலே விடவொண்ணாமையாலும், நடக்கும். (௪௩). பேற்றுக்குப்பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும். (௪௪). [பூர்வவண்டார்யம் முற்றிற்று.]

—[உத்தரவண்டார்யம்.]—

உத்தரவாக்யத்தாலே ப்ராப்யஞ் சொல்லுகிறது. (௪௫). ப்ராப்யாந்தரத்துக்கன்றென்கை. (௪௬). உபாயாந்தரங்களைவிட்டுச் சரமோபாயத்தைப் பற்றினாப்போலே உபேயாந்தரமானவைஶ்வர்ய கைவல்யங்களை விட்டு எல்லையான ப்ராப்யத்தை யர்த்திக்கிறது. (௪௭). இவனர்த்திக்க வேணுமோ, ஸர்வஜ்ஞன் இவன்நினைவறியானோ வென்னில். (௪௮). இவன்பாசுரங் கேட்டவாறே திருவுள்ளமுகக்கும். (௪௯). [ஸ்ரீமதே]-பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு. (௫0). அவனுபாயமாமிடத்தில் தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனுமிடத்தில் தான் ப்ராப்யையுமாய், கைங்கர்ய வர்த்தகையுமாயிருக்கும். (௫௧). இதிலே திருமந்த்ரத்திற் சொன்ன ப்ராப்யத்தை விஶதமாக வநுஸந்திக்கிறது. (௫௨). இளையபெருமாளைப்போலே யிருவருமான சேர்த்தியிலே யடிமைசெய்கைமுறை. (௫௩). *அடிமைதான் விஞ்சிப்பதும், ரஸிப்பதும், அச்சேர்த்தியிலே. (௫௪). [நாராயணாய]-ஸர்வஶேஷியா யுள்ளவனுக்கு. (௫௫). இதிலே திருமேனியையும், குணங்களையுஞ்சொல்லும். (௫௬). ஶேஷித்வத்திலே நோக்கு. (௫௭). ப்ராப்தவிஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது. (௫௮). இந்த சதுர்த்தி-கைங்கர்யத்தை ப்ரகாஶிப்பிக்கிறது. (௫௯). கைங்கர்யந்தான் நித்யம். (௬0). நித்யமாக ப்ரார்த்தித்தே பெறவேணும். (௬௧). ஶேஷிக்கதிசயத்தை விளைக்கை ஶேஷபூதனுக்கு ஸ்வரூபலாபமும் ப்ராப்யமும். (௬௨). [நம:]-கைங்கர்யத்தில் களையறுக்கிறது. (௬௩). களையாவது:-தனக்கென்னப்பண்ணுமது. (௬௪) இதிலே அவித்யாதிகளுங் கழியுண்ணும். (௬௫). (உனக்கேநாமாட்செய்வோம்) என்னும்படியே யாகவேணும். (௬௬). ஸௌந்தர்ய மந்த்ராயம்; கீழ்ச்சொன்ன கைங்கர்யமு மப்படியே. (௬௭). கைங்கர்யப்ரார்த்தனைபோலே யிப்பதத்தில் ப்ரார்த்தனையு மென்றுமுண்டு. (௬௮). (மருந்தேநங்கள் போகமகிழ்ச்சிக்கு)என்னுநின்றதிறே.(௬௯).

பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

௨-வது ப்ரகரணம் முற்றிற்று.

---

முமுக்ஷுப்படி

## சரமஶ்லோக ப்ரகரணம். "௩"

—[உபோத்காதம்.]—

கீழே சில உபாயவிஶேஷங்களை யுபதேஶிக்க, அவை துஷ்கரங்களென்றும், ஸ்வரூபவிரோதிகளென்றும் நினைத்து, ஶோகாவிஷ்டனான அர்ஜுநனைக்குறித்து அவனுடைய ஶோகநிவர்த்யர்த்தமாக இனி யிதுக் கவ்வரு

---

* இவ்வடிமைதான் - என்கிறபாடம் வ்யாக்யாநத்திலில்லை.

கில்லை *யென்னும்படியான சரமோபாயத்தை யருளிச்செய்கையாலே, 'சரம ஶ்லோக' மென்று இதுக்குப் பேராயிருக்கிறது. (௧). இதில் பூர்வார்த்தத்தாலே அதிகாரி க்ருத்யத்தை யருளிச்செய்கிறான், உத்தரார்த்தத்தாலே உபாய க்ருத்யத்தை அருளிச்செய்கிறான். (௨). அதிகாரிக்கு க்ருத்யமாவது - உபாய பரிக்ரஹம் (௩). அத்தை ஸாங்கமாக விதிக்கிறான். (௪). ராகப்ராப்தமான வுபாயந்தானே வைதமானால் கடுகப்பரிக்ரஹிக்கைக் கூடலாயிருக்குமிறே. (௫). இதில் பூர்வார்த்த மாறுபதம். (௬).

—[ஸர்வதர்மஶப்தார்த்தம்.]—

[ஸர்வதர்மான்] - எல்லாதர்மங்களையும். (௭). தர்மமாவது - பலஸாதநமாயிருக்குமது. (௮). இங்குச்சொல்லுகிற தர்மஶப்தம் - த்ருஷ்டபல ஸாதநங்களைச் சொல்லுகையன்றிக்கே மோக்ஷபலஸாதநங்களைச் சொல்லுகிறது. (௯). அவைதான் - ஶ்ருதி ஸ்ம்ருதி விஹிதங்களாய்ப் பலவாயிருக்கையாலே, பஹுவசந ப்ரயோகம் பண்ணுகிறது. (௧௦). அவையாவன - கர்ம - ஜ்ஞாந-பக்தியோகங்களும், அவதாரரஹஸ்யஜ்ஞாநம், புருஷோத்தம வித்யை, தேஶவாஸம், திருநாமஸங்கீர்த்தநம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை, தொடக்கமான உபாயபுத்தியாச் செய்யுமவையும். (௧௧). ஸர்வஶப்தத்தாலே-அவ்வோஸாதந விஶேஷங்களை யநுஷ்டிக்குமிடத்தில் அவற்றுக்கு யோக்யதாபாதகங்களான நித்யகர்மங்களைச் சொல்லுகிறது. (௧௨). ஆக-ஶ்ருதி ஸ்ம்ருதி சோதிதங்களாய், நித்யநைமித்திகாதி ரூபங்களான கர்மயோகாத்யுபாயங்களை யென்றபடி. (௧௩). இவற்றை தர்மமென்கிறது - ப்ரமித்தவர்ஜுநன் கருத்தாலே. (௧௪).

[பரித்யஜ்யபதார்த்தம்.]—

[பரித்யஜ்ய] - த்யாகமாவது-உக்தோபாயங்களை யநுஸந்தித்து, ஶுக்தி கையிலே ரஜதபுத்தி பண்ணுவாரைப்போலேயும், விபரீத திஶாகமநம் பண்ணுவாரைப்போலேயும், 'அநுபாயங்களிலே யுபாயபுத்தி பண்ணினோ' மென்கிற புத்திவிஶேஷத்தோடே † த்யஜிக்கை. (௧௫). [பரி] - என்கிற

---

* என்னலாம்படியான - என்கிற பாடம் வ்யா—இல்லை.

† இந்த ஸூத்ரத்தால், ஸர்வதர்ம பரித்யாகமாவது - ஸ்வரூபத்யாகமே என்றதாயிற்று. புத்தித்யாகமாகில் - த்ருஷ்டாந்தமஸங்கதமாம், 'புத்திவிஶேஷத்தோடே' என்கிறத்ருதீயைக்கு அநந்விதத்வமும் வந்துவிடும். மேல்சொல்லுகிற பாதகாதித்ருஷ்டாந்தத்யாகத்தினு மப்படிச்சொல்லவேண்டிவரும். 'சசால' வென்கிற விதுவுமஸங்கதமாம். 'ஸர்வதர்மங்களையு' மித்யாதிபூர்வபக்ஷமு முடியாது. தனிசரமத்தில் இவர்தாமே பலத்யாக புத்தித்யாகங்களைத்தள்ளி, 'ஸ்வரூபத்யாகமாகக்கடவது' என்றருளிச்செய்திருக்கையாலும், பரந்தபடி முதலானவைகளில் அருளிச்செய்த ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரம த்ருஷ்டாந்தத்தாலும் ஸ்வரூபத்யாகமே லோகதேஶிக ஸித்தாந்தம். பரந்தபடியில் புத்தித்யாக பரமாகவுங்காண்கிறதே என்னில் - அங்குமிப்படியே கொள்ளக்கடவது. அந்யதா பரஸ்பரவிரோதம் வரும். அவ்விடத்தில் புத்தித்யாகவசநம் - ஸ்வரூபத்யாக ஶேஷபூத ஹாநித்யாகாவஶ்யகத்வ மாத்ரபரம். 'நீர்நுமதென்றிவை' என்று ஹாநித்யாகாவஶ்யகதையை அருளிச்செய்தாரிறே. உபாயாந்தரங்களுக் குபாயத்வ ஶ்ர

உபஸர்க்கத்தாலே பாதகாதிகளை விடுமாப்போலே ருசிவாஸனைகளோடும், லஜ்ஜையோடுங்கூட மறுவலிடாதபடி விடவேணுமென்கிறது. (௧௬). ல்யப் பாலே-(ஸ்நாத்வாபுஞ்ஜீத) என்னுமாப்போலே உபாயாந்தரங்களைவிட்டே பற்றவேணுமென்கிறது. (௧௭). (சசால சாபஞ்ச முமோச வீர:) என்கிறபடியே இவை யநுபாயங்களான மாத்ரமன்றிக்கே கால்க்கட்டென்கிறது. (௧௮). சக்ரவர்த்தியைப்போலே யிழக்கைக்குறுப்பு. (௧௯). 'ஸர்வதர்மங்களையும் விட்டெ'ன்று சொல்லுகையாலே சிலர் அதர்மங்கள் புகுருமென்றார்கள். (௨௦). அதுகூடாது, 'அதர்மங்களைச்செய்' என்று சொல்லாமையாலே. (௨௧). தன்னடையே சொல்லிற்றாகாதோ வென்னில். (௨௨). ஆகாது, தர்மஶப்தம்-அதர்ம நிவர்த்தியைக் காட்டாமையாலே. (௨௩). காட்டினாலுமத்தைச்யொழிந்த வற்றைச் சொல்லிற்றுமித்தனை. (௨௪). தன்னையும், ஈஶ்வரனையும், பலத்தையும் பார்த்தா லவைபுகுர வழியில்லை. (௨௫).

—[மாமினர்த்தம்]—

[மாம்] - ஸர்வரக்ஷகனாய், உனக்குக் கையாளாய், உன்னிசைவுபார்த்து, உன்தோஷங்களை போக்யமாகக்கொண்டு, உனக்குப்புகலாய், நீர்சுடுமாப்போலே, சேர்ப்பாரே பிரிக்கும்போதும், விடமாட்டாதே ரக்ஷிக்கிறவென்னை. (௨௬). இத்தால் - பரவ்யூஹங்களையுந், தேவதாந்தர்யாமித்வத்தையுந் தவிர்க்கிறது. (௨௭). தர்மஸம்ஸ்தாபநம் பண்ணப் பிறந்தவன்தானே 'ஸர்வதர்மங்களையும் விட்டென்னைப்பற்றெ'ன்கையாலே, ஸாக்ஷாத்தர்மந் தானே யென்கிறது. (௨௮). இத்தால் - விட்டஸாதநங்களி லேற்றஞ் சொல்லுகிறது. (௨௯). அதாவது-ஸித்தமாய், பரமசேதநமாய், ஸர்வஶக்தியாய், நிரபாயமாய், ப்ராப்தமாய், ஸஹாயாந்தர நிரபேக்ஷமா யிருக்கை. (௩௦). மற்றவுபாயங்கள் ஸாத்யங்களாகையாலே ஸ்வரூபஸித்தியில் சேதநனை அபேக்ஷித்திருக்கும்; அசேதநங்களுமாய், அஶக்தங்களுமா யிருக்கையாலே கார்யஸித்தியில் ஈஶ்வரனையபேக்ஷித்திருக்கும்; இந்தவுபாயம் அவற்றுக்கெதிர்த்தட்டா யிருக்கையாலே யிதரநிரபேக்ஷமாயிருக்கும். (௩௧). இதிலே வாத்ஸல்ய-ஸ்வாமித்வ - ஸௌஶீல்ய - ஸௌலப்யங்களாகிற குணவிஶேஷங்கள் நேராக ப்ரகாஶிக்கிறது. (௩௨). கையு முழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், ஸேநாதூளி தூஸரிதமான திருக்குழலும், தேருக்குக்கீழேநாற்றின திருவடிகளுமாய் நிற்கிறஸாரத்யவேஷத்தை 'மாமெ'ன்று காட்டுகிறான். (௩௩).

---

மம் - ப்ராந்தியிறே. இவ்வர்த்தம் 'ஶுக்திகையிலே' இத்யாதி த்ருஷ்டாந்தத்வயத்தாலும் ஸித்தம். தென்னாசார்யர்களில்தாமே சிலர் பாதீயத்யாஸமென்றும், ஹாஃவத்யாஸமென்றும் விவாதபடியில் ப்ரவேஶித்தார்கள். ஸ்வரூபத்யாஸவசநத்துக்குப் பண்ணுகிற பரிஷ்காரமும் ஸ்வத்யாஸத்தில் பர்யவஸாநமாகையாலே ஸுஸங்கதம். பிள்ளைலோகாசாரியர் ஸித்தாந்தத்துக்கு விபரீதமாகச் சொல்லுவதும் ஸுஸம்ப்ரதாயமாகும். த்யாஸஶவேதார்யடிப்பணியில் ஸுஸ்மத்பரமாசார்யரான எம்பார்ஸ்வாமி இவ்விஷயமாக விஸ்தரேண வருளிச்செய் திருக்கிறாராகையாலே அங்கே கண்டுகொள்வது.

—[ஏகஶப்தார்த்தம்]—

[ஏகம்]. இந்த ஏகஶப்தம் ஸ்தாநப்ரமாணத்தாலே அவதாரணார்த்தத்தைக்காட்டுகிறது. (௩௪). (மாமேவ யே ப்ரபத்யந்தே.) (தமேவசாத்யம்.) (த்வமேவோபாயபூதோ மே பவ.) (ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்) என்றுஞ் சொல்லுகிறபடியே. (௩௫). இத்தால் - 'வ்ரஜ' என்கிற ஸ்வீகாரத்திலுபாயபாவத்தைத் தவிர்க்கிறது. (௩௬). ஸ்வீகாரந்தானுமவனாலேவந்தது. (௩௭). ஸ்ருஷ்ட்யவதாராதிமுகத்தாலே பண்ணின க்ருஷிபலம். (௩௮). (அதுவுமவனதின்னருளே). (௩௯). இத்தையொழியவுந் தானே கார்யஞ்செய்யுமென்று நினைக்கக் கடவன். (௪0). அல்லாதபோது உபாயநைரபேக்ஷ்யஞ் ஜீவியாது. (௪௧). இது - ஸர்வமுக்தி ப்ரஸங்கபரிஹாரார்த்தம், புத்திஸமாதாநார்த்தம், சைதந்யகார்யம், ராகப்ராப்தம், ஸ்வரூபநிஷ்டம், அப்ரதிஷேதத்யோதகம். (௪௨). கீழ்த்தானும் பிறருமான நிலையைக்கொலைத்தான்; இங்குத்தானு மவனுமான நிலையைக் கொலைக்கிறான். (௪௩). அவனை யிவன்பற்றும் பற்று-அஹங்காரகர்ப்பம், அவத்யகரம். (௪௪). அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம். (௪௫). மற்ற வுபாயங்களுக்கு நிவ்ருத்தி தோஷம்; இதுக்கு ப்ரவ்ருத்திதோஷம். (௪௬). (சிற்றவேண்டா). (௪௭). நிவ்ருத்தி கீழேசொல்லிற்று. (௪௮). உபகாரஸ்ம்ருதியுஞ் சைதந்யத்தாலே வந்தது, உபாயத்திலந்தர்பவியாது. (௪௯).

—[ஶரணஶப்தார்த்தம்]—

[ஶரணம்] - உபாயமாக. (௫0). இந்த ஶரணஶப்தம் - ரக்ஷிதாவையும், க்ருஹத்தையும், உபாயத்தையுங் காட்டக்கடவதே யாகிலும் இவ்விடத்திலுபாயத்தையே காட்டுகிறது, கீழோடே சேரவேண்டுகையாலே. (௫௧).

—[வ்ரஜஶப்தார்த்தம்]—

[வ்ரஜ] - புத்திபண்ணு. (௫௨). கத்யர்த்தமாவது - புத்த்யர்த்தமாய், அத்யவஸியென்றபடி. (௫௩). வாசிக காயிகங்களும் இதுக்கு அபேக்ஷிதங்களாயிருக்கச்செய்தேயும் * ஜ்ஞாநாந்மோக்ஷமாகையாலே மாநஸமான வநுஸந்தாநத்தைச் சொல்லுகிறது. (௫௪). ஆக - த்யாஜ்யத்தைச்சொல்லி, த்யாகப்ரகாரத்தைச் சொல்லி, பற்றப்படுமுபாயத்தைச்சொல்லி, உபாயநைரபேக்ஷ்யஞ்சொல்லி, உபாயத்வஞ்சொல்லி, உபாயஸ்வீகாரஞ்சொல்லுகிறது. (௫௫).

—[அஹம்பதார்த்தம்]—

[அஹம்]. ஸ்வக்ருத்யத்தை யருளிச்செய்கிறான். (௫௬). ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய், ப்ராப்தனான நான். (௫௭). கீழ்நின்ற நிலையும், மேற்போக்கடி யறிகைக்கும், அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக்கும், ஏகாந்தமான குணவிஶேஷங்களையும், தன்பேறாகச்செய்து தலைக்கட்டுகைக்கீடான ஸம்பந்தவிஶேஷத்தையுங் காட்டுகிறது. (௫௮). தனக்காகக்கொண்ட ஸாரத்யவேஷத்தை அவனையிட்டுப் பாராதே தன்னையிட்டுப் பார்த்தஞ்சின வச்சந்தீரத் தானான தன்மையை 'அஹம்' என்று காட்டுகிறான். (௫௯). கீழிற்பாரதந்த்ர்யமும் இந்த ஸ்வாதந்த்ர்யத்தினுடைய எல்லைநிலமிறே. (௬0).

—[த்வாஶப்தார்த்தம்]—

[த்வா] - அஜ்ஞனாய், அஶக்தனாய், அப்ராப்தனாய், என்னையே யுபாயமாகப் பற்றியிருக்கிற வுன்னை. (௬௧).

— [ஸர்வபாபபதார்த்தம்.] —

[ஸர்வபாபேப்ய:] 'மத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்களை' ன்று யாவை யாவை சிலபாபங்களைக்குறித்தஞ்சுகிறாய், அவ்வோபாபங்களெல்லாவற்றில் நின்றும். (௬௨). (பொய்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்) மென்கிறபடியே அவித்யா-கர்ம-வாஸநா-ருசி-ப்ரக்ருதிஸம்பந்தங்களைச் சொல்லுகிறது. (௬௩). த்ருணச்சேதகண்டூயநாதிகளைப்போலே ப்ரக்ருதிவாஸனையாலே அநுவர்த்திக்குமவையென்ன, லோகாபவாதபீதியாலும், கருணையாலும், கலக்கத்தாலும் செய்யுமவையென்ன, இவை எல்லாவற்றையும் நினைக்கிறது. (௬௪). உன்மத்தப்ரவ்ருத்திக்கு ஸ்ரீராம ப்ராப்திபோலே த்யஜித்த வுபாயங்களிலே யிவை யந்விதங்களாமோவென்று நினைக்கவேண்டா. (௬௫). கலங்கியுபாயபுத்த்யா பண்ணும் ப்ரபத்தியும் பாதகத்தேடொக்கும். (௬௬).

— [மோக்ஷயிஷ்யாமியினர்த்தம்] —

[மோக்ஷயிஷ்யாமி] - முக்தனும்படி பண்ணக்கடவேன். (௬௭). ணிச்சாலே-'நானும்வேண்டா, நீயும்வேண்டா, அவை தன்னடையேவிட்டுப்போங்காணெ'ன்கிறான். (௬௮). என்னுடைய நிக்ரஹபலமாய் வந்தவை நானிரங்கினால் கிடக்குமோவென்கை. (௬௯). அநாதிகாலம் பாபங்களைக்கண்டு நீபட்டபாட்டை அவைதான் படும்படி பண்ணுகிறேன். (௭0). இனி யுன்கையிலு முன்னைக் காட்டித்தாரேன். (௭௧). என்னுடம்பி லழுக்கை நானே போக்கிக்கொள்ளேனோ. (௭௨).

— [மாஶுசவினர்த்தம்.] —

[மாஶுச:] - 'நீயுன் கார்யத்திலே அதிகரியாமையாலும், நானுன்காரியத்திலே அதிகரித்துக்கொண்டுபோருகையாலும், உனக்கு ஶோகநிமித்த மில்லைகாணெ'ன்று அவனுடைய ஶோகநிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கிறான். (௭௩). நிவர்த்தக ஸ்வரூபத்தைச்சொல்லி, நிவர்த்யங்களுன்னைவந்து மேலிடாதென்று சொல்லி, உனக்கு ஶோகநிமித்த மில்லைகாணென்கிறான். (௭௪). (எத்தினை யிடர்க்கடல் கிடத்தியேழை நெஞ்சமே) என்கிறான். (௭௫). பாபங்களை நான்பொறுத்து புண்யமென்று நினைப்படாநிற்க நீஶோகிக்கக்கடவையோ. (௭௬).

—[உபயுக்தார்த்தம்.]—

உய்யக்கொண்டார் விஷயமாக உடையவ ரருளிச்செய்தவார்த்தையை ஸ்மரிப்பது. (௭௭). இதுக்கு ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்திலே நோக்கு. (௭௮). (இதுதான் அநுவாதகோடியிலே) என்று வாங்கிப்புரத்து நம்பி வார்த்தை. (௭௯). அர்ஜுநன் க்ருஷ்ணனுடைய ஆனைத்தொழில்களாலும், ருஷிகள் வாக்யங்களாலும், க்ருஷ்ணன் தன் கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு போருகையாலும் 'இவனே நமக்குத் தஞ்ச' மென்று துணிந்தபின்பு தன்னைப்பற்றச் சொல்லுகையாலே. (௮0). புறம்பு * பிறந்தவையெல்லா மிவன்நெஞ்சை ஶோதிக்கைக்காக. (௮௧). வேதபுருஷ னுபாயாந்தரங்களை விதித்தது-கொண்

* பிறந்ததெல்லாம் - (பா).

டிப்பசுவுக்குத் தடிகட்டி விடுவாரைப்போலே அஹங்கார மமகாரங்களால் வந்த களிப்பற்று ஸ்வரூபஜ்ஞாநம் *பிறக்கைக்காக. (அஉ). ஸங்யாஸி முன்புள்ளவற்றை விடுமாப்போலே, யிவ்வளவு பிறந்தவனிவற்றைவிட்டால் குற்றம்வராது. (அங). இவன்தா னிவைதன்னை நேராகவிட்டிலன். (அச). கர்மம் - கைங்கர்யத்திலே புகும்; ஜ்ஞாநம் - ஸ்வரூபப்ரகாஶத்திலே புகும்; பக்தி - ப்ராப்ய ருசியிலே புகும்; ப்ரபத்தி - ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநத்திலே புகும். (அரு). ஒரு பலத்துக்கரிய வழியையும், எளியவழியையும் உபதேஶிக்கையாலே யிவையிரண்டுமொழிய பகவத்ப்ரஸாதமே யுபாயமாகக்கடவது. (அசு). பேற்றுக்கு வேண்டுவது - விலக்காமையும், இரப்பும். (அஎ). சக்ரவர்த்தித் திருமகன் பாபத்தோடேவரிலு மமையுமென்றான்; இவன் புண்யத்தைப் போகட்டு வரவேணுமென்றான். (அஅ). (ஆஸ்திகனாய் இவ்வர்த்தத்தில் த்ருடவிஶ்வாஸங்களுடையனாய் உஜ்ஜீவித்தல், நாஸ்திகனாய் நஶித்தலொழிய நடுவில் நிலையில்லை) என்று பட்டர்க்கெம்பாரருளிச்செய்த வார்த்தை. (அகூ). வ்யவஸாய மில்லாதவனுக்கு இதிலந்வயம்-ஆமத்தில் போஜநம்போலே. (கூ0). (விட்டு சித்தர்கேட்டிருப்பர்) என்கிறபடியே அதிகாரிகள் நியதர். (கூக). (வார்த்தையறிபவர்) என்கிறபாட்டும், (அத்தனாகி) என்கிறபாட்டும், இதுக்கர்த்தமாக வநுஸந்தேயம். (கூஉ).

(ஆகமொத்தம்ஸூத்திரம் - உஎகூ.)

---

உலாகாசாரியர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர்திருவடிகளேஶரணம்.

---

முமுக்ஷுப்படி முற்றிற்று.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

† தத்வத்ரயம்.

## சித்ப்ரகரணம் ॥ க ॥

முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷமுண்டாம்போது தத்வத்ரயஜ்ஞாந முண்டாகவேணும். (க). தத்வத்ரயமாவது - சித்தும், அசித்தும், ஈஶ்வரனும். (உ). சித்தென்கிறது - ஆத்மாவை. (ங). ஆத்மஸ்வரூபம் - (சென்றுசென்று பரம்பரமாய்) என்கிறபடியே தேஹ-இந்த்ரிய-மந:-ப்ராண-புத்தி விலக்ஷணமாய், அஜடமாய், ஆநந்தரூபமாய், நித்யமாய், அணுவாய் அவ்யக்தமாய், அசிந்த்யமாய், நிரவயவமாய், நிர்விகாரமாய், ஜ்ஞாநாஶ்ரயமாய், ஈஶ்வரனுக்கு நியாம்யமாய், தார்யமாய், ஶேஷமாயிருக்கும். (ச). ஆத்மஸ்வரூபம் - தேஹாதி விலக்ஷணமானபடி யென்னென்னில். (ரு). தேஹாதிகள் 'என்னுடையதேஹாதிகளெ'ன்று ஆத்மாவில் வேறுபட்டுத் தோற்றுகையாலும், 'இதமெ'ன்றுதோற்றுகையாலும், ஆத்மா 'நானெ'ன்று தோற்று

---

* பிறப்பிக்கைக்காக - (பா).

† திருமந்த்ரார்த்தத்தை விஶதீகரிக்கிறது - இந்த தத்வத்ரயம். அதாவது - ப்ரணவத்திற்சொன்ன தத்வத்ரயத்தையும் ஸ்பஷ்டமாச் சொல்லுகிறது.

றுகையாலும், இவை - யொருக்கால் தோற்றி ஒருக்கால் தோற்றாமையாலும், ஆத்மா-எப்போதுந் தோற்றுகையாலும், இவை - பலவாகையாலும், ஆத்மா ஒருவனாகையாலும், ஆத்மா இவற்றில் விலக்ஷணனென்று கொள்ளவேணும். (௬). இந்த யுக்திகளுக்குக்கண்ணழிவுண்டேயாகிலும், ஶாஸ்த்ர பலத்தாலே ஆத்மா தேஹாதி விலக்ஷணனாகக்கடவன். (௭). அஜடமாகையாவது - ஜ்ஞானத்தை யொழியவுந்தானேதோற்றுகை. (௮). ஆநந்தரூபமாகையாவது - ஸுகஸ்வரூபமாயிருக்கை. (௯). உணர்ந்தவன் 'ஸுகமாக உறங்கினே' னென்கையாலே ஸுகஸ்வரூபமாகக்கடவது. (௧௦). நித்யமாகையாவது - எப்போதுமுண்டாகை. (௧௧). எப்போதுமுண்டாகில், ஜந்மமரணங்களுண்டாகிறபடி யென்னென்னில், ஜன்மமாவது - தேஹஸம்பந்தம். மரணமாவது - தேஹவியோகம். (௧௨). அணுவானபடி யென்னென்னில் (௧௩). ஹ்ருதய ப்ரதேஶத்தில்நின்றும் உத்க்ரமித்துப்போவது வருவதாமென்று ஶாஸ்த்ரஞ் சொல்லுகையாலே ஆத்மா அணுவாகக்கடவது. (௧௪). அணுவாய் ஹ்ருதயத்தளவிலேநிற்குமாகில் ஶரீரமெங்கு மொக்க ஸுகது:கங்களை புஜிக்கிறபடி யென்னென்னில். (௧௫). மணிதியுமணி தீபாதிகளோரிடத்திலேயிருக்க, ப்ரபை யெங்குமொக்க வ்யாபிக்குமாப்போலே, ஜ்ஞானமெங்குமொக்க வ்யாபிக்கையாலே அவற்றை புஜிக்கத்தட்டில்லை. (௧௬). ஒருவன் ஏககாலத்திலே அநேக தேஹங்களைப் பரிக்ரஹிக்கிறதும், ஜ்ஞாநவ்யாப்தியாலே. (௧௭). அவ்யக்த மாகையாவது- கடபடாதிகளை க்ரஹிக்கிறசக்ஷுராதிகளால் தோற்றாதிருக்கை. (௧௮). அசிந்த்ய மாகையாவது - அசித்தோடு ஸஜாதீயமென்று நினைக்கவொண்ணாதிருக்கை. (௧௯). நிரவயவமாகையாவது - அவயவஸமுதாய மின்றிக்கேயிருக்கை. (௨௦). நிர்விகார மாகையாவது - அசித்துப்போலே விகரிக்கையன்றிக்கே ஒருபடிப்பட்டிருக்கை. (௨௧). இப்படி யிருக்கையாலே - ஶஸ்த்ரம், அக்நி, ஜலம், வாதம், ஆதபந்தொடக்கமானவற்றால் சேதித்தல், தஹித்தல், நனைத்தல், ஶோஷிப்பித்தல், செய்கைக்கு அயோக்யமாயிருக்கும். (௨௨). ஆர்ஹதர்-ஆத்மாவை தேஹபரிமாண மென்றார்கள். (௨௩). அது ஶ்ருதிவிருத்தம். (௨௪). அநேக தேஹங்களைப் பரிக்ரஹிக்கிறயோகிகள் ஸ்வரூபத்துக்கு. * ஶைதில்யம்வரும். (௨௫). ஜ்ஞாநாஶ்ரயமாகையாவது-ஜ்ஞானத்துக்கிருப்பிடமாயிருக்கை. (௨௬) ஆத்மா ஜ்ஞாநத்துக்கிருப்பிடமின்றிக்கே ஜ்ஞாநமாத்ரமாகில். (௨௭). 'நானறிவ'ன்று சொல்லவேணும், 'நானறியாநின்றே' னென்னக்கூடாது. (௨௮). ஜ்ஞாதா வென்றபோதே-கர்த்தா, போக்தா என்னுமிடஞ் சொல்லிற்றாயிற்று. (௨௯). கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் ஜ்ஞாநாவஸ்தா விஶேஷங்க ளாகையாலே.. (௩௦). சிலர் குணங்களுக்கேகர்த்ருத்வமுள்ளது, ஆத்மாவுக் கில்லையென்றார்கள். (௩௧). அப்போது இவனுக்குஶாஸ்த்ரவஶ்யதையும், போக்த்ருத்வமுங்குலையும். (௩௨). ஸாம்ஸாரிக ப்ரவ்ருத்திகளில் கர்த்ருத்வம் ஸ்வரூப ப்ரயுக்தமன்று. (௩௩). குண ஸம்ஸர்கக்ருதம். (௩௪). கர்த்ருத்வந்தான் ஈஶ்வராதீநம். (௩௫). ஜ்ஞாநாஶ்ரயமாகில் ஶாஸ்த்ரங்களிலே யிவனை 'ஜ்ஞானமெ'ன்று சொல்லுவா னென்னென்னில். (௩௬). ஜ்ஞானத்தை யொழியவுந் தன்னை யறிகையாலும், ஜ்ஞா

* 'ஶைதில்யமும்வரும்' என்றும் பாடாந்தரங்காண்கின்றன.

நம் ஸாரஹிதகுணமாய் நிரூபக தர்மமாயிருக்கையாலும் சொல்லிற்று. (௩௭). நியாம்யமாகையாவது - ஈஶ்வரபுத்த்யதீநமாக எல்லா வ்யாபாரங்களுமுண்டாம்படி யிருக்கை. (௩௮). தார்யமாகையாவது - அவனுடைய ஸ்வரூப ஸங்கல்பங்களை யொழிந்தபோது தன் ஸத்தை யில்லையாம்படி யிருக்கை. (௩௯). ஶேஷமாகையாவது - சந்தந குஸும தாம்பூலாதிகளைப்போலே அவனுக்கு இஷ்டவிநியோகார்ஹமாயிருக்கை. (௪0). இதுதான் - தீருஹ க்ஷேத்ர புத்ர களத்ராதிகளைப்போலே *ப்ருதக் ஸ்திதியாதிகளுக்கு யோக்யமாம்படி யிருக்கையன்றிக்கே ஶரீரம்போலே அவற்றுக் கயோக்யமாயிருக்கை. (௪௧). ஆத்மஸ்வரூபந்தான் - பத்த, முக்த, நித்ய ரூபேண மூன்றுபடிபட்டிருக்கும். (௪௨) பத்தரென்கிறது - ஸம்ஸாரிகளை. (௪௩) முக்தரென்கிறது - ஸம்ஸாரஸம்பந்த மற்றவர்களை. (௪௪). நித்யரென்கிறது - ஒருநாளும் ஸம்ஸரியாத ஶேஷ ஶேஷாஶநாதிகளை. (௪௫). ஜலத்துக் கதிஸம்ஸ்ருஷ்ட ஸ்தாலீ ஸம்ஸர்கத்தாலே ஔஷ்ண்யஶப்தாதிகளுண்டாகிறாப்போலே ஆத்மாவுக்கு அசித் ஸம்பந்தத்தாலே அவித்யா கர்ம வாஸநா ருசிகளுண்டாகிறன. (௪௬). அசித்துக்கழிந்தவாறே அவித்யாதிகள் கழியுமென்பர்கள். (௪௭). இம்மூன்றுந் தனித்தனியே அநந்தமாயிருக்கும். (௪௮). சிலர் ஆத்மபேதமில்லை ஏகாத்மாவேயுள்ள தென்றார்கள். (௪௯). அந்தபக்ஷத்தில் ஒருவன் ஸுகிக்கிறகாலத்திலே வேறெயொருவன் துக்கிக்கக் கூடாது. (௫0). அது தேஹ பேதத்தாலே யென்னில். (௫௧) ஸௌபரி ஶரீரத்திலுமது காணவேணும். (௫௨). ஒருவன் ஸம்ஸரிக்கையும், ஒருவன் முக்தனாகையும், ஒருவன் ஶிஷ்யனாகையும், ஒருவனாசார்யனாகையும் கூடாது. (௫௩). விஷம ஸ்ருஷ்டியுங் கூடாது. (௫௪). ஆத்மபேதஞ் சொல்லுகிற ஶ்ருதியோடும் விரோதிக்கும். (௫௫). ஶ்ருதி ஔபாதிகபேதத்தைச் சொல்லுகிறதென்னவொண்ணாது. (௫௬). மோக்ஷதஶையிலும்பேதம் உண்டாகையாலே. (௫௭). அப்போது தேவமநுஷ்யாதிபேதமும், காமக்ரோதாதி பேதமும் கழிந்து, ஆத்மாக்கள் ஸ்வரூபம் - அத்யந்தம் ஸமமாய், ஒருபடியாலும் பேதஞ்சொல்லவொண்ணாதபடி யிருந்ததேயாகிலும். (௫௮). பரிமாணமும், இடையும், ஆகாரமும் ஒத்திருக்கிற - பொற்குடங்கள், ரத்நங்கள், வ்ரீஹிகள் தொடக்கமானவற்றிற்கு பேதமுண்டாகிறாப்போலே ஸ்வரூப பேதமும்ஸித்தம். (௫௯). ஆகையால் ஆத்மபேதங்கொள்ளவேணும். (௬0). இப்போது இவர்களுக்கு லக்ஷணம் ஶேஷத்வத்தோடேகூடின ஜ்ஞாத்ருத்வம். (௬௧). இவர்களுடைய ஜ்ஞாநந்தான்-ஸ்வரூபம்போலே நித்ய-த்ரவ்யமாய், அஜடமாய், ஆநந்தரூபமா யிருக்கும். (௬௨). ஆனால் ஜ்ஞாநத்துக்கும் ஸ்வரூபத்துக்கும் வாசியென்னென்னில். (௬௩). ஸ்வரூபம் - தர்மியாய், ஸங்கோச விகாஸங்களுக்கு அயோக்யமாய், தன்னை யொழிந்தவற்றை ப்ரகாஶிப்பியாமலே தனக்குத்தான் ப்ரகாஶிக்கக்கடவதாய், அணுவாயிருக்கும்; ஜ்ஞாநம் - தர்மமாய், ஸங்கோச விகாஸங்களுக்கு யோக்யமாய், தன்னையொழிந்தவற்றை ப்ரகாஶிப்பிக்கக்கடவதாய், தனக்குத்தான் ப்ரகாஶியாதே ஆத்மாவுக்கு ப்ரகாஶிக்கக்கடவதாய், விபுவாயிருக்கும். (௬௪). அதில் ஶிலருடைய ஜ்ஞாநம்-

* 'ப்ருதக்ஸித்தியாதிகளுக்கு' என்றும்பா.

எப்போதும் விஶதமாயிருக்கும்; சிலருடைய ஜ்ஞாநம் - எப்போதும் அவிஶதமாயிருக்கும்; சிலருடைய ஜ்ஞாநம் - ஒருக்கால் அவிஶதமாய், ஒருக்கால் விஶதமாயிருக்கும். (௬௫). ஜ்ஞாநம் - நித்யமாகில் 'எனக்கு ஜ்ஞாநம் பிறந்தது, நஶித்தது' என்கிறபடி யென்னென்னில், (௬௬). இந்த்ரிய த்வாரா ப்ரஸரித்து விஷயங்களை க்ரஹிப்பது, மீளுவதாகையாலே அப்படி சொல்லக்குறையில்லை. (௬௭). இதுதான் ஏகமாயிருக்கச்செய்தே நாநாவாய்த் தோற்றுகிறது - ப்ரஸரணபேதத்தாலே. (௬௮). த்ரவ்யமானபடி யென்னென்னில், (௬௯). க்ரியாகுணங்களுக்கு ஆஶ்ரயமாய், அஜடமாய், ஆநந்தரூபமாயிருக்கையாலே, த்ரவ்யமாகக்கடவது. (௭௦). அஜடமாகில் ஸுஷுப்தி மூர்ச்சாதிகளில் தோற்றவேண்டாவோ வென்னில், (௭௧). ப்ரஸரண மில்லாமையாலே தோற்றாது. (௭௨). ஆநந்தரூபமாகையாவது— ஜ்ஞாநம் ப்ரகாஶிக்கும்போது அநுகூலமாயிருக்கை. (௭௩). விஷஶஸ்த்ராதிகளைக் காட்டும்போது ப்ரதிகூலமாயிருக்கைக்கடி-தேஹாத்ம ப்ரமாதிகள். (௭௪). ஈஶ்வராத்மகமாகையாலே எல்லாப் பதார்த்தங்களுக்கும் ஆநுகூல்யமே ஸ்வபாவம்; ப்ராதிகூல்யம் வந்தேறி. (௭௫). மற்றை ஆநுகூல்யம் ஸ்வாபாவிகமாகில், ஒருவனுக்கொருக்கால் ஓரிடத்திலே அநுகூலங்களான சந்தநகுஸுமாதிகள், தேஶாந்தரே காலாந்தரே-இவன்றனக்கும், அந்தேஶத்திலே அக்காலத்திலே வேறேயொருவனுக்கும் ப்ரதிகூலங்களாகக் கூடாது. (௭௬).

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## தத்வத்ரயம்.

## அசித்ப்ரகரணம் ॥ உ ॥

அசித்து - ஜ்ஞாநஶூந்யமாய், விகாராஸ்பதமா யிருக்கும். (௧). இது ஶுத்தஸத்வமென்றும், மிஶ்ரஸத்வ மென்றும், ஸத்வஶூந்ய மென்றும், த்ரிவிதம். (௨). இதில் ஶுத்தஸத்வமாவது - ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலசாதே கேவல ஸத்வமாய், நித்யமாய், ஜ்ஞாநாநந்தஜநகமாய், கர்மத்தாலன்றிக்கே கேவல பகவதிச்சையாலே விமாந, கோபுர, மண்டப, ப்ராஸாதாதி ரூபேண பரிணமிக்கக்கடவதாய், நிரவதிக தேஜோரூபமாய், நித்ய முக்தராலும் ஈஶ்வரனாலும் பரிச்சேதிக்க வரிதாய், அத்யத்புதமா யிருப்பதொன்று. (௩). இத்தைச்சிலர்-ஜடமென்றார்கள்; சிலர்-அஜடமென்றார்கள். (௪). அஜடமானபோது-நித்யர்க்கும், முக்தர்க்கும், ஈஶ்வரனுக்கும், ஜ்ஞாநத்தை யொழியவுந் தோற்றும். (௫). ஸம்ஸாரிகளுக்குத் தோற்றாது. (௬). ஆத்மாவிலும், ஜ்ஞாநத்திலும் பின்னமானபடி யென்னென்னில், (௭). 'நான்' என்று தோற்றாமையாலும், ஶரீரங்களாய்ப் பரிணமிக்கையாலும், விஷயங்களை யொழிய

வும் தானே தோற்றுகையாலும், ஶப்த ஸ்பர்ஶாதிக ளுண்டாகையாலும் ஸிந்நமாகக்கடவது. (௮). மிஶ்ர ஸத்வமாவது - ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் மூன்றோடுங்கூடி பத்தவேதநருடைய ஜ்ஞாநாநந்தங்களுக்குத் திரோதாயகமாய், விபரீதஜ்ஞாந ஜநகமாய், நித்யமாய், ஈஶ்வரனுக்கு க்ரீடாபரிகரமாய், ப்ரதேஶபேதத்தாலும், காலபேதத்தாலும் ஸத்ருஶமாயும், விஸத்ருஶமாயு மிருக்கும் விகாரங்களை உண்டாக்கக் கடவதாய், 'ப்ரக்ருதி-அவித்யை - மாயை' என்கிற பேர்களை உடைத்தா யிருக்கும் அசித்விஶேஷம். (௯). ப்ரக்ருதியென்கிறது - விகாரங்களைப் பிறப்பிக்கையாலே ; அவித்யையென்கிறது - ஜ்ஞாநவிரோதியாகையாலே ; மாயை யென்கிறது - விசித்ர ஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே. (௧௦). இதுதான் (பொங்கைம்புலனும் பொறியைந்துங் கருமேந்திரிய மைம்பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மாணுங்காரமனங்களே ) என்கிறபடியே, இருபத்துநாலு தத்வமாயிருக்கும். (௧௧). இதில் ப்ரதமதத்வம் - ப்ரக்ருதி. (௧௨). இது-அவிபக்த தமஸ்ஸென்றும், விபக்த தமஸ்ஸென்றும், அக்ஷரமென்றும் சில அவஸ்தைகளை உடைத்தா யிருக்கும். (௧௩). இதில் நின்றும் குணவைஷம்யத்தாலே மஹதாதி விகாரங்கள் பிறக்கும். (௧௪). குணங்களாகிறன - ஸத்வ-ரஜஸ் - தமஸ்ஸுக்கள். (௧௫). இவை ப்ரக்ருதிக்கு ஸ்வரூபாநுபந்திகளான ஸ்வபாவங்களாய், ப்ரக்ருத்யவஸ்தையில்-அநுத்பூதங்களாய், விகாரதஶையில்-உத்பூதங்களா யிருக்கும். (௧௬). ஸத்வம் - ஜ்ஞாந ஸுகங்களையும், உபய ஸங்கத்தையும் பிறப்பிக்கும். (௧௭). ரஜஸ்ஸு - ராக த்ருஷ்ணா ஸங்கங்களையும், கர்ம ஸங்கத்தையும் பிறப்பிக்கும். (௧௮). தமஸ்ஸு - விபரீதஜ்ஞாநத்தையும், அநவதாநத்தையும், ஆலஸ்யத்தையும், நித்ரையையும் பிறப்பிக்கும். (௧௯). இவை ஸமங்களானபோது - விகாரங்கள் ஸமங்களுமாய், அஸ்பஷ்டங்களுமாய் இருக்கும் ; விஷமங்களானபோது - விகாரங்கள் விஷமங்களுமாய், ஸ்பஷ்டங்களுமாய் இருக்கும். (௨௦) விஷம விகாரங்களில் ப்ரதம விகாரம் - மஹாந். (௨௧). இது-ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று த்ரிவிதமாய், அத்யவஸாய ஜநகமாய் இருக்கும். (௨௨). இதில் நின்றும்-வைகாரிகம், தைஜஸம், பூதாதி என்று த்ரிவிதமான அஹங்காரம் பிறக்கும். (௨௩). அஹங்காரம் - அபிமாந ஹேதுவா யிருக்கும். (௨௪). இதில் - வைகாரிகத்தில் நின்றும் 'ஶ்ரோத்ர த்வக் சக்ஷுர் ஜிஹ்வாக்ராணங்க'ளென்கிற ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும் 'வாக் பாணி பாத பாயூபஸ்தங்க' ளென்கிற கர்மேந்த்ரியங்களைந்தும், மநஸ்ஸும், ஆகிற பதினொரு இந்த்ரியங்களும் பிறக்கும். (௨௫). பூதாதியில் நின்றும், ஶப்ததந்மாத்ரை பிறக்கும் ; இதில் நின்றும் - ஆகாஶமும், ஸ்பர்ஶ தந்மாத்ரையும் பிறக்கும் ; இதில் நின்றும் வாயுவும், ரூபதந்மாத்ரையும் பிறக்கும் ; இதில் நின்றும் - தேஜஸ்ஸும், ரஸ தந்மாத்ரையும் பிறக்கும் ; இதில் நின்றும் - அப்பும், கந்த தந்மாத்ரையும் பிறக்கும் ; இதில் நின்றும் - ப்ருதிவி பிறக்கும். (௨௬). ஸ்பர்ஶ தந்மாத்ரை தொடக்கமான நாலு தந்மாத்ரைகளும் - ஆகாஶம் தொடக்கமான நாலு பூதங்களுக்கும் கார்யமாய், வாயுதொடக்கமான நாலு பூதங்களுக்கும் காரணமாய் இருக்கு மென்றுஞ் சொல்லுவர்கள். (௨௭). தந்மாத்ரங்களா

வன - பூதங்களினுடைய ஸூக்ஷ்மாவஸ்தைகள். (௨௮). மற்றை யிரண்டஹங்காரமும்-ஸ்வகார்யங்களைப் பிறப்பிக்கும்போது, ராஜஸாஹங்காரம் - ஸஹகாரியா யிருக்கும். (௨௯). ஸாத்விகாஹங்காரம் - ஶப்ததந்மாத்ராதி பஞ்சகத்தையும் அடைவே ஸஹகாரியாய்க்கொண்டு, ஶ்ரோத்ராதி ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தையும் ஸ்ருஷ்டிக்கும்; தத்ஸஹக்ருதமாய்க் கொண்டு வாகாதி கர்மேந்த்ரியங்களைந்தையும் ஸ்ருஷ்டிக்கும்; இவற்றை யொழியத் தானே மநஸ்ஸை ஸ்ருஷ்டிக்கு மென்றுஞ் சொல்லுவர்கள். (௩௦). சிலர் - இந்த்ரியங்களிலே சிலவற்றை பூதகார்ய மென்றார்கள். (௩௧). அது ஶாஸ்த்ரவிருத்தம். (௩௨). பூதங்கள் ஆப்யாயகங்களித்தனை. (௩௩). இவை கூடினாலல்லது கார்யகர மல்லாமையாலே, மண்ணையும்-மணலையும்-நீரையுஞ் சேர்த்தொரு த்ரவ்யமாக்கிச் சுவரிடுவாரைப்போலே, ஈஶ்வரன்-இவற்றை யெல்லாம் தன்னிலே சேர்த்தொரு அண்டமாக்கி, அதுக்குள்ளே சதுர்முகனை ஸ்ருஷ்டித்தருளும். (௩௪). அண்டத்தையும், அண்டகாரணங்களையும் தானே யுண்டாக்கும்; அண்டத்துக்குட்பட்ட வஸ்துக்களைச் சேதநர்க்கந்தர்யாமியாய் நின்றுண்டாக்கும். (௩௫). அண்டங்கள்தான் - அநேகங்களாய், பதினாலு லோகங்களோடேகூடி ஒன்றுக்கொன்று பதிற்றுமடங்கான ஏழாவரணங்களாலுஞ் சூழப்பட்டு, ஈஶ்வரனுக்கு க்ரீடாகந்துக ஸ்தாநீயங்களாய், ஜலபுத்புதம்போலே ஏககாலத்திலே ஸ்ருஷ்டங்களாயிருக்கும். (௩௬). பூதங்களில் ஆகாஶம் - அவகாஶஹேது, வாயு-வஹநாதிஹேது, தேஜஸ்ஸு - பசநாதிஹேது, ஜலம்-ஸேசந பிண்டீகரணாதிஹேது, ப்ருதிவி-தாரணாதி ஹேது என்பர்கள். (௩௭). ஶ்ரோத்ராதி ஜ்ஞாநேந்த்ரியங்களைந்துக்கும்-அடைவே ஶப்தாதிகளைந்தையும் க்ரஹிக்கை தொழில்; வாகாதி கர்மேந்த்ரியங்களைந்துக்கும், விஸர்க - ஶில்ப-கதி - உக்திகள் - தொழில்; மநஸ்ஸு - இவையித்தனைக்கும் பொது. (௩௮). ஆகாஶாதி பூதங்களுக்கு-அடைவே ஶப்தாதிகள் குணங்களாயிருக்கும். (௩௯). குணவிநிமயம் - பஞ்சீகரணத்தாலே. (௪௦). ஆகாஶம் கறுத்துத்தோற்றுகிறதும்-அத்தாலே. (௪௧). முன்புற்றை தந்மாத்ரைகளோடே கூடிக்கொண்டு, உத்தரோத்தர தந்மாத்ரைகள் - ஸ்வவிஶேஷங்களைப் பிறப்பிக்கையாலே, குணாதிக்யமுண்டாயிற்றென்றுஞ் சொல்லுவர்கள். (௪௨). ஸத்வஶூந்யமாவது-காலம். (௪௩). இது, ப்ரக்ருதி ப்ராக்ருதங்களினுடைய பரிணாமங்களுக்கு ஹேதுவாய், கலாகாஷ்டாதி ரூபேண பரிணமிக்கக்கடவதாய், நித்யமாய், ஈஶ்வரனுக்கு க்ரீடாபரிகரமாய், ஶரீரபூதமாயிருக்கும். (௪௪). மற்றை யிரண்டசித்தும் - ஈஶ்வரனுக்கும், ஆத்மாவுக்கும், போக்ய போகோபகரண போகஸ்தாநங்களாயிருக்கும். (௪௫). போக்யங்களாகிறன - விஷயங்கள்; போகோபகரணங்களாகிறன - சக்ஷுராதி கரணங்கள்; போகஸ்தாநங்களாகிறன-சதுர்தஶ புவநங்களும், ஸமஸ்த தேஹங்களும். † (௪௬). இதில் முற்பட்ட அசித்துக்கு - கீழெல்லையுண்டாய், சுற்றும் மேலும் எல்லையின்றிக்கே யிருக்கும்; நடுவில் அசித்துக்கு - சுற்றுங் கீழு மெல்லையின்றிக்கே

† சதுர்தஶபுவநமும், ஸமஸ்ததேஹமும், என்கிறபா—வ்யா—இல்லை. பஹுவசநபாடமே வ்யா—தோற்றுகின்றன.

மேலெல்லையுண்டாயிருக்கும்; காலம்-எங்குமொக்கவுண்டாயிருக்கும். (௪௭). காலந்தான் - பரமபதத்திலே நித்யம்; இங்கு அநித்யமென்றுஞ் சொல்லுவர்கள். (௪௮). சிலர்-காலத்தை இல்லையென்றார்கள். (௪௯). ப்ரத்யக்ஷத்தாலும், ஆகமத்தாலும் ஸித்திக்கையாலே அது சொல்லவொண்ணாது. (௫௦). பலரும் திக்கென்று தனியே ஒருத்ரவ்யம் உண்டென்றார்கள். (௫௧). பலஹேதுக்களாலும், ஆகாஶாதிகளிலே அந்தர்பூதமாகையாலே அதுவுஞ் சேராது. (௫௨). சிலர் - ஆவரணாபாவம் ஆகாஶமென்றார்கள். (௫௩). பாவரூபேண தோற்றுகையாலே அதுவுஞ்சேராது. (௫௪). வேறே சிலர், இதுதன்னை - நித்யம், நிரவயவம், விபு, அப்ரத்யக்ஷமென்றார்கள். (௫௫). பூதாதியிலே பிறக்கையாலும், அஹங்காராதிகளில்லாமையாலும், கண்ணுக்கு விஷயமாகையாலும், அவை நாலுஞ் சேராது. (௫௬). த்வகிந்த்ரியத்தாலே தோற்றுகையாலே, வாயு அப்ரத்யக்ஷமென்கிறவதுவுஞ் சேராது. (௫௭) தேஜஸ்ஸு - பௌமாதிபேதத்தாலே பஹுவிதம். (௫௮). அதில் ஆதித்யாதி தேஜஸ்ஸு - ஸ்திரம், தீபாதி தேஜஸ்ஸு - அஸ்திரம். (௫௯). தேஜஸ்ஸுக்கு நிறம்-சிவப்பு, ஸ்பர்ஶம்-ஔஷ்ண்யம். (௬௦). ஜலத்துக்குநிறம் - வெளுப்பு, ஸ்பர்ஶம் - ஶைத்யம், ரஸம் - மாதுர்யம். (௬௧). பூமிக்கு - நிறமும், ரஸமும், பஹுவிதம். (௬௨). ஸ்பர்ஶம் - இதுக்கும், வாயுவுக்கும், அநுஷ்ணாஶீதம். (௬௩). இப்படி அசித்து மூன்றுபடிப் பட்டிருக்கும். (௬௪).

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளேஶரணம்.

**ஜீயர் திருவடிகளே ஶரணம்.**

---

ஶ்ரீமதே ராமாநுஜாய நம:.

## தத்வத்ரயம்.

## ஈஶ்வர ப்ரகரணம் ॥ ௩ ॥

ஈஶ்வரன் - அகிலஹேய ப்ரத்யநீகாநந்த ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாய், ஜ்ஞாந ஶக்த்யாதி கல்யாணகுணகணபூஷிதனாய், ஸகலஜகத் ஸர்க ஸ்திதி ஸம்ஹாரகர்த்தாவாய், (ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ) - என்கிற † சதுர்வித புருஷர்களுக்கு மாஶ்ரயணீயனாய், தர்மார்த்தகாம மோக்ஷாக்ய சதுர்விதபலப்ரதனாய், விலக்ஷண விக்ரஹயுக்தனாய், லக்ஷ்மீ பூமி நீளா நாயகனாயிருக்கும். (௧) அகிலஹேயப்ரத்யநீகனாகையாவது - தமஸ்ஸுக்குத் தேஜஸ்ஸு போலேயும், ஸர்ப்பத்துக்கு கருடனைப்போலேயும், விகாராதிதோஷங்களுக்கு ப்ரதிபடனாயிருக்கை. (௨). அநந்தனாகையாவது-நித்யனாய், சேதநாசேதநங்களுக்கு வ்யாபகனாய், அந்தர்யாமியாய் இருக்கை. (௩). அந்தர்யாமியானால் தோஷங்கள் வாராதோவென்னில், (௪). ஶரீரகதங்களான பால்யாதிகள்-ஜீவாத்மாவுக்கு வாராதாப்போலே, த்ரிவிதசேதநாசேதநதோ

---

† சதுர்வித புருஷர்களுக்காஶ்ரயணீயனாய் - என்றும் பாடாந்தரம்.

ஷமும் ஈஶ்வரனுக்கு வாராது. (௫). ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாகையாவது-ஆநந்தரூப ஜ்ஞாநனாயிருக்கை. (௬). அதாவது-கட்டடங்க அநுகூலமாய், ப்ரகாஶமுமாயிருக்கை. (௭). இவனுடைய ஜ்ஞாந ஶக்த்யாதி கல்யாணகுணங்கள் - நித்யங்களாய், நிஸ்ஸீமங்களாய், நிஸ்ஸங்க்யேயங்களாய், நிருபாதிகங்களாய், நிர்தோஷங்களாய், ஸமாநாதிகரஹிதங்களா யிருக்கும். (௮). இவற்றில் வாத்ஸல்யாதிகளுக்குவிஷயம்-அநுகூலர்; ஶௌர்யாதிகளுக்குவிஷயம்-ப்ரதிகூலர்; இவற்றுக்குக் காரணமான ஜ்ஞாந ஶக்த்யாதிகளுக்கு-எல்லாரும் விஷயம். (௯). ஜ்ஞாநம்-அஜ்ஞர்க்கு; ஶக்தி-அஶக்தர்க்கு; க்ஷமை-ஸாபராதர்க்கு; க்ருபை-துஃகிகளுக்கு; வாத்ஸல்யம்-ஸதோஷர்க்கு; ஶீலம்-மந்தர்க்கு; ஆர்ஜவம்-குடிலர்க்கு; ஸௌஹார்தம் - துஷ்ட ஹ்ருதயர்க்கு; மார்தவம் - விஶ்லேஷபீருக்களுக்கு; ஸௌலப்யம்-காண ஆசைப்பட்டவர்களுக்கு; இப்படியெங்குங் கண்டுகொள்வது. (௧௦). இப்படி, ஈஶ்வரன்-கல்யாணகுணங்களோடே கூடியிருக்கையாலே, பிறர் நோவுகண்டால் 'ஐயோ' வென்றிரங்கி, அவர்களுக்கெப்போதுமொக்க நன்மையைச் சிந்தித்து, தனக்கேயாயிருத்தல், தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருத்தல் செய்யாதே, நிலா, தென்றல், சந்தநம், தண்ணீர்போலே பிறர்க்கேயாய், தன்னை ஆஶ்ரயித்தவர்கள்பக்கல் ஜந்ம ஜ்ஞாந வ்ருத்தங்களாலுண்டான நிகர்ஷம் பாராதே, தாங்களும் பிறருந் தஞ்சமல்லாதபோது தான் தஞ்சமாய், ஸாந்தீபநீபுத்ரனையும், வைதிகன் புத்ரர்களையும் மீட்டுக்கொண்டு வந்தாற்போலே அரியனசெய்தும், அவர்கள் அபேக்ஷிதங்களைத் தலைக்கட்டியும், அவர்களுக்கு ஶ்ருவபதம்போலே பண்டில்லாதவற்றையும் உண்டாக்கியும், தந்தாம் ஸ்வம் தாந்தாம் விநியோகங் கொண்டாற்போலேயிருக்கத் தன்னையும் தன்னுடைமையையும் வழங்கி, அவர்கள் கார்யந் தலைக்கட்டினால் தான் க்ருதக்ருத்யனாய், தான் செய்தநன்மைகளொன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருத லவத்தையே நினைத்து, அநாதிகாலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி எல்லா தஶையிலும் இனியனாய், ஹார்யாபுத்ரர்கள் குற்றங்களைக் காணுக்கண்ணிட்டிருக்கும் புருஷனைப்போலே அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே, குற்றங்களைப் பெரியபிராட்டியார் காட்டினாலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனாய் நின்று ரக்ஷித்து, காமினியுடைய அழுக்குகக்கும் காமுகனைப்போலே, அவர்கள் தோஷங்களை போக்யமாகக்கொண்டு, அவர்கள்பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனாய், பிரிந்தால் - அவர்கள் வ்யஸநம் குளப்படி யென்னும்படி தானீடுபட்டு, அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழவிட்டு, அவர்களுக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி எளியனாய், அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணை கன்றையும், புல்லிட வந்தவர்களையும் கொம்பிலுங் குளம்பிலும் ஏற்குமாபோலே பெரியபிராட்டியாரையும், ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக்கொண்டு போரும். (௧௧). இவனே - ஸகல ஜகத்துக்குங் காரணபூதன். (௧௨). சிலர் பரமாணுவைக் காரணமென்றார்கள். (௧௩). பரமாணுவில் - ப்ரமாணமில்லாமையாலும், ஶ்ருதிவிரோதத்தாலும் அது சேராது. (௧௪). காபிலர் - ப்ரதாநம் காரணமென்றார்கள். (௧௫). ப்ரதாநம்-அசேதநமாகையாலும், ஈஶ்வரன்-அதிஷ்டியாதபோது பரிணமிக்க மாட்டாமையா

லும், ஸ்ருஷ்டி - ஸம்ஹார வ்யவஸ்தை கூடாமையாலும், அதுவுஞ்சேராது. (௧௬) சேதநனும் காரணமாகமாட்டான். (௧௭). கர்ம பரதந்த்ரனுமாய், து:கியுமாயிருக்கையாலே. (௧௮). ஆகையால், ஈஶ்வரன்தானே ஜகத்துக்குக்காரணம். (௧௯). இவன் காரணமாகிறது - அவித்யா கர்ம பரநியோகாதிகளால் அன்றிக்கே, ஸ்வேச்சையாலே. (௨௦). ஸ்வஸங்கல்பத்தாலே - செய்கையாலே இதுதான் வருத்தமற்றிருக்கும். (௨௧). இதுக்கு ப்ரயோஜநம் கேவல லீலை. (௨௨). ஆனால் ஸம்ஹாரத்தில் லீலை கொலையாதோ வென்னில், (௨௩). ஸம்ஹாரந்தானும் லீலையாகையாலே கொலையாது. (௨௪) இவன் தானே ஜகத்தாய்ப் பரிணமிக்கையாலே உபாதாநமுமாயிருக்கும். (௨௫). ஆனால் நிர்விகாரனென்னும்படி யென்னென்னில். (௨௬). ஸ்வரூபத்துக்கு விகாரமில்லாமையாலே நிர்விகாரனென்னக் குறையில்லை. (௨௭). ஆனால் பரிணாமம் உண்டாம்படி யென்னென்னில், (௨௮). விஶிஷ்டவிஶேஷணத்வாரகமாக. (௨௯). ஒரு ஶிலந்திக்குண்டான ஸ்வபாவம் - ஸர்வ ஶக்திக்குக் கூடாதொழியாதிறே. (௩௦). ஈஶ்வரன் ஸ்ருஷ்டிக்கையாவது - அசித்தைப் பரிணமிப்பிக்கையும், சேதநர்க்கு ஶரீரேந்த்ரியங்களைக் கொடுத்து ஜ்ஞாந விகாஸத்தைப் பண்ணுகையும். (௩௧). ஸ்திதிப்பிக்கையாவது - ஸ்ருஷ்டமான வஸ்துக்களிலே பயிருக்கு நீர்நிலைபோலே, அநுகூலமாக ப்ரவேஶித்து நின்று ஸர்வரக்ஷைகளையும் பண்ணுகை. (௩௨). ஸம்ஹரிக்கையாவது - அவிநீதனான புத்ரனைப் பிதா விலங்கிட்டு வைக்குமாபோலே, விஷயாந்தரங்களிலே கைவளருகிற கரணங்களைக் கொலைத்திட்டுவைக்கை. (௩௩). இம்மூன்றுந் தனித்தனியே நாலுப்ரகாரமா யிருக்கும். (௩௪). ஸ்ருஷ்டியில்-ப்ரம்ஹாவுக்கும், ப்ராஜாபதிகளுக்கும், காலத்துக்கும், ஸகல ஜந்துக்களுக்கும் அந்தர்யாமியாய் ரஜோகுணத்தோடேகூடி ஸ்ருஷ்டிக்கும். (௩௫) ஸ்திதியில் விஷ்ண்வாதிரூபேண அவதரித்து, மந்வாதிமுகேந ஶாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து, நல்வழிகாட்டி, காலத்துக்கும், ஸகல பூதங்களுக்கும் அந்தர்யாமியாய் ஸத்வகுணத்தோடேகூடி ஸ்திதிப்பிக்கும். (௩௬). ஸம்ஹாரத்தில் - ருத்ரனுக்கும், அக்நியந்தகாதிகளுக்கும், காலத்துக்கும், ஸகலபூதங்களுக்கும் அந்தர்யாமியாய் தமோகுணத்தோடேகூடி ஸம்ஹரிக்கும். (௩௭). சிலரை ஸுகிகளாகவும், சிலரை து:கிகளாகவும் ஸ்ருஷ்டித்தால் ஈஶ்வரனுக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள் வாராதோ என்னில், (௩௮). கர்ம மடியாகச் செய்கையாலும், மண்தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப்பண்ணும் மாதாவைப்போலே ஹிதபரனாய்ச் செய்கையாலும் வாராது. (௩௯). இவன்தான் (முந்நீர்ஞாலம் படைத்த வெம்முகில்வண்ணன்) என்கிறபடியே ஸவிக்ரஹனாய்க்கொண்டு, ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணும். (௪௦). விக்ரஹந்தான்-ஸ்வரூபகுணங்களிலுங்காட்டில் அத்யந்தாபிமதமாய், ஸ்வாநுரூபமாய், நித்யமாய், ஏகரூபமாய், ஶுத்தஸத்வாத்மகமாய், சேதந தேஹம்போலே ஜ்ஞாநமயமான ஸ்வரூபத்தை மறைக்கையன்றிக்கே, மாணிக்கச்செப்பிலே பொன்னை யிட்டுவைத்தாற்போலேயிருக்க, பொன்னுருவான திவ்யாத்ம ஸ்வரூபத்துக்கு ப்ரகாஶகமாய், நிரவதிகதேஜோரூபமாய், ஸௌகுமார்யாதி கல்யாணகுணகணநிதியாய், யோகித்யேயமாய், ஸகலஜநமோ

பநமாய், ஸமஸ்தபோகவைராக்யஜநகமாய், நித்யமுக்தாநுபாவ்யமாய்,
* வாசத்தடம்போலே ஸகலதாபஹரமாய், அநந்தாவதாரகந்தமாய், ஸர்வ
ரக்ஷகமாய், ஸர்வாபாஶ்ரயமாய், அஸ்த்ரபூஷணபூஷிதமாயிருக்கும்.
(௪௧). ஈஶ்வரஸ்வரூபந்தான் - பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தர்யா
மித்வம், அர்ச்சாவதாரம் என்றஞ்சு ப்ரகாரத்தோடே கூடியிருக்கும். (௪௨).
அவற்றில் பரத்வமாவது - அகாலகால்யமான * நலமந்தமில்லதோர் நாட்
டிலே நித்யமுக்தர்க்கு போக்யனாய்க்கொண் டெழுந்தருளியிருக்கும் இரு
ப்பு. (௪௩). வ்யூஹமாவது - ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரார்த்தமாகவும், ஸம்
ஸாரி ஸம்ரக்ஷணார்த்தமாகவும், உபாஸகாநுக்ரஹார்த்தமாகவும், ஸங்கர்ஷண-
ப்ரத்யும்ந - அநிருத்தரூபேண நிற்கும்நிலை. (௪௪). பரத்வத்தில் - ஜ்ஞாநாதிக
ளாறும் பூர்ணமாயிருக்கும்; வ்யூஹத்தில் - இவ்விரண்டு குணம் ப்ரகடமா
யிருக்கும். (௪௫). ஸங்கர்ஷணர் - ஜ்ஞாந பலங்களிரண்டோடுங் கூடி,
ஜீவதத்வத்தை அதிஷ்டித்து, அத்தை ப்ரக்ருதியில் நின்றும் விவேகித்து,
ப்ரத்யும்நாவஸ்தையையும் பஜித்து, ஶாஸ்த்ர ப்ரவர்த்தநத்தையும், ஜகத்
ஸம்ஹாரத்தையும் பண்ணக்கடவராயிருப்பர். (௪௬). ப்ரத்யும்நர் - ஐஶ்
வர்ய வீர்யங்களிரண்டோடுங் கூடி, மநஸ்தத்வத்தை அதிஷ்டித்து, தர்
மோபதேஶத்தையும், மநுசதுஷ்டயந் தொடக்கமான ஶுத்தவர்க ஸ்ருஷ்
டியையும் பண்ணக்கடவராயிருப்பர். (௪௭). அநிருத்தர் - ஶக்தி தேஜஸ்
ஸுக்க ளிரண்டோடுங்கூடி, ரக்ஷணத்துக்கும், ஜ்ஞாநப்ரதாநத்துக்கும்,
காலஸ்ருஷ்டிக்கும், மிஶ்ரஸ்ருஷ்டிக்கும் கடவராயிருப்பர். (௪௮). விபவம்-
அநந்தமாய், கௌண முக்யபேதத்தாலே பேதித்திருக்கும். (௪௯). மநுஷ்
யத்வம், திர்யக்த்வம்போலே கௌணத்வமும் இச்சையாலே வந்தது; ஸ்வ
ரூபேண அன்று. (௫௦). அதில் அப்ராக்ருத விக்ரஹங்களுமாய், அஜஹத்
ஸ்வபாவவிபவங்களுமாய், தீபாதுத்பந்ந ப்ரதீபம்போலேயிருக்கக்கடவதான
முக்ய ப்ராதுர்பாவங்களெல்லாம் முமுக்ஷுக்களுக்கு உபாஸ்யங்களா யிருக்
கும். (௫௧). விதி, ஶிவ, பாவக, வ்யாஸ, ஜாமதக்ந்யார்ஜுந, வித்தேஶா
திகளாகிற கௌண ப்ராதுர்பாவங்களெல்லாம் அஹங்காரயுக்த ஜீவர்களை
அதிஷ்டித்து நிற்கையாலே முமுக்ஷுக்களுக்கு அநுபாஸ்யங்கள். (௫௨).
நித்யோதித ஶாந்தோதிதாதிபேதமும், ஜாக்ரத் ஸம்ஜ்ஞாதியான சாதுராத்
ம்யமும், கேஶவாதி மூர்த்த்யந்தரமும், ஷட்த்ரிம்ஶத் பேதபிந்நமான பத்ம
நாபாதிவிபவமும், உபேந்த்ர, த்ரிவிக்ரம, ததிபக்த, ஹயக்ரீவ, நரநா
ராயண, ஹரி, க்ருஷ்ண, மத்ஸ்ய, கூர்ம, வராஹாத்யவதார விஶேஷங்களும்
அவற்றினுடைய புஜாயுத வர்ண க்ருத்ய ஸ்தாநாதி பேதங்களும், ஊரவ
யரங்களுமாய், குஹ்யதமங்களுமாய் இருக்கையாலே சொல்லுகிறிலோம்.
(௫௩). அவதாரங்களுக்கு ஹேது இச்சை. (௫௪). பலம் ஸாதுபரித்ரா
ணாதி த்ரயம். (௫௫) பல ப்ரமாணங்களிலும் ஶ்ருதமான ஶாபாதிகளாலே பிறந்
தானென்கையாலே, அவதாரங்களுக்கு ஹேது, கர்மமாகவேண்டாவோவெ
ன்னில், (௫௬.) அவைதன்னிலே ஶாபம் வ்யாஜம்; அவதாரம் ஐச்சிகமெ
ன்று பரிஹரித்தது. (௫௭.) அந்தர்யாமித்வமாவது-அந்த:ப்ரவிஶ்ய நியந்தா
வாயிருக்கை. (௫௮.) ஸ்வர்க நரகப்ரவேஶாதி ஸர்வாவஸ்தைகளிலும் ஸகல

சேதநர்களுக்குத் துணையாய், அவர்களை விடாதே நிற்கிற நிலைக்குமேலே ஸர்வாஶ்ரயமான திருமேனியோடே கூடிக்கொண்டு, அவர்களுக்கு த்யேயனுகைக்காகவும், அவர்களை ரக்ஷிக்கைக்காகவும், ஸம்பந்தனுக்கொண்டு ஹ்ருதய கமலத்திலே எழுந்தருளியிருக்கு மிருப்பு. (ருகூ.) அர்ச்சாவதாரமாவது - (தமருகந்ததெவ்வுருவமவ்வுருவம்) என்கிறபடியே சேதநர்க்கபிமதமான த்ரவ்யங்களிலே விபவவிஶேஷங்களைப் போலன்றிக்கே, தேஶ காலாதிகாரி நியமமில்லாதபடி ஸந்நிதிபண்ணி, அபராதங்களைக் காணக்கண்ணிட்டு, அர்ச்சகபாரதந்த்ரமான ஸமஸ்த வ்யாபாரங்களையும் உடையனுக்கொண்டு, கோயில்களிலும், க்ருஹங்களிலும் எழுந்தருளி நிற்கும் நிலை. (கூ0). ருசிஜநகத்வமும், அஶேஷலோக ஶரண்யத்வமும், அநுபாவ்யத்வமும், எல்லாம் அர்ச்சாவதாரத்திலே பரிபூர்ணம். (கூக). ஸ்வஸ்வாமிபாவத்தை மாறடிக்கொண்டு அஜ்ஞரைப்போலேயும், அஶக்தரைப்போலேயும், அஸ்வதந்த்ரரைப்போலேயும் இருக்கச்செய்தேயும், அபாரகாருண்ய பரவஶனுக்கொண்டு ஸர்வாபேக்ஷிதங்களையும் கொடுத்தருளும். (கூஉ).

(ஆக மொத்த ஸூத்ரம் - உ0உ).

---

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

*தத்வத்ரயம் முற்றிற்று.*

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

## அர்த்தபஞ்சகம். †

ஸம்ஸாரியான சேதநனுக்குத் தத்வஜ்ஞாநம் பிறந்து உஜ்ஜீவிக்கும்போது, அர்த்தபஞ்சக ஜ்ஞாநம் உண்டாகவேணும். அர்த்தபஞ்சகஜ்ஞாநமாவது - ஸ்வஸ்வரூப, (க) பரஸ்வரூப, (உ) புருஷார்த்தஸ்வரூப, (௩) உபாயஸ்வரூப, (ச) விரோதிஸ்வரூபங்களை, (ரு) உள்ளபடி அறிகை. இவற்றில் ஓரொருவிஷயந்தான் - அஞ்சுபடிப்பட்டிருக்கும்.

(க). ஸ்வஸ்வரூப மென்கிறது - ஆத்மஸ்வரூபத்தை. ஆத்மஸ்வரூபந்தான் - நித்யர், முக்தர், பத்தர், கேவலர், முமுக்ஷுக்களென்றைந்து.

(உ). ‡ பரஸ்வரூபமென்கிறது - ஈஶ்வரஸ்வரூபத்தை. ஈஶ்வரஸ்வரூபந்தான் - பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரமென்றைந்து.

---

† திருமந்த்ரத்திற்சொல்லுகிற அர்த்தபஞ்சக ஸ்வரூபத்தையும் விஶதமாக்குகிறது - இந்தரஹஸ்யம்.

‡ 'அர்ச்சா வ்யூஹ: பரஞ்சேதி ப்ராதுர்பாவாஸ்ததாபரே । ஸர்வஜ்ஞஸ்ய விபோர்பேதா நியந்துஸ்ஸர்வதேஹிநாம் ॥ அவதாரஸ்ததா த்வந்தர்யாமீ ஸாக்ஷாதக்ருதி:' என்கிற விஷ்வக்ஸேந ஸம்ஹிதா ஸ்லோகவசநத்தைத் திருவுள்ளம்பற்றி - பரஸ்வரூப மித்யாதி - அருளிச்செய்கிறார். விபவாவதாரம் - இரண்டுவிதம். முக்யப்ராதுர்பாவ மென்றும், கௌணப்ராதுர்பாவ மென்றும். முக்யப்ராதுர்பாவங்கள் - மத்ஸ்யகூர்மாதிர்யவதார

(௩). புருஷார்த்தஸ்வரூப மென்கிறது-புருஷனாலே அர்த்திக்கப்படுமது புருஷார்த்தம். அந்தப் புருஷார்த்தந்தான் - தர்ம, அர்த்த, காம, ஆத்மாநுபவ, பகவதநுபவமென்றைந்து.

(௪). உபாயஸ்வரூபமென்கிறது - கர்ம, ஜ்ஞாந, பக்தி, ப்ரபத்தி, ஆசார்யாபிமாநமென்றைந்து.

(௫). விரோதிஸ்வரூபமென்கிறது - ஸ்வரூபவிரோதி, பரத்வவிரோதி, புருஷார்த்தவிரோதி, உபாயவிரோதி, ப்ராப்திவிரோதியென்றைந்து.

(௧). [௧.] இவற்றில், நித்யராவார்-ஒருநாளும் ஸம்ஸார ஸம்பந்தமாகிற அவத்யமின்றிக்கே நிரவத்யராய், பகவதநுபவாநுகூல்யைகபோகராய், (வானிளவரசு வைகுந்தக்குட்டன் வாசுதேவன்) என்கிற ஸ்ரீவைகுண்டநாதனுக்கு (விண்ணாட்டவர் மூதுவர்) என்கிறபடியே பட்டங்கட்டுகைக் குரியராம்படி மூப்பரான மந்த்ரிகளாய், † ஈஶ்வரநியோகாத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப் பண்ணவும் ஶக்தராய், பரவ்யூஹாதி ஸர்வாவஸ்தைகளிலும் தொடர்ந் தடிமைசெய்யக்கடவராய் கோயில்கொள் தெய்வங்களான ஸேனைமுதலியார் தொடக்கமான அமரர்கள்.

---

ங்கள். கௌணமாவது - ஆவேஶாவதாரம். இவைதான் ஸ்வரூபாவேஶ மென்றும், ஶக்த்யாவேஶ மென்றும் த்விவிதமாயிருக்கும். ஸ்வரூபாவேஶமாவது - பரஶுராம க்ருஷ்ண த்வைபாயநாதிகளான சேதநருடைய ஶரீரங்களிலே தன்னுடைய அஸாதாரண விக்ரஹத்தோடே ஆவேஶித்துநிற்கை. ஶக்த்யாவேஶமாவது - கார்யகாலத்திலே விதிஶிவாதிகளான சேதநர்பக்கலிலே ஶக்திமாத்ரத்தாலே ஸ்புரித்துநிற்கை. அர்சாவதாரமும் - விபவாவதாராநுரூபமாயிருந்தபோதிலும் ப்ரத்யக்ஷத்தில் வ்யக்த்யந்தரமாகத் தோற்றுகையாலும், வைலக்ஷண்யத்தாலும் அர்சாவதாரத்தை பின்னமாக அருளிச்செய்தாரித்தனை. 'ஏதச்சதுர்வ்யூஹத்ரிஷ்டஸ்வயமேவாவதீர்ய யதாஸ்வாவதாரஜதி' என்று ஸஹஸ்ரநாமபாஷ்யம்.

† இத்தால் - ஸ்தோத்ரரத்நபாஷ்யத்தில் (௨௧-௪௧)வது ஶ்லோகங்களிற் சொன்னவை நிரஸ்தமாயிற்று. சேதநர்களுக்கு ஜகத்வ்யாபாரமில்லை என்றது - ஸதேவேத்யாதிகளிற் சொல்லுகிற ஜகத்காரணத்வ மில்லையென்றபடியிறே. ப்ரஹ்மாதிகள் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார க்ரமங்களை உபதேஶ க்ரமத்தாலே பெற்று அவற்றைப்பண்ண ஶக்தரானபின்பு அநந்ய ப்ரயோஜநராய் ஆஶ்ரயிக்குமவர்கள், அவனுடைய நியோகத்தால் அவற்றைச்செய்ய ஶக்தரென்னுமிடஞ் சொல்லவேண்டாவிறே. 'விஶ்வஸ்ருஜே' என்று விஷ்வக்ஸேநருக்கு ஸ்ரஷ்ட்ருத்வம் கண்டோக்தம். 'ஸ்ரீஶதிவிஷ்வக்ஸேநந்ருஷத்ஸமஸ்தநிர்வாஹைஶ்வர்யம்' என்று ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் பாஷ்யகாரரருளிச்செய்தாராகையாலே இதுக்கு விபரீதமானவை உக்தவிபரீதம்போலே த்யாஜ்யமாமித்தனை. ஆக ப்ரஹ்மாதிகளுடைய ஏகதேஶஸ்ருஷ்ட்ருத்வாதிஶக்தி ஈஶ்வராதீனையாகிறாப்போலே நித்யமுக்தருடைய ஸகலஜகத் ஸ்ருஷ்ட்யாதிஶக்தியு மீஶ்வராதீனை என்றபடி. ஆகையால் நித்யமுக்தர்களுக்கு ஸ்ருஷ்ட்யாதியில் ஶக்தியுண்டென்னுமிடமுபபந்நம். 'ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ப்ராப்தியில்லாமைபோக்கி ஶக்தியில்லாமையாலே தவறுகிறு

[௨.] முக்தராவார்-† பகவத்ப்ரஸாதத்தாலே ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் வந்த க்லேசமலங்களெல்லாம் கழிந்து, பகவத்ஸ்வரூப ரூப குண விபவங்களை அநுபவித்து, அவ்வநுபவஜநிதப்ரீதி உள்ளடங்காமையாலே வாயாரப் புகழ்ந்து, * மீட்சியின்றி வைகுந்தமாநகரத்திலே களித்தாநந்திக்கிற முநிவர்கள்.

[௩.] பத்தராவார்-பாஞ்சபௌதிகமாய், அநித்யமாய், ஸுகதுःகாநுபவபரிகரமாய், ஆத்மவிச்லேஷத்தில் தர்சந ஸ்பர்சநயோக்ய மில்லாதபடி அசுசிபாஸ்பதமாய், அஜ்ஞாந அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநஜநகமான ஸ்வதேஹமே ஆத்மாவாகவும், சப்தாதி விஷயாநுபவஜநிதமான ஸ்வதேஹ போஷணமே புருஷார்த்தமாகவும், சப்தாதிவிஷயாநுபவத்துக் குறுப்பாக வர்ணாச்ரமதர்மங்களை அழியமாறியும், அஸேவ்யஸேவைபண்ணியும், பூதஹிம்ஸைபண்ணியும், பரதார பரத்ரவ்யாபஹாரம்பண்ணியும், ஸம்ஸாரவர்த்தகராய், பகவத்விமுகரான சேதநர்.

[௪.] கேவலனாவான்-தனியிடத்திலே மிகவும் க்ஷுத்பிபாஸைகளாலே நலிவுபட்டவன், பக்ஷ்யாபக்ஷ்ய விவேகம்பண்ணமாட்டாதே தன்னுடம்பைத்தானேஜீவித்து ‡ ப்ரஸந்நனுமாபோலே ஸம்ஸார தாவாக்நியாலே தப்தனானவன், ஸம்ஸார துःக நிவ்ருத்திக்கு உறுப்பாக சாஸ்த்ரஜந்ய ஜ்ஞாநத்தாலே ப்ரக்ருத்யாத்ம விவேகம்பண்ணி, ப்ரக்ருதி - துःகாச்ரயமாய், ஹேயபதார்த்தஸமுதாயமாய் இருக்கிற ஆகாரத்தையும், ஆத்மா - ப்ரக்ருதேः பரனாய் பஞ்சவிம்சகனாய், ஸ்வயம்ப்ரகாசனாய், ஸ்வதஸ்ஸுகியாய், நித்யனாய், அப்ராக்ருதனாய் இருக்கிற ஆகாரத்தையும் அநுஸந்தித்து, முன்பு தான்பட்ட துःகத்தின் பயத்தாலே இவ்வல்பரஸத்திலே கால்தாழ்ந்து (* உணர்முழுநலமான பரமாத்ம விவேகம் பண்ணமாட்டாதே, * அமுதவெள்ளத்தானாஞ்சிறப்புவிட்டு,) அவ்வாத்மப்ராப்திக்கு ஸாதநமான ஜ்ஞாநயோகத்திலே நிஷ்ட

---

ரல்ல' ரென்று ஸ்தோத்ரரத்நத்தில் (௨௦) வது ச்லோகத்தில் ஆச்சான்பிள்ளை. 'தேஹிகாய பும்ஸாம் யதீஹ த்விஜந்மஸம்ஸர்க்கோ பயம்பவ' மென்று நாரதீயபுராணந்தர்கத ஹரிபக்திஸுதோதயத்தில் நாரதபகவானைக்குறித்து பக்தர்களுடைய லக்ஷணஞ்சொல்லுகிறவளவில் ஸர்வேச்வரன்தானே சொன்னானிறே. அந்யத்ரவிஸ்தரः.

† (பகவத்ப்ரஸாதத்தாலே) என்றது - பஹுதாஜந்மஸாத்யமான கர்மஜ்ஞாநங்களாலே பிறந்த தைலதாராவதவிச்சிந்ந ஸ்ம்ருதிஸந்தானரூப பக்திமூலமாகவரும் பகவத்ப்ரஸாதத்தாலேயாதல், நிர்ஹேதுக பகவத்க்ருபையாலே உபாயாந்தர விஷயத்தில் பிறந்த தௌஷ்கரத்வாதி புத்திமூலமாகவரும் ப்ரபதநமூலமான பகவத்ப்ரஸாதத்தாலே யாதலென்றபடி. இவ்வர்த்தம் தத்வத்ரய வ்யாக்யாநத்தில் (க - ப்ர - சச - ஸூத்) ஸ்பஷ்டம்.

‡ புஜித்து (பா).

னாய், யோகபலமான † ஆத்மாநுபவமாத்ரத்தையே புருஷார்த்தமாக அநுப வித்து, பின்பு ஸம்ஸாரஸம்பந்தமும், பகவத்ப்ராப்தியும் அற்று, யாவதாத் மபாவி அசரீரியாய்க்கொண்டு திரிவானொருவன்.

---

† இக்கைவல்யாதிகாரிக்கு பரமாத்மாநுபவ வைதுர்யேண கேவலப்ரக்ருதிவிநிர் முக்த ஜீவாத்மாநுபவத்தையே நித்யபுருஷார்த்தமாகச் சொல்லுமது — 'உபயோ விதி வரிவர்த்தம் ப்ரஹ்மோபாஸதே' இத்யாதி வேதாந்தஸாராதி ஸ்ரீஸூக்திக ளோடே விரோதியாதோ வென்னில் - விரோதியாது. இந்த ஆத்மாநுபவ காமனான கைவல்யாதிகாரிக்கு முக்யபலம் — ஆத்மாநுபவமே யாகையாலே. இவன் - கேவல நாமாதிப்ராணபர்யந்த நிர்த்திஷ்ட ஜீவாத்மஸ்வரூப பர்யந்தமான சிதசித்வஸ்துக்களை ப்ருஹ்ம த்ருஷ்டியாலே யாதல், ஸ்வரூபேணவாத லுபாஸிக்கிற ப்ரதீகாலம்பநனன்றிறே. ப்ர தீகாலம்பநனுக்கு — அர்ச்சிராதிகத்யாதிகளில்லை யென்று 'ஸூத்ரோக்தநிஷ்டீகமத்யஹி யாநாத்' 'அப்ரதீகாலம்பநாந்நயதீதி' இத்யாதிஸூத்ரங்களிற் சொல்லப்பட்டது. ஆகை யாலிவ்விடத்திற் சொல்லுகிறவதிகாரி - ப்ரதீகாலம்பநாதிகாரிபின்னன். இவன் - ப்ரக்ரு திவியுக்தப்ருஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸந நிஷ்டனுகையாலே 'தம்யதா யதோபாஸ தேததேவ பவதி' (சதபத ப்ரா - ௧0 - காண்ட. ஙப்ரபா. ௫ - அத்யா. ௬ - ப்ராஹ்ம. ௨0 - பஞ்) என்கிறபடியே — ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுபவ மாத்ரமேபலமாகக்கடவது. இது தன்னை 'ஆத்மாநுபவமாத்ரத்தையே' இத்யாதி தந்த்ரேண வருளிச்செய்தார். வேதார்த்தஸாரத்தில், 'உபயோவிதி வரிவர்த்தம் ப்ரஹ்மோபாஸதே அவஹேதேந ஸாதிமசரீரகம்ப்ரஹ்மகேவலம், ப்ரஹ்மாத்மகஸாத்மாநமிதரே' என்று 'கைவல்யாதிகாரியான பஞ்சாக்நிவித்யாநிஷ்டனும், பரப்ரஹ்மோபாஸநநிஷ்டனும் அவஹேதத்தாலே பரிபூர்ண மான ப்ரஹ்மத்தை உபாஸிக்கிறார்கள்' என்று அருளிச்செய் திருக்கையாலே உபாஸ்ய ஹ்ரோபாஸநநிஷ்டனைக்காட்டிலும், பஞ்சாக்நிவித்யா நிஷ்டன் வேறுபட்டவன் என்று ஸித்திக்கையாலும், இவரிருவர்க்கு மர்ச்சிராதிகதியை 'அதஃபரம் ப்ரஹ்மோபாஸீநா ந், ஆத்மாநம் ப்ரக்ருதிவியுக்தம் ப்ரஹ்மாத்மகத்வேநோபாஸீநாநுயதீதி' என்று சொல்லு கையாலும், 'அர்ச்சிராதிநாகதாநாம் தேஹாவஸாந ஏவ... ததா நீமேவப்ரஹ்மப்ரா ப்திருபதிவிரோதாத்' என்று வேதார்த்தஸாரத்தில் அர்ச்சிராதிகதியால் போனவனுக்கு அப் பொழுதே ப்ரஹ்மப்ராப்தியைச் சொல்லுகையால் அண்டப்ரக்ருதிமண்டலத்தில் ஆத்மாநு பவம் ஸங்கதமாகையாலும், 'யோகிநாமம்ருதம்ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணாம்' என்கிற விஷ்ணுபுராண வசநத்துக்கு - 'ப்ரக்ருதிமண்டலத்துக்கும் - வைகுண்டாக்யதி வ்யநகரத்துக்கும் மத்யத்தில் 'ஆத்மாநுபவஸ்தாநம்' என்று ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் பட்டர் அர்த்தமருளிச் செய்திருக்கையாலும், ப்ரக்ருதிமண்டலத்தி லாத்மாநுபவம் கேவலப்ரதீகாலம்பநனுக்கென்று அந்தரோக வ்யாக்யாநத்தில் எங்களாழ்வான் நிவர் ஹாந்தர மருளிச்செய்திருக்கையாலும், ப்ரக்ருதிமண்டலத்துக்குள் ஆத்மாநுபவங்கொள் ளில் - அதுக்கநித்யத்வப்ரஸங்கம்வரு மாகையாலும், அக்ஷிதஸ்யமேவாத்மாநுபவ முண்டென்கிற வேதார்த்தவசந விரோதம்வரு மாகையாலும், கீதாபாஷ்ய ஸ்ரீபா ஷ்யாதிகளில் 'ஜிஜ்ஞாஸு' என்கிற வஜ்ஞாநிவித்யா நிஷ்டனுக்கு நிஸ்ஸ்ரேயஸப்ரக்ருதி விதி

(௨.) [௧.] ஈஶ்வரவிஷயத்தில், பரத்வமாவது-பரமபதத்திலே (அவாக்யநாதர:) என்றெழுந்தருளியிருக்கிற * ஆதியஞ்சோதி யுருவான பரவாஸுதேவர்.

[௨.] வ்யூஹமாவது-ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாக்களான ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்கள்.

[௩.] விபவமாவது - ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள்.

[௪.] அந்தர்யாமித்வம் - இரண்டுபடிப்பட்டிருக்கும். அதாவது - (அடியேனுள்ளான்) என்றும், (எனதாவி) என்றும், (என்னுயிர்) என்றும், சொல்லுகிறபடியே ஆத்மாவுக்குள்ளும், (போதிற்கமலவன்னெஞ்சம்புகுந்து) என்றும், (அரவிந்தப்பாவையுந் தானுமகம்படி வந்துபுகுந்து) என்றும், (புந்தியிற்புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்தவழகன்) என்றும், (உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறிதி) என்றும், சொல்லுகிறபடியே லக்ஷ்மீஸஹிதனாய், விலக்ஷணவிக்ரஹயுக்தனாய்க்கொண்டு, ஹ்ருதயகமலத்துக்குள்ளே ஸகலப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் ஸதாவலோகநம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருக்கு மிருப்பு.

[௫.] அர்ச்சாவதாரமாவது - (தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவந்தானே தமருகந்த தெப்பேர்மற்றப்பேர்) என்கிறபடியே தனக்கென்ன ஓருருவும், ஓர்பெயரும் இன்றிக்கே ஆஶ்ரிதருகந்தவடிவே வடிவாகவும், அவர்களிட்டபெயரே பெயராகவும், ஸர்வஜ்ஞனா யிருக்கச்செய்தே அஜ்ஞனைப்போலேயும், ஸர்வஶக்தனா யிருக்கச்செய்தே அஶக்தனைப்போலேயும், அவாப்தஸமஸ்தகாமனாயிருக்கச்செய்தே ஸாபேக்ஷனைப்போலேயும், ரக்ஷகனாயிருக்கச்செய்தே ரக்ஷ்யம்போலேயும், ஸ்வஸ்வாமிபாவத்தை மாறாடிக்கொண்டு கண்ணுக்குவிஷயமாம்படி ஸர்வஸுலபனாய்க்கொண்டு, கோயில்களிலும், க்ருஹங்களிலும், தேஶகாலாவதி யின்றிக்கே எழுந்தருளியிருக்கும் நிலை.

(௩.) [௧.] புருஷார்த்தங்களில், தர்மமாவது-ப்ராணிரக்ஷணத்துக் குறுப்பாகப்பண்ணும் வ்ருத்தி விஶேஷங்கள்.

[௨.] அர்த்தமாவது - வர்ணாஶ்ரமாநுரூபமாக தநதாந்யங்களை ஸங்க்ரஹித்து தேவதாவிஷயங்களிலும், பைத்ருகமான கர்மங்களிலும், ப்ராணிகள் விஷயமாகவும், உத்க்ருஷ்டமான தேஶகால பாத்ரங்களையறிந்து, தர்மபுத்த்யா வ்யயிக்கை.

[௩.] காமமாவது - (A) ஐஹ லௌகிகமாயும், (B) பாரலௌகிகமாயும், த்விவிதமாயிருக்கும்.

---

கேவலம் - ஆத்மாநுபவ விரோதியான ஸம்ஸாரத்தினுடைய விமோசநத்திலே மாத்ரமிறே யிவனுக்கிச்சையுள்ளது. ஆக முமுக்ஷுக்க ளென்கிறது - பகவத்ப்ராப்திகாமதயா ஸம்ஸார விமோசநத்தி லிச்சைபிறந்தவனை. பகவத்ப்ராப்தி காமர்கள்தான் - உபாஸகர் என்றும் ப்ரபந்நர் என்றும் த்விவிதமா யிருக்கையாலே அத்தை அருளிச்செய்கிறார்—இதுதானித்யாதி.

(A) இஹலோகத்தில் காமமாவது - பித்ரு மாத்ரு ரத்ந தந தாந்ய வஸ்த்ராந்ந பாந புத்ர மித்ர களத்ர பஶு க்ருஹ க்ஷேத்ர சந்தந குஸும தாம்பூலாதி பதார்த்தங்களில் ஶப்தாதி விஷயாநுபவத்தால் வந்த ஸுக விஶேஷங்கள்.

(B) பரலோகத்தில் காமமாவது - இதில் விலக்ஷணமாய், தேஜோரூபமான ஸ்வர்க்காதி லோகங்களிலே சென்று, பசி தாஹ ஶோக மோஹ ஜராமரணாதிகள் இன்றிக்கே, ஆர்ஜித்த புண்யத்துக்கீடாக அம்ருதபாநம்பண்ணி, அப்ஸரஸ்ஸுக்களோடே ஶப்தாதி விஷயாநுபவம்பண்ணுகை.

[௩.] ஆத்மாநுபவமாவது - து:க்கநிவ்ருத்தி மாத்ரமான கேவலாத்மாநுபவ மாத்ரத்தையும் மோக்ஷமென்று சொல்லுவர்கள்.

[௫.] இனி, (பகவதநுபவ ரூபமான) † பரமபுருஷார்த்த லக்ஷணமோக்ஷமாவது - ப்ராரப்த கர்மஶேஷமாய் அவஶ்ய மநுபோக்யமான புண்யபாபங்கள் நஶித்து, (அஸ்தி-ஜாயதே - பரிணமதே-விவர்த்ததே - அபக்ஷீயதே-விநஶ்யதி) என்கிறபடியே ஷட்பாவ விகாராஸ்பதமாய், தாபத்ரயாஶ்ரயமாய், பகவத் ஸ்வரூபத்தை மறைப்பித்து, விபரீதஜ்ஞாநத்தை ஜநிப்பிக்கக்கடவதாய், ஸம்ஸாரவர்த்தகமான ஸ்தூல ஶரீரத்தை உபேக்ஷையோடே பொகட்டு, ஸுஷும்நா நாடியாலே ஶிர:கபாலத்தை பேதித்துப் புறப்பட்டு, ஸூக்ஷ்ம ஶரீரத்தோடே * வானேறவழிபெற்று, * மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தினன்னடுவுளன்னதோரெல்லையினூடுபோய், ஸூக்ஷ்ம ஶரீரத்தையும் வாஸநாரேணுவையும் விரஜாஸ்நாநத்தாலேகழித்து, ஸகலதாபங்களுமாறும்படி அமாநவ கரஸ்பர்ஶமும் பெற்று, ஶுத்தஸத்வாத்மகமாய், பஞ்சோபநிஷண்மயமாய், ஜ்ஞாநாநந்தஜநகமாய், பகவதநுபவைகபரிகரமாய், *ஒளிக்கொண்ட சோதியுமாய் இருக்கிற அப்ராக்ருத விக்ரஹத்தைப்பெற்று, * முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள, நிரதிஶயாநந்தமயமான * திருமாமணி மண்டபத்தை ப்ராபித்து, லக்ஷ்மீஸஹிதனாய், பூமிநீளாநாயகனாய், விலக்ஷணவிக்ரஹயுக்தனாய், * குழுமித்தேவர் குழாங்கள் கைதொழச் சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருருவான ஸ்ரீவைகுண்டநாதனை நித்யாநுபவம்பண்ணி, நித்யகிங்கரஸ்வபாவனாகை.

(௪.) [க.] உபாயங்களில், கர்ம யோகமாவது - யஜ்ஞ, தாந, தபோ, த்யாந, ஸந்த்யாவந்தந, பஞ்சமஹாயஜ்ஞ, அக்நிஹோத்ர, தீர்த்தயாத்ரா, புண்யக்ஷேத்ரவாஸ, க்ருச்ர, சாந்த்ராயண, புண்யநதீஸ்நாந, வ்ரத, சாதுர்மாஸ்ய, பலமூலாஶந, ஶாஸ்த்ராப்யாஸ, ஸமாராதந, ஜப, தர்ப்பணாதி கர்மாநுஷ்டாநத்தால் வந்த காயஶோஷணத்தாலே பாபநாஶம் பிறந்து, அத்தாலே இந்த்ரியத்வாரா ப்ரஸரிக்கிற தர்மபூத ஜ்ஞாநத்துக்கு ஶப்தாதிகள் விஷயமல்லாமையாலே விஷயஸாபேக்ஷைபிறந்து, * யம நியம ஆஸந ப்ராணாயாம ப்ரத்யாஹார த்யாந தாரணஸமாதிரூபமான அஷ்டாங்கயோக க்ரமத்தாலே யோகாப்யாஸகாலத்தளவும் ஜ்ஞாநத்துக்கு ஆத்மாவை விஷயமாக்குகை. இதுதான் ஜ்ஞாநயோகத்துக்கு ஸஹகாரியுமாய், ஐஶ்வர்யத்துக்குப்ரதாநஸாதநமுமாயிருக்கும்.

† குண்டலிதவாக்யம் சிலதாளகோசங்களிலில்லை.

[௨.] ஜ்ஞாநயோகமாவது-இப்படி யோகஜந்யமான ஜ்ஞாநத்துக்கு ஹ்ருதயகமலம், ஆதித்யமண்டலம் தொடக்கமான ஸ்தலவிஶேஷங்களில் எழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனை விஷயமாக்கி, அவ்விஷயந்தன்னை ஶங்க சக்ர கதா தாரமாய், பீதாம்பரயுக்தமாய், கிரீடாதி நூபுராந்த திவ்யபூஷணாலங்க்ருதமாய், லக்ஷ்மீஸஹிதமாகவும் அநுபவித்து, யோகாப்யாஸ க்ரமத்தாலே அநுபவகாலத்தைப்பெருக்கி, அநவரத பாவநாரூபமாக்குகை. இதுதான் பக்தியோகத்துக்கு ஸஹகாரியுமாய், கைவல்ய மோக்ஷத்துக்கும் ப்ரதாநஸாதநமுமாய் இருக்கும்.

[௩.] பக்தியோகமாவது-இப்படி தைலதாராவதவிச்சின்னஸ்ம்ருதிஸந்தாநரூபமான அநுபவம் ப்ரீதிரூபாபந்நமாகையும், அது தன்னை யறியப்பார்த்தால் ப்ராரப்த கர்மங்கழிகையும், ஸாதந ஸாத்யங்களை யநுஸந்தித்து, அதினுடைய ஸங்கோச விகாஸமாம்படி பரிணமிப்பிக்கையும்.

[௪.] ப்ரபத்த்யுபாயமாவது-இப்படி கர்ம ஜ்ஞாநஸஹக்ருதையான பக்தியோகத்தில் அஶக்தர்க்கும் அப்ராப்தர்க்கும் ஸுகரமுமாய், ஶீக்ர பலப்ரதமுமாய், உபாயம் ஸக்ருத்தாகையாலே உபாயாநுஷ்டாநமநந்தரமுண்டாகக்கடவதான பகவத்விஷயாநுபவங்களெல்லாம் ப்ராப்யகோடி கடிதங்களாகையாலே ஸ்வரூபாநுரூபமாயிருக்கும்.

இதுதான் (A) ஆர்த்தரூப ப்ரபத்தியென்றும், (B) த்ருப்தரூப ப்ரபத்தியென்றும், இரண்டுபடிப்பட்டிருக்கும்.

(A) ஆர்த்தரூபப்ரபத்தியாவது-நிர்ஹேதுகபகவத்கடாக்ஷமடியாக ஶாஸ்த்ராப்யாஸத்தாலும், ஸதாசார்யோபதேஶத்தாலும், யதாஜ்ஞாநம் பிறந்தவாறே, பகவதநுபவத்துக்கு விபரீதமான தேஹஸம்பந்தமும், தேஶஸம்பந்தமும், தேஶிகருடைய ஸஹவாஸமும் து:ஸ்ஸஹமாய், பகவதநுபவத்துக்கு ஏகாந்தமாம்படி விலக்ஷணமான தேஹத்தையும், தேஶத்தையும், தேஶிகரையும் ப்ராபிக்கையில் த்வரைவிஞ்சி, * ஓயுமூப்புப்பிறப்பிறப்புப்பிணி வீயுமாறுசெய்வான் திருவேங்கடத்தானாகையாலே, (திருவேங்கடத்தானே புகலொன்றில்லா வடியேன்) (வேங்கடத்துறைவார்க்குநம:) என்று பூர்ணப்ரபத்திபண்ணி, (பலநீகாட்டிப்படுப்பாயோ) (இன்னங்கெடுப்பாயோ) (இக்கரையேறியிளைத்திருந்தேன் இனியடையவருளாய்) (திருவாணை நின்னாணைகண்டாய்) (இனிநான்போகலொட்டேன்) என்று தடுத்தும், வளைத்தும் பெறுகை.

(B) த்ருப்தரூப ப்ரபத்தியாவது - ஶரீராந்தர ப்ராப்தியிலும் ஸ்வர்க நரகாநுபவங்களிலும் விரக்தியும் பீதியும் பிறந்து, அதினுடைய நிவ்ருத்திக்கும், பகவத்ப்ராப்திக்கும், உறுப்பாக ஸதாசார்யோபதேஶ க்ரமத்தாலே உபாயஸ்வீகாரம்பண்ணி, விபரீதப்ரவ்ருத்திநிவ்ருத்தராய், வேதவிஹிதமானவர்ணாஶ்ரமாநுஷ்டாநமும், பகவத்பாகவத கைங்கர்யமும், மாநஸ வாசக காயகங்களாலே யதாபலமநுஷ்டித்து, ஈஶ்வரன்-ஶேஷியாய், நியந்தாவாய், ஸ்வாமியாய், ஶரீரியாய், வ்யாபகனாய், தாரகனாய், ரக்ஷகனாய், போக்தாவாய், ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய், ஸர்வஸம்பூர்ணனாய், அவா

ப்தஸமஸ்தகாமனாய் இருக்கிற ஆகாரத்தையும், தான்-அவனுக்குஶேஷமாய் நியாம்யமாய், ஸ்வம்மாய், ஶரீரமாய், வ்யாப்யமாய், தா⁴ர்யமாய், ரக்ஷ்ய மாய், போ⁴க்யமாய், அஜ்ஞனாய், அஶக்தனாய், அபூர்ணனாய், ஸாபேக்ஷனாய் இருக்கிற ஆகாரத்தையும், அநுஸந்தி⁴த்துக்கொண்டு (களைவாய்துன்பங் களை யாதொழிவாய் களைகண்மற்றிலேன்) என்று உபாயத்தில் ஸர்வபா⁴ரங்களையும் அவன்பக்கலிலே பொகட்டு, நிர்ப⁴ரனாயிருக்கை.

[௫.] ஆசார்யாபி⁴மானமாவது - இவை யொன்றுக்கும் ஶக்தனன்றிக்கே யிருப்பானொருவனைக் குறித்து, இவனுடைய இழவையும் இவனைப்பெற்றால் ஈஶ்வரனுக்குண்டான ப்ரீதியையும் அநுஸந்தி⁴த்து, ஸ்வதந்த்ரப்ரஜைக்கு வ்யாதி⁴யுண்டானால் அது தன்குறையாக நினைத்து ஔஷத⁴ஸேவைபண்ணும் மாதாவைப்போலே இவனுக்காகத் தான் உபாயாநுஷ்டாநம்பண்ணி ரக்ஷிக் கவல்ல பரமத³யாளுவான மஹாபா⁴க³வதன் அபி⁴மாநத்திலே ஒதுங்கி, (வல் லபரிசுவருவிப்பரேலதுகாண்டும்) என்று சொல்லுகிறபடியே ஸகலப்ரவ் ருத்தி நிவ்ருத்திகளையும் அவனிட்ட வழக்காக்குகை. எம்பெருமான் தனி த்து நித்ய ஸித்³த⁴ப்ராப்யனாகா நிற்கச்செய்தே ஸகலதே³வதாந்தர்யாமியா ய்க்கொண்டு ப்ராப்யனாகிறாப்போலே இவ்வாசார்யாபி⁴மாநமும் தனியே உபாய மாகாநிற்கச்செய்தேயும், எல்லா உபாயங்களுக்கும் ஸஹகாரியுமாய் ஸ்வதந்த்ரமுமாய் இருக்கும்.

(௫.) [௧] விரோதி⁴வர்க³த்தில், ஸ்வரூபவிரோதி⁴யாவது - தே³ஹாத்மா பி⁴மாநமும், அந்யஶேஷத்வமும், ஸ்வஸ்வாதந்த்ர்யமும்.

[௨.] பரத்வவிரோதி⁴யாவது-தே³வதாந்தரபரத்வ ப்ரதிபத்தியும், ஸமத் வப்ரதிபத்தியும், அவதாரவிஷயத்தில் மாநுஷ ப்ரதிபத்தியும், அர்சாவதார விஷயத்தில் அஶக்தியோக³ ப்ரதிபத்தியும்.

[௩.] புருஷார்த² விரோதி⁴யாவது - புருஷார்தா²ந்தரங்களிலிச்சையும், தானுகந்த பகவத்கைங்கர்யங்களிலிச்சையும்.

[௪.] உபாயவிரோதி⁴யாவது-உபாயாந்தரவைலக்ஷண்ய ப்ரதிபத்தியும், உபாயலாக⁴வமும், உபேயகௌ³ரவமும், விரோதி⁴பா³ஹுள்யமும்.

[௫.] ப்ராப்திவிரோதி⁴யாவது-ப்ராரப்³த⁴ ஶரீரஸம்ப³ந்த⁴மும், அநுதா பஶூந்யமாய் கு³ருவாய் ஸ்தி²ரமாய் இருந்துள்ள பா⁴க³வதாபசார பா⁴க³வதாப சார அஸஹ்யாபசாரங்களும் - இவை எல்லாவற்றுக்கும் விரோதி⁴யென்று பேராகக்கடவது. அந்நதோ³ஷம் - ஜ்ஞாந விரோதி⁴யாகக்கடவது. ஸஹவாஸ தோ³ஷம் - போ⁴க³விரோதி⁴யாகக்கடவது. அபி⁴மாநம் - ஸ்வரூபவிரோதி⁴யா கக்கடவது.

இப்படி அர்த²பஞ்சக ஜ்ஞாநம்பிறந்து முமுக்ஷுவாய் ஸம்ஸாரத்திலே வர்த்திக்கிற சேதநனுக்கு மோக்ஷஸித்³தி⁴யளவும் ஸம்ஸாரம் மேலிடாதபடி காலக்ஷேபம்பண்ணுங் க்ரமம் - வர்ணாஶ்ரமாநுரூபமாகவும், வைஷ்ணவத் வாநுரூபமாகவும், அஶநாச்சாத³நங்களை ஸம்பாதி³த்து, (யத³ந்ந: புருஷோ ப⁴வதி தத³ந்நா ஸ்தஸ்ய தே³வதா:) என்கிறபடியே ஸகல பதார்த²ங்களையும் பா⁴க³வத்

விஷயத்திலே நிவேசித்து, யதாபலம் பாகவத கிஞ்சித்காரமும்பண்ணி, தேஹதாரண மாத்ரத்தை ப்ரஸாத ப்ரதிபத்தியோடே ஜீவிக்கையும், வருந்தியும் தத்வஜ்ஞாநம் பிறப்பித்த ஆசார்யன் ஸந்நிதியிலே-கிஞ்சித்காரத்தோடே அவனுக்கபிமதமாக வர்திக்கையும், ஈஶ்வரன் ஸந்நிதியிலே - தன்னுடைய நீசத்வத்தையநுஸந்திக்கையும், ஆசார்யன் ஸந்நிதியில் - தன்னுடைய அஜ்ஞதையை அநுஸந்திக்கையும், ஸ்ரீவைஷ்ணவ ஸந்நிதியில் - தன்னுடைய பாரதந்த்ர்யத்தை அநுஸந்திக்கையும், ஸம்ஸாரிகள் முன்னில் - தன்னுடைய வ்யாவ்ருத்தியை அநுஸந்திக்கையும், ப்ராப்யத்தில் - த்வரையும், ப்ராபகத்தில் - அத்யவஸாயமும், விரோதியில் - பயமும், தேஹத்தில் - அருசியும், ஆர்த்தியும், ஸ்வரூபத்தில் - உணர்த்தியும், ஸ்வரக்ஷணத்தில் - அஶக்தியும், உத்தேஶ்யவிஷயத்தில் - கௌரவமும், உபகாரவிஷயத்தில் - க்ருதஜ்ஞதையும், உத்தாரகப்ரதிபத்தியும், அநுவர்த்திக்கையும்வேணும்.

இப்படிஜ்ஞாநாநுஷ்டாநங்களோடே கூடிவர்திக்குமவன் - ஈஶ்வரனுக்குப் பிராட்டிமாரிலும், நித்யமுக்தரிலும் அத்யந்தாபிமத விஷயமாகக்கடவன்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

அர்த்தபஞ்சகம் முற்றிற்று.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீவசநபூஷணம்.

## ஸ்ரீவசநபூஷணத்துக்கே உரியனவாய், இதினிருவகையான ப்ரகரணபேதம் முதலியதைக்காட்டும் தனியன்கள்.

ஆறுப்ரகரணமாக வகுக்கும் ஶ்லோகம்.

(௧.) புருஷகாரவைபவஞ்ச (௨.) ஸாதநஸ்ய கௌரவம் (௩.)
தததிகாரிக்ருத்யம் (௪) அஸ்ய ஸத்குரூபஸேவநம் |
(௫.) ஹரிதயாமஹேதுகீம் (௬.) குரோருபாயதாஞ்சய:
வசநபூஷணேऽவதஜ் ஜகத்குரும் தமாஶ்ரயே ||

ஸாங்கா விலக்ஷண த்ராவிட ஸம்ஸ்க்ருதரூபவேத
ஸாரார்த்தஸங்க்ரஹமஹாரஸவாக்யஜாதம் |
ஸர்வஜ்ஞலோககுரு நிர்மிதமார்யபோக்யம்
வந்தே ஸதா வசநபூஷண திவ்யஶாஸ்த்ரம் || †

ஆகண்டோத்கண்டவைகுண்டப்ரியாணாங் கண்டபூஷணம் |
குரூணாம் ஜகதா முக்தம் வ்யாப்தம் வசநபூஷணம் ||

† ஸ்ரீ வசநபூஷண மீமாம்ஸா மங்களஶ்லோகம்.

ஆறுப்ரகரணமாக வகுக்கும் பாட்டு.

(௧.) பேறுதருவிக்குமவள்தன் பெருமை (௨.) யாறு (௩.) பெறுவான் முறை (௪.) யவன், கூறுகுருவைப்பணுவல் (௫.) கொள்வதிலே யாகிய குளிர்ந்தவருள்தான், (௬.) மாறில்புகழ்நற்குருவின்வண்மையோடெலாம்வசன பூடணமதில், தேறிடநமக்கருள்முடும்பை யிறைவன்கழல்கள்சேரென்மனனே.

ஒன்பது ப்ரகரணமாக வகுக்கும் பாட்டு.

(௧.) திருமாமகள்தன் சீரருளேற்றமும்
(௨.) திருமால்திருவடி சேர்வழிநன்மையும்
(௩.) அவ்வழியொழிந்தன வனைத்தின்புன்மையும்
(௪.) மெய்வழியூன்றிய மிக்கோர்பெருமையும்
(௫.) ஆரணம்வல்லவ ரமருநன்னெறியையும்
(௬.) நாரணன்றருள்தரு நற்குருநீதியும்
(௭.) சோதிவானருள் தூயமாகுருவின்
பாதமாமலர் பணிபவர்தன்மையும்
(௮.) தீதில்வானவர் தேவனுயிர்களை
ஏதுமின்றி யெடுக்கும்படியையும்
(௯.) மன்னியவின்பமு மாகதியுங்குரு
என்னுநிலைபெறு மின்பொருடன்னையும்
அசைவிலாவேத மதனுளனைத்தையும்
வசனபூடண வழியாலருளிய
மறையவர்சிகாமணி வண்புகழ்முடும்பை
இறையவனெங்கோ னேருலகாரியன்
தேன்மலர்ச்சேவடி சிந்தைசெய்பவர்
மாநிலத்தின்பம தெய்திவாழ்பவரே.

லோகாசார்யக்ருதே லோகஹிதே வசநபூஷணே!
தத்வார்த்தர்ஶிநோ லோகே தந்நிஷ்டாஶ்ச ஸுதுர்லபா:॥
ஜகதாசார்யரசிதே ஸ்ரீமத்வசநபூஷணே!
தத்வஜ்ஞாநஞ்ச தந்நிஷ்டாம் தேஹி நாத யதீந்த்ர மே॥ †

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

† இந்த ஶ்லோகத்வயம் புராதன தாளகோசங்களிலில்லை. பெரியோர்களும் அநுஸந்திப்பதுமில்லை. இவைமணவாளமா முனிகளருளிச்செய்ததென்று பெரியோர்களருளிச்செய்வர்கள்.

# முதல்ப்ரகரணம்.

—[உபோத்காதம்.]—

வேதார்த்தம் அறுதியிடுவது-ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களாலே. (க). ஸ்ம்ருதியாலே - பூர்வபாகத்தில் அர்த்தம் அறுதியிடக்கடவது; மற்றையிரண்டாலும்-உத்தரபாகத்தில் அர்த்தம் அறுதியிடக்கடவது. (உ). இவையிரண்டிலும் வைத்துக்கொண்டு, இதிஹாஸம் ப்ரபலம். (ங). அத்தாலே அது முற்பட்டது. (ச).

—[புருஷகாரோபாயவைபவப்ரகரணம் ॥ சூ - ல் - க ॥ ]—

இதிஹாஸஸ்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தால் - சிறையிருந்தவள் ஏற்றஞ்சொல்லுகிறது; மஹாபாரதத்தால் - தூதுபோனவன் ஏற்றஞ்சொல்லுகிறது.(ரு). இவையிரண்டாலும் - புருஷகாரவைபவமும், உபாயவைபவமும் சொல்லிற்றாயிற்று. (சூ). புருஷகாரமாம்போது - க்ருபையும், பாரதந்த்ர்யமும், அநந்யார்ஹத்வமும் வேணும். (எ). பிராட்டி முற்படப்பிரிந்தது - தன்னுடைய க்ருபையை வெளியிடுகைக்காக; நடுவிற்பிரிந்தது - பாரதந்த்ர்யத்தை வெளியிடுகைக்காக; அநந்தரம்பிரிந்தது - அநந்யார்ஹத்வத்தை வெளியிடுகைக்காக. (அ). ஸம்ஸ்லேஷ விஸ்லேஷங்களிரண்டிலும் - புருஷகாரத்வந் தோற்றும். (கூ). ஸம்ஸ்லேஷதசையில் - ஈஸ்வரனைத்திருத்தும்; விஸ்லேஷதசையில் - சேதநனைத் திருத்தும். (க0). இருவரையும் திருத்துவது உபதேசத்தாலே. (கக). உபதேசத்தாலே யிருவருடையவும் கர்மபாரதந்த்ர்யமுங்குலையும். (கஉ). உபதேசத்தால் மீளாதபோது - சேதநனை அருளாலேதிருத்தும்; ஈஸ்வரனை அழகாலேதிருத்தும். (கங). * அறியாத அர்த்தங்களை அடைய அறிவித்து, ஆசார்யக்ருத்யத்தையும், புருஷகாரக்ருத்யத்தையும், உபாயக்ருத்யத்தையும், தானே யேறிட்டுக்கொள்ளுகையாலே மஹாபாரதத்தில் உபாயவைபவஞ்சொல்லிற்றாயிற்று. (கச). புருஷகாரத்துக்கும், உபாயத்துக்கும்,வைபவமாவது-தோஷத்தையும்,குணஹாநியையும்பார்த்து உபேக்ஷியாத அளவன்றிக்கே, அங்கீகாரத்துக்கு அவைதன்னையே பச்சையாக்குகை. (கரு) இரண்டு-மிரண்டுங் குலையவேணு மென்றிருக்கில், இரண்டுக்கும் - இரண்டு முண்டாய்த்ததாம். (கசூ). இரண்டுங் குலைந்ததென்றிருக்கில், இத்தலைக்கிரண்டு முண்டாய்த்ததாம். (கஎ). ராக்ஷஸிகள் தோஷம் ப்ரஸித்தம். (கஅ). ஜிதேந்த்ரியரில் தலைவனாய், ஆஸ்திகாக்ரேஸரனாய், (கேசவஸ்யாத்மா)† என்று க்ருஷ்ணனுக்கு தாரகனாயிருக்கிற அர்ஜுநனுக்கு தோஷமேதென்னில், பந்துக்கள்பக்கல்-ஸ்நேஹமும், காருண்யமும், வதபீதியும். (ககூ). த்ரௌபதீபரிபவங் கண்டிருந்தது - க்ருஷ்ணாபிப்ராயத்தாலே ப்ரயாநதோஷம். (உ0). பாண்டவர்களையும் நிரஸிக்க ப்ராப்தமாயிருக்க, வைத்தது - த்ரௌபதியுடைய மங்களஸூத்ரத்துக்காக. (உக). அர்ஜுநனுக்கு - தூத்யஸாரத்யங்கள் பண்ணிற்றும், ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக. (உஉ).

[ஆறுப்ரகரணங்களில் ஒன்றாவதான புருஷகாரோபாயவைபவ ப்ரகரணம்.]

முற்றிற்று.

---

† பாரதம் - த்ரோண - கக - ஙஅ.

—[உபாயப்ரகரணம் ‖ சூ - ல் - உ ‖]—

ப்ரபத்திக்கு-தேஶநியமமும், காலநியமமும், ப்ரகாரநியமமும், அதிகாரி நியமமும், ஃபலநியமமும் இல்லை. (௨௩). விஷயநியமமே உள்ளது. (௨௪). கர்மத்துக்கு - புண்யக்ஷேத்ரம், வஸந்தாதிகாலம், ஶாஸ்த்ரோக்தங்களான தத்தத் ப்ரகாரங்கள், த்ரைவர்ணிகர், என்றிவையெல்லாம் வ்யவஸ்திதங்களாயிருக்கும். (௨௫). (ஸ ஏஷ தேஶ: கால:) † என்கையாலே இதுக்கு தேஶகால நியமமில்லை. (௨௬). இவ்வர்த்தம்-மந்த்ர ரத்நத்தில் ப்ரதமபதத்திலே ஸுஸ்பஷ்டம். (௨௭). ப்ரகாரநியதியில்லையென்னுமிட மெங்குங்காணலாம். (௨௮). த்ரௌபதி-ஸ்நாதையாயன்றே ப்ரபத்திபண்ணிற்று; அர்ஜுநன் - நீசர்நடுவேயிறே யிவ்வர்த்தங்கேட்டது. (௨௯). ஆகையால் ஶுத்யஶுத்திகளிரண்டுந் தேடவேண்டா, இருந்தபடியே அதிகாரியாமித்தனை. (௩௦). இவ்விடத்திலே வேல்வெட்டிப்பிள்ளைக்குப் பிள்ளையருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது. (௩௧). அதிகாரிநியமமின்றிக்கே ஒழிந்தபடி யென்னென்னில்; தர்மபுத்ராதிகளும், த்ரௌபதியும், காகமும், காளியனும், ஸ்ரீகஜேந்த்ராழ்வானும், ஸ்ரீவிபீஷணாழ்வானும், பெருமாளும், இளையபெருமாளும், தொடக்கமானவர்கள் ஶரணம் புகுருகையாலே அதிகாரிநியமமில்லை. (௩௨). ஃபலநியமமின்றிக்கே யொழிந்தபடியென்னென்னில்; தர்மபுத்ராதிகளுக்கு ஃபலம்-ராஜ்யம். த்ரௌபதிக்கு ஃபலம் - வஸ்த்ரம். காகத்துக்கும், காளியனுக்கும் ஃபலம்-ப்ராணம். ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு ஃபலம்-கைங்கர்யம். ஸ்ரீ விபீஷணாழ்வானுக்கு ஃபலம் ராமப்ராப்தி. பெருமாளுக்கு ஃபலம்-ஸமுத்ரதரணம். இளையபெருமாளுக்கு ஃபலம்-ராமாநுவ்ருத்தி. (௩௩). விஷயநியமமாவது-குணபூர்த்தியுள்ளவிடமே விஷயமாகை. (௩௪). பூர்த்தியுள்ளதும் - அர்சாவதாரத்திலே. (௩௫). ஆழ்வார்கள் பலவிடங்களிலும் ப்ரபத்திபண்ணிற்றும், அர்சாவதாரத்திலே. (௩௬). (பூர்ணம்) ‡ என்கையாலே, எல்லா குணங்களும் புஷ்கலங்கள். (௩௭). ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான ஸௌலப்யாதிகள் - இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாஶிப்பது இங்கே. (௩௮). பூர்த்தியையும், ஸ்வாதந்த்ர்யத்தையும் குலைத்துக்கொண்டு, தன்னை அநாதரிக்கிறவர்களைத் தான் ஆதரித்து நிற்கிறவிடம். (௩௯). பூகத ஜலம்போலே-அந்தர்யாமித்வம். ஆவரண ஜலம் போலே-பரத்வம். பாற்கடல்போலே-வ்யூஹம். பெருக்காறுபோலே-விபவங்கள். அதிலே தேங்கின மடுக்கள்போலே - அர்சாவதாரம். (௪௦). இதுதான் ஶாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாதே விஷயாந்தரங்களிலே மண்டி, விமுகராய்ப்போரும் சேதநருக்கு வைமுக்யத்தைமாற்றி, ருசியை விளைக்கக் கடவதாய், ருசிபிறந்தாலுபாயமாய், உபாயபரிக்ரஹம்பண்ணினால் போக்யமுமாயிருக்கும். (௪௧). இதில் ப்ரபத்திபண்ணும் அதிகாரிகள்- மூவர். (௪௨). அஜ்ஞரும், ஜ்ஞாநாதிகரும், பக்திபரவஶரும். (௪௩). அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நர் - அஸ்மதாதிகள். ஜ்ஞாநாதிக்யத்தாலே ப்ரபந்நர் - பூர்வாசார்யர்கள். பக்திபாரவஶ்யத்தாலே ப்ரபந்நர் - ஆழ்வார்கள். (௪௪). இப்படி சொல்லுகிறதும் ஊற்றத்தைப்பற்ற. (௪௫). இம்மூன்றும் மூன்று தத்வத்தையும்

† ராமா - யு - ௧௭ - ௫௭.

‡ ஶதபதப்ரா - ௧௪ - காண்டம். ௩ - ப்ரபாட. ௭ - அத்யா. ௪ - ப்ராம். ௧ - வா

பற்றிவரும். (௪௬). (என்னான்செய்கேன்) என்கிறவிடத்திலே இம்மூன்றுமு ண்டு. (௪௭) அங்கொன்றைப்பற்றியிருக்கும். (௪௮). முக்யமதுவே. (௪௯). (அவிதி்யாதஃ) † என்கிற ஶ்லோகத்திலே இம்மூன்றுஞ்சொல்லிற்று. (௫௦) (இதம் ஶரணமஜ்ஞாநாம்). ‡ (௫௧). ஶக்தி தன்னிலே அவஶ்யாபேக்ஷம் பிறந் தவாறே இதுதான் கொலைபக்கடவதாயிருக்கும். (௫௨). தன்னைப் பேணவும் பண்ணும், தரிக்கவும் பண்ணும். (௫௩). இந்த ஸ்வபாவவிஶேஷங்கள் - கல் யாணகுணங்களிலும், திருச்சரங்களிலும், திருநாமங்களிலும், திருக்குழ லோசையிலும் காணலாம். (௫௪). இதுதன்னைப் பார்த்தால் பிதாவுக்குப்புத் ரன் எழுத்துவாங்குமாபோலே இருப்பதொன்று. (௫௫). இது தனக்கு ஸ்வ ரூபம் - தன்னைப்பொறுதொழிகை. (௫௬). அங்கம் தன்னை ஒழிந்தவற்றைப் பொறுதொழிகை. (௫௭). உபாயம்-தன்னைப்பொறுக்கும். (௫௮). உபாயாந் தரம் - இரண்டையும் பொறுக்கும். (௫௯). இது-இரண்டையும் பொறுது. (௬௦) பலத்துக்கு - ஆத்மஜ்ஞாநமும், அப்ரதிஷேதமுமே வேண்டுவது. (௬௧). அல்லாதபோது-பந்தத்துக்கும், பூர்த்திக்கும், கொத்தையாம். (௬௨) ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறேனென்று ஶ்ரமித்து அத்தை விளைத்துக் கொள்ளாதொழிகையே வேண்டுவது. (௬௩). ரக்ஷணத்துக்கபேக்ஷிதம் - ரக்ஷ்யத்வாநுமதியே. (௬௪). ¶ எல்லா உபாயத்துக்கும் பொதுவாகையாலும், சைதந்ய கார்யமாகையாலும், ப்ராப்திதஶையிலும் அநுவர்த்திக்கையாலும், ஸ்வரூபாதிரேகி அல்லாமையாலும், அசித்வ்யாவ்ருத்தி வேஷத்தை ஸாதந மாக்கவொண்ணாது. (௬௫). அசித்வ்யாவ்ருத்திக்கு ப்ரயோஜநம் - உபாயத் தில் உபகாரஸ்ம்ருதியும், உபேயத்தில் உகப்பும். (௬௬). (உன்மனத்தாலென் னினைந்திருந்தாய்) என்கிறபடியே ப்ராப்திக்கு உபாயம் அவன் நினைவு. (௬௭). அதுதானெப்போதும் உண்டு. (௬௮). அதுபலிப்பது-இவன் நினைவுமாறினால். (௬௯). 'அந்திமகாலத்துக்குத் தஞ்சம், இப்போது தஞ்சம் என்? என்கிற நினைவுகொலைகை' யென்று ✢ ஜீயருளிச்செய்தார். (௭௦). ப்ராப்தாவும், ப்ராப கனும், ப்ராப்திக்கு உகப்பானும், அவனே. (௭௧). ஸ்வயத்நநிவ்ருத்தி - பார தந்த்ர்யபலம். ஸ்வப்ரயோஜந நிவ்ருத்தி - ஶேஷத்வபலம். (௭௨). பரப்ர யோஜந ப்ரவ்ருத்தி - ப்ரயத்நபலம். ததிவிஷயப்ரீதி-சைதந்யபலம். (௭௩). அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தமென்னும்படி தாஸ்யமிறே அந்த ரங்கநிரூபகம். (௭௪). இதுதான் வந்தேறியன்று. (௭௫). ஸ்வாதந்த்ர்யமும் அந்யஶேஷத்வமும், வந்தேறி. (௭௬). ஶேஷத்வவிரோதி - ஸ்வாதந்த்ர்யம், தச்சேஷத்வவிரோதி - ததிதரஶேஷத்வம். (௭௭). அஹங்காரமாகிற ஆர்ப் பைத்துடைத்தால் ஆத்மாவுக்கழியாதபேர் அடியானென்றிறே. (௭௮). ஶ்ரீரா மகுலாதிகளால் வரும்பேர் அநர்த்தஹேது. (௭௯). (ஏகாந்தீ வ்யபதேஷ்ட வ்யஃ) (௮௦).

(ஆறுப்ரகரணங்களி லிரண்டாவதான உபாய ப்ரகரணம்)

முற்றிற்று.

---

† ஶ்ரீபட்டார்யமுக்தகம். ‡ லக்ஷ்மீதந்த்ரம். ௧௭ - ௧௦௦.

¶ இதுதான் எல்லாவுபாயத்துக்கும் - என்று ஆயிவ்யாக்யாந பாடம்.

✢ ஜீயருளிச்செய்தவார்த்தை - என்றும் ஜீயருளிச்செய்வர் என்றும் பாடாந்தரம்.

—[அதிகாரிநிஷ்டாப்ரகரணம். சூ - ல் - ௩.]—

உபாயத்துக்கு - † பிராட்டியையும், த்ரௌபதியையும், திருக்கண்ணமங்கையாண்டானையும்போலே இருக்கவேணும். ‡ உபேயத்துக்கு - இளைய பெருமாளையும், பெரிய உடையாரையும், பிள்ளை திருநறையூர் அரையரையும், சிந்தயந்தியையும் போலே யிருக்கவேணும். (௮௧). பிராட்டிக்கும், த்ரௌபதிக்கும் வாசி - ஶக்தியும், அஶக்தியும். (௮௨). பிராட்டி-ஸ்வஶக்தியைவிட்டாள்; த்ரௌபதி - லஜ்ஜையைவிட்டாள்; திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான். (௮௩). பசியராயிருப்பார் - அட்டசோறும் உண்ணவேணும் அடுகிறசோறும் உண்ணவேணும் என்னுமாபோலே, காட்டுக்குப்போகிறபோது இளையபெருமாள்-பிரிவில் தரியாமையை முன்னிட்டு 'அடிமை செய்யவேணும்' 'எல்லா அடிமையுஞ் செய்யவேணும்' 'ஏவிக்கொள்ளவும் வேணும்' என்றார்; படைவீட்டில் புகுந்தபின்பு காட்டில் தனியிடத்தில் ஸ்வயம்பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே ஒப்பூணுண்ணமாட்டாதே, ஒரு திருக்கையாலே-திருவெண்கொற்றக் குடையையும், ஒரு திருக்கையாலே - திருவெண்சாமரத்தையுந் தரித்து அடிமைசெய்தார். (௮௪). பெரிய உடையாரும், பிள்ளை திருநறையூர் அரையரும், உடம்பை உபேக்ஷித்தார்கள். சிந்தயந்திக்கு-உடம்பு தன்னடையே போயிற்று. (௮௫). உபாயத்துக்கு-ஶக்தியும், லஜ்ஜையும், யத்நமும், குலையவேணும்; உபேயத்துக்கு ப்ரேமமும், தன்னைப்பேணாமையும், தரியாமையும் வேணும். (௮௬). இவனுக்கு வைதமாய் வருமதிறே த்யஜிக்கலாவது; ராகப்ராப்தமாய் வருமது த்யஜிக்க வொண்ணாதிறே. (௮௭). உபாயத்வாநுஸந்தாநம் - நிவர்த்தகம்; உபேயத்வாநுஸந்தாநம் - ப்ரவர்த்தகம். (௮௮). அப்ராப்தவிஷயங்களிலே ஸக்தனானவன் அது லபிக்கவேணுமென்றிராநின்றால், ப்ராப்தவிஷய ப்ரவணனுக்குச் சொல்லவேண்டாவிறே. (௮௯). அநுஷ்டாநமும், அநநுஷ்டாநமும் உபாயகோடியிலே அந்வயியாது. (௯௦). அநந்யோபாயத்வமும், அநந்யோபேயத்வமும், அநந்யதைவத்வமும், குலையும்படியான ப்ரவ்ருத்தி காணாநின்றோமிறே. (௯௧). ஜ்ஞாநவிபாக கார்யமான அஜ்ஞாநத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும். (௯௨). உபாயபலமாய், உபேயாந்தர்பூதமாய் இருக்குமது உபாயப்ரதிபந்தகமாகாது. (௯௩). * ஸாத்யஸமாநம் விளம்பாஸஹமென்றிறே ஸாதநத்துக்கேற்றம்; ஸாத்யப்ராவண்ய மடியாகவிறே ஸாதநத்திலிழிகிறது. (௯௪). இவனுக்குப்பிறக்கும் ஆத்மகுணங்க ளெல்லாவற்றுக்கும் ப்ரதாநஹேது-இந்த ப்ராவண்யம். (௯௫). (மாற்பால்மனஞ்சுழிப்ப) (பரமாத்மநி யோ ரக்த:) ¶ (கண்டுகேட்டுற்றுமோந்து.) (௯௬). ஆத்மகுணங்களில் ப்ரதாநம் - ஶமமும், தமமும். (௯௭). இவை இரண்டுமுண்டானால் ஆசார்யன் கைபுகுரும். ஆசார்யன் கைபுகுந்தவாறே திருமந்த்ரங் கைபுகுரும். திருமந்த்ரங் கைபுகுந்தவாறே ஈஶ்வரன் கைபுகுரும். ஈஶ்வரன்கைபு

---

† உபாயத்தில் - என்றும் வ்யாக்யாந பாடாந்தரம்.

‡ உபேயத்தில் - என்றும் ஷை - பா. * ஸாத்யஸமாநம் என்கிற வாக்யம்பூர்வஸூத்ரஶேஷமாக ஆயிவ்யாக்யாநம்.

¶ நாரதபரிவ்ராஜகோபநிஷத் - ௩ - உபதேஶம்.

குந்தவாறே (வைகுந்தமாநகர் மற்றதுகையதுவே) என்கிறபடியே ப்ராப்ய ஹூமி கைபுகுரும். (௯௮). ப்ராப்யலாஹம் - ப்ராபகத்தாலே. ப்ராபகலாஹம் - திருமந்த்ரத்தாலே. திருமந்த்ரலாஹம்-ஆசார்யனாலே. ஆசார்யலாஹம் - ஆத்மகுணத்தாலே. (௯௯). இதுதான் - ஐஶ்வர்யகாமர்க்கும், உபாஸகர்க்கும், ப்ரபந்நர்க்கும் வேணும். (௧௦௦). மூவரிலும் வைத்துக்கொண்டு மிகவும் வேண்டுவது ப்ரபந்நனுக்கு. (௧௦௧). மற்றையிருவர்க்கும் - நிஷித்தவிஷய நிவ்ருத்தியேயமையும்; ப்ரபந்நனுக்கு - விஹிதவிஷய நிவ்ருத்தி தன்னேற்றம். (௧௦௨). இதுதான் சிலர்க்கு - அழகாலே பிறக்கும். சிலர்க்கு - அருளாலேபிறக்கும். சிலர்க்கு - ஆசாரத்தாலே பிறக்கும். (௧௦௩). பிறக்குங் க்ரமம் என்னென்னில், அழகு - அஜ்ஞாநத்தை விளைக்கும். அருள் - அருசியைவிளைக்கும். ஆசாரம் - அச்சத்தை விளைக்கும். (௧௦௪). இவையும் ஊற்றத்தைப்பற்றச் சொல்லுகிறது. (௧௦௫.) அருசி பிறக்கும்போதைக்கு தோஷதர்ஶநம் அபேக்ஷிதமாயிருக்கும். (௧௦௬). அது ப்ரதாநஹேதுவன்று. (௧௦௭). அப்ராப்ததையே ப்ரதாநஹேது. (௧௦௮). ஹகவத்விஷயத்தில் இழிகிறதும்-குணங்கண்டன்று; ஸ்வரூபப்ராப்தமென்று. (௧௦௯). இப்படி கொள்ளாதபோது, குணஹீநமென்று நினைத்த தஶையில் - ஹகவத்விஷய ப்ரவ்ருத்தியும், தோஷாநுஸந்தாநதஶையில் - ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தியுங்கூடாது. (௧௧௦). (கொடியவென்னெஞ்ச மவனென்றே கிடக்கும்) (அடியேன் நான் பின்னுமுன் சேவடியன்றிநயவேன்) - என்னுநின்றார்களிறே. (௧௧௧) குணக்ருத தாஸ்யத்திலுங் காட்டில் ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமிறே ப்ரதாநம். (௧௧௨). அநஸூயைக்குப் பிராட்டி அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது. (௧௧௩), ஹகவத்விஷய ப்ரவ்ருத்தி பின்னைச்சேருமோவென்னில், அதுக்கடி - ஸம்பந்தம். அதுதான் - ஔபாதிகமன்று, ஸத்தாப்ரயுக்தம். (௧௧௪). அந்த ஸத்தை ப்ராவண்ய கார்யமான அநுஹவமில்லாதபோது குலையும்; அது குலையாமைக்காக வருமவையெல்லாம் அவர்ஜநீயங்களுமாய், ப்ராப்தங்களுமாய் இருக்கும்; ஆகையாலே ஹகவத்விஷய ப்ரவ்ருத்திசேரும். (௧௧௫).†

ப்ராபகாந்தர பரித்யாகத்துக்கும் - அஜ்ஞாநாஶக்திகளன்று, ஸ்வரூப விரோதமே ப்ரதாநஹேது. (௧௧௬). ப்ராபகாந்தரம் - அஜ்ஞர்க்கு உபாயம். (௧௧௭). ஜ்ஞாநிகளுக்கபாயம். (௧௧௮). அபாயமாயிற்றது - ஸ்வரூப நாஶகமாகையாலே. (௧௧௯). (நெறிகாட்டிநீக்குதியோ) என்னுநின்றதிறே. (௧௨௦). (வர்த்ததே மே மஹத்ஹயம்) ‡ என்கையாலே ஹயஜநகம்; (மாஶுச:) என்கையாலே ஶோகஜநகம். (௧௨௧). இப்படி கொள்ளாதபோது - ஏதத் ப்ரவ்ருத்தியில் ப்ராயஶ்சித்த விதி கூடாது. (௧௨௨). திருக்குருகைப்பிரான்பிள்ளான் பணிக்கும்படி - 'மதிராஹிந்து மிஶ்ரமான ஶாதகும்ஹமயகும்ஹகததீர்த்தஸலிலம்போலே, அஹங்கார மிஶ்ரமான உபாயாந்தரம்'. (௧௨௩). ரத்நத்துக்குப் பலகரைபோலேயும், ராஜ்யத்துக் கெலுமிச்சம்பழம்போலேயும், ஹலத்துக்கு ஸத்ருஶமன்று. (௧௨௪). தான் தரித்ரனாகையாலே தனக்குக் கொடுக்கலாவதொன்றுமில்லை (௧௨௫). அவன் தந்தத்தைக் கொடுத்து

† ௯-வது ப்ரகரணத்தில் உ-வது ப்ரகரணம் இவ்விடத்தில் முடிகின்றது. ‡ ஜிதந்தா-௧.

மிடத்தில் அடைவிலே கொடுக்கில் அநுபாயமாம்; அடைவுகெடக்கொடுக்கில் களவு வெளிப்படும். (௧௨௬). ஶத்ருஶோஷத்தை வயிறு வளர்க்கைக் குறுப்பாக்குமாபோலே, இருவர்க்கும் அவஶ்யம். (௧௨௭). வேதாந்தங்களுபாயமாக விதிக்கிறபடி யென்னென்னில், (௧௨௮). ஔஷதஸேவை பண்ணுதவர்களுக்கு அபிமதவஸ்துக்களிலே அத்தைக்கலசி யிடுவாரைப்போலே ஈஶ்வரனைக்கலந்து விதிக்கிறதித்தனை. (௧௨௯). இத்தை ப்ரவர்த்திப்பித்தது பரஹிம்ஸையை நிவர்த்திப்பிக்கைக்காக. (௧௩௦). இதுதான் - பூர்வ விஹித ஹிம்ஸைபோலே, விதிநிஷேதங்க ளிரண்டுக்குங் குறையில்லை. (௧௩௧). அத்தை - ஶாஸ்த்ரவிஶ்வாஸத்துக்காக விதித்தது. இத்தை-ஸ்வரூப விஶ்வாஸத்துக்காக விதித்தது. (௧௩௨). அது தோல்புரையேபோம், இது மர்மஸ்பர்ஶி. (௧௩௩). இதுதான் - கர்மஸாத்யமாகையாலே து:ஷ்கரமுமாயிருக்கும். (௧௩௪). ப்ரபத்த்யுபாயத்துக்கு இக்குற்றங்களொன்றுமில்லை. (௧௩௫). ஆத்மயாதாத்ம்யஜ்ஞாந கார்யமாகையாலே - ஸ்வரூபத்துக் குசிதமுமாய், (சிற்றவேண்டா) என்கிறபடியே நிவ்ருத்தி ஸாத்யமாகையாலே ஸுகரமுமாயிருக்கும். (௧௩௬). பூர்ணவிஷயமாகையாலே, பெருமைக்கீடாகப் பச்சையிடவொண்ணாது. (௧௩௭). ஆபிமுக்யஸூசகமாத்ரத்திலே ஸந்தோஷம் விளையும். (௧௩௮). பூர்த்தி - கைவாங்காதே மேல்விழுகைக்கு ஹேதுவித்தனை. (௧௩௯). (பத்ரம் புஷ்பம்). † (அந்யத்பூர்ணாத்) ‡ (புரிவதுவும் புகைபூவே). (௧௪௦). புல்லைக்காட்டி அழைத்துப் புல்லையிடுவாரைப்போலே ஃபலஸாதநங்களுக்கு பேதமில்லை. (௧௪௧). ஆகையாலே ஸுஸ்வரூபமாயிருக்கும். ¶ (௧௪௨). இவன் அவனைப்பெற நினைக்கும்போது இந்தப்ரபத்தியும் உபாயமன்று. (௧௪௩). அவன் இவனைப்பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று. (௧௪௪). இவையிரண்டும்-ஸ்ரீஶரதாழ்வான் பக்கலிலும், ஸ்ரீமஹாப்பெருமாள் பக்கலிலும் காணலாம். (௧௪௫). ஸ்ரீஶரதாழ்வானுக்கு-நன்மைதானே தீமையாயிற்று. ஸ்ரீமஹாப்பெருமாளுக்கு - தீமைதானே நன்மையாயிற்று. (௧௪௬). ஸர்வாபராதங்களுக்கும் ப்ராயஶ்சித்தமான ப்ரபத்திதானும் - அபராதகோடியிலேயாய், க்ஷாமணம்பண்ண வேண்டும்படி நில்லாநின்றதிறே. (௧௪௭). நெடுநாள் அந்யபரையாய்ப்போந்த பார்யை லஜ்ஜாபயங்களின்றிக்கே பர்த்ருஸகாஶத்திலே நின்று 'என்னை அங்கீகரிக்கவேணும்' என்றபேக்ஷிக்குமாபோலே யிருப்பதொன்று இவன்பண்ணும் ப்ரபத்தி. (௧௪௮). க்ருபையாலே வரும் பாரதந்த்ர்யத்தைக் காட்டில் ஸ்வாதந்த்ர்யத்தாலேவரும் பாரதந்த்ர்யம் ப்ரபலம். (௧௪௯). இவ்வர்த்தத்தை வேதபுருஷன் அபேக்ஷித்தான். (௧௫௦) அபேக்ஷாநிரபேக்ஷமாக - திருவடிக்கும், ஸ்ரீமஹாப்பெருமாளுக்கும் இதுண்டாயிற்று. (௧௫௧). இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடுமென்னுமிடம் அபயப்ரதாநத்திலுங்காணலாம். (௧௫௨). இருவர்முன்னிடுகிறதும் - தந்தாங் குற்றங்களை ஶமிப்பிக்கைக்காக. (௧௫௩). ஸ்வரூபஸித்தியுமத்தாலே. (௧௫௪). ஔபாதிகமுமாய் நித்யமுமான பாரதந்த்ர்யம் இருவர்க்கும் உண்டிறே. (௧௫௫). அநித்யமான இருவர் பாரதந்த்ர்யங் குலைவது மத்தாலே.

† கீதா - ௯ - ௨௬. ‡ பார - உத்யோ. ௮௭ - ௩௩.
¶ ௯-ல் ௩-வது ப்ரகரண மிவ்விடத்தில் முடிகின்றது.

(௧௫௬). ஸஸாக்ஷிகமாகையாலே இஶ்வங்யத்தை இருவராலும் இல்லை செய்யப்போகாது. (௧௫௭). (என்னை நெகிழ்க்கிலும்) (கோலமலர்ப்பாவைக்கன்பாகிய). (௧௫௮). கர்மணிவ்யுத்பத்தியில் ஸ்வரூபகுணங்களால் வருகிற கர்த்ருஸங்கோச ராஹித்யத்தை நினைப்பது. (௧௫௯). அதிகாரித்ரயத்துக்கும் புருஷகாரம் அவர்ஜநீயம். (௧௬௦). தனக்குத்தான் தேடும் நன்மை தீமையோபாதி விலக்காயிருக்கும். (௧௬௧). அழகுக்கிட்டசட்டை அணைக்கைக்கு விரோதியாமாபோலே. (௧௬௨). (ஹாரோபி) * (௧௬௩). புண்யம்போலே, பாரதந்த்ர்யமும் பராநுபவத்துக்கு விலக்கு. (௧௬௪). குணம்போலே, தோஷநிவ்ருத்தி. (௧௬௫). ஆபரணம் அநபிமதமாய், அழுக்கு அபிமதமாய், இராநின்றதிறே. (௧௬௬). (ஸ்நாநம் ரோஷஜநகம்) என்கிற வார்த்தையை ஸ்மரிப்பது. (௧௬௭). (வஞ்சக்கள்வன்) (மங்கவொட்டு) (௧௬௮). வேர்ச்சூடுமவர்கள் மண்பற்றுக்கழற்றாதாப்போலே ஜ்ஞாநியை விக்ரஹத்தோடே யாதரிக்கும். (௧௬௯). பரமார்த்தனை இவனுடைய ஶரீரஸ்திதிக்கு ஹேது - கேவல பகவதிச்சையிறே. (௧௭௦). (திருமாலிருஞ்சோலைமலையே) என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை யிவனுடைய ஶரீரைகதேஶத்திலேபண்ணும். (௧௭௧). அங்குத்தைவாஸம் ஸாதநம், இங்குத்தைவாஸம் ஸாத்யம். (௧௭௨) (கல்லுங்கனைகடலும்) என்கிறபடியே இது ஸித்தித்தால், அவற்றில் ஆதரம் மட்டமாயிருக்கும். (௧௭௩). (இளங்கோயில்கைவிடேல்) என்றிவன் ப்ரார்த்திக்க வேண்டும்படியா யிருக்கும். (௧௭௪). ப்ராப்ய ப்ரீதிவிஷயத்வத்தாலும், க்ருதஜ்ஞதையாலும் பின்பவை அபிமதங்களாயிருக்கும். (௧௭௫). ஆகையாலே தோஷநிவ்ருத்திபோலே ஆந்தரகுணமும் விரோதியாயிருக்கும். (௧௭௬) தோஷநிவ்ருத்திதானே தோஷமாமிறே. (௧௭௭). (தன்னால்வரும் நன்மை விலைப்பால்போலே; அவனால்வரும் நன்மை முலைப்பால்போலே) என்று பிள்ளான் வார்த்தை. (௧௭௮). அவனையொழியத் தான் தனக்கு நன்மைதேடுகையாவது-ஸ்தநந்த்யப்ரஜையை மாதாபிதாக்கள் கையில் நின்றும் வாங்கி ஘ாதுகனை ஆட்டுவாணியன் கையிலே காட்டிக்கொடுக்குமாபோலே யிருப்பதொன்று. (௧௭௯). தன்னைத்தானேயிறே முடிப்பான். (௧௮௦) தன்னைத்தானே முடிக்கையாவது-அஹங்காரத்தையும், விஷயங்களையும்விரும்புகை. (௧௮௧). அஹங்காரம் அக்நிஸ்பர்ஶம்போலே. (௧௮௨). (நகாமகலுஷஞ்சித்தம்,) † (நஹிமேஜீவிதேநார்த்த:) ‡ (நதேஹம்) (எம்மாவீட்டுத்திறமும்) (௧௮௩). ப்ரதிகூல விஷயஸ்பர்ஶம், விஷஸ்பர்ஶம்போலே. அநுகூலவிஷயஸ்பர்ஶம்-விஷமிஶ்ரபோஜநம்போலே. (௧௮௪). அக்நிஜ்வாலையைவிழுங்கி விடாய்கெட நினைக்குமாபோலேயும், ஆடுகிறபாம்பின் நிழலிலே யொதுங்க நினைக்குமாபோலேயும்-விஷயப்ரவணனாய் ஸுகிக்க நினைக்கை. (௧௮௫). ¶ அசுணமாமுடியுமாபோலே-பகவதநுபவைகபரனாய், ம்ருதுப்ரக்ருதியாயிருக்குமவன் விஷயதர்ஶநத்தாலே முடியும்படி. (௧௮௬). (காட்டிப்படுப்பாயோ) என்னக்கடவதிறே. (௧௮௭). அஜ்ஞனை விஷயப்ரவணன்-கேவல நாஸ்திகனைப்போலே, ஜ்ஞாநவானை விஷயப்ரவ

---

* ப்ரம்ஹவைவர்தபுராணே. க்ருஷ்ணஜந்மகண்டே உத்தரார்த்தே. ௬௨ - ௮௩.

† ஜிதந்தா ௧. ‡ ராமா ஸு. ௨௬ - ௫. ¶ அசுணமா - பக்ஷிவிஶேஷம்.

ணன் - ஆஸ்திகநாஸ்திகனைப்போலே. (கஅஅ). கேவல நாஸ்திகனைத்திருத்தலாம்; ஆஸ்திகநாஸ்திகனை யொருநாளுந் திருத்தவொண்ணாது. (கஅகூ). இவையிரண்டும்-ஸ்வரூபேண முடிக்குமளவன்றிக்கே பகவதவிரோதத்தையும் விளைத்து முடிக்கும். (ககூ0). நாமரூபங்களை யுடையராய் பாகவதவிரோதம் பண்ணிப்போருமவர்கள் சித்ரபடம்போலே. (ககூக). மடிப்புடவை வெந்தால் உண்டையும் பாவும் ஒத்துக்கிடக்கும்; காற்றடித்தவாறே பறந்துபோம். (ககூஉ). 'ஈஶ்வரனவதரித்துப்பண்ணின * ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமை' என்று ஜீயரருளிச்செய்வர். (ககூங). (அவமாநக்ரியா). (ககூச). பாகவதாபசாரந்தான்-அநேகவிதம். (ககூரு). அதிலேயொன்று - அவர்கள்பக்கல் ஜந்மநிரூபணம். (ககூசு). இதுதான் அர்சாவதாரத்தி லுபாதாந ஸ்ம்ருதியிலுங் காட்டில் க்ரூரம். (ககூஎ). அத்தை 'மாத்ருயோநி பரீக்ஷையோடொக்கும்' என்று ஶாஸ்த்ரஞ் சொல்லும். (ககூஅ). த்ரிஶங்குவைப்போலே கர்மசண்டாளனாய், மார்விலிட்ட யஜ்ஞோபவீதந்தானே வாராய்விடும். (ககூகூ). ஜாதிசண்டாளனுக்குக் காலாந்தரத்திலே பாகவதனாகைக்கு யோக்யதையுண்டு; அதுவுமில்லை யிவனுக்கு. (உ00). ஆரூடபதிதனாகையாலே. (உ0க). இது தனக்கு அதிகாரிநியமமில்லை. (உ0உ). (தமர்களிற்றலைவராய சாதியந்தணர்களேலும்) என்கையாலே. (உ0ங). இவ்விடத்திலே வைநதேய வ்ருத்தாந்தத்தையும், பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்தவார்த்தையையும் ஸ்மரிப்பது. (உ0ச). ஜ்ஞாநாநுஷ்டாநங்களை யொழிந்தாலும் பேற்றுக் கவர்கள் பக்கல் ஸம்பந்தமே யமைகிறாப்போலே, அவையுண்டானாலும் இழவுக்கவர்கள் பக்கலபசாரமேபோரும். (உ0ரு). இதில் ஜந்மவ்ருத்தாதி நியமமில்லை. (உ0சு) இவ்வர்த்தம் கைஶிகவ்ருத்தாந்தத்திலும், உபரிசரவஸு வ்ருத்தாந்தத்திலும் காணலாம். (உ0எ). ப்ராஹ்மண்யம் விலைசெல்லுகிறது, வேதாத்யயநாதிமுகத்தாலே பகவல்லாபஹேதுவென்று; அதுதானே யிழவுக்குறுப்பாகில் த்யாஜ்யமாமிறே. (உ0அ). ஜந்மவ்ருத்தங்களினுடைய உத்கர்ஷமும் அபகர்ஷமும் பேற்றுக்கும் இழவுக்கும், அப்ரயோஜகம். (உ0கூ). ப்ரயோஜகம் - பகவத்ஸம்பந்தமும் அஸம்பந்தமும்.— (உக0). பகவத்ஸம்பந்தமுண்டானா லிரண்டு மொக்குமோவென்னில், (உகக). ஒவ்வாது. (உகஉ). உத்க்ருஷ்டமாக ப்ரமித்த ஜந்மம், ப்ரம்ஶஸம்பாவனையாலே (ஶரீரேவ) என்கிறபடியே பயஜநகம். (உகங). அதுக்கு ஸ்வரூபப்ராப்தமான நைச்யம் பாவிக்கவேணும். (உகச). அபக்ருஷ்டமாக ப்ரமித்த உத்க்ருஷ்டஜந்மத்துக்கு இரண்டு தோஷமுமில்லை. (உகரு). நைச்யம் ஜந்மஸித்தம். (உகசு). ஆகையால் உத்க்ருஷ்ட ஜந்மமே ஶ்ரேஷ்டம். (உகஎ). (ஶ்வபசோபிமஹீபால.)— (உகஅ). நிக்ருஷ்டஜந்மத்தால் வந்த தோஷம் ஶமிப்பது விலக்ஷணஸம்பந்தத்தாலே. (உககூ) ஸம்பந்தத்துக்கு யோக்யதை யுண்டாம்போது ஜந்மக்கொத்தை போகவேணும். (உஉ0). ஜந்மத்துக்குக் கொத்தையும், அதுக்குப்பரிஹாரமும் (பழுதிலாவொழுகல்) என்கிற பாட்டிலே யருளிச்செய்தார். (உஉக). வேதகப்பொன்போலே யிவர்களோட்டை ஸம்பந்

* ஆனைத்தொழில்கள் - அதிமாநுஷசேஷ்டிதங்கள்.

யம். (௨௨௨). இவர்கள் பக்கல் ஸாம்யபுத்தியும், ஆதிக்யபுத்தியும், நடக்கவேணும். (௨௨௩). அதாவது - ஆசார்யதுல்யரென்றும், ஸம்ஸாரிகளிலும், தன்னிலும் ஈஶ்வரனிலு மதிகரென்றும் நினைக்கை. (௨௨௪). ஆசார்ய ஸாம்யத்துக்கடி - ஆசார்யவசநம். (௨௨௫). இப்படி நினையாதொழிகையும் அபசாரம். (௨௨௬). இவ்வர்த்தம், இதிஹாஸ புராணங்களிலும், (பயிலுஞ்சுடரொளி) (நெடுமாற்கடிமை) யிலும், (கண்சோரவெங்குருதி) யிலும், (நண்ணாதவாளவுண) ரிலும், (தேட்டருந்திறற்றே) னிலும், (மேம்பொருளுக்கு) மேலிற்பாட்டுக்களிலும் விஶதமாகக்காணலாம். (௨௨௭). க்ஷத்ரியனான விஶ்வாமித்ரன் ப்ரம்ஹருஷியானான். (௨௨௮), ஸ்ரீவிபீஷணனை ராவணன் குலபாம்ஸனென்றான்; பெருமாள் இக்ஷ்வாகுவம்ஶ்யராக நினைத்து வார்த்தையருளிச்செய்தார். (௨௨௯). பெரிய உடையாருக்குப் பெருமாள் ப்ரம்ஹமேத ஸமஸ்காரம் பண்ணியருளினார். (௨௩௦). தர்மபுத்ரர் அஶரீரி வாக்யத்தையும், ஜ்ஞாநாதிக்யத்தையுங்கொண்டு, ஸ்ரீவிதுரரை ப்ரம்ஹ மேதத்தாலே ஸம்ஸ்கரித்தார். (௨௩௧). ருஷிகள் தர்மவ்யாதன் வாசலிலே துவண்டு தர்மஸந்தேஹங்களை ஶமிப்பித்துக்கொண்டார்கள். (௨௩௨). க்ருஷ்ணன் பீஷ்மத்ரோணாதிகள் க்ருஹங்களைவிட்டு ஸ்ரீவிதுரர் திருமாளிகையிலே யமுதுசெய்தான். (௨௩௩). பெருமாள் ஸ்ரீஶபரி கையாலே யமுதுசெய்தருளினார். (௨௩௪). மாறனேர் நம்பி விஷயமாகப் பெரியநம்பி உடையவர்க் கருளிச்செய்தவார்த்தையை ஸ்மரிப்பது.—(௨௩௫). (ப்ராதுர்பூராவைரித்யாதி.) (௨௩௬). 'ஸாரவதனன்றிக்கே வேதார்த்தஜ்ஞாநாதிகளையுடையவன் குங்குமஞ்சுமந்த கழுதையோபாதி' என்று சொல்லாநின்றதிறே. (௨௩௭). ராஜாவான ஸ்ரீகுலஶேகரப்பெருமாள் திர்யக்ஸ்தாவர ஜந்மங்களை யாசைப்பட்டார். (௨௩௮). ப்ராம்ஹணோத்தமரான பெரியாழ்வாரும், திருமகளாரும், கோபஜந்மத்தை ஆஸ்தாநம் பண்ணினார்கள். (௨௩௯). * கந்தல் கழிந்தால் ஸர்வர்க்கும் நாரீணாமுத்தமையுடைய அவஸ்தை வரக்கடவதாயிருக்கும். (௨௪௦). ஆறுப்ரகாரத்தாலே பரிஶுத்தாத்மஸ்வரூபத்துக்கும் தத்ஸாம்ய முண்டாயிருக்கும்.—(௨௪௧). த்ருஷ்டத்தில் உத்கர்ஷம் அஹங்காரத்தாலே ; அத்ருஷ்டத்தில் உத்கர்ஷம் அஹங்காராஹித்யத்தாலே. (௨௪௨). ப்ராம்ஹணா யிழந்துபோதல், இடைச்சியாய்ப் பெற்றுவிடுதல் செய்யும்படியாயிருக்கும். (௨௪௩). இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் நாஶஹேதுவான அஹங்காரத்துக்கும் அதினுடைய கார்யமான விஷயப்ராவண்யத்துக்கும் விளைநிலம் தானாகையாலே, தன்னைக் கண்டால் ஶத்ருவைக்கண்டாற்போலேயும், அவற்றுக்கு வர்தகரான ஸம்ஸாரிகளைக் கண்டால் ஸர்ப்பத்தைக்கண்டாற்போலேயும், அவற்றுக்கு நிவர்த்தகரான ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டால் பந்துக்களைக் கண்டாற்போலேயும், ஈஶ்வரனைக்கண்டால் பிதாவைக்கண்டாற்போலேயும், ஆசார்யனைக்கண்டால் பசியன் சோற்றைக்கண்டாற்போலேயும், ஶிஷ்யனைக்கண்டால் அபிமதவிஷயத்தைக் கண்டாற்போலேயும் நினைத்து † அஹங்கா

* கந்தல் - கல்மஷம். அதாவது அவித்யாதிதோஷம்.

† அர்த காமாபிமாநங்கள் மூன்றும் என்று வ்யாக்யாந பாடாந்தரம்.

ரார்ய கார்யங்கள் மூன்றும், அநுகூலர் பக்கல் அநாதரத்தையும், ப்ரதிகூலர்பக்கல் ப்ராவண்யத்தையும், உபேக்ஷிக்குமவர்கள் பக்கல் அபேக்ஷையையும் பிறப்பிக்குமென்றஞ்சி, ஆத்மகுணங்கள் நம்மாலும் பிறராலும் பிறப்பித்துக்கொள்ள வொண்ணாது, ஸதாசார்ய ப்ரஸாத மடியாகவருகிற ஸம வத் ப்ரஸாதத்தாலே பிறக்கு மத்தனையென்று துணிந்து, தேஹயாத்ரையி லுபேக்ஷையும், ஆத்மயாத்ரையி லபேக்ஷையும், ப்ராக்ருத வஸ்துக்களில் ஹேயதாபுத்தி நிவ்ருத்தியும், 'தேஹதாரணம் பரமாத்மஸமாராதந ஸமாப்தி, ப்ரஸாத ப்ரதிபத்தி' என்கிற புத்திவிசேஷமும், தனக்கொரு க்லேசமுண்டானால் கர்மபலமென்றுதல் க்ருபாபலமென்றுதல் பிறக்கும் ப்ரீதியும், ஸ்வாநுஷ்டாநத்தில் ஸாதநத்வபுத்தி நிவ்ருத்தியும், விலக்ஷணருடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களில் வாஞ்சையும், உகந்தளுரின நிலங்களில் ஆதராதிசயமும், மங்களாசாஸநமும், இதரவிஷயங்களில் அருசியும், ஆர்த்தியும், அநுவர்த்தந நியதியும், ஆஹாரநியதியும், அநுகூல ஸஹவாஸமும், ப்ரதிகூல ஸஹவாஸ நிவ்ருத்தியும் ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன். (௨௪௪)

---

## த்ருதீயப்ரகரணம்॥ ௩॥

மங்களாசாஸநம் ஸ்வரூபவிருத்தம் மன்றோவென்னில்; ஜ்ஞாநதசையில் ரக்ஷ்யரக்ஷகபாவம் † தன்கப்பிலே கிடக்கும்; ப்ரேமதசையில் தட்டுமாறிக்கிடக்கும். (௨௪௫). அவன் ஸ்வரூபத்தை அநுஸந்தித்தால் அவனைக் † கடகாகக்கொண்டு தன்னை நோக்கும். (௨௪௬) இவ்வர்த்தம், சக்ரவர்த்தி, ஸ்ரீஜநகராஜன் - திருமகள், விஸ்வாமித்ரன், ஸ்ரீதண்டகாரண்ய வாஸிகளான ருஷிகள், திருவடி, மஹாராஜர், ஸ்ரீநந்தகோபர், ஸ்ரீவிதுரர், பிள்ளையுறங்காவில்லிதாஸர் தொடக்கமானவர்கள் பக்கலிலே காணலாம். (௨௪௭). இளையபெருமாளை ஸ்ரீகுஹப்பெருமாள் அதிசங்கைபண்ண, இருவரையும் அதிசங்கைபண்ணி குஹப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே. (௨௪௮). ஒருநாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகு படுத்தும் பாடாயிற்றிது. (௨௪௯). இவர்கள் நம்முடைய கோடியிலே என்னும்படியாயிற்று ஆழ்வார்கள் நிலை. (௨௫௦). ஆழ்வார்களெல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார். (௨௫௧). அவர்களுக்கது காதாசித்கம், இவர்க்கிது நித்யம். (௨௫௨). அவர்களுடைய ஆழங்கால்தானே இவர்க்கு மேடாயிருக்கும். (௨௫௩) அவர்களுக்கு உபயவிசேஷத்வத்தையு மழித்து, ஸ்வரூபத்தைக் ‡ குமிழிநீருண்ணப் பண்ணுமது, இவர்க்கு உபயவ்ருத்திக்கும் ஹேதுவாய், ஸ்வரூபத்தைக் கரையேற்றும். (௨௫௪). பயநிவர்த்தகங்களுக்கு பயப்படுவது, ப்ரதிகூலரையும் அநுகூலராக்கிக்கொள்ளுவது, அதீதகாலங்களி லபதாநங்களுக்கு உத்தரகாலத்திலே வயிறெரிவது, ப்ராப்திபலமு மிதுவேயென்பது, அநிமிஷரைப்பார்த்து (உறகல், உறகல்) என்பதாய்க்கொண்டு இது

---

† கப்பு - ஆஸ்ரயம். † கடகு - அநிஷ்டநிவாரகன், ரக்ஷகன்.

‡ குமிழிநீருண்கை - அமிழ்ந்து தலஸ்பர்ஸியாகை.

தானே யாத்ரையாய் நடக்கும். (௨௫௫). அல்லாதவர்களைப்போலே கேட்கிறவர்களுடையவும், சொல்லுகிறவர்களுடையவும் தனிமையைத் தவிர்க்கையன்றிக்கே, (ஆளுமாளார்) என்கிறவனுடைய தனிமையைத் தவிர்க்கைக்காயிற்று பாஷ்யகாரரும், இவரு முபதேஶிப்பது. (௨௫௬), அல்லாதார்க்கு ஸத்தாஸம்ருத்திகள் தர்ஶநாநுபவ கைங்கர்யங்களாலே; இவர்க்கு மங்களாஶாஸநத்தாலே. (௨௫௭). உகந்தருளின நிலங்களை அநுஸந்தித்தால் ஊணுமுறக்கமுமின்றிக்கே, இவருடைய யாத்ரையே நமக்கெல்லார்க்கும் யாத்ரையாகவேணும். (௨௫௮). ஆகையால் மங்களாஶாஸநம் ஸ்வரூபாநுரூபம். ||௨௫௯||

அநுகூலராகிறார் - ஜ்ஞாநபக்தி வைராக்யங்கள் இட்டுமொறிநாற்போலே வடிவிலே † தொடைகொள்ளலாம்படியிருக்கும் பரமார்த்தர். (௨௫௯). ஒருசெய்நிரம்ப நீர் நின்றால் அயல் செய் பொசிந்து காட்டுமாபோலே இவையில்லாதார்க்கு மிவர்களோட்டை ஸம்பந்தத்தாலே உருவுதல் தீரக்கடவதாயிருக்கும். (௨௬௦). ஆறுநீர் வரவணித்தால் அதுக்கீடான அடையாளங்களுண்டாமாபோலே, ப்ராப்தியணித்தானவாறே இந்த ஸ்வபாவவிஶேஷங்கள் தன்னடையே விளையக்கடவதாயிருக்கும். (௨௬௧). இவற்றைக் கொண்டு சரமஶரீரம் என்று தனக்குத்தானே அறுதியிடலாயிருக்கும். (௨௬௨). ப்ரதிகூலராகிறார் - தேஹாத்மாபிமாநிகளும், ஸ்வதந்த்ரரும், அந்யஶேஷபூதரும், உபாயாந்தரநிஷ்டரும், ஸ்வப்ரயோஜநபரரும்.—(௨௬௩) இவர்களுக்குஉத்தேஶ்யரும், உபாயோபேயங்களும்பேதித்திருக்கும். (௨௬௪). தேஹாத்மாபிமாநிகளுக்கு உத்தேஶ்யர் - தேஹவர்த்தகரான மநுஷ்யர்கள்; உபாயம் - அர்த்தம், உபேயம் - ஐஹிகபோகம். ஸ்வதந்த்ரர்க்கு உத்தேஶ்யர் - ஸ்வர்க்காதிபோகப்ரதர், உபாயம் - கர்மாநுஷ்டாநம், உபேயம் - ஸ்வர்க்காதிபோகம். அந்யஶேஷபூதர்க்கு உத்தேஶ்யர் - ப்ரஹ்மருத்ராதிகள், உபாயம் - தத்ஸமாஶ்ரயணம், உபேயம் - தத்ஸாயுஜ்யம். உபாயாந்தரநிஷ்டர்க்கு உத்தேஶ்யன் - தேவதாந்தர்யாமியான ஈஶ்வரன், உபாயம்-கர்மஜ்ஞாநபக்திகள், உபேயம் - பகவதநுபவம். ஸ்வப்ரயோஜநபரர்க்கு உத்தேஶ்யன் - (நெஞ்சினால்நினைப்பான்யவன்) என்கிறவன், உபாயம் - ஸ்வகீயஸ்வீகாரம், உபேயம் - ஸ்வார்த்தகைங்கர்யம். (௩௬௫) முதல்சொன்ன மூவரும் நிக்ரஹத்துக்கிலக்கு; மற்றையிருவரும் அநுக்ரஹத்துக்கிலக்கு. (௨௬௬). மூவருடையவும் கர்மம் அநுபவ விநாஶ்யம், நாலாமதிகாரிக்கு ப்ராயஶ்சித்த விநாஶ்யம், அஞ்சாமதிகாரிக்குப் புருஷகார விநாஶ்யம். (௨௬௭). உபாயம் ஸ்வீகாரகாலத்தில் புருஷ ஸாபேக்ஷமுமாய், புருஷகார ஸாபேக்ஷமுமாயிருக்கும்; கார்யகாலத்தில் உபயநிரபேக்ஷமாயிருக்கும். (௨௬௮) ஸ்வப்ரயோஜநபரரெல்லாரையும் ப்ரதிகூலராக நினைக்கலாமோ வென்னில்; (௨௬௯). இங்கு ஸ்வப்ரயோஜந மென்கிறது - ஆஶ்ரயதோஷஜந்யமானத்தை. (௨௭௦). ஆகையாலே தோஷமில்லை. (௨௭௧). விஷயதோஷத்தாலே ‡ வருமவையெல்லாம் துஸ்த்யஜமாயிறேயிருப்பது. (௨௭௨).

† தொடைகொள்ளலாம்படி - அறியலாம்படி.

‡ வருமது என்றும் வ்யாக்யாந பாடாந்தரம்.

(ஊமையரோடு செவிடர்வார்த்தை) (கதமந்யதிச்சதி.) (௨௭௩). இப்படி இவையித்தனையும் ஸதாசார்யப்ரஸாதத்தாலே வர்திக்கும்போதைக்கு, வஸ்தவ்யம் - ஆசார்யஸந்நிதியும் பகவத்ஸந்நிதியும். வக்தவ்யம் - ஆசார்யவைபவமும் ஸ்வநிகர்ஷமும்; ஜப்தவ்யம் குருபரம்பரையும், த்வயமும்; பரிக்ராஹ்யம் - பூர்வாசார்யர்களுடைய வசநமும் அநுஷ்டாநமும். பரித்யாஜ்யம் - அவைஷ்ணவஸஹவாஸமும், அபிமாநமும். கர்த்தவ்யம் - ஆசார்ய கைங்கர்யமும், பகவத்கைங்கர்யமும். (௨௭௪). கீழ்ச்சொன்ன பகவத் கைங்கர்யமறிவது - ஶாஸ்த்ர முகத்தாலே; ஆசார்ய கைங்கர்யமறிவது ஶாஸ்த்ரமுகத்தாலும், ஆசார்யவசநத்தாலும். (௨௭௫). கைங்கர்யந்தானிரண்டு. (௨௭௬). அதாவது - இஷ்டஞ்செய்கையும், அநிஷ்டம் தவிருகையும். (௨௭௭). இஷ்டாநிஷ்டங்கள், வர்ணாஶ்ரமங்களையும் ஆத்மஸ்வரூபத்தையுமவலம்பித்திருக்கும். (௨௭௮). புண்யத்துக்கஞ்சுகிறவன் பாபத்தைப் பண்ணுனிறே. (௨௭௯). இவன் புண்யத்தைப் பாபமென்றிருக்கும்; அவன் பாபத்தைப் புண்யமென்றிருக்கும்; அவனுக்கிது கிடையாது; இவனது செய்யான். (௨௮0). கைங்கர்யந்தான் பக்திமூலமல்லாதபோது; பீதிமூலமாய் வரவேணும். (௨௮௧). அதுவுமில்லாதபோது, அதிகாரத்திலும், உபாயோபேயங்களிலு மந்வயமின்றிக்கே யொழியும்.—(௨௮௨). கைங்கர்யந்தன்னை பலஸாதநமாக்காதே பலமாக்கவேணும். (௨௮௩). அதாவது - தான்கையேற்காதே அவனைக் கையேற்கப்பண்ணுகை. (௨௮௪). கொடுத்துக் கொள்ளாதே கொண்டதுக்குக் கைக்கூலி கொடுக்கவேணும். (௨௮௫) ஸ்ரீவிதுரரையும, ஸ்ரீமாலாகாரரையும், கூனியையும்போலே கிஞ்சித்கரித்தால் ஸ்வரூபம் நிறம்பெறுவது. (௨௮௬). மடிதடவாதசோறும், சுருள்நாறாதபூவும், சுண்ணும்புபடாத சாந்துமிறே இவர்கள் கொடுத்தது. (௨௮௭). கைங்கர்யதஶைபோலே முன்புள்ள தஶைகளிலும் ஸ்வரூபத்தை உஜ்வலமாக்கவேணும். (௨௮௮). முன்பே நாலுதசையுண்டு. (௨௮௯). அதாவது - ஜ்ஞாநதஶையும், வரணதஶையும், ப்ராப்திதஶையும், ப்ராப்யாநுபவதஶையும். (௨௯0). ஜ்ஞாநதஶையில் அஜ்ஞாநத்தை முன்னிடும்; வரணதஶையில் அபூர்த்தியை முன்னிடும்; ப்ராப்தி தஶையில் ஆர்த்தியை முன்னிடும்; ப்ராப்யாநுபவதஶையில் அபிநிவேஶத்தைமுன்னிடும். (௨௯௧). அஜ்ஞாநம்போவது-ஆசார்யஜ்ஞாநத்தாலே. அபூர்த்திபோவது-ஈஶ்வரபூர்த்தியாலே, ஆர்த்திபோவது-அருளாலே, அபிநிவேஶம்போவது-அநுபவத்தாலே. (௨௯௨). அஜ்ஞாநத்துக்கடி - அபராதம், அபூர்த்திக்கடி-ஜ்ஞாநபூர்த்தி, ஆர்த்திக்கடி-அலாபம், அபிநிவேஶத்துக்கடி - அழகு. (௨௯௩). ஆர்த்தியும் அபிநிவேஶமு மிருக்கும்படி அர்சிராதிகதியிலே சொன்னோம். (௨௯௪). இவன்றனக்கு நாலுதஶைபோலே நாலுகுணமுமுண்டு. (௨௯௫). அதாவது - ஜ்ஞாநமும், அஜ்ஞாநமும், ஶக்தியும், அஶக்தியும். (௨௯௬). இவைதான் அவனுக்குமுண்டு. (௨௯௭). அவனுடைய ஜ்ஞாநத்துக்கிலக்கு - இவனுடைய குணம், அஜ்ஞாநத்துக்கிலக்கு - இவனுடையதோஷம், ஶக்திக்கிலக்கு - இவனுடைய ரக்ஷணம், அஶக்திக்கிலக்கு-பரித்யாகம். (௨௯௮). இவனுடைய ஜ்ஞாநத்துக்கிலக்கு-ஆசார்யகுணம், அஜ்ஞாநத்துக்கிலக்கு-ஆசார்யதோஷம், அஶக்திக்கிலக்கு-நிஷித்தீ

யாநுஷ்டாநம்.—(௨௯௯). ஶிஷ்யந்தானும் நாலுபடியாயிருக்கும். (௩௦௦). அதாவது - அக்ருத்யகரணமும், பகவதபசாரமும், பாகவதாபசாரமும், அஸஹ்யாபசாரமும். (௩௦௧). அக்ருத்யகரணமாவது - பரஹிம்ஸை, பரஸ்தோத்ரம், பரதாரபரிக்ரஹம், பரத்ரவ்யாபஹாரம், அஸத்யகதநம், அபக்ஷ்யபக்ஷணந் தொடக்கமானவை. (௩௦௨). பகவதபசாரமாவது-தேவதாந்தரங்களோடொக்க ஈஶ்வரனை நினைக்கையும், ராமக்ருஷ்ணாத்யவதாரங்களில் மநுஷ்யஸஜாதீயதாபுத்தியும், வர்ணாஶ்ரம விபரீதமான உபசாரமும், அர்ச்சாவதாரத்தில் உபாதாந நிரூபணமும், ஆத்மாபஹாரமும், பகவத்த்ரவ்யாபஹாரமுந் தொடக்கமானவை. (௩௦௩). பகவத்த்ரவ்யத்தைத் தானபஹரிக்கையும், அபஹரிக்கிறவர்களுக்கு ஸஹகரிக்கையும், அவர்கள் பக்கலிலே யாசிதமாகவும் அயாசிதமாகவும் பரிக்ரஹிக்கையும் பகவானுக்கநிஷ்டமாயிருக்கும். (௩௦௪). பாகவதாபசாரமாவது - அஹங்காரார்த்த காமங்களடியாக ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பண்ணும் விரோதம். (௩௦௫). அஸஹ்யாபசாரமாவது - நிர்நிபந்தநமாக பகவத்பாகவத விஷயமென்றால் அஸஹமாநனாயிருக்கையும், ஆசார்யாபசாரமும், தத்பக்தாபசாரமும். (௩௦௬). இவை யொன்றுக்கொன்று க்ரூரங்களுமாய், உபாயவிரோதிகளுமாய், உபேயவிரோதிகளுமா யிருக்கும். (௩௦௭) (அதிகாரிநிஷ்டா ப்ரகரணம் ஸமாப்தம்.)

தான் ஹிதோபதேஶம் பண்ணும்போது, தன்னையும், ஶிஷ்யனையும், பலத்தையும் மாறாடிநினைக்கை க்ரூரநிஷித்தம். (௩௦௮). தன்னைமாறாடி நினைக்கையாவது - தன்னை ஆசார்யனென்றுநினைக்கை; ஶிஷ்யனை மாறாடி நினைக்கையாவது - தனக்கு ஶிஷ்யனென்று நினைக்கை; பலத்தை மாறாடி நினைக்கையாவது - த்ருஷ்ட ப்ரயோஜநத்தையும், ஶிஷ்யனுடைய உஜ்ஜீவநத்தையும், பகவத்கைங்கர்யத்தையும், ஸஹவாஸத்தையும் பலமாக நினைக்கை.—(௩௦௯). நினையாதிருக்க, இந்நாலுபலமும் ஸித்திக்கிறபடி யென்னென்னில்; ஶேஷபூதனென ஶிஷ்யன் நினைவாலே த்ருஷ்டபலம் ஸித்திக்கும், ஈஶ்வரன் நினைவாலே உஜ்ஜீவநம் ஸித்திக்கும்; ஶேஷபூதனென ஶிஷ்யன் நினைவாலே பகவத்கைங்கர்யம் ஸித்திக்கும்; உபகாரஸ்ம்ருதியாலே ஸஹவாஸம் ஸித்திக்கும். (௩௧௦). ஸாக்ஷாத்பலமும், ஆசார்யத்வமும் ஸித்திக்கிறபடி யென்னென்னில்; தன்னினைவாலும், ஈஶ்வரன் நினைவாலும் ஸித்திக்கும். (௩௧௧). இப்படியொழிய வுபதேஶிக்கில், இருவருக்கும் ஸ்வரூப ஸித்தியில்லை. (௩௧௨). ஆசார்யனுக்கு ஶிஷ்யன்பக்கல் க்ருபையும், ஸ்வாசார்யன் பக்கல் பாரதந்த்ர்யமும் வேணும். (௩௧௩). க்ருபையாலே ஶிஷ்யன் ஸ்வரூபம் ஸித்திக்கும், பாரதந்த்ர்யத்தாலே தன்ஸ்வரூபம் ஸித்திக்கும்.—(௩௧௪). நேரே ஆசார்யனென்பது - ஸம்ஸாரநிவர்த்தகமான பெரியதிருமந்த்ரத்தை உபதேஶித்தவனை. (௩௧௫). ஸம்ஸாரவர்த்தகங்களுமாய், க்ஷுத்ரங்களுமான பகவன்மந்த்ரங்களை யுபதேஶித்தவர்களுக்கு ஆசார்யத்வ பூர்த்தியில்லை. (௩௧௬). பகவன் மந்த்ரங்களை க்ஷுத்ரங்களென்கிறது - பலத்வாரா. (௩௧௭). ஸம்ஸாரவர்த்தகங்களென்கிறது மத்தாலே. (௩௧௮). இதுதான் ஔபாயிகம். (௩௧௯). சேதநனுடைய ருசியாலே வரு

ளைகயாலே.— (௩௨௦). ஶிஷ்யனென்பது - ஸாத்யாந்தர நிவ்ருத்தியும், ஃபலஸாதந ஶுஶ்ரூஷையும், ஆர்த்தியும், ஆதரமும், அநஸூயையுமுடைய வனே. (௩௨௧). மந்த்ரமும், தேவதையும், ஃபலமும், ஃபலாநுபந்திகளும், ஃபலஸாதநமும், ஐஹிகபோகமுமெல்லா மாசார்யனென்று நினைக்கக்கடவன். (௩௨௨). (மாதாபிதாயுவதய) என்கிற ஶ்லோகத்திலே, இவ்வர்த்தத் தைப் பரமாசார்யரு மருளிச்செய்தார். (௩௨௩). இதுக்கடி உபகாரஸ்ம்ருதி. (௩௨௪) உபகாரஸ்ம்ருதிக்கு முதலடி ஆசார்யன் பக்கல் க்ருதஜ்ஞதை; முடிந்த நிலம் ஈஶ்வரன்பக்கல் க்ருதஜ்ஞதை.—(௩௨௫) ஶிஷ்யனும், ஆசார் யனும், அந்யோந்யம் ப்ரியஹிதங்களை நடத்தக்கடவர்கள். (௩௨௬). ஶிஷ் யன்றான் ப்ரியத்தை நடத்தக்கடவன்; ஈஶ்வரனைக் கொண்டு ஹிதத்தை நடத்தக்கடவன், ஆசார்யன் மாறுடி நடத்தக்கடவன். (௩௨௭). ஶிஷ்யன் உக ப்பிலே யூன்றிப்போரும்; ஆசார்யன், உஜ்ஜீவநத்திலே யூன்றிப்போரும். (௩௨௮) ஆகையால், ஶிஷ்யன் ஆசார்யனுடைய ஹர்ஷத்துக் கிலக்காகை யொழிய, ரோஷத்துக் கிலக்காகைக்கு அவகாஶமில்லை. (௩௨௯). நிக்ரஹத் துக்குப் பாத்ரமாம்போது அது ஹிதரூப மாகையாலே யிருவர்க்கு முபாதே யம். (௩௩௦). ஶிஷ்யனுக்கு நிக்ரஹகாரணம் த்யாஜ்யம், (௩௩௧). நிக்ர ஹந்தான் பகவந்நிக்ரஹம்போலே ப்ராப்யாந்தர்கதம். (௩௩௨). ஆசார் யன் ஶிஷ்யனுடைய ஸ்வரூபத்தைப்பேணக்கடவன், ஶிஷ்யன் ஆசார்யனு டைய தேஹத்தைப் பேணக்கடவன்; (௩௩௩). இரண்டு மிருவர்க்கும் ஸ்வரூபமுமாய், பகவத்கைங்கர்யமுமாயிருக்கும். (௩௩௪). ஆசார்யனு க்கு தேஹரக்ஷணம் ஸ்வரூபஹாநி; ஶிஷ்யனுக்கு ஆத்மரக்ஷணம் ஸ்வரூப ஹாநி. (௩௩௫). ஆசார்யன் ஆத்மரக்ஷணம் பண்ணு மிடத்தில் அஹங் காரம் விரோதி; ஶிஷ்யன் தேஹரக்ஷணம் பண்ணுமிடத்தில் மமகாரம் விரோதி. (௩௩௬). ஆசார்யன் தன்னுடைய தேஹரக்ஷணம் தன் வஸ்து வைக்கொண்டு பண்ணக்கடவன்; ஶிஷ்யன் ஸ்வதேஹரக்ஷணம் ஆசார்யன் வஸ்துவைக்கொண்டு பண்ணக்கடவன். (௩௩௭). ஆசார்யன் ஶிஷ்யன் வஸ் துவைக் கொள்ளக்கடவனல்லன்; ஶிஷ்யன் தன்வஸ்துவைக் கொடுக்கக்கடவ னல்லன். (௩௩௮). கொள்ளில் மிடியனும், கொடுக்கில் கள்ளனும். (௩௩௯). கொள்கொடையுண்டானல் ஸம்பந்தங் குலையும். (௩௪௦). இவன் மிடிய ளைகயாலே கொடான்; அவன் பூர்ணனைகயாலே கொள்ளான். (௩௪௧). அவனுக்குப் பூர்த்தியாலே ஸ்வரூபம் ஜீவித்தது; இவனுக்கு மிடியாலே ஸ்வ ரூபம் ஜீவித்தது.—(௩௪௨). ஆனல் ஶிஷ்யன் ஆசார்யனுக்குப்பண்ணு முப கார மொன்றுமில்லையோ வென்னில்; (௩௪௩).. ஆசார்யன் நினைவாலே யுண்டு. (௩௪௪). அதாவது—ஜ்ஞாநவ்யவஸாய ப்ரேம ஸமாசாரங்கள். (௩௪௫). ஆசார்ய ப்ரீத்யர்த்தமாக இவனுக்குத் தவிர வேண்டுவது - பகவத் த்ரவ்யத்தை யபஹரிக்கையும், பகவத்போஜநத்தை விலக்குகையும், மூரு மந்த்ர தேவதாபரிபவமும்.—(௩௪௬).பகவத் த்ரவ்யாபஹாரமாவது - ஸ்வா தந்த்ர்யமும், அந்யஶேஷத்வமும்; (௩௪௭). பகவத்போஜநத்தை விலக்கு கையாவது-அவனுடைய ரக்ஷகத்வத்தை விலக்குகை. (௩௪௮). அவனுடைய ரக்ஷகத்வக்ரமம்-ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னேம்.—(௩௪௯). மூரு

பரிபவமாவது-கேட்ட அர்த்தத்தின்படி அநுஷ்டியா தொழிகையும், அநதிகாரிகளுக்குபதேஶிக்கையும். மந்த்ரபரிபவமாவது - அர்த்தத்தில் விஸ்ம்ருதியும், விபரீதார்த்தப்ரதிபத்தியும். தேவதாபரிபவமாவது - கரணத்ரயத்தையும் அப்ராப்தவிஷயங்களிலே ப்ரவணமாக்குகையும், தத்விஷயத்தில் ப்ரவணமாக்கா தொழிகையும். (௩௫௦). — இவனுக்கு ஶரீராவஸாநத்தளவும் ஆசார்யவிஷயத்தில் (என்னைத் தீமனங்கெடுத்தாய், மருவித்தொழும் மனமேதந்தாய்) என்று உபகாரஸ்ம்ருதி நடக்கவேணும். (௩௫௧). மநஸ்ஸுக்குத் தீமையாவது - ஸ்வகுணத்தையும், பகவத்பாகவத தோஷங்களையும் நினைக்கை. (௩௫௨). தோஷம் நினையாதொழிகிறது - குணம்போலே யுண்டாயிருக்கவன்று; இல்லாமையாலே. (௩௫௩). தோஷமுண்டென்று நினைக்கில் அது பரதோஷமன்று; ஸ்வதோஷம். (௩௫௪). ஸ்வதோஷமானபடி யென்னென்னில், (௩௫௫). ஸ்வதோஷத்தாலும், பந்தத்தாலும். (௩௫௬). ஸ்வதோஷமில்லையாகில் குணப்ரதிபத்தி நடக்கும். (௩௫௭). நடந்ததில்லையாகில் தோஷஜ்ஞாநமே தோஷமாம். (௩௫௮). இது தனக்கவஸரமில்லை. (௩௫௯). ஸ்வதோஷத்துக்கும், பகவத்பாகவத குணங்களுக்குமே காலம் போருகையாலே. (௩௬௦). ஸம்ஸாரிகள் தோஷமும் ஸ்வதோஷமென்று நினைக்கக்கடவன். (௩௬௧). அதுக்கு ஹேது பந்த ஜ்ஞாநம். (௩௬௨). (இறைப்பொழுதுமெண்ணோமே) என்கையாலே அதுதான் தோன்றுது. (௩௬௩). தோன்றுவது நிவர்த்தநார்த்தமாக. (௩௬௪). பிராட்டி, ராக்ஷஸிகள் குற்றம் பெருமாளுக்கும் திருவடிக்கு மறிவியாதாப்போலே, தனக்குப் பிறர் செய்த குற்றங்களை பகவத்பாகவத விஷயங்களி லறிவிக்கக்கடவனல்லன். (௩௬௫). அறிவிக்க வுரியவ னகப்பட வாய்திறவாதே ஸர்வஜ்ஞ விஷயங்களுக்கும் மறைக்கு மென்னுநின்றதிறே. (௩௬௬). குற்றஞ்செய்தவர்பக்கல் பொறையும், க்ருபையும், சிரிப்பும், உகப்பும், உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்(௩௬௭).

(ஸதாசார்யாநுவர்த்தந ப்ரகரணம் முற்றிற்று. ௪.)

---

ஸ்வதோஷாநுஸந்தாநம் பயஹேது; பகவத்குணாநுஸந்தாநம் அபயஹேது. (௩௬௮). பயாபயங்களிரண்டும் மாறாடில் அஜ்ஞதையே ஸித்திக்கும். (௩௬௯). ஆனால் (நலிவானின்ன மெண்ணுகின்றாய்) (ஆற்றங்கரை வாழ் மரம்போலஞ்சுகின்றேன்) என்கிற பாசுரங்களுக் கடியென்னென்னில், (௩௭௦). பந்தாநுஸந்தாநம். (௩௭௧). ப்ரஜை தெருவிலே யிடறித் தாய் முதுகிலே குத்துமாபோலே, நிருபாதிக பந்துவாய் ஶக்தனுமாயிருக்கிறவன் விலக்காதொழிந்தால், அப்படி சொல்லலாமிறே. (௩௭௨). ப்ரஜையைக் கிணற்றின்கரையில் நின்றும் வாங்காதொழிந்தால், தாயே தள்ளினாளென்னக் கடவதிறே. (௩௭௩). இவனுடைய அநுமதி, பேற்றுக்கு ஹேதுவல்லாதாப் போலே, அவனுடைய அநுமதியும் இழவுக்கு ஹேதுவன்று. (௩௭௪). இரண்டு மிருவருக்கும் ஸ்வரூபம். (௩௭௫). இழவுக்கடி - கர்மம்; பேற்றுக்கடி - க்ருபை. (௩௭௬). மற்றைப்படிசொல்லி லிழவுக்குறுப்பாம். (௩௭௭). எடுக்க

† தோஷமில்லையாகில் என்றே வ்யாக்யாந கோஶங்களில் பாடங்காண்கிறது. ஸ்வதோஷமில்லையாகில் - என்று ஆயிவ்யா.

நினைக்கிறவனைத் தள்ளினுயென்கை எடாமைக்குறுப்பிறே. (௧௭௮). (சீற்ற முள) என்ற வநந்தரத்திலே இவ்வர்த்தத்தைத் தாமேயருளிச்செய்தாரிறே. (௧௭௯), சீற்றமுண்டென்றறிந்தால் சொல்லும்படி யென்னென்னில்; அருளும், ஆர்த்தியும், அநந்ய கதித்வமுஞ் சொல்லப்பண்ணும். (௧௭0). சீறினு லுங் காலைக்கட்டிக்கொள்ளலாம்படி யிருப்பானொருவனைப்பெற்ருலெல்லாஞ் சொல்லலாமிறே. (௧௭௧). (க்ருபயாபர்யபாலயத்) (அரிசினத்தால்) (௧௭௨).

---

## சதுர்த்தப்ரகரணம்.

### த்ரிபாத்விபூதிப்ரகரணம்.

த்ரிபாத் விபூதியிலே பரிபூர்ணநுபவம் நடவாநிற்க, அதுண்டதுருக்காட்டாதே, தேசாந்தர கதனான புத்ரன் பக்கலிலே பித்ருஹ்ருதயம் கிடக்குமாபோலே ஸம்ஸாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய், இவர்களைப் பிரிந்தா லாற்றமாட்டாதே, இவர்களோடே கலந்து பரிமாறுகைக்குக் கரண களேபரங்களைக்கொடுத்து, அவற்றைக்கொண்டு வ்யாபரிக்கைக்கீடான ஶக்திவிஶேஷங்களையுங் கொடுத்து, கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்கள் என்று கண்ணுக்குத்தோற்ருதபடி, உறங்குகிற ப்ரஜையைத் தாய் முதுகிலே யணைத்துக்கொண்டு கிடக்குமாபோலே, தானறிந்த ஸம்பந்தமே ஹேதுவாக விடமாட்டாதே அகவாயிலே யணைத்துக்கொண்டு, ஆட்சியில் தொடர்ச்சி நன்று என்று விடாதே, ஸத்தையேநோக்கி உடன் கேடனுய், இவர்கள் அஸத்கர்மங்களிலே ப்ரவர்த்திக்கும்போது மீட்கமாட்டாதே அநுமதி தாநத்தைப்பண்ணி, உதாஸீநரைப்போலே யிருந்து, மீட்கைக்கிடம்பார்த்து, நன்மையென்று பேரிடலாவதொரு தீமையுங்காணுதே, நெற்றியைக் கொத்திப்பார்த்தால் ஒருவழியாலும் பசைகாணுதொழிந்தால் அப்ராப்யமென்று கண்ணநீரோடே மீளுவது, தனக்கேற விடம்பெற்ற வளவிலே, 'என்னூரைச் சொன்னுய், என்பேரைச்சொன்னுய். என்னடியாரைநோக்கினுய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய்' என்னுமாபோலே சிலவற்றை யேறிட்டு, மடிமாங்காயிட்டு, பொன் வாணியன் பொன்னை உரைகல்லிலேயுரைத்து மெழுகாலேயெடுத்து கால்கழஞ்சென்று திரட்டுமாபோலே, ஜந்மபரம்பரைகள் தோறும் 'யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிக'மென்கிற ஸுக்ருத விஶேஷங்களைக் கற்பித்துக்கொண்டு, தானேயவற்றை ஒன்றுபத்தாக்கி நடத்திக்கொண்டு போரும். (௧௮௧). லளிதாசரிதாதிகளிலே இவ்வர்த்தம் சுருக்கமொழியக்காணலாம். (௧௮௪). அஜ்ஞாந மநுஷ்யர்கள், * வாளாதந்தானென்றிருப்பர்கள். (௧௮௫). ஜ்ஞாநவான்கள், (இன்றென்னைப் பொருளாக்கித் தன்னை யென்னுள்வைத்தான்) எந்நன்றிசெய்தேனு வென்னெஞ்சிற் றிகழ்வதுவே) (நடுவேவந்துய்யக்கொள்கின்ற நாதனை,) அறியாதன வறிவித்தவத்தாநீசெய்தன வடியேனறியேனே) (பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி யடிமைகொண்டாய்) (என்னைத்தீமனங் கெடுத்தாய்) மரு

---

* 'வாளார்தந்தார்' என்றும் வ்யாக்யாநபாடாந்தரம்.

வித்தொழும் மனமேதந்தாய்) என்றீடுபடா நிற்பர்கள். (௩௮௬). பாஷ்ய காரர் காலத்திலே ஒருநாள் பெருமாள் புறப்பட்டருளுந் தனையும் பார்த்துப் பெரியதிரு மண்டபத்துக்குக்கீழாக முதலிகளெல்லாரும் திரளவிருந்தவளவிலே இவ்வர்த்தம் ப்ரஸ்துதமாக, பின்பு பிறந்த வார்த்தைகளை ஸ்மரிப்பது. (௩௮௭). ஆகையால் அஜ்ஞாதமான நன்மைகளையே பற்றாசாகக்கொண்டுகடாக்ஷியாநிற்கும். (௩௮௮). இவையுங்கூட விளையும்படியிறே இவன் றன்னை முதலிலே அவன் ஸ்ருஷ்டித்தது. (௩௮௯). அது தன்னை நிரூபித்தால் இவன் றனக்கொன்றுஞ் செய்யவேண்டாதபடியாயிருக்கும். (௩௯௦). பழையதாக உழுவது, நடுவது, விளைவதாய்ப்போரும் க்ஷேத்ரத்திலே உதிரிமுளைத்து பலபர்யந்தமாமாபோலே. இவைதான் தன்னடையே விளையும்படியாயிற்று, * பத்தியுழவன் பழம்புனத்தை ஸ்ருஷ்டித்த கட்டளை.(௩௯௧). அவைதானெவையென்றால்; (௩௯௨). பூர்வக்ருத புண்யாபுண்ய பலங்களை சிரகாலம் ஆர்ஜித்து, உத்தரகாலத்தில் வாஸனைகொண்டு ப்ரவர்த்திக்குமத்தனை யென்னும்படி கையொழிந்த தசையிலே, 'நாமார், நாம் நின்றநிலையேது, நமக்கினிமேல் போக்கடியேதென்று பிறப்பன சில நிரூபண விசேஷங்களுண்டு, அவையாதல், முன்புசொன்னவையாதல். (௩௯௩). (யதாஹியோ ஷகா: பாங்யே) என்று தொடங்கி இதினுடைய க்ரமத்தை பகவச்சாஸ்த்ரத்திலே சொல்லிற்று. (௩௯௪). (வெறிதேயருள்செய்வர்) என்று இவ்வர்த்தத்தை யருளிச்செய்தாரிறே. (௩௯௫). [செய்வார்கட்கு] என்று - அருளுக்கு ஹேது ஸுக்ருதமென்னா நின்றதே யென்னில்; அப்போது [வெறிதே] யென்கிறவிடஞ் சேராது. (௩௯௬). பகவதாபிமுக்யம் ஸுக்ருதத்தாலன்றிக்கே பகவத்க்ருபையாலே பிறக்கிறது; அத்வேஷம் ஸுக்ருதத்தாலே யென்னில்; இந்த பலவிசேஷத்துக்கு அத்தை ஸாதநமாக்க வொண்ணாது. (௩௯௭). சாஸ்த்ரமும் விதியாதே, நாமுமறியாதே யிருக்கிறவித்தை ஸுக்ருதமென்று நாம் பேரிடுகிறபடி யென்னென்னில்; நாமன்று, ஈச்வரனென்று கேட்டிருக்கையாயிருக்கும். (௩௯௮). இவ்வர்த்தவிஷயமாக ஆழ்வார்கள் பாசுரங்களில் பரஸ்பரவிருத்தம்போலே தோற்றுமவற்றிற்சொல்லும் பரிஹாரங்களும், மற்றுமுண்டான வக்தவ்யங்களும், விஸ்தர பயத்தாலே சொல்லுகிறிலோம். (௩௯௯). ஆகையால் இவன் விமுகனான தசையிலுங்கூட உஜ்ஜீவிக்கைக்கு க்ருஷிபண்ணின ஈச்வரனை யநுஸந்தித்தால், எப்போதும் நிர்பரனாயே யிருக்குமித்தனை. (௪௦௦). 'எதிர்சூழல் புக்கு'. (௪௦௧). ஒருவனைப்பிடிக்கநினைத்து ஊரைவளைவாரைப்போலே வ்யாப்தியும். (௪௦௨). ஸ்ருஷ்ட்யவதாராதிகளைப்போலே 'ஸ்வார்த்தமாக' என்றிறே ஜ்ஞாநாதிக ரநுஸந்திப்பது. (௪௦௩). கர்மபலம்போலே க்ருபாபலமு மநுபவித்தேயறவேணும். (௪௦௪). க்ருபை பெருகப்புக்கால் இருவர் ஸ்வாதந்த்ர்யத்தாலுந் தகையவொண்ணாதபடி யிருகரையு மழியப்பெருகும். (௪௦௫). பயஹேது-கர்மம், அபயஹேது-காருண்யம். (௪௦௬). பயாபயங்க ளிரண்டும் மாறிமாறி ப்ராப்தியளவும் நடக்கும். (௪௦௭). நிவர்த்யஜ்ஞாநம் பயஹேது, நிவர்த்தகஜ்ஞாநம் அபயஹேது. (௪௦௮).

(பகவந்நிர்ஹேதுக க்ருபாவைபவ ப்ரகரணம் முற்றிற்று).

ஸ்வதந்த்ரனை யுபாயமாகத் தான்பற்றினபோதிறே இப் ப்ரஸங்கந்தா னுள்ளது. (௪௦௯). உண்டபோ தொருவார்த்தையும், உண்ணாதபோ தொரு வார்த்தையுஞ் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே, அவர்கள் பாசுரங்கொண் டன் றிவ்வர்த்த மறுதியிடக்கடவது. (௪௧௦). அவர்களைச் சிரித்திருப்பா ரொருவருண்டிறே, அவர்பாசுரங்கொண் டிவ்வர்த்தமறுதியிடக்கடவோம். (௪௧௧). ஸ்வரூபத்துக்கும், ப்ராப்யத்துக்குஞ் சேர்ந்திருக்கவேணுமிறே ப்ராபகம். (௪௧௨). வடுகநம்பி ஆழ்வானையும், ஆண்டானையும், இருகரையரென்பர். (௪௧௩). ப்ராப்யத்துக்கு ப்ரதமபர்வம் - ஆசார்ய கைங்கர்யம்; மத்யமபர்வம் - பகவத்கைங்கர்யம்; சரமபர்வம் - பாகவதகைங்கர்யம். (௪௧௪). ஸ்வரூபப்ராப்தியை ஶாஸ்த்ரம் புருஷார்த்தமாகச் சொல்லாநிற்க ப்ராப்திபலமாய்க்கொண்டு கைங்கர்யம் வருகிறாப்போலே ஸாத்ய வ்ருத்தியாய்க் கொண்டு சரமபர்வம் வரக்கடவது. (௪௧௫). இதுதான் துர்லபம். (௪௧௬). விஷயப்ரவணனுக்கு அத்தைவிட்டு பகவத் விஷயத்திலே வருகைக்குள்ள அருமைபோலன்று, ப்ரதமபர்வத்தைவிட்டு, சரமபர்வத்திலே வருகைக்குள்ளவருமை. (௪௧௭). அங்கு தோஷதர்ஶநத்தாலே மீளலாம்; இங்கு அதுசெய்யவொண்ணாது. (௪௧௮). தோஷமுண்டானாலும் குணம்போலே யுபாதேயமாயிருக்கும். (௪௧௯). லோகவிபரீதமாயிறே யிங்கிருப்பது. (௪௨௦). குணமுபாதேயமாகைக் கீடானஹேது தோஷத்துக்கு முண்டிறே. (௪௨௧). நிர்க்ருணனென்று வாய்மூடுவதற்கு முன்னே க்ருணவானென்று சொல்லும்படியாயிருந்ததிறே. (௪௨௨). இப்படி சொல்லும்படி பண்ணிற்று, க்ருபையாலேயென்று, ஸ்நேஹமும், உபகார ஸ்ம்ருதியும் நடந்ததிறே. (௪௨௩). நிர்க்ருணனாக ஶங்கித்துச்சொல்லு மவஸ்தையிலும், காரணத்தை ஸ்வகதமாகவிறே சொல்லிற்று. (௪௨௪). குணதோஷங்களிரண்டும், க்ஷீரபுருஷார்த்தகாங்க்ஷையையுங் கொலைக்கும். (௪௨௫). நித்யஶத்ருவாயிறே யிருப்பது. (௪௨௬). இப்படி ப்ராப்யத்தை யறுதியிட்டா லதுக்கு ஸத்ருஶமாக வேணுமிறே ப்ராபகம். (௪௨௭). அல்லாதபோது ப்ராப்யப்ராபகங்களுக்கு ஐக்யமில்லை. (௪௨௮). ஈஶ்வரனைப்பற்றுகை - கையைப்பிடித்துக் கார்யங்கொள்ளுமோபாதி; ஆசார்யனைப்பற்றுகை காலைப்பிடித்துக் கார்யங்கொள்ளுமோபாதி. (௪௨௯). ஆசார்யனிருவர்க்கு முபகாரகன். (௪௩௦). ஈஶ்வரனுக்கு ஶேஷவஸ்துவை யுபகரித்தான்; சேதநனுக்கு ஶேஷியை யுபகரித்தான். (௪௩௧). ஈஶ்வரன்றானும் ஆசார்யத்வத்தை யாசைப்பட்டிருக்கும். (௪௩௨). ஆகையிறே குருபரம்பரையிலே அந்வயித்ததும், ஸ்ரீகீதையும் அபயப்ரதாநமு மருளிச்செய்ததும். (௪௩௩). ஆசார்யனுக்கு ஸத்ருஶப்ரத்யுபகாரம் பண்ணலாவது - விபூதிசதுஷ்டயமும் ஈஶ்வரத்வயமு முண்டாகில். (௪௩௪). ஈஶ்வர ஸம்பந்தம் பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருக்கும்; ஆசார்ய ஸம்பந்தம் மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருக்கும், (௪௩௫). பகவல்லாபம் ஆசார்யனாலே. (௪௪௯). ஆசார்யலாபம் பகவானாலே. (௪௩௭) உபகார்யவஸ்து கௌரவத்தாலே, ஆசார்யனைக்காட்டில் மிகவு முபகாரகன் ஈஶ்வரன். (௪௩௮). ஆசார்யஸம்பந்தங் குலையாதே கிடந்தால், ஜ்ஞாந பக்தி வைராக்யங்களுண்டாக்கிக்கொள்ளலாம்; ஆசார்யஸம்பந் ங்குலைந்

தால், அவையுண்டானாலும் ப்ரயோஜநமில்லை. (சஙௗ). தாலிகிடந்தால் பூ ஷணங்கள் பண்ணிப் பூணலாம்; தாலிபோனால் பூஷணங்களெல்லாம் அவ த்யத்தை விளைக்கும். (சசo). தாமரையை யலர்த்தக்கடவ ஆதித்யன்றானே நீரைப்பிரிந்தா லத்தை யுலர்த்துமாபோலே, ஸ்வரூப விகாஸத்தைப் பண் ணும் ஈஶ்வரன்றானே ஆசார்யஸம்பந்தங் குலைந்தா லத்தை வாடப் பண்ணும். (சசக). இத்தையொழிய பகவத்ஸம்பந்தம் துர்லபம்.(சசஉ). இரண்டு மமையாதோ, நடுவிற்பெருங்குடி யென்னென்னில், (சசங). கொ டியைக் கொம்பிலே துவக்கும்போது சுள்ளிக்கால் வேண்டுமாபோலே ஆசார் யாந்வயத்துக்கு மிதுவேணும். (சசச). 'ஸ்வாபிமாநத்தாலே ஈஶ்வராபிமாந த்தைக் குலைத்துக்கொண்ட விவனுக்கு ஆசார்யாபிமாநமொழிய கதியில்லை' என்று பிள்ளை பலகாலு மருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும்.(சசரு). ஸ்வஸ்வாதந்த்ர்ய பயத்தாலே பக்திநழுவிற்று. (சசசா). பகவத் ஸ்வா தந்த்ர்ய பயத்தாலே ப்ரபத்திநழுவிற்று. (சசஎ). ஆசார்யனையுந் தான் பற் றும்பற்று அஹங்கார கர்ப்பமாகையாலே, காலன்கொண்டு மோதிரமிடுமோ பாதி. (சசஅ). ஆசார்யாபிமாநமே உத்தாரகம். (சசகூ). கைப்பட்டபொ ருளைக் கைவிட்டுப் புதைத்தபொருளைக் * கணிசிக்கக்கடவனல்லன். (சருo) விடாய் பிறந்தபோது கரஸ்தமான உதகத்தை உபேக்ஷித்து ஜீமூதஜலத்தை யும், ஸாகரஸலிலத்தையும், ஸரித்ஸலிலத்தையும், வாபீகூப பயஸ்ஸுக்களை யும் வாஞ்சிக்கக் கடவனல்லன். (சருக). பாட்டுக்கேட்கு மிடமும் கூப்பீடு கேட்குமிடமும், குதித்தவிடமும், வளைத்தவிடமும், † ஊட்டுமிடமு மெல் லாம் வகுத்தவிடமேயென் றிருக்கக்கடவன். (சருஉ). இவனுக்கு ப்ரதிகூ லர் - ஸ்வதந்த்ரரும், தேவதாந்தரபரரும். அநுகூலர் - ஆசார்யபரதந்த்ரர். உபேக்ஷணீயர் - ஈஶ்வரபரதந்த்ரர். (சருங). ஜ்ஞாநாநுஷ்டாநங்களிரண் டும் - அல்லாதார்க்கு உபாயங்கமாயிருக்கும். இவனுக்கு ‡ உபேயாங்கமா யிருக்கும். (சருச). இவனுக்கு நிஷித்தாநுஷ்டாநம் - தன்னையும் பிறரை யும் நசிப்பிக்கையாலே த்யாஜ்யம். (சருரு). தான் நசிக்கிறது - மூன்றப சாரத்திலு மந்வயிக்கையாலே, பிறர் நசிக்கிறது - தன்னை அநாதரித்தும் தன் அநுஷ்டாநத்தை அங்கீகரித்தும். (சருசா). விஹிதபோகம் - நிஷித்த போகம்போலே லோகவிருத்தமுமன்று; நரகஹேதுவுமன்று. ஆயிருக் கச்செய்தே, ஸ்வரூபவிருத்தமுமாய், வேதாந்த விருத்தமுமாய், ஶிஷ்ட கர்ஹிதமுமாய், ப்ராப்யப்ரதிபந்தகமுமா யிருக்கையாலே த்யாஜ்யம். (சருஎ). போக்யதாபுத்தியைக்குலைந்து தர்மபுத்தியா ப்ரவர்த்தித்தா லும் ஸ்வரூபங்குலையும். (சருஅ). (க்ஷேத்ராணிமித்ராணி) என்கிற ஶ்லோகத்தி லவஸ்தைபிறக்கவேணும், ஸ்வரூபங்குலையாமைக்கு. (சருகூ). ப்ராப்யபூமியில் ப்ராவண்யமும், த்யாஜ்யபூமியில் ஜிஹாஸையும், அநு பவாலாபத்தில் ஆத்மதாரணயோக்யதையும், உபாயசதுஷ்டயத்துக்கும் வேணும். (சசாo). (பழுதாகாதொன்றறிந்தேன்) என்கிற பாட்டை பூர்வோ பாயத்துக்கு ப்ரமாணமாக வநுஸந்திப்பது. (சசாக). (நல்லவென்றோழி)

* கணிசிக்கை - இச்சிக்கை. † மூட்டுமிடமும் - என்றும் பாடாந்தரம்.

‡ 'உபேயமாயிருக்கும்' என்றும் வ்யாக்யாந பாடாந்தரம்.

(மாருயதானவனே) என்கிற பாட்டுக்களையும், ஸ்தோத்ரத்தில் முடிந்த ஸ்லோகத்தையும், (பஶூர்மநுஷ்ய:) என்கிற ஸ்லோகத்தையும், இதுக்கு ப்ரமாணமாக வநுஸந்திப்பது. (சகூஉ). ஆசார்யாபிமாநந்தான் - ப்ரபத்தி போலே உபாயாந்தரத்துக்கு அங்கமுமாய், ஸ்வதந்த்ரமுமா யிருக்கும். (சகூங). பக்தியில் அஶக்தனுக்கு ப்ரபத்தி; ப்ரபத்தியில் அஶக்தனுக்கு இது. (சகூச). இது ப்ரதமம் ஸ்வரூபத்தைப் பல்லவிதமாக்கும், பின்பு புஷ்பிதமாக்கும், அநந்தரம் பலபர்யந்தமாக்கும். (சகூரு)

—[ சரமபர்வ நிஷ்டாப்ரகரணம் ஸமாப்தம் ‖ சூ ‖]—

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

ஸ்ரீவசநபூஷணம் முற்றிற்று.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

அர்சிராதி

†ப்ரதமப்ரகரணம்.

தனியன்.

(கலித்துறை.)

போர்மண்டலஞ்சங்கு தண்டுவில்வாள்புக ராழிவெய்யோன்
கார்மண்டலஞ்சென்று காண்பார்தமக்குக் கதிரொளியோன்
* ஏர்மண்டலந்தன்னை யெய்தும்வழியை யினிதுரைத்தான்
பேர்மண்டலகுரு வென்னு மும்பை பிறந்தவனே.

ஸ்ரீய:பதியான ஸர்வேஶ்வரனுக்கு விபூதித்வயமும் ஶேஷமாயிருக்கும். அதில் போகவிபூதியிலுள்ளார் (ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப) என்கிறபடியே அவனுடைய செங்கோலே ஏகாதபத்ரமாக நடக்கும்படி அவனுடைய அபிமாநத்திலே யந்தர்பவித்துப் போருவர்கள். லீலாவிபூதியிலுள்ளார் - அவர்களைப்போலே ஶாஸ்த்ராநுவர்த்திகளன்றிக்கே ஸங்கல்பாநுவிதாயிகளாய், (நம இத்யேவவாதிநா) என்கிறதுக் கெதிராக (நநமேயம்) (ஈஶ்வரோஹம்) என்கிறபடியே, மனேயடைவே, (யானே யென்றனதே) என்று, அவர்கள் (பணியா வமரரா) யிருக்கு மிருப்புக்கெதிராக மற்றோர் தெய்வம்பாடி யாடிப்பணிந்து, (மிக்கார்வேதவிமலர்) என்கிறபடியே, அவர்களைப்போலே பெருமக்களாயிராதே (சிறியார் சிவப்பட்டார்) என்கிறபடியே சிறியராய், (அயர்வறுமமரர்கள்) என்கிறபடியே அவர்களைப்போலே திவ்யஜ்ஞாநோபபந்நராயிராதே அறிவிலாமனிசராய், ஒளிக்கொண்டசோதிக்கெதிராக அழுக்குடம்பை பரிக்ரஹித்து, (விபஶ்யவ:) (விண்ணோர்பரவுந்தலைமகள்) என்கிறதுக்கெதிராக உலகில் கண்டவா தொண்டரைப் பாடி, (உனக்கே நாமாட்செய்வோம்) என்கிறபடியே அவனுக்காட் செய்யா

* 'மண்டலந்தன்னிலேகும்படியை' என்றும் பாடங்காண்கிறது.

தே * மாரனார்வரி வெஞ்சிலைக்காட்செய்து, தொண்டிபூண்டமுதமுண்ணாதே பாவையர்வாயமுதமுண்டு, (ஸஏகபோஹவதி) என்கிறதுக்கெதிராக சூலந்தா னெத்தனையும்பிறந்து, உருவார்சக்கரஞ் சங்குசுமந்திங்கவனோ டொருபாடுழ லாதே ஆக்கையின்வழி யுழன்று, (எதத்வ்ரதம்மம) என்கிறவனுடைய வ்ரதத் துக்கெதிராக யாதானும்பற்றி நீங்கும் விரதத்தை யேறிட்டுக்கொண்டு, (அவர் தரும் கலவியேகருதி யோடினேன்) என்கிறபடியே அலம்புரிந்த நெடுந்தடக் கைக்குமெட்டாதபடி கைகழியவோடி, அற்பசாரங்களவை சுவைத்தகன்று போரக்கடவராயிருப்பர்கள்.— இவர்கள் தண்மையைப்பார்த்துக் கைவிடா தே,ஸ்வாஹாவிக ஸம்வந்தமே ஹேதுவாக விடமாட்டாதே ‡ எதிர்சூழல் புக்குத்திரிகிற ஸர்வஹூத ஸுஹ்ருத்தான ஸர்வேஶ்வரனுடைய யத்நவிஶே ஷம் ஒருநாள்வரையிலே யோரவகாஶத்திலே ஃலித்து, அத்வேஷாஹிஸங்ய யையுடையனாய், மோக்ஷ ஸமீக்ஷாயுக்தனாய், ப்ரவ்ருத்தமானவைராக்யனாய், விவேகாநிவேஶியாய், ஸதாசார்ய ஸமாஶ்ரயணம் பண்ணிச்செய்த வேள் வியனாய், ஸம்ஸாரத்தினுடைய கொடுமையை யநுஸந்தித்து, ஸர்ப்பாஸ்ய கதமான மண்டூகம் போலேயும், காட்டுத்தீ கதுவின மான்பேடைபோ லேயும், இருபாடெரியினுள் ளெறும்புபோலேயும், ஆவாரார்துணையென் றலைநீர்க்கடலுளழுந்தும் ¶ நாவாய்போலேயும், ஆற்றத்துளங்கி, (பலநீகாட் டிப்படுப்பாயோ) (இன்னங்கெடுப்பாயோ), ஐவர்திசைதிசை வலித்தெற்று கின்றனர்) (கூறைசோறிவைதாவென்று குமைத்துப்போகார்) என்று இந் த்ரியங்களினுடைய கொடுமையை நினைத்துக் கூப்பிட்டு (என்னாத்து யர்விளைக்கு மிவையென்ன வுலகியற்கை) (உயிர்மாய்தல் கண்டாற்றேன்) (ஓஓஉலகினதியல்வே) என்று ஸம்ஸாரிகளிழவுக்கு நொந்தாற்றமாட்டாதே, (பேயரேயெனக்கியாவரும்) (நாட்டுமானிடத்தோடெனக்கரிது) என்றும் (நாட்டாரோடியல்வொழிந்து) என்றுஞ் சொல்லுகிறபடியே, பிராட்டிக்கு ராக்ஷஸிகளோட்டை ஸஹவாஸ மஸஹ்யமானாற்போலே, மெய்யில் வாழ் க்கையை மெய்யெனக்கொண்டு உண்டியேயுடையே யுகந்தோடுகிற பௌஎ ரிசிந்தா விமுகரான ஸம்ஸாரிகளோட்டை ஸஹவாஸம் துஸ்ஸஹமாய், (இங்கின்ற நீர்மையினியாமுறாமை) (எங்கினித்தலைப்பெய்வன்) (நாளேல றியேன்) (வானுலகந்தெளிந்தே யென்றெய்துவது) (தரியேனினி) (கூவிக் கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ) என்று ஹவஷநுஹவம் பெருமையா லே பெருவிடாய்பட்டு, தீயோடுடன்சேர்மெழுகாய், காணவாராயென் றென்று கண்ணும் வாயுந்துவர்ந்து, காணப்பெருமையாலே ஒருபகலாயிர மூழியாய், (க்ருதக்ருத்யா:ப்ரதீக்ஷந்தே) என்கிறபடியே ஆக்கைவிடும் பொ ழுதை மநோரயித்து, மஹிஷியினுடைய உச்சிஷ்டத்தை விரும்பும் ராஜ புத்ரனைப்போலே தான் த்யஜித்த தேஹத்தை விரும்புகிற ஈஶ்வரனை (மங் கவொட்டு) என்றபேக்ஷித்து, உண்டிட்டாயினி யுண்டொழியாய்) (முற்றக்

* மாரன் – காமன்.

† இந்தப்ரபந்தம் – ஒரேப்ரகரணமாயிருக்க, அநுஸந்தாக்களுக்கு ஸவீகர்யார்த மாகப் பூர்வர்கள் ப்ரகரண சதுஷ்டயமாக்கினார்கள் – என்று பெரியோர்கள்.

‡ எதிர்சூழல்புக்கு – ஸஜாதீயாவதாரம்பண்ணி. ¶ நாவாய் – ஓடம்.

கரந்தொளித்தாய்) (திருவாணை நின்னாணைகண்டாய்) இனி நான் போக லொட்டேன்) என்று தடுத்தும், வளைத்தும் பெறவேண்டும்படி பரமஹக் திதலையெடுத்தல், அவ்வளவன்றிக்கே யுக்திமாத்ரத்திலே அந்வயித்தல், (நானும் பிறந்தமை பொய்யன்றே) (தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்ப ரேலதுகாண்டும்) (என்று சொல்லுகிறபடியே பழுதாகாதவழியை யறிந்து வேறாகவேத்தியிருக்கு மவனைப் பற்றுதல்செய்து, தெளிவுற்று வீவின்றி நிற்குமவனுக்கு, ஶரீராவஸாநகாலத்திலே, ஈஶ்வரன், தன் திருவடிகளிலே இவன் தலைசாய்த்தவன்றுதொடங்கி (ருணம்ப்ரவ்ருத்தமிவ), (உன்னடியார்க் கென்செய்வனென்றே யிருத்தி நீ) என்கிறபடியே பெருந் * தனிசாளனாய், ப்ரத்யுபகாரந்தேடித் தடுமாறி, திருத்திப் பணிகொள்ள நினைத்து, பல்வாங்கி ன பாம்புபோலே ஸம்ஸாரம் † மறுவலிடாதபடி யடியறுக்கச் செய்தேயும் ‘பிணமெழுந்து கடிக்கிறதோ’ என்றதிஶங்கைபண்ணி, அமர்ந்த நிலத்திலே கொண்டுபோகையிலே விரைந்து, இவன் விடாய் குளப்படி யென்னும்படி கடல்போலே முற்றப்பருக வேண்டும்படி பெருவிடாயை யுடையனாய், ஒருமாநொடியும் பிரியாதே, சக்ரவர்த்தி, பெருமாள் திருவபிஷேகத்துக்கு, வஸிஷ்ட வாமதேவாதிகளை யழைத்துப் ‡ பாரித்தாற்போலே நித்யஸூரிக ளை யழைப்பித்து, வழியைக் ¶ கோடிப்பிப்பதாய்க்கொண்டு, (அலங்காரவி திம்க்ருத்ஸ்நம் காரயாமாஸவேஶ்மநி) என்கிறபடியே வீடுதிருத்தி, அநா திகாலார்ஜிதங்களாய் இவன் ஆசார்ய ஸமாஶ்ரயணம் பண்ணின வன்றே தொடங்கி அருளென்னுந் தண்டாலடியுண்டு, மூக்கும் முகமுஞ் சிதைந்து, பண்டுபோலே வீற்றிருக்கை தவிர்ந்து, மடியடக்கி நில்லாதே சரக்குவாங்கி (மருங்குங்கண்டிலமால்) என்னும்படி யொளித்து வர்த்திக்கிற பூர்வாகங் களையும், உத்தராகங்களையும், அநுகூலர் விஷயமாகவும், ப்ரதிகூலர் விஷ யமாகவும், வருணனைக்குறித்துத் தொடுத்த அம்பை மருகாந்தாரத்திலே விட்டாற்போலே ÷ அசல்பிளந்தேறிட்டு, இவனோடு ஸம்பந்தமுடையராய் நரகாநுபவம் பண்ணுகிறவர்களை (ஏதத்ஸம்பந்திநஶ்சாந்யே) என்கிற படியே ஸ்வர்கஸ்தராம்படி நினைப்பிட்டு, (ஊஹ்ய:பஞ்சாத்மநாதேந தார்க்ஷ்ய ரூபேண) (செழும்பறவைதா னேறித்திரிவான்) என்று சொல்லுகிறபடியே (அருளாழிப்புட்கடவீர்) என்று இவனாசைப்பட்டபடியே கொற்றப்புள் ளொன்றேறிவந்து தோன்றி, மஞ்சுயர் பொன்மலைமேலெழுந்தமாமுகில் போன்ற வடிவையநுபவிப்பித்து, ஆதிவாஹிகரை யழைத்தருளி, இவனை ஸத்கரிக்கும் க்ரமத்திலே ஸத்கரிக்க வருளிச்செய்ய; பின்பு (இந்த்ரியைர்மந ஸிஸம்பத்யமாந:) வாங்மநஸிஸம்பத்யதே மநப்ராணே ப்ராணஸ்தேஜஸி தேஜ:பரஸ்யாமதேவதாயாம்) என்கிறபடியே, பாஹ்யகரணங்கள் அந்த: கரணத்திலே சேர்ந்து, அந்த:கரணம் ப்ராணனோடே சேர்ந்து, ப்ராணன் இச்சேதநனோடே ஸம்பந்தித்து, இவன் பூதஸூக்ஷ்ம விஶிஷ்டனாய்க் கொண்டு பரமாத்மாவின் பக்கலிலே சேரும். பின்பு, தவர்மகாலத்

* தனிசு - கடன். † மறுவலிடுகை - திரும்புகை. ‡ பாரித்தல் - உத்யோகித்தல்.

¶ கோடிக்கை - அலங்கரிக்கை.

÷ அசல்பிளந்தேறிடுகை - அந்யத்ரஸங்க்ரமிப்பிக்கை.

திலே ஆதித்யகிரணத்தாலே தப்தனானவன் நிழல்மரத்தைப்பற்றி யிளைப் பாறுமாபோலே, ஸம்ஸாரது:க்கார்க்க தாபதப்தனான இவன் வாஸுதேவ தருச்சாயையைக்கிட்டி விஶ்ரமித்து, திருக்கோவலூருக்குப் போம்போது திருமங்கை யாழ்வாருக்கு (தானுகந்த வூரெல்லாந் தன்றாள்பாடி) என்கிறப டியே திருவுலகளந் தருளின திருவடிகளே பாதேயமாமாபோலே, (ப்ராண ப்ரயாணபாதேயம்) (பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்) என்கிறபடியே த்வயவசநமே பாதேயமாகவும், (ஏதேநப்ரதிபத்யந்தே) (தேவயாநபதாஸ்ஸர்வே முக்திமார்காபிலாஷிண:) என்கிறபடியே அர்ச்சி ராதிமார்க்கமே பெருவழியாகவும், அண்டத்தப்புறத் துய்த்திடுமையனாய், ஆப் ததமனாய், படர்கொள் பாம்பணைப்பள்ளிகொண்ட சுரிகுழற்கமலக்கட் கனி வாய்க்காளமேகமான அரங்கத்துறையு மின்துணைவனே வழித்துணையாக வும், விரஜாதீரமும் திவ்யவ்ருக்ஷமும் ஆரம்ஹ்ருததடமுமே விஶ்ரமஸ்தல மாகவும், திருமாமணிமண்டபமே புகலிடமாகவும், அர்ச்சிராதி புருஷர்களே * உசாத்துணையாகவும், சூழ்விசும்பணி முகிலினுடைய முழக்கமே ப்ரயாண படஹத்வநியாகவுமமைந்து வழியைத்தரும் நங்கள் வானவரீசனான ஹார்த னுன் வழிபட்டோடவருள, வானேறவழிபெற்று, போக்கிலே யொருப்பட்டு, ப்ரீத்யதிஶயத்தாலே, அநாதிகாலம் தன்னைக்குடிமைகொண்டுபோந்த ஸம் ஸாரத்தை (நரகத்தைநகுநெஞ்சே) என்கிறபடியே புரிந்து பார்த்துச்சிரித்து, மாகவைகுந்தங் காண்பதற்குப் பண்டேயுண்டானவாசை† கொந்தளித்து, மேலேமேலே பெருக, பிராட்டியும் ஸ்ரீவிபீஷணப்பெருமாளு மிலங்கையி னின்றும் புறப்பட்டாற்போலே ஹ்ருதயகமலத்தினின்றும் புறப்பட்டு, (ஶத ஞ்சைகாச ஹ்ருதயஸ்யநாட்ய:) என்கிறபடியே - ஹ்ருதயத்தைப்பற்றிக்கிடக் கிற நூற்றொருநாடியிலும், ஸுஷும்நை என்று பேரையுடைத்தான மூர்த்தந் யநாடியாலே, வித்யாமாஹாத்ம்யத்தாலும் தேவயாநாநுஸ்ம்ருதியாலும் ப்ர ஸந்நனான ஹார்த்தன் கைவிளக்குப் பிடித்துக்கொண்டு போகப்போய், ப்ரஹ்ம கபாலத்தை பேதித்து, (தஆஸுநாபீஷுஸ்ருப்தா: ஆதித்யோநாடீரபி ப்ர தாயந்தே தேமுஷ்மிந்நாதித்யே ஸ்ருப்தா: .............. அத்தைரே வரஶ் மிபிரூர்த்வ ஆக்ரமதே) என்கிறபடியே அந்நாடியோடே ஸம்பந்தித்து, ஆதித்யரஶ்மியை யநுஸரித்துக்கொண்டு, (ஓங்காரரதமாருஹ்ய) என்கிறப டியே ப்ரணவமாகிற தேரிலேயேறி, மநஸ்ஸு ஸாரதியும் பண்ணப்போம் போது, கையார்சக்கரத்தினின் றெல்லாவடிவும் ‡ புதுக்கணிக்குமாபோலே உபயவிபூதியும் புதுக்கணித்து, கடல் தன் காம்பீர்யமெல்லாங் குலைந்து, கீழ்மண்கொண்டு மேல்மண்ணெறிந்து ஸஸம்ப்ரம ந்ருத்தம் பண்ணியார்க்க, உபரிதநலோகங்களி லுள்ளார்களடைய உபஹாரபாணிகளாய், நெடுவரைத் தோரணம் நிரைத்து, ஆகாஶமெங்கும் பூர்ணகும்பங்களாலே பூர்ணமாக்கி, தூபநன்மலர் மழைபொழிந்து, 'இவனொருக்கால் தங்கிப்போமோ' என்கிற நோயாசையாலே எதிரெதிரிமையவ ரிருப்பிடம்வகுக்க, லோகங்களெல்லா மதிரும்படி கடலிரைத்தாற்போலே வாத்யங்களெங்கு முழங்க, வழியிலுள்

---

* உசாத்துணை - ஸஹாயம். † கொந்தளிக்கை - பொங்குகை.

‡ புதுக்கணிப்பு - நவீனகாந்தி.

ளார்களுடைய (போதுமினெமதிடம்புகுதுக) என்கிறபடியே தந்தாம் ஸ்தாநங்களையும் ஐஶ்வர்யங்களையும் ஸமர்ப்பிக்க, சிலர் கீதங்கள்பாட, சிலர் யாமாதிஸுக்ருத ஃபலங்களை ஸமர்ப்பிக்க, வேறே சிலர் தூபதீபாதிகளாலே அர்சிக்க, சிலர் காளங்கள் வலம்புரி கலந்தெங்கு மாரவாரிப்ப, வாளொண்கண் மடந்தையரான ஆதிவாஹிகமஹிஷிகள், 'இது அராஜகமாய்க் கிடக்கக்கடவதோ, இத்தையாளவேணும்' என்று மங்களாஶாஸநம்பண்ண, மருதரும் வசுக்களும் இவன் விரைந்துபோனு லீஶ்வரன் நமக்குக் கையடைப்பாக்கின நிலங்கழிந்ததென்றிராதே, லோகாந்தரங்களிலுந் தொடர்ந்துசென்று இவன் செவிப்படும்படி ஸ்தோத்ரம்பண்ண, (மற்றெல்லாங்கைதொழப்போய்) என்கிறபடியே பெரியஸத்காரத்தோடே போம்போது, (அர்சிஷமேவாபி ஸம்பவந்தி அர்சிஷோஹ அஹ்ந ஆபூர்யமாணபக்ஷம்), (அக்நிர்ஜ்யோதிரஹ ஶுக்லஷ்ஷாண்மாஸா உத்தராயணம்) என்று சாந்தோக்ய வாஜஸநேய கௌஷீதகீ ப்ரப்ருதிகளிற் சொல்லுகிறபடியே, அர்சிராதி புருஷர்கள் வழிநடத்தப்போம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளேஶரணம்.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

## த்விதீயப்ரகரணம்.

அதில் முற்பட அர்சிஸ்ஸைக்கிட்டி, அவன் சிறிதிடம் வழிநடத்த, பின்பு அஹஸ்ஸையும், ஶுக்லபக்ஷாபிமாநியையும், உத்தராயணாபிமாநியையும், ஸம்வத்ஸராபிமாநியையும், வாயுவையுங் கிட்டி, அவர்கள் வழிநடத்த, (ப்ரவிஶ்யச ஸஹஸ்ராம்ஶும்) (மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தினன்னடுவுள்) என்கிறபடியே, ஹிரண்மயமாய் காலசக்ர ப்ரவர்த்தகமான தேரார் நிறைகதிரோன் மண்டலத்திலே, எதிர்விழிக்கவொண்ணாதபடி நிரவதிக தேஜஸ்ஸோடே எதிரேயொரு ஆதித்யன் செல்லுமாபோலேசென்று, அவன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு, அவ்வருகேபோய், (க்ரமாச்சந்த்ரமஸம்ப்ராப்ய) என்கிறபடியே க்ரஹநக்ஷத்ரதாரகா நிர்வாஹகனாய் அம்ருதாத்மகனாயிருந்துள்ள சந்த்ரனைக்கிட்டி, அவன் ஸத்கரிக்க அவ்வருகே போய், அமாநவனைக்கிட்டி, அவன் வழிநடத்த, ஸர்வாப்யாயகனான வருணனும், த்ரைலோக்ய பாலகனான இந்த்ரனும், முக்தராய்ப்போகுமவர்களை ஸர்வப்ரகாரத்தாலும் மிகவும்ஶ்லாகிக்கக் கடவர்களாய், ஸுராஸுர கந்தர்வ யக்ஷ ராக்ஷஸ நிர்வாஹகனான ப்ரஜாபதியையுஞ் சென்றுகிட்டி, அவர்கள் லோகங்களையுங் கடந்து, அண்டத்தையும், தஶோத்தரமான ஆவரண ஸப்தகத்தையும், முடிவில் பெரும்பாழான மூலப்ரக்ருதியையுங்கடந்து;—முன்பு ஸம்ஸாரியான நாளில் அந்தகாராவ்ருதமாய், நீரும் நிழலுமின்றிக்கே (வீதோஸ்ம்யஹம் மஹாதேவ ஶ்ருத்வாமார்க்கஸ்ய விஸ்தரம்) என்கிறபடியே, கேட்டபோதே துளங்கவேண்டும்படியான கொடியவழியிலே, யமபடர் பாசங்களாலும், புத்ரதாரமய பாசங்களாலுங் கட்டுண்டு, யமதூதராலே யிழுப்பு

ண்டு, தொடைவழி நாய்கள்கவர, ஶக்தி ஶங்கு தோமர ஸாயக ஶூலாதிக
ளாலே நோவுபட்டு, வ்யாக்ர கிங்கரரான ராக்ஷஸர் முகங்களுக் கிரை
யாய் உடம்பெங்கும் சீயும் ரக்தமும்வடிய, பசியும் தாஹமும் மேலிட்டு,
உதரைச் சோறும் தண்ணீரும் வேண்டி, மூக்கும் முகமும் உதடும் பல்
லுந்தகர்ந்து, கையுங்காலுமொடிந்து, கூப்பிட்டுப்போன விழவுதீர,—ஸு
வோத்தரமான மார்க்கத்தாலே இவ்வெல்லை கடந்தபோதே தொடங்கிக் கண்
டாரடைய ஸத்கரிக்க, தனக்கு உபாயமான பாரளந்த பாதப்போதுபோலே
யும், அந்தரமேழினூடு செலவுய்த்த பாதம்போலேயுங் கடுநடையிட்டுப்
போய், ஶஷ்டி ஸ்பர்ஶாதிகளாகிற ஸிம்ஹவ்யாக்ராதிகளைத் தப்பி, ஸம்ஸா
மாகிற பெருந்தூற்றினின்றும் புறப்பட்டு, தாபத்ரயமாகிற காட்டுத்தீயிலே
யகப்பட்டுப் பட்ட க்லேஶமெல்லாந்தீர, (ததஸ்து விரஜாதீரப்ரதேஶம்)
(ஸ்நச்ஸந்தி விரஜாம்நதீம்) என்கிறபடியே அம்ருதவாஹிநியாய், வைதரணிக்
கெதிர்த்தட்டான விரஜையைச் சென்றுகிட்டி, வன்சேற்றள்ளலையும் வாஸ
நாரேணுவையுங் கழுவி, மேவாவ்ருதமான ஆதித்யமண்டலம்போலேயும்,
ராஹுக்ரஸ்தமான சந்த்ரமண்டலம் போலேயும், சேற்றிலழுந்தின மாணி
க்கம்போலேயும் அழுக்குடம்பிலே யகப்பட்டு திரோஹிதஸ்வரூபனான
விவன் அதுவும் நிவ்ருத்தமாய், (தத்தோயஸ்பர்ஶமாத்ரேண) என்கிறபடி
யே விரஜாஜலஸ்பர்ஶத்தாலே திரோதாயகமான ஸூக்ஷ்மஶரீரமுங் கழி
யப்பெறுகையாலே, (ஸூர்யகோடிப்ரதீகாஶ:) என்கிறபடியே அநேகமா
யிரமாதித்யர்கள் சேரவுதித்தாற்போலே கண்கொண்டு காணவொண்ணாத
படி நிரவதிக தேஜஸ்ஸை யுடையனாய், (அமாநவம் ஸமாஸாத்ய) என்கிற
படியே சதுர்புஜனாய், ஶங்க சக்ர கதாதரனாய், விரஜைக்கரையிலே
யெழுந்தருளியிருக்கிற அமாநவனைச்சென்று கிட்டி, அவன் திருக்கைகளாலே
ஸ்பர்ஶிக்க, பின்பு லாவண்ய ஸௌந்தர்யாதி கல்யாணகுணகரமாய் ஶுத்த
ஸத்வ மயமாய், பகவதநுபவைக பரிகரமான விக்ரஹத்தைப்பெற்று,
இந்த்ராதி பதங்கள்போலே கர்மஸாத்யமாய், நஶ்வரமாய், குணத்ரயாத்
மகமாயிருக்கை யன்றிக்கே, பகவத் ப்ரீதிஸாத்யமாய், நித்யமாய், ஶுத்த
ஸத்வாத்மகமாய், (இல்லைகண்டீரின்பம்) என்கிறதுக் கெதிர்த்தட்டாக
நலமந்தமில்லதோர் நாடாய், இருள்தருமா ஞாலத்துக்கெதிர்த்தட்டாக (தெ
ளிவிசும்பு திருநாடு) என்கிறபடியே தெளிதாகிய சேண்விசும்பாய், ஸநகா
திகள் நெஞ்சுக்கும் நிலமன்றிக்கே பகவதநுகூல்யைக போகரான நித்யஸூ
ரியராலே நெருங்கி, அவர்களாலு மளவிடவொண்ணாதவளவையும், ஐஶ்
வர்யத்தையும், ஸ்வபாவமாக வுடைத்தான திவ்யதேஶத்தைக் கண்களாரள
வும் நின்றுகண்டு, (விண்ணைத்தொழுது) என்கிறபடியே தொழுது, அமாநவ
பரிஸரத்திலே ஶங்க காஹள பேரிகளினுடைய முழக்கத்தைக்கேட்டு,
(ஓடுவார் விழுவாருகந்தாலிப்பார் - நாடுவார்நம்பிரா னெங்குற்றானென்பார்)
(கண்டோங் கண்டோங் கண்ணுக்கினியனகண்டோங் - தொ
ண்டீரெல்லீரும்வாரீர்) என்பாராய்க்கொண்டு பெரிய * ஆர்ப்பரவத்தைப்
பணித் திரள்திரளாகப் புறப்பட்டு வருகிற நித்ய முக்தருடைய ஆநந்த

* ஆர்ப்பரவம் - ஆரவாரம்.

* களகளத்தைக் கண்டநுபவித்துக் கொண்டு, பெரிய ப்ரீதியோடே போகிற வளவிலே, (தம்பஞ்சசதாந்யப்ஸரஸாம்ப்ரதிகச்சந்தி); (தத்ராகத்யச தேசேவாஸ் ஸாயீயாஸீச விமலாபயா:) என்கிறபடியே திவ்யமால்யம், திவ்யாஞ்ஜநம், திவ்யசூர்ணம், திவ்யவஸ்த்ரம், திவ்யாபரணந் தொடக்கமானவற்றை தரித்துக்கொண்டு, ஐந்நூறு திவ்யாப்ஸரஸ்ஸுக்களும், நித்யஸூரிகளு மெதிரேவந்து, (ப்ரம்ஹாலங்காரேண) (ப்ரம்ஹாலங்க்ரியா) என்கிறபடியே அலங்கரித்து, உடுத்துக்களைந்த நின்பீதக வாடை, சூடிக்களைந்த திவ்யமால்யம், திவ்யாபரணங்கள், திவ்யாங்கராகங்கள் தொடக்கமானவற்றாலே யலங்க்ருதனா யிருக்கிற படியைக்கண்டு, (புனையிழைகளணிவு மாடையுடையும் புதுக்கணிப்பும் - நினையும் நீர்மையதன்று) என்று விஸ்மிதராய்க்கொண்டாட, பின்பு அநேகமாயிரங் கொடிகளாலும், முத்துத்தாமங்களாலும், மேற்கட்டிகளாலு மலங்க்ருதமாய், திவ்யஸ்த்ரீபரிவ்ருதமாய், பகவத்ஸங்கல்ப கல்பிதமாயிருப்பதொரு திவ்யவிமாநத்தைப் பெரியதிருவடி கொண்டுவர, அதிலே யிவனையேற்றி ஸ்தோத்ரம் பண்ணிக் கொண்டு திவ்யகாந்தாரத்தளவிலே சென்றவாறே; நாநாவிதமான உபஹாரங்களை யேந்திக்கொண்டு வேறேசில திவ்யாப்ஸரஸ்ஸுக்க ளெதிரேத்தி ஸத்கரிக்க, பின்பு திவ்யகந்தம், ப்ரம்ஹகந்தந் தொடக்கமான அப்ராக்ருத கந்தங்களை ஆக்ராணம்பண்ணி ஸர்வகந்தனாய், (கொடியணிநெடுமதிள் கோபுரங்குறுகினர்) என்கிறபடியே த்வஜபதாகாதிகளாலே யலங்க்ருதமான திவ்ய கோபுரத்தைக்கிட்டி, திருவாசல்காக்கும் முதலிகள் (வைகுந்தன்றமரெமரெமதிடம்புகுதுக) என்கிறபடியே பெரியவாதரத்தோடே ஸத்கரிக்க, (ஸமதீத்யஜநாகுலம்) (கவாடங்கடந்துபுக்கு) என்கிறபடியே நெஞ்சையும் கண்ணையும் வருந்தி மீட்டுக்கொண்டு, அயோத்யை யென்றும் அபராஜிதையென்றுஞ் சொல்லப்படுகிற ஏர்கொள் வைகுந்தமாநகரத்திலே ஒருவண்ணஞ் சென்றுபுக்கு, (ஸ்ரீவைகுண்டாய திவ்யநகராயநம:) என்று கண்ணன் விண்ணூரைத்தொழுது, வைகுந்தத்தமரும் முனிவரும், 'கடலில் நீர் ஸஹ்யத்திலே ஏறக்கொழித்தாற்போலே ஸம்ஸாரஸ்தனான விவனிந்தேசத்திலே வரப்பெறுவதே' என்று விஸ்மிதராய்க்கொண்டாட, பின்பு கோயில்கொள் தெய்வங்களான பெரியதிருவடி, ஸ்ரீஸேநாபதியாழ்வான் தொடக்கமானவர்கள் தந்தாந் திருமாளிகைகளிலே கொண்டுபுக்கு, இவனை ஆஸநத்திலே யுயரவைத்து, தாங்கள் தரையிலேயிருந்து, தங்கள் மஹிஷிகள் நீர்வார்க்க ஸ்ரீபாதம் விளக்கி, தங்கள் மஹிஷிகளுக்கு (தேவர்வைகல் தீர்த்தங்களே) என்று இவன் ப்ரபாவத்தைச் சொல்லி, ஸத்கரிக்கும் க்ரமத்திலே ஸத்கரிக்க, பின்பு ஸ்ரீசடகோபனும், திவ்யசூர்ணங்களும், பூர்ணகும்பங்களும், மங்கள தீபங்களு மேந்திக்கொண்டு, தேசாந்தரகதனாய் வந்த புத்ரனைக்கண்ட தாய்மாரைப்போலே குளிர்ந்தமுகத்தையுடைய மதிமுகமடந்தையர் வந்தெதிர்கொள்ள, பெருந்தெருவாலேயுள்ளேபுக்கு, திவ்யாவரண பதஸஹஸ்ராவ்ருதமான செம்பொன்செய் கோயிலைக்கிட்டி, (ஸ்ரீவைகுண்டாய திவ்யவிமாநாயநம:) என்று தெண்

---

* களகளம் - பேரொலி.

டனிட்டு, ஒருபாட்டம் மழை விழுந்தாற்போலே தன்னுடைய வரவாலே தளிர்த்துச் * செருந்தியிலேயும் மரமுந் தெரியாதபடி வஹுவிதமான நிறத்தையும் கந்தத்தையுமுடைய அப்ராக்ருத புஷ்பங்களாலே நெருங்கித் தேன் வெள்ளமிடுகிற கற்பகச்சோலைகளாலும் நாநாவிதமான பூக்களாலும் ரத்நங்களாலுஞ் சமைந்த லீலாமண்டபங்களாலும், அபூர்வவிஸ்மய ஜநகங்களான க்ரீடாசைலங்களாலும், ஸ்ரீவைகுண்டநாதனுக்கும் பெரியபிராட்டியார்க்கும் லீலாபரிகரங்களாய், செவிகளுடைய மயிர்க்கூச்சிடும்படி இனிய பேச்சுக்களையுடைய சுக சாரிகா மயூர கோகிலாதிகளாலும் ஆகுலங்களாய், மாணிக்கம் முத்து பவளந் தொடக்கமானவற்றாலே சமைந்தபடிகளையுடைத்தாய், நித்யமுக்தர்களுடைய திருவுள்ளங்கள்போலே குளிர்ந்து, தெளிந்து, அம்ருதரஸங்களான திவ்யஜலங்களாலே நிறைந்து, நாநாவித பக்ஷிஸங்கஸமாகீர்ணமாய்த் துளும்பி யெங்குஞ்சொரிகிற தேன்வெள்ளத்தையுடைத்தாய், (மாதர்கள்வாண்முகமுங் கண்ணுமேந்தும்) என்கிறபடியே மதிமுக மடந்தையருடைய திருமுகங்களுக்குந் திருக்கண்களுக்கும் போலியான தாமரை செங்கழுநீர் தொடக்கமான அப்ராக்ருத புஷ்பங்களையுடைய ஓதநெடுந்தடங்களாலும், நாநாவிதமான பூம்படுக்கைகளாலும், பரிமளம் போலே பூக்களிலே படிந்து மதுவெள்ளத்திலேமுழுகிப் பாட்டுக்களாலே அநுமேயங்களான தெய்வவண்டுகளினுடைய திவ்யகீதத்தாலும் கிட்டினரைப் பிச்சேற்றுகிற திவ்யோத்யாந ஶதஸஹஸ்ரங்களாலும் சூழப்பட்டு, நாநா ரத்நங்களாலே சமைந்த ஸ்தலங்களையுமுடைத்தாய், அநேகமாயிரம் ரத்ந ஸ்தம்பங்களாலே யலங்க்ருதமாய், உபயவிபூதியிலுள்ளாரு மொருமூலையிலே யடங்கும்படி யிடமுடைத்தாய், தாமரை, செங்கழுநீர், சந்தநம், அகில், கர்ப்பூரந் தொடக்கமானவற்றை யளைந்துவருகிற மந்தமாருதனாலே ஸேவ்யமாநமாய், நிரதிஶயாநந்தமயமான திருமாமணிமண்டபத்தைச் சென்றுகிட்டி, (ஆநந்தமயாய மண்டபரத்நாயநம:) என்று தெண்டனிட்டு, அப்பால் முதலாய்நின்ற அளப்பரிய வாரமுதை யெப்போது மொக்கப் பருகுகையாலே † இளகிப்பதித்து வைகுந்தக்குட்டனோடு ஸாம்யாபந்நராய் அநுபவஜநிதமான ஹர்ஷப்ரகர்ஷத்துக்குப் போக்குவிட்டு ஸாமகாநம் பண்ணுவார், (செஞ்சொற்கவிகா ளுயிர்காத்தாட்செய்மின்) என்று இன்பவாற்றிலே ஶீலமென்னுமாகிற ஆழங்காலிலே ‡ கொண்டைக்கோல் நாட்டுவோர், ஸ்வாசார்யனைக் குறித்து (இழைகொள்சோதிச் செந்தாமரைக்கட்பிரா னிருந்தமைகாட்டினீர்) என்பார், (உற்றேனுகந்து பணிசெய்துன்பாதம் - பெற்றேனீதே யின்னம் வேண்டுவதெந்தாய்) என்பார், (என்முடிவுகாணாதே யென்னுள்கலந்தானைச் - சொன்முடிவுகாணேனான் சொல்லுவதென்சொல்லீர்) என்பார், (நமோநாராயணாயவென்பார்) என்கிறபடியே ஓவாதுரைக்கு முரையான பெரியதிருமந்த்ரத்தைச் சொல்லித் தோள்களை யாரத்தழுவி (என்னுயிரை யறவிலை செய்தனன்சோதி) என்று ஆத்மஸமர்ப்பணம் பண்ணுவார், உருகு

* செருந்தி - ஸுராபுன்னை. † இளகிப்பதிக்கை - இளமைவர்திக்கை.

‡ கொண்டைக்கோல் - நிலவராயிருப்பார் ஆறுகள் மடுக்களிலே பள்ளங்களுக்கடையாளமாக நடுகிறகோல்.

மாலிலே ஆழ்வார்பட்டதுபட்டு, (வல்வினையேனை யீர்கின்ற குணங்களையுடையாய்) என்று அம்புபாடரைப்போலே யுழைப்பார், (மேலைத்தொண்டுகளித்து) என்கிறபடியே தாஸ்யரஸம் தலைமண்டையிட்டு (நமஇத்யேவவாதிந:) (நமஸ் ஸர்வேப்ய: ப்ரயுஞ்ஜதே) என்கிறபடியே அந்திதொழுஞ்சொல்லைச் சொல்லுவாராய்க்கொண்டு, இப்படி ப்ரளயஜலதியிலே யலைவாரைப்போலே ஆநந்தஸாகரத்திலே யலைந்து, நித்யமுக்தர் சொல்லுகிற செவிக்கினிய செஞ்சொற்களாலே, வெஞ்சொலாளர்களுடைய கடுஞ்சொல்லைக்கேட்ட விழவுதீரச் செவிக்கிரையிட்டுக்கொண்டுபோய், திவ்யாஸ்தாநத்தைக்கிட்டி, அப்பேரோலக்கத்தின் நடுவே, தந்தாந்திருமுடிகளிலே திவ்யாயுதங்களை தரித்துக்கொண்டு கூப்பினகைகளுக் தாங்களுமாயிருக்கிற அஸ்த்ரஶஸ்த்ராதிபரான திவ்யபுருஷர்களும், தம்முடைய ஸங்கல்பத்தாலே ஸகலஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப்பண்ணக்கடவ ஸேநைமுதலியார் தொடக்கமான திவ்யபுருஷர்களும் வரிசையடைவே ஸேவித்திருக்க—

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## த்ருதீயப்ரகரணம்.

உபயவிபூதியும் தொழிலாக வகுப்புண்டு, ஸர்வாஶ்சர்யமயமான கோப்புடைய சீரியசிங்காதனத்திலே பன்னிரண்டிதழாய், நாநாஶக்தி மயமான திவ்ய கமலமாய், அதில் திவ்யகர்ணிகையிலே புஷ்ப ஸஞ்சயவிசித்ரமான திவ்யயோக பர்யங்கமாய், அதின்மேலே அநேகமாயிரம் சந்த்ரர்களை யுருக்கிவார்த்தாற்போலே குளிர்ந்த புகரை யுடைத்தான திருமேனியையுடையனாய் கல்யாண குணங்களுக் கந்தமில்லாமையாலும், ஸர்வவித கைங்கர்யத்திலு மபிக்ருதனாய் கைங்கர்யபரர்க்கெல்லாம் * படிமாவாயிருக்கையாலும், அனந்தனென்றும் ஶேஷனென்றும் திருநாமத்தையுடையனாய், பஹுதேவதநுபவத்துக்குப் போக்குவீடாகப் பலவாய்த்தலைகளையுமுடையனாய், விஜ்ஞாநபலங்களுக்கும் ஶைத்ய மார்தவ ஸௌரப்யாதி குணங்களுக்கும் கொள்கலமான திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே, ரஜதகிரிஶிகரத்திலே அநேகமாயிரமாதித்யர்கள் சேரவுதித்தாற்போலே யிருக்கிற ஹேமமண்டலங்களில் ஜ்யோதிர்மண்டலத்தின் நடுவே, (பதிம்விஶ்வஸ்ய) என்கிறவனுக்கும் தன்பூர்த்தியாலே † பொறிபுறந்தடவ வேண்டும்படியான பூர்த்தியையும், (வாசஞ்செய்பூங்குழலாள்) என்கிறபடியே நாற்றத்துக்கும் நாற்றங் கட்டலாம்படியான பூங்குழலையும், புண்டரீகாக்ஷனையுங்கூடக் குடநீர் வார்ப்பித்துக்கொண்டு ஒருமூலையிலே குமிழிநீருட்டும்படியான வடிக்கோலவாணெடுங்கண்களையும், ஹேமத்துக் கேகாந்தமான ஒப்பனைபோலே பால்யமத்யத்திலே ‡ மெய்க்காட்டுகிற யௌவநத்தையும், ÷ பேசில் பிசகும்

---

* படிமா - உபமாநம். † பொறிபுறந்தடவுகை - பூர்த்திசெய்கை.

‡ மெய்க்காட்டுகை - எண்ணிக்கை கொடுக்கை.

÷ பேசில் பிசகுகை - வார்த்தைசொல்லில் ஸௌகுமார்யத்தாலே அந்யதாவாகை.

படியான ஸௌகுமார்யத்தையும், (பித்தர்பனிமலர்மேற்பாவைக்கு) என்கிற படியே அல்லாதவர்கள் பக்கல்போலே நூல்பிடித்துப் பரிமாறவொட்டாத ஹோமீயதா ப்ரகர்ஷத்தையும், ஹோமோபேக்ஷிவாத கேளியிலே ஹமவக்ஷி வைஶ்வரூப்யத்தைச் * சிருங்கிக்கும்படியான பெருமையையுமுடையவளாய், ஷிவ்யபரிஜநங்களை தத்தஷிவஸ்யாநுரூபமாக ஷிவ்யபரிசர்யையிலே நியோஹியா நிற்பாளாய், ஸர்வாத்மாக்களுக்கு மென்றுமொக்கச் சார்வாய், ஶ்ரீலரூபகுண விலாஸாஷிகளாலே (உனக்கேற்கும்) என்னும்படியிருக்கிற ஒசிந்த வொண் மலராளான பெரிய பிராட்டியார் வல † வட்டத்திலே யெழுந்தருளியிருக்க, அவளிலுங் காட்டில் விஞ்சின க்ஷமாஷியாஷிகுணங்களையும், நாவால்தொ கைக்க வொண்ணாத அழகையுமுடையராய், அவளுக்கு நிழல்போல்வன ரான மற்றையிரண்டு நாய்ச்சிமாரு மிடவட்டத்திலே ஸேவித்திருக்க, இவர் களுக்கு நடுவே மூன்று மின்கொடிகளோடேகூடி, தாமரை பூத்ததொரு காளமேவும் வெள்ளிமலையைக் ‡ கினியப்படிந் திருக்குமாபோலே (முடிச் சோதியா யுனது முகச்சோதிமலர்ந்ததுவோ) என்கிறபடியே திருமுவம ண்டலத்தி னொளிவெள்ளமானது மேனோக்கிக் கொழித்தாற்போலேயாய், உஹ்யவிஹ்ஹிதிக்கும் நிர்வாஹகனென்னு மிடத்தைக் ¶ கோட்சொல்லித் தரக்கடவதாய், தன்புகராலே அல்லாதபுகரையடைய முட்டாக்கிடுகிற விண் முதனயகனீண்முடி) என்கிற திருவஹிஷேகத்தையும், கண்டார் கண்ணும் நெஞ்சுமிருளும்படி யிருண்டு சுழன்று, அஷ்டமீசந்ஷ்ரனிலே அம்ருதயாரை விழுந்தாற்போலே திருநெற்றியிலே சாத்தின திருநாமத்தை மறைப்பது காட்டுவதாய்க்கொண்டு அசைந்து விழுகின்ற பூந்தண்டுழாய் விரைநாறு கிற நீலப்பனியிருங் குழல்களையும், ஸௌகுமார்யாதிஶயத்தாலே குறுவேர் பரம்பினாற்போலேயாய், நயந்தார்கட்கு நச்சிலையான திருநெற்றியையும், அலர்ந்து குளிர்ந்திருக்கிற இரண்டு தாமரைப்பூக்களை மஷுத்தாலே யமுக்கி யாடுகிற இரண்டு வண்டொழுங்குபோலேயிருக்கிற தன்கைச் சார்ங்கமதுவே போ லழகிய திருப்புருவங்களையும், கலந்துபிரிந்தவர்களுக்கு இணைக்கூற் றங்களாய், அல்லாதவர்களைத் தாயாயளிக்கக்கடவதாய், சேதநர்பக்கல் வாத் ஸல்யாதிஶயத்தாலும், செய்யாளான பிராட்டியை யெப்போதுமொக்கக் கடாக்ஷிக்கையாலும், உஹ்யவிஹ்ஹித்யைஶ்வர்யத்தாலும் சிவந்து, (பதிம்விஶ் வஸ்ய) என்கிற ப்ரமாணம் வேண்டாதபடி (அனைத்துலகுமுடையவர விந்தலோசனனை) என்கிறபடியே ஸர்வேஶ்வரத்வசிஹ்நமாய் வேறொரழ கில் செல்ல வொட்டாதே தனக்கே யற்றுத்திரும்படி பண்ணி (தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவுந்தலைமகனை) என்கிறபடியே த்ரிபாஷிவிஹூ தியையும் ÷ எழுத்து வாங்கிக்கூப்பிடும்படி பண்ணக்கடவதாய் குளிர்ந்து செவ்விபெற்று, பெரியபெருமாள் திருக்கண்கள்போலே கரியவாகிப்புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி, இலங்கொளிசேரரவிந்தம் போன்றுநீண்டு, மியோவயியஸ்பர்யஸ்பரிதஶவரிஷிஞ்ஷ லளிதங்களாய், அழகோலக்கங்

* சிறும்புதல் - ஸங்கோசிக்கை. † அட்டம் - பக்கம். ‡ கினிய - மூட.

¶ கோட்சொல்லித்தருகை - காட்டிக்கொடுக்கை.

÷ எழுத்துவாங்குகை - ஸ்வாமிபேரை மார்விலே யெழுதிக்கொள்கை.

கிளம்பினல் அடையாளங்களான தூதுசெய்கண்களையும், (மாட்டுயர்கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ வறியேன்) என்று நித்யஸங்ஷேஹஜநகமான கோலநீள் கொடிமூக்கையும், அதினுடைய பல்லவோல்லாஸம்போலேயிருக்கிற திவ்யகபோலங்களையும், அதினுடைய நவகுஸுமம்போலேயாய், (பன்னிலாமுத்தந்தவழ்கதிர் முறுவல்செய்து) என்கிறபடியே பூர்ணசந்த்ரன் முழுநிலாவைச் சொரிந்தாற்போலே திருமுத்தினொளியை ப்ரவஹக்கிற ஸ்மிதத்தையும், கோலந்திரள் பவளக் கொழுந்துண்டம்போலேயாய், பேச்சில் செல்லவொட்டாதே வாய்கரையிலே நீச்சாம்படி பண்ணி, நட்டாற்றிலே தெப்பத்தைப் பறிப்பாரைப்போலே அநுபவபரிகரமான சிந்தையைக் கவர்ந்து, கூப்பிடும்படி பண்ணக்கடவதாய், கள்வப்பணி மொழிகளுக்கு ஆகரமான திருவதரத்தையும், (இலகுவிலகுமகரகுண்டலத்தன்) என்கிறபடியே ப்ரீத்யதிசயத்தாலே ஶிரகம்பநம் பண்ணுகையாலே யசைந்து, ஸ்கந்தங்களிலேமுட்டி தேஜஸ்ஸு அலையெறிந்து, லாவண்யஸாகரத்திலே யேறித்துள்ளுகிற மின்னுமாமணி மகரகுண்டலங்களையும், காந்தி ஶைத்ய மார்தவ ஸௌரபியாதி குணங்களாலே, (சுற்றுமொளிவட்டஞ்சூழ்ந்து) என்கிறபடியே, ஸகலகலாபூர்ணமாய் ஸர்வாஹ்லாதகரமாய் மறுக்கழற்றின சந்த்ரமண்டலத்தையும் அப்போதலர்ந்த செந்தாமரைப் பூவையும் தோற்பிக்கக்கடவதாய், கிட்டினாரைப்பிச்சேற்றி, மையலேற்றி மயக்கும் மாயமந்திரமான கோளிழைவாண்முகத்தையும், நாய்ச்சிமாருடைய ஹஸ்தாபரணங்களாலே முத்ரிதமாய், சக்ரமுக தருண க்ரீவா கம்பு ப்ரதிமமான திருக்கழுத்தையும், நாய்ச்சிமாருடைய திருச்செவிப்பூக்களாலும் கர்ணபூஷணங்களாலும், விகஸிதமான திருக்குழற் கற்றையாலுமுண்டான விமர்த்தத்தாலே (வீதயாஶீஶோபிதம்) என்கிறபடியே அலங்க்ருதங்களாய், இரண் * டட்டத்திலும் மரதககிரியைக்கடைந்து மடுத்தாற்போலே திண்ணியவாய், † கணையத்துக்குள்ளே யிருப்பாரைப்போலே தன்னையண்டைகொள்ளுகையாலே, ஸம்ஸாரத்திலே யிருக்கச்செய்தேயும் நிர்பரனும்படிபண்ணி, (அலம்புரிந்த) என்கிறபடியே தனக்கு உபயவிபூதியையும் வழங்கி, திவ்யாஸ்த்ர புஷ்பிதங்களாயிருக்கிற கற்பகக்காவன நற்பலதோள்களையும், பெரிய பிராட்டியாருக்குக் ‡ கோயிற்கட்டணமாய், நித்யாநுபவம் பண்ணுநிற்கச்செய்தேயும் (இறையு மகலகில்லேன்) என்னும்படி பிச்சேற்றக்கடவதாய், அவள் திருவடிகளிற்சாத்தின செம்பஞ்சுக்குழம்பாலும், ஸ்ரீபூமிப்பிராட்டியாருடைய கொங்கைமேற் குங்குமத்தின் குழம்பாலு மலங்க்ருதமாய், வநமாலா விராஜிதமாய், பெரியபிராட்டியார்க்கு ஹிரண்யப்ராகாரமான கோலமாமணியாரமும் முத்துத்தாமமும் ஸ்ரீகௌஸ்துபந் தொடக்கமான குருமாமணிப்பூண் குலாவித்திகழுகிற அழகிய திருமார்பையும், காளமேகத்திலே மின்கொடி படர்ந்தாற்போலே திருமேனிக்கு பரபாகரஸாவஹமாய், அழகுவெள்ளத்துக்கு அணைகட்டினாற்போலே யிருக்கிற வெண்புரி நூலையும், (உள்ளத்துள் நின்றுலாகின்றதே) என்கிறபடியே நித்தமுக்தருடைய திருவுள்ளங்

* அட்டம் - பக்கம். † கணையம் - கோட்டை.

‡ கோயிற்கட்டணம் - அந்த:புரம்.

களிலே அழகுசெண்டேறுகிற திருவுதரபந்தத்தையும், ஸௌந்தர்யஸாகர மிட்டளப்பட்டுச் சுழித்தாற்போலே நெஞ்சையும் கண்ணையும் சுழியாறு படுத்துகிற திருவுந்தியையும், ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் திருவாழியையும் சந்த்ராதித்யர்களாகக்கருதி, (ஆங்கு மலருங் குவியும்) என்கிறபடியே அலருவது குவிவதாய், விவிதவிசித்ரமான நாபீபத்மத்தையும், துடிசேரிடையையும், ஸந்த்யாராகரஞ்ஜிதமான ஆகாசம்போலேயிருக்கிற திருவரைக்கு பரபாகரஸாவஹமாய், திருவரைபூத்தாற்போலே யிருக்கிற அந்திபோல் நிறத்தாடையையும், ரம்பாஸ்தம்பாதி ப்ரதீபமான திருத்தொடைகளையும், தாமரைநாளம் போலே கண்டகிதங்களான திருக்கணைக்கால்களையும், சங்கவரதாங்க கல்பகத்வஜாரவிந்தாங்குச வஜ்ராலாஞ்சநமாய், நாய்ச்சிமாருங்கூடக் கூசித்தொட வேண்டும்படி அத்யந்தம் ம்ருதுக்களாய், (தேனேமலரும்) என்கிறபடியே நிரதிசயபோக்யங்களான துயரறு சுடரடிகளையும், லாவண்யஸாகரத்தினுடைய திரையொழுங்குபோலே யிருக்கிற திருவிரல்களையும் அதிலே அநேக சந்த்ரர்கள் தோற்றினாற்போலேயிருக்கிற திவ்ய நகங்களையும், வயிரவுருக்காய், ஆண்களையும் பெண்ணுடையுடுத்தி, பந்துக்களோடுறவறுத்து நாட்டைப் பகைவிளைத்து, சேணுயர்வானத் திருக்குந் தேவபிரான்றன்னை (குதிரியாய் மடலூர்தும்) என்கிறபடியே கண்டபோதே கையும் மடலுமாய்க்கொண்டு புறப்படும்படி பண்ணக்கடவதாய், கண்டபோதே யெல்லாவிடாயுங் கெட்டு, கண்டகண்கள் மயிரெறியும்படி யிருண்டுகுளிர்ந்து, ஸாம்யாபந்நரான ஸூரிகளுடைய நெஞ்சையும் கண்ணையும் * படையறுத்து, (இன்னுரென்றறியேன்) (பண்டிவரைக்கண்டறிவ தெவ்வூரில்) என்று மதிமயங்கும்படி பண்ணக்கடவதாய், ஸகலஜந ஜீவாதுவாய், வைதீத்ய விதீயாதிருஹமாய், மநோரதா நாமபூமியாய், ச்ருத்யந்தவாக்ய ஸர்வஸ்வமாய், மாணிக்கச்செப்பிலே பொன்னையிட்டு வைத்தாற்போலேயிருக்கப் பொன்னுருவான திவ்யாத்மஸ்வரூபத்துக்கு ப்ரகாசகமாய், ஒன்றுக்கொன்றுதள்ளி † இட்டளத்தில் வெள்ளம்போலே சுழித்துநின்று, முழாவுகிற ஆயுதாபரணங்களுடைய சோதிவெள்ளத்தினுள்ளே உந்நேயமான கரியகோலத்திருவுருவையும், நித்யஸூரிகளடுத்தடுத்துப் பார்க்கிறபார்வையுங்கூடப் பொறுதென்னும்படியான ஸௌகுமார்யத்தையும், பெரியபிராட்டியாருடைய வடிக்கோல வாணெடுங்கண்களுக்கு நித்யலக்ஷ்யமாகையாலே அரும்பென்றும் மலரென்றும் சொல்லலாம்படியான செவ்வியையும் ‡ கிண்ணகத்துக்குப் படவிட்டாற்போலேயிருக்கிற மெய்யமர்பல்கலன்களையும், நித்யஸூரிகளைக் கொள்ளையூட்டிக்கொண்டு, விடாயர்முகத்திலே நீர்வெள்ளத்தைத் திறந்துவிட்டாற்போலே ஸகலச்ரமங்களுமாறும்படி குளிர்ந்து, தெளிந்து கநககிரியையுருக்கிக் கடலிலேவிளாசினாற்போலே செம்பொனே திகழுகிற ச்யாமமான திருமேனி யொளியாலே (விச்வமாப்யாயயந்) என்கிறபடியே ஸகல ஜகத்தையும் ஆப்யாயநம்பண்ணி, (தெருவெல்லாங்காவிகமழ்) என்கிறபடியே கண்டவிடமெங்கும் புறப்பட்டு ப்ரவஹிக்கிற திருமேனியில் பரிம

---

* படையறுத்து - வசீகரித்து. † இட்டளம் - நெருங்கின விடம்.
‡ கிண்ணகம் - ப்ரவாஹம்.

ளத்தாலே ஸ்ரீவைகுண்டத்தை யெங்குமொக்கப்பரிமளிதமாக்கி, ஆலங்கட்டிபை விட்டெறிந்தாற்போலே உடம்பெங்கும் வவ்வலிடும்படி குளிர்ந்து அரைக்ஷணமாறில் நித்யமுக்தரை ஒரு நீர்ச்சாவியாக்குகிற கடாக்ஷாம்ருத வ்ருஷ்டிகளாலே திவ்யமோஷ்டியைத் தளிரும் முறியுமாக்கி, ஸௌந்தர்யமாதுர்யாதிகுணங்களாலே பூஷிதங்களாய் அதிமனோஹர திவ்யபாவ ஸங்களாய், பூவலர்ந்தாற்போலே யிருக்கிற திருமுகத்தை யெங்குமொக்கச் செவ்விபெறுத்துவனவான லீலாபங்களாலே ஸூரிகளுடைய ஹ்ருதயங்களை யுகப்பியாநின்றுகொண்டு, உபயவிபூதியையும் ஆஸாப்வலத்தாலே ஜயித்து,—

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

## சதுர்யப்ரகரணம்.

ஏழுலகுந் தனிக்கோல்செல்ல, குழுமித்தேவர் குழாங்கள் கைதொழ வெழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனை (காண்பதெஞ்ஞான்று கொலோ) (காட்டீரானீர்) என்கிற இழவுதீர, (த்ருஷ்டஏவஹிஶோகம்) என்று இவன் மநோரதித்துக்கொண்டு, சென்றபடியே கண்ணாரக்கண்டு, ஸமஸ்தபரிவாராய ஸ்ரீமதேநாராயணாயநம꞉) என்று ஹர்ஷப்ரவசனாய் விழுந்தெழுந்திருந்து, பெரியப்ரீதியோடேசென்று, பாதபீடத்திலே யடியிட்டு திவ்யஸிம்ஹாஸநத்திலேயேற; அவனும் இவனைசகண்டு, (அவாக்யநாதர꞉) என்கிற ஆகாரங்குலைந்து, சந்த்ரனைக்கண்ட கடல்போலே விக்ருதனாய், தன்னைப்பிரிந்து நெடுநாள் தரைக்கிடைகிடந்த இழவுதீர, (அங்கேஹரதமாரோப்ய) என்கிறபடியே மடியிலேவைத்து, ஸ்ரீஹரதாழ்வானையும் அக்ரூரனையு மணைத்தாற்போலே அணைத்து ஹக்த்யதிஶயத்தாலே (கோஸி) என்றபடியே (நீயார்) என்று கேட்க; (அஹம்ப்ரஹ்மாஸ்மி) என்று நான் ராஜகுமாரனென்ன, நீ யித்தனைகாலமும் செய்ததென்னென்றுகேட்க, (சாந்தேந்துமென்முலையார் தடந்தோள் புணரின்ப வெள்ளத்தாழ்ந்தேன்) என்ன, நீ அத்தால் பெற்ற ஃபலமேதென்றுகேட்க, (அருநரகத்தழுந்தும் பயன் படைத்தேன்) என்ன, பின்பு, நீசெய்ததென்னென்ன, (போந்தேன்) என்ன, நீபோந்த விரகென்னென்றுகேட்க, (புண்ணியனே) என்ன, நீயதினின்றும் போந்து செய்ததென்னென்ன (உன்னையெய்தினேன்) என்ன, நம்மைக்கிட்டினவிடத்தில் நீ பெற்ற ப்ரயோஜநமென்னென்ன, (என்தீவினைகள்தீர்ந்தேன்) என்ன, செய்தது வாய்த்துச் செல்வனாய் நலமந்தமில்லதோர் நாட்டிலே வர்த்திக்கப்பெறாதே, (இல்லைகண்டீரின்பம்) என்கிற கொடுவுலகத்திலே நெடுங்கால மலமர்ந்தாயே, பலமுந்து சீரிற்படியாதே, பன்மாமாயப்பல்பிறவியிலேபடிந்து நோவுபட்டாயே, ஈறிலின்பத்திருவெள்ளத்தையிழந்து, தடந்தோள்புணரின்ப வெள்ளத்திலே ஆழ்ந்து, நித்யஸம்ஸாரியானாயே, அதனைப் பிழையெனக்கருதி நம்மைப்பற்றி நம்மைக்காணவேணுமென் றாசைப்பட்டபோதேவந்து முகங்காட்டப் பெற்றிலோமே,

(ஆகாசத்தைநோக்கி யழுவன் தொழுவன்) என்கிறபடியே நாமிருந்த தேஶ
த்தை நோக்கி அழுவது தொழுவதாய், (கூவிக்கொள்ளுங் காலமின்னங்
குறுகாதோ) (எந்நாள் யானுன்னையினிவந்துகூடுவன்) என்பதாய்க்கொண்டு
நோவுபடும்படி தாழ்ந்தோமே, (துன்பக்கடல்புக்கு வைகுந்த னென்ப
தோர் தோணிபெறு துழல்கின்றேன்) என்று க்லேஶித்த நீ அதினின்றுங்
கரையேறி, (நின்மாதாள்சேர்ந்து நிற்பதெஞ்ஞான்றுகொலோ) என்கிற இழ
வுதீர நம்மைக்கிட்டப்பெற்றாயே, (உள்ளுளாவியுலர்ந்துலர்ந்து) என்கிற
தாபமாறக் கூடியிருந்து குளிரப்பெற்றாயே, நம்முடைய ஸ்ருஷ்டியாதி
வ்யாபாரங்கள் ஸபலமாயிற்றதே, (ப்ரணஷ்டஸ்ய யதாலாப:) என்றபடியே
நமக்குக்கிடையாதது கிடைத்ததே, உன்னுடைய வரவாலே யித்தேஶம்ஸநா
தமாயிற்றதே, இத்தேஶத்திக்கு நாயகரத்நம்போலே யிருக்க நீகிட்டி ஔஜ்
வல்யத்தை யுண்டாக்கினாயே, (நடந்தகால்கள் நொந்தவோ) என்று (மநோ
ஹரை ஶ்சாடுஶதைரேநம்) என்கிறபடியே ஏத்தாளிகளைப்போலே
யேத்தி, ஓவ்மேவஸ்வநத்தாலே மயில்போலே ஆலிக்கும்படிபண்ணி, நோ
யெல்லாம் பெய்ததோ ராக்கையிலே யகப்பட்டு, நெடுங்காலம் நோவுபட்டு,
* மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணனைக்கிட்டி, உள்ளநோய்களெல்லாந்
துரந்து, திருவருள் மூழ்கின இவனை, நோய்விட்டுக் குளித்த புத்ரனைப் பிதா
பார்த்துக்கொண் டிருக்குமாபோலேயும் மாயக்கூத்தனுக்குப் பிழைத்த
ஆழ்வாரைப்பார்த்துக்கொண் டிருக்குமாபோலேயும், (லோசநாப்யாம் பிப
ந்நிவ) என்று ஸ்ரீவிபீஷணப்பெருமாளைப் பெருமாள் பார்த்துக்கொண்டி
ருக்குமாபோலேயும், (என்னை நோக்காதொழிவதே) என்கிற இழவுதீரத்
தாமரைக்கண்களால் நோக்கி நெடுநாள்பட்ட விடாயெல்லாம்மாற, ஒருங்கே
மறிந்துகிடந்தலர்ந்த மென்சாற்கமலத் தடம்போலேயிருக்கிற பெருங்கண்
மலர்ப் புண்டரீகங்களை யிவன்பக்கலிலே யொருமடைப்படவைத்து, எங்
கும் பக்கநோக்கறியாதே, (தாயேதந்தையில்) திருமங்கையாழ்வார் மநோ
ரதித்தாற்போலேயும், (ஆராவமுதி) லும் (இன்பம்பயக்க) விலும் நம்மாழ்
வார் மநோரதித்தாற்போலேயும், இவன் மநோரதித்த மநோரதங்களை
யெல்லாம் ஸபலமாக்கி, (உருக்காட்டாதே யொளிப்பாயோ) என்கிற இழ
வுதீர, (விவ்ருணுதே தநூம்ஸ்வாம்) என்கிறபடியே (காசினொளியிற்றிகழும்
வண்ணங்காட்டி) (நல்கியென்னை விடான்) என்கிறபடியே விடாதே, (ஏஷ
ஸர்வஸ்வபூதஸ்து) என்கிறபடியே விட்டுவிட்டணைத்து, (கிந்நுஸ்யாச் சித்
தமோஹோயம்) (மருள்தானீதோ) என்கிறபடியே நிரதிஶய வ்யாமோ
ஹத்தைப் பண்ணி, பெரியபிராட்டியார் திருக்கையிலே காட்டிக்கொடுக்க,
கம்ஸவதாநந்தரம் க்ருஷ்ணனைக்கண்ட தேவகியாரைப்போலே விம்மிப்பாய்
கிற ஸ்தந்யத்தாலே யுடம்பெங்கும் நனையும்படி யணைத்து, உபயவிபூ
தைஶ்வர்யத்தையுங்கொடுக்க, பூவளருந்திருமகளா லருள்பெற்று, மடி
யில் நின்று மிழிந்து போந்து, செய்யவுடையுந் திருமுகமுஞ் செங்கனி
வாயுங் குழலுங்கண்டு) என்கிறபடியே முன்பேபோந்து முன்புத்தையழ
கை யநுபவித்து, கிண்ணகத்தை யெதிர்செறிக்க வொண்ணாதாப்போ

* மருத்துவன் - ஆசார்யன்.

லே நேர்நின்றநுஹவிக்க வொண்ணாமையாலே அட்டத்திலேபோந்து அங்குத்தையழகை யநுஹவித்து, அதுவிட்டுப் பூட்டாவிடில் தரிக்கவொண்ணாமையாலே பின்னே போந்து, பின்புத்தையழகை யநுஹவித்து, (பூர்வாங்ஹ்ஷயிகா பராங்ஹ கலஹம்) என்று அதில் முன்பு தானே நன்றாயிருக்கையாலே திரியவும் முன்னேபோந்து, ஸௌந்தர்ய தரங்ஹதாஸ தரள சித்தவ்ருத்தியாய், உத்தம் ஸிதாஞ்சலியாய், வளையவளையவந்து, (முடூசி வண்டாடிய தண்டுழாயின் மொய்ம்மலர்க்கண்ணியு மேனியுஞ்சாந் - திழிசிய கோல மிருந்தவா றெங்ஙனஞ்சொல்லுகேனோவினல்லா - ரெழுதிய தாமரையன்னகண்ணு மேந்தெழிலாகமுந் தோளும்வாயு - மழகியதாமிவரார்கொலென்ன, அச்சோவொருவரழகியவா) என்று விஸ்மித ஹ்ருதயனாய், (அந்தாமத்தன்பு) (முடிச்சோதி) தொடக்கமானவற்றில் நம்மாழ்வா ரநுஹவித்தாற்போலே தன்னைப்பெற்ற ப்ரீதியால் வந்த செவ்வியை யநுஹவித்து (யத்ராநாந்யத்பஶ்யதி) என்கிறபடியே புறம்பொன்றில் நெஞ்சுசெல்லாதே (ஹாவு ஹாவு ஹாவு மஹமந்ந மஹமந்நம்), (அல்லிமாமலராள் தன்னொடுமடியேன் கண்டுகொண் டல்லல் தீர்ந்தேனே) (ஒண்டொடியான் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் - கண்டசதிர்கண்டொழிந்தே னடைந்தேனுன் திருவடியே, (இசைவித்தென்னை யுன்றாளிணைக்கீ ழிருத்துமம்மானே), (பிறந்துஞ்செத்தும் நின்றிடரும் பேதைமை தீர்ந்தொழிந்தேன்) என்று ப்ரீதிக்குப் போக்குவிட்டு வாயாரப்புகழ; ஸ்ரீவைகுண்டநாதனும் வாணுடைமருங் குளிர் விழிகளாலே கடாக்ஷித்து, ஸஸ்மிதமாக ஸ்நிக்த கம்பீர மதுரமான பேச்சாலே முகப்பேகூவி, (நின்செம்மா பாதபற்புத்தலைசேர்த்து) என்றிவ னபேக்ஷித்தபடியே மலர்மகள் பிடிக்கும் கமலமன்ன குரைகழல்களாலே உத்தமாங்கத்தை யலங்கரித்து, தன்றாளின் கீழ்ச்சேர்த்து, நித்யகைங்கர்யத்திலே நியோகிக்க; தொண்டேசெய்தென்றுந் தொழுது வழியொழுகப்பெற்று, (வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம்) என்கிற அபிநிவேசாதிசயத்தாலே நாநாதேஹங்களைப் பரிக்ரஹித்து, அசேஷசேஷ வ்ருத்திகளிலுமந்வயித்து, அஸ்தாநேரக்ஷாவ்யஸநிகளான நித்யஸூரிகளோடே கூடச் சூழ்ந்திருந்து மங்களாசாஸநம்பண்ணி, (சூழ்பட்டோடுஞ் சுடர்ச்சோதி வெள்ளத்தின்புற்றிருந்து) என்கிறபடியே அம்ருத ஸாகராந்தர் நிமக்நஸர்வாவயவனாய்க்கொண்டு யாவத்காலமிருக்கும்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

அர்சிராதி முற்றிற்று.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ப்ரமேயசேகரம்.

நிர்ஹேதுக ஹகவத்கடாக்ஷ மடியாக அஜ்ஞாத ஸுக்ருதமுண்டாம்; அதடியாக அத்வேஷமுண்டாம்; அதடியாக ஹகவத்ஹாகவத விஷயங்களில் ஆபிமுக்யமுண்டாம்; ஆபிமுக்ய முண்டானவாறே த்யாஜ்யோபாதேய விஹாகஜ்ஞாநத்தில் கௌதுகமுண்டாம்; அத்தாலே ஸாத்விக ஸம்ஹாஷண

முண்டாம்; அத்தாலே ஸதாசார்ய ஸமாஶ்ரயணமுண்டாம்; அதுண்டான
வாறே த்யாஜ்யோபாதேய நிஶ்சயமுண்டாம்; அதுண்டானவாறே ப்ராப்
யாந்தரத்தில் வைராக்யமும், பரமப்ராப்யத்தில் அபிநிவேஶமு முண்டாம்;
அநந்தரம், ப்ராப்யாந்தர நிவ்ருத்திக்கும், பரமப்ராப்ய ஸித்திக்குமடி
யான ஸித்தோபாய ஸ்வீகாரமுண்டாம்; அநந்தரம், பகவத்ப்ராப்தியிலே
த்வரையுண்டாம்; அநந்தரம், (அஹம்ஸ்மராமி) என்கிறபடியே - ஈஶ்வரஸ்
ம்ருதிக்கு விஷயபூதனும்; அநந்தரம் பூதஸூக்ஷ்மஶரீரபரிஷ்வங்கமுண்
டாம்; அநந்தரம், பரமாத்மஸம்ஸர்க முண்டாம்; பின்பு, ஹார்தாநுக்ரஹத்
தாலே மார்க விஶேஷப்ரகாஶமுண்டாம்; பின்பு ஹ்ருதயகுஹாநிர்கம
நமுண்டாம்; அநந்தரம், மூர்தந்யநாடீ நிஷ்க்ரமணமுண்டாம்; அநந்தரம்,
அர்சிராதிமார்க கமநமுண்டாம்; அநந்தரம், ஆதிவாஹிக ஸத்கார முண்
டாம்; அநந்தரம், ஆவரணாதிக்ரமண முண்டாம்; அநந்தரம், ப்ரக்ருத்யதிலங்
கந முண்டாம்; அநந்தரம், விரஜாஸ்நாநமுண்டாம்; அநந்தரம், ஸூக்ஷ்மஶ
ரீர விஶ்லேஷ முண்டாம்; அநந்தரம், அபஹதபாப்மத்வாதி குணகணப்
ராதுர்பாவ முண்டாம்; அநந்தரம், அமாநவகரஸ்பர்ஶமுண்டாம்; அநந்த
ரம், பகவத் ஸங்கல்ப கல்பிதமான திவ்யதேஹ ப்ராப்தியுண்டாம்; அநந்த
ரம், அகாலகால்ய திவ்யதேஶப்ராப்தியுண்டாம்; அநந்தரம், ஐரம்மத
தடஸ்நாந முண்டாம்; பின்பு, திவ்யாலங்காரமுண்டாம்; பின்பு திவ்யவிமாநா
ரோஹண முண்டாம்; பின்பு, திவ்யகாந்தார ப்ரவேஶமுண்டாம்; அநந்த
ரம், திவ்யாப்ஸரஸ் ஸத்காரமுண்டாம்; அநந்தரம், திவ்யகந்த ப்ரவேஶ
முண்டாம்; அநந்தரம், ப்ரஹ்மகந்த ப்ரவேஶ முண்டாம்; அநந்தரம், அப்
ராக்ருத கோபுர ப்ராப்தியுண்டாம்; அநந்தரம், திவ்யநகர ப்ராப்தி யுண்
டாம்; அநந்தரம், ஸூரிபரிஷத் ப்ரத்யுத்கமந முண்டாம்; அநந்தரம், ராஜ
மார்க கமநமுண்டாம்; அநந்தரம், ப்ரஹ்மதேஜ: ப்ரவேஶ முண்டாம்;
அநந்தரம், திவ்யகோபுர ப்ராப்தியுண்டாம்; அநந்தரம், ப்ரஹ்மவேஶ்ம
ப்ரவேஶ முண்டாம்; அநந்தரம், திவ்யமண்டப ப்ராப்தியுண்டாம்; அநந்த
ரம், திவ்யபாரிஷத் ப்ராப்தியுண்டாம்; அநந்தரம், ஸபத்நீக ஸர்வேஶ்வர
தர்ஶந முண்டாம்; அநந்தரம், ஸ்துதிப்ரணாமாஞ்ஜலிப்ரமுக ஸம்ப்ரமாநு
வர்த்தநமுண்டாம்; அநந்தரம், பரமாத்மஸமீப ப்ராப்தியுண்டாம்; அநந்த
ரம், பாதபீட பர்யங்காரோஹண முண்டாம்; அநந்தரம், பகவதுத்ஸங்க
ஸங்க முண்டாம்; அநந்தரம், ஆலோகநாலாபாதி யநுபவமுண்டாம்; அநந்
தரம், ஆலிங்கநாதியநுபவ முண்டாம்; அநந்தரம், ஸ்வரூபரூபகுணவிக்
ரஹாதியநுபவமுண்டாம்; அநந்தரம், அநுபவஜநித ப்ரீதிப்ரகர்ஷ முண்
டாம்; அநந்தரம், நாநாவித விக்ரஹபரிக்ரஹ முண்டாம்; அநந்தரம், ஸர்
வதேஶஸர்வகால ஸர்வாவஸ்தோசிதமான ஸர்வப்ரகார கைங்கர்ய முண்
டாம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

ப்ரமேயஶேகரம் முற்றிற்று.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ப்ரபந்நபரித்ராணம்

முமுக்ஷுவாய், மோக்ஷார்த்தமாக ஸர்வேஶ்வரனைப்பற்றி யிருக்குமவனுக்கு அநந்யகதித்வமும், ஆகிஞ்சந்யமும்வேணும்.— அநந்யகதித்வமாவது - (களைவாய்துன்பங் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்) என்கிறபடியே - ஸர்வேஶ்வரனையொழிய வேறொருரக்ஷகரில்லை யென்றிருக்கை.— ப்ராதாக்கள், புத்ரர்கள், மாதாபிதாக்கள், ப்ரஹ்ம ருத்ராதிகள் தொடக்கமானவர்கள் ரக்ஷகராகக் குறையென்னென்னில், ப்ராதாக்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம், வாலிபக்கலிலும், ராவணன் பக்கலிலுங் காணலாம். புத்ரர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம், ருத்ரன்பக்கலிலும், கம்ஸன்பக்கலிலுங் காணலாம். மாதாபிதாக்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம், கைகேயிபக்கலிலும், ஹிரண்யன் பக்கலிலுங் காணலாம். மாதாபிதாக்கள், யௌவநவிரோதியென்றுபேக்ஷித்தல், க்ஷாமகாலம்வந்தவாறே ஆள்பார்த்துத் தூற்றிலேபொகடுதல், விலைகூறிவிற்றல், ஆபத்துவந்தவாறே நெகிழநினைத்தல், அர்த்தக்ஷேத்ராதிகளுக்காக எதிரிட்டுக்கொல்லுதல், முடியுமவஸ்தையிலே (சோர்வினால் பொருள்வைத்த துண்டாகில் சொல்லு சொல்லென்று சுற்றுமிருந்து) என்கிறபடியே, ஈஶ்வரனை ஸ்மரித்துக் கரைமரஞ் சேரவொட்டாதபடி யலைத்தல் முடித்தல் செய்யாநிற்பர்கள். ஸ்த்ரீகளுக்கு பர்த்தாக்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம், தர்மபுத்ராதிகள் பக்கலிலும், நளன்பக்கலிலுங் காணலாம்.— இவர்கள் ரக்ஷகரல்லரேயாகிலும், நாட்டார்க்குக் * கண்காட்டியாய்ப் போருகிற சந்த்ராதித்யர்கள் ரக்ஷகராகக்குறையென்னென்னில்; அவர்களும், ஈஶ்வராஜ்ஞைக்கஞ்சி, தாங்கள் நினைத்தபடி ஸஞ்சரிக்கப்பெறாதே, நாழிகைகூறிட்டு, உதிப்பது அஸ்தமிப்பதாய்க்கொண்டுபோருகையாலும், ஹிரண்யராவணாதிகள் கையிலே யகப்பட்டு அவர்களுக் கிழிதொழில் செய்து திரிவார் சிலராகையாலும் ரக்ஷகராகமாட்டார்கள்.— த்ரைலோக்யத்துக்கும் பாலகனான இந்த்ரனும், 'எப்போதோ நம்பதம் நழுவப்புகுகிறது' என்றஞ்சி ஶாபோபஹதனாய், இந்த்ரஜித்தின்கையிலே யகப்பட்டுக் கட்டுண்டு, மஹாபலிபோல்வார்கையிலே ஐஶ்வர்யத்தைப் பறிகொடுத்து, கண்ணுங்கண்ணீருமாய், கழுத்தும் † கப்படமுமாய்க்கொண்டு திரிவானொருவனாகையாலே அவனும் ரக்ஷகனாகமாட்டான்.— ப்ரஹ்மாவும், மதுகைடபர்கள் கையிலேயகப்பட்டு, வேதங்களைப் பறிகொடுத்து, 'கண்ணிழந்தேன், தநமிழந்தேன்' என்று நிலந்துழாவுகையாலும், ருத்ரன்கையிலே தலையறுப்புண்கையாலும் ரக்ஷகனாகமாட்டான்.— ருத்ரனும், ஸகலப்ராணிகளையும் ஸம்ஹரிக்கையே தொழிலாக வுடையனாய், விடாயர் முகத்திலே நெருப்பைச்சொரிந்தாற்போலே யிருக்கத் தழல்நிறவண்ணனாய், தன்னையாஶ்ரயித்தவர்களை 'அறுத்துத்தா பொரித்துத்தா' என்று கொடுந்தொழில்களைச் செய்வித்துக்கொள்ளுகையாலும், தன்னையாஶ்ரயித்தவாணனை, 'தலையில் பூவாடாதே

---

* கண்காட்டியாய்ப்போருகிற - பதார்த்ததர்ஶநஸாதநமான, கண்ணுக்கு விஷயங்களைக்காட்டுகிற வென்றபடி.

† கப்படம் - தைந்யஸூசகபட விஶேஷம்.

நோக்குகிறேன்' என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, தன்னைத்தொழுத கைகளைக் கள்ளிக்காடு சீய்த்தாற்போலே சீய்க்கக்கண்டு, 'உயிருண்டாகில் உப்புமாறியுண்ணலாம்' என்று நெற்றியில் கண்ணைப் புதைத்துக்கொண்டு நழுவினவனாகையாலும், லோகஸ்ரஷ்டாவாய்த் தனக்கு பிதாவான ப்ரஹ்மாவின் தலையைத்திருகி பாதகியாய், * கூறுசெய்தவூரிலே குறும்புசெய்து கையும் † கைத்தளையுமாய்க்கொண்டு திரிவாரைப்போலே, கையும்கபாலமுமாய், திறந்துகிடந்த வாசல்கள் தோறும் புக்குத் தன்னை வெளியிட்டுக்கொண்டு திரிவானொருவனாகையாலும் ரக்ஷகனாகமாட்டான்.—இனி, அர்த்தம் ரக்ஷகமாமோவென்று நிரூபித்தால் கள்ளர்கொள்ளுதல், காமங்கொள்ளுதல், ‡ கோமுற்றவர் கொள்ளுதல், ஜ்ஞாதிகொள்ளுதல், வ்யாதிகொள்ளுதல், பிறரோடே யெதிரிட்டு விஷபக்ஷணம் பண்ணித் தன்னைத்தானே முடித்துக்கொள்ளும்படி பண்ணுதல் செய்கையாலே அர்த்தமும் ரக்ஷகமாகமாட்டாது. ஈஶ்வரன், மாதாபிதாக்கள் கைவிட்ட அவஸ்தையிலும் (பின்னைநின்றடியேனுக்குற்றானாய் வளர்த்தென்னுயிராகி நின்றான்) என்கிறபடியே, தன்னுருக்கெடுத்து வேற்றுருக்கொண்டு தாய்முகங் காட்டியும், இன்சொல்லுச்சொல்லியும், ப்ராதாக்களும் பர்த்தாக்களும் நெகிழ நின்றவன்று தானேறிட்டுக்கொண்டு கழுத்திலே யோலைகட்டித் தூதுபோயும், புருவம் நெரித்த விடத்திலே தேரை நடத்தியும், மார்விலே யம்பேற்றும், சாவாமல் நோக்கியும், செத்தாரை மீட்டும், நாராயணத்வப்ரயுக்தமான உஷரத்தரிப்பாலே அகவாயிலே நின்று ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகையாலே இவனே யெல்லார்க்கும் ரக்ஷகன்.—இனி ஆகிஞ்சந்யமாவது - கர்மஜ்ஞாந பக்திகளிலும், அவற்றுக்கு ஹேதுவான ஆத்மகுணங்களிலு மந்வய மின்றிக்கே, அவற்றுக்கு விபரீதங்களானவற்றாலே தான் பரிபூர்ணனாயிருக்கிற இருப்பையும், தன்னுடைய ஸ்வரூபம் ஸ்வப்ரகாரத்தாலு மீஶ்வரனுக் கத்யந்த பரதந்த்ரமாயிருக்கிற இருப்பையு மநுஸந்தித்து, நங்கார்யத்துக்கு நாங்கடவோ மல்லோ மென்றிருக்கை.—இவையிரண்டையு முடையனாய், ஈஶ்வரனையே யுபாயமாகப் பற்றுகையாலே நிர்பரனாயிருக்கு மவனுக்கு ஶரீராவஸாந காலத்திலே ப்ராப்தியணித்தானவாறே, (நயாமி) என்றருளிச் செய்தபடியே ஈஶ்வரன் தானே ¶ சரக்காளாய்வந்து, அர்ச்சிராதி மார்க்கத்தாலே பரமபதத் தேறக்கொண்டுபோய், நித்யமுக்தரோடே யொருகோவையாக்கி, நித்யகைங்கர்யத்தையும் கொடுத்தருளும்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

ப்ரபந்நபரித்ராணம் முற்றிற்று.

---

* கூறுசெய்கை - கூறினதுசெய்கை. ப்ராந்யாதிகளை விபஜிக்கை. மணியம் பண்ணுகை யென்றபடி.

† கைத்தளை - கைவிலங்கு. ‡ கோமுற்றவர் - ராஜாக்கள்.

¶ சரக்காளாய் - பதார்த்தத்தை யுடையவனாய்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸாரஸங்க்ரஹம்.

அகிலஜகத்திதாநுஶாஸந பரமான வேதத்திலும், வேதோபப்ரும்ஹணார்த்தமாக ப்ரவ்ருத்தங்களான ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதி ஸமஸ்தஶாஸ்த்ரங்களிலும் ப்ரஸித்தமாய், ஸர்வேஶ்வரனுடைய ஸர்வஸ்வம்மாய், நம்மாசார்யர்களுக்கு ஆபத்தநமாயிருந்துள்ள அர்த்தத்வயத்தையும் ப்ரதிபாதிக்கையாலே த்வயமென்று திருநாமத்தையுடைத்தா யிருந்துள்ள வாக்யத்வயம், பத்தர்த்தத்தை ப்ரதிபாதிக்கிறது.

அதாகிறது - (௧). ஸ்ரிய:பதித்வமும், (௨). நாராயணத்வமும், (௩). நாராயணனுடைய ஸர்வலோகஶரண்யமான சரணாரவிந்தயுகளமும், (௪). அதினுடைய ப்ராபகத்வமும், (௫). த்ருஷ்டோசரமாய் சேதநகதமாயிருந்துள்ள ப்ரார்த்தநா கர்ப்பவிஶ்ரம்பமும், (௬). லக்ஷ்மீ தத்வல்லபர்களுடைய நிகிலாத்மகைங்கர்ய ப்ரயோஜநார்த்தமான நித்யஸம்பந்தமும், (௭). கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியான ஈஶ்வரனுடைய நிரதிஶயபோக்யதையையும், (௮). ஸர்வஸ்வாமித்வமும், (௯). நித்யகைங்கர்யமும், (௧௰). கைங்கர்ய ப்ரதிபந்தக நிஶ்ஶேஷ நிவர்ஹணமுமாகிற அர்த்தவிஶேஷங்கள்.

தஶார்த்த விஶேஷப்ரகாஶகமான மந்த்ரவிஶேஷத்தினுடைய விவரணரூபமாய், அபௌருஷேயமாய், உபநிஷத்தா யிருந்துள்ள திருவாய்மொழியில் பத்துப்பத்தாலு மிப்பத்தர்த்தத்தையும், நம்பூர்வாசார்யர்கள் அடைவே சேர்த் தநுஸந்தித்துப் போருவர்கள்.—

அதில் முதற்பத்தால் - (மலர்மகள்விரும்பு நம்மரும்பெறலடிகள்) என்றும், (மலராள்மைந்தனை) என்றும், (திருமகளார் தனிக்கேள்வன்) என்றும், (திருவின்மணாள னென்னுடைச் சூழலுளானே) என்றும், (பூமகளார்தனிக்கேள்வன்) என்றும், (மைந்தனை மலராள்மணவாளனை) என்றும், ஸ்ரிய:பதித்வம் ப்ரதிபாதிதமாயிற்று.—

இரண்டாம்பத்தால் - (எம்பெருமான் நாரணற்கு) என்றும், (எம்பிரானெம்மான் நாராயணனாலே) என்றும், (நாரணன் முழுவேழுலகுக்கும்நாதன்) என்றும், நாராயணத்வம் ப்ரதிபாதிதமாயிற்று.—

மூன்றாம்பத்தால் - (நாண்மலரா மடித்தாமரை) என்றும், (அங்கதிரடியன்) என்றும், (அவன்பாதபங்கயம்) என்றும், (அன்றுதேர்கடவியபெருமான் கனைகழல்) என்றும், (மூவுலகுந்தொழுதேத்துஞ்சீரடியான்) என்றும், நாராயணனுடைய ஸர்வலோகஶரண்யமான சரணாரவிந்தயுகளம் ப்ரதிபாதிதமாயிற்று.—

நாலாம்பத்தால் - ( இலங்கைநக ரம்பெரியுய்த்தவர் ) என்றும், (வல்வினை தீர்க்குங்கண்ணனை) என்றும், ( தொல்வினைதீர ) என்றும், (வெய்ய

---

† இந்தரஹஸ்யம் பூர்ணமாக ஆசார்யஹ்ருதய வ்யாக்யாநத்தி லுதாஹரிக்கப்பட்டிருக்கிறது. (௨ - ப்ரகரணம். ௬௧ - வா) காண்க.

நோய்கள் முழுதும் வியன்ஞாலத்துவீய) என்றும், (மேவிநின்று தொழு வார்வினைபோக) என்றும், (பிறந்துஞ்செத்தும் நின்றிடரும் பேதைமை தீர்ந் தொழிந்தேன்) என்றும், (நோயேமூப்பிறப்பிறப்புப்பிணியே யென்றிவை யொழிய) என்றும், (வேட்கையெல்லாம்விடுத்து - கூட்டரியதிருவடிக்கள் கூட்டினை) என்றும், (அஃதேய்உய்யப்புகுமாறு) என்றும், (உய்வுபாயமற்றின் மைதேறி) என்றும், அநிஷ்டநிவ்ருத்தீஷ்டப்ராப்திகரத்வலக்ஷணமான ப்ரா பகத்வம் ப்ரதிபாதிதமாயிற்று.

(௫). அஞ்சாம்பத்தால் - (தமியேனுக்கருளாய்) என்றும், (ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்) என்றும், (உன்னாலல்லால் யாவராலு மொன்றுங்குறை வேண்டேன்) என்றும், (கழல்களவையே சரணாகக்கொண் ட) என்றும், (நாமங்களாயிரமுடைய நம்பெருமானடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்) என்றும், (நாகணைமிசைநம்பிரான் சரணேச ரண்நமக்கு) என்றும், (நாடொறுமேகசிந்தையனாய்) என்றும், தஜ்ஶேஷவர மாய், சேதநஷ்தமாயிருந்துள்ள ப்ராப்யநாமர்ஹவிஸ்ரம்ஹம் ப்ரதிபாதித மாயிற்று.

(௬). ஆறும்பத்தால் - (திருமாமகளிருந் தாமும்மலிந்திருந்து) என்றும், (அடிமைசெய்வார் திருமாலுக்கு) என்றும், (ஓசிந்தவொண்மலராள் கொழு நன்) என்றும், (என்திருமார்வற்கு) என்றும், (கோலத்திருமாமகளோடுன்னை) என்றும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியான லக்ஷ்மீ தத்வல்லபருடைய நித்யஸம் ஶ்லேஷம் ப்ரதிபாதிதமாயிற்று.

(௭). ஏழாம்பத்தால்-(கன்னலேயமுதே) என்றும், (கொடியேன் பருகின் னமுதே) என்றும், (அலைகடல் கடைந்தவாரமுதே) என்றும், (திருமாலின்சீரி றப்பெதிர்காலம் பருகிலுமார்வனே) என்றும், (இவ்வேழுலகையின்பம்ப யக்க) என்றும், கைங்கர்யப்ரதி ஸம்பந்தியான ஸ்ரீஸ்வரனுடைய நிரதிசய போக்யத்வம் ப்ரதிபாதிதமாயிற்று.

(௮). எட்டாம்பத்தால் - (அடியனேன் பெரியவம்மான்) என்றும், (விண்ணவர்கோன் நங்கள்கோனை) என்றும், (அமர்ந்தநாதனை) என்றும், (மூவு லகாளி) என்றும், (நேர்பட்டநிறை மூவுலகுக்கும் நாயகன்) என்றும், ஸர்வ ஸ்வாமித்வம் ப்ரதிபாதிதமாயிற்று.

(௯). ஒன்பதாம்பத்தால் - (பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத் தாள் திருவருளுங்கொண்டு நின்கோயில்சீய்த்து) என்றும், (நின்தீர்த்தவடி மைக்குற்றேவல்செய்து) என்றும், (தொடர்ந்து குற்றேவல்செய்து) என்றும், (கொடுவினையேனும் பிடிக்க) என்றும், (உறுவதிது வென்றுனக்காட்பட்டு) என்றும், (ஆட்கொள்வானொத்து) என்றும், (நானும் மீளாவடிமைப்பணி செய்யப்புகுந்தேன்) என்றும், நித்யகைங்கர்யம் ப்ரதிபாதிதமாயிற்று.

(௧0). பத்தாம்பத்தால் - (துயர்கெடுங்கடிது) என்றும், (கெடுமிடராய வெல்லாம்) என்றும், (எழுமையுமேதஞ்சாரா) என்றும், (தீரும்நோய்வினைக ளெல்லாம்) என்றும், (இப்பிறப்பறுக்கும்) என்றும், (உன்றன்திருவுள்ளமிடர்

கெடுந்தோறும் நாங்கள் வியக்கவின்புறுதுமெம் பெண்மையாற்றேம்) என்றும், (பிணியொன்றுஞ்சாராப் பிறவிகெடுத்தாளும்) என்றும், (பிறவித்துயர் கடிந்தோம்) என்றும், (விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்) என்றும், (அமராவினைகள்) என்றும், (கடுநரகம்புகலொழித்த) என்றும், (பிறவிகெடுத்தேன்) என்றும், (தடுமாற்றவினைகள் தவிர்த்தான்) என்றும், (அந்திதொழுஞ்சொல்லு) என்றும், (அவாவற்று வீடுபெற்ற) என்றும், கைங்கர்யப்ரதிபந்தக நிஶ்ஶேஷநிவர்ஹணம் ப்ரதிபாதிதமாயிற்று.

இப்படி ஶ்ரிய:பதித்வ ப்ரமுகங்களாய் கைங்கர்யப்ரதிபந்தக நிஶ்ஶேஷநிவர்ஹணபர்யந்தங்களாயிருந்துள்ள உபாதேயார்த்தங்களை ப்ரதிபாதிக்கக்கடவதாயிருந்துள்ள வாக்யத்வயமும், திருவாய்மொழியும் - பகவச்சரணார்த்திகளாய் அநந்யோபாயராயிருக்கும் அதிகாரிகளுக்கு, காலக்ஷேபஹேதுவாகவும், போகஹேதுவாகவும், ஈஶ்வரப்ரீதிஹேதுவாகவும் யாவச்சரீரபாதமநுஸந்தேயம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

ஸாரஸங்க்ரஹம் முற்றிற்று.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

## † ஸம்ஸாரஸாம்ராஜ்யம்.

* துன்பக்கடலாய் * இருள்தருமாஞாலமான ஸம்ஸாரத்துக்கு உள்வாயிலே பஞ்சபூதங்களாலே சமைந்து, (நவத்வாரபுரே) என்கிறபடியே - ஒன்பதுவாசலான படைவீட்டுக்கு உள்வாயிலே (கொடுவினைத்தூறு) என்பதொருதூறாய், புகவழிதெரியுமித்தனையொழியப் புறப்பட வழிதெரியாதிருப்பதொருகாட்டினுள்ளே, * அநந்தக்லேஶபாஜநமான மரத்தையிட்டு, அவித்யையென்கிற தேரைச்சமைத்து, அவஸ்தாஸப்தகங்களென்கிற உருளைகளைச்சேர்த்து, ராகத்வேஷாதிகளாகிற குதிரைகளையணைத்து, குணத்ரயங்களென்கிற திரிக்குரும்பை யுஞ்சலின்மேலே கர்மமென்கிற ஸிம்ஹாஸநத்தையிட்டு, ருசியென்கிற மேல்விரியை விரித்து, (அவஶ்யமநுபோக்தவ்யம்) என்கிறபடியே - அநுபவித்தன்றி மீளவொட்டாதிருக்கிற * உருப்பிணிகளாகிற பார்யாவர்கம் பக்கத்திலிருக்க, அந்தகாரமாகிற விளக்கையேற்றி, அவஸ்துக்களாகிற தாஸவர்கம் - பரதோஷம் பரஹிம்ஸை பராநுவர்த்தநம் தொடக்கமான போகங்களை பூஜிப்பிக்க பூஜித்து, அப்ரகாஶித ஸ்வரூப ஸ்வபாவனான தன்னை வாஸனையென்கிற வீரத்தையிட்டுப்பார்த்து, தாபத்ரயங்களென்கிற விடாய்க்குடையின்கீழே பஞ்சவ்ருத்தி ப்ராணங்களாகிற புரோ

---

† ஸாரார்த்தசதுஷ்டயமென்கிற ரஹஸ்யத்தை (௧௮) ரஹஸ்யத்தில் பரிகணித்திருக்கிறார்கள் சிலர். அது அஸங்கதமென்று தோற்றுகிறது. அம்மாளருளிச்செய்ததாகப்ரஸித்தமிறே ஸாரார்த்தசதுஷ்டயமாகிற ரஹஸ்யம்.

ஹிதர்-ஸம்ஸாரத்துக்கு மூர்த்தாபிஷிக்தனாக்கி, வ்யாதிலாஹபூஜைகள் - கொண்டாட, புண்யபாபங்களாகிற சாமரமிரட்ட, அநேகவித து:க்கபரம்பரைகள் அடுக்கொலியல் பணிமாற, அஹங்கார மமகாரங்களாகிற ஆலவட்டம்பணிமாற, * ஸுகது:க்கவர்ஷிணி சுழற்றிப்பணிமாற, அஸ்ம்ருதி - ஒட்டிவட்டிலெடுக்க, அபிநிவேசம் - களாஞ்சியெடுக்க, விஷயாந்தரருசி-அடைப்பையெடுக்க, பூர்வோத்தராவங்களென்கிற ஆனைகுதிரையோடே வாதபித்தச்லேஷ்மங்களாகிற மந்த்ரிகள் ஸேவிக்க, காமக்ரோத லோப மத மாத்ஸர்யங் துடக்கமான ப்ரதானர்கள் ஸேவிக்க, ஹிம்ஸாபசார ஸாம்வதாபசார அஸூயாபசார நாநாவிதாபசாரமாகிற காலாள்கள் ஸேவிக்க, நித்ராதேவிஜ்யேஷ்டை துடக்கமான பெண்பிள்ளைகள் ஸேவிக்க, ஆசையாகிற பாசக்கயிற்றாலேபிணைத்து, இந்த்ரியங்களாகிற மதகளிறுகள் வலிக்க, காலமாகிறஸாரதிநடத்த, 'தேஹாத்மாபிமாநி வந்தான், ஸ்வதந்த்ரன் வந்தான், அந்யசேஷபூதன் வந்தான்' என்று காளங்கள் சின்னங்கள் கலந்து பணிமாற, (மெல்லியலாக்கைக் கிருமிக்குருவில் மிளிர்தந்தாங்கே செல்லிய செல்கைத்துலகையென்காணும்) என்கிறபடியே - தானும் தன்பரிகரபூதருமாக ஸுகாநுபவம்பண்ணி, * (யாதானுமோராக்கையில் புக்கங்காப்புண்டு மாப்பவிழ்ந்தும் மூதாவியில்தடுமாறு முயிர்முன்னமே) என்கிறபடியே - புக்கபுக்கசரீரங்கள் தோறும் அஹங்கார மமகாரங்களைப்பண்ணி, ஸத்தாதாரகனான ஸர்வேச்வரனை மறந்து, * மொய்த்தவல்வினையுள்நின்று, த்ரிவிதகரணங்களாலும் பாதகம் அதிபாதகம் மஹாபாதகங் துடக்கமானவற்றாலே போதுபோக்கிக்கொண்டு போருகிறகாலத்திலே, ஈச்வரனுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தாலே யிவனுக்கு அத்வேஷம்பிறக்க, அத்தாலே ரக்ஷணத்துக்கு வழிகண்டு 'கலை யெடுக்கக்கொடுத்த கோலைக்கொண்டு கண்ணைக் கலக்கிக்கொள்ளுவாரைப்போலே நம்பக்கல் சேரக்கொடுத்த வுடம்பைக்கொண்டு அகலுகைக்குறுப்பாக்கினான், (பல்பிறவிக்குநோற்றேன்) என்று-ஒருஜன்மத்திலே அநேகஜன்மத்துக்குவேண்டும் பாபங்களை ஆர்ஜித்துக்கொள்ளுகிற இவனை நம்பக்கலிலே சேர்த்துக்கொள்ளும் விரகேதோ' என்று திருவுள்ளம்பற்றி, வலவட்டத்திலே * தூதுசெய்கண்கள்கொண்டொன்றுபேசி, ஆழ்வானும் * கருதுமிடம் பொருதுமவனாகையாலே, தன்பரிகரபூதரை யேவிவிட, * நின்றிவ்வுலகிற்கடிவான் நேமிப்பிரான்றமர்போந்து, * அருளென்னு மொள்வாளுருவி, (அடைந்தவருவினையோடல்லல் நோய்பாவம் மிடைந்தவைமீண்டொழியவேண்டில் நுடங்கிடையை முன்னிலங்கை வைத்தான் முரணழிய முன்னொருநாள் தன்விலங்கைவைத்தான்சரண்) என்கிறபடியே - விரோதிவர்க்கத்தையடைய அழிவுசெய்து ஜ்ஞாநத்தைக்கொடுக்க, இவனும் சைதந்யம் குடிபுகுந்து, (தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன் வாளா விருந்தொழிந்தேன் கீழ்நாள்களெல்லாம் கரந்துருவில் அம்மானையந்நான்று பின்தொடர்ந்தாழியங்கை யம்மானையேத்தாதயர்ந்து) என்கிறபடியே இழந்தநாளைக்கு அநுதபித்து, ப்ராப்யத்தை யுள்ளபடி யறிவித்த ஆசார்யன்பக்கல் க்ருதஜ்ஞனாய், விரோதிவர்க்கத்தில் உபேக்ஷைபிறந்து, ஸ்ரிய:பதியைக்கிட்டி யல்லது தரிக்கவொண்ணாதிருக்கிற ப்ரேமம் விளைந்து,

'இவ்வளவுங் குலையுங் காட்டில் கைக்கொண்டருளவேணும்' என்று பிராட்டி புருஷகாரஞ்செய்ய, அவ்வளவும் பொறுக்கமாட்டாதபடியான வாத்ஸல்யாதி குண விசிஷ்டவஸ்துவாகையாலே கீழ்ச்செய்த அபராதத்தைத் திருவுள்ளம் பற்றி மேற்செய்யவேண்டு மபராதத்தை ப்ராப்யபர்யந்தமாகத் தலைக்கட்டிக் கொடுத்தருளும்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸம்ஸார ஸாம்ராஜ்யம் முற்றிற்று.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## நவரத்நமாலை.

சரணாகதனானவன்—(௧). தன்னையும், (௨). தனக்கு விரோதியான தேஹத்தையும், (௩). தேஹத்தைப் பற்றிவரும் பந்துக்களையும், (௪). ஸம்ஸாரிகளையும், (௫). தேவதாந்தரங்களையும், (௬). ஸ்ரீவைஷ்ணவர்களையும், (௭). ஆசார்யனையும், (௮). பிராட்டியையும், (௯). ஈஶ்வரனையும் நினைத்திருக்கும்படி யெங்ஙனேயென்னில்.

(௧). உடம்பில் வேறுபட்டு நித்யனாய், ஒருபடிப்பட்டு அணுவாய், ஜ்ஞாநத்தையும் ஆநந்தத்தையும் வடிவாகவுடையனாய், ஜ்ஞாநத்துக்கும் ஆநந்தத்துக்கு மிருப்பிடமாய், எம்பெருமானை யொழிய வேறொன்று நினைத்தல் சொல்லுதல் செய்யமாட்டாதே எம்பெருமானுக்கே யுரியனாய், தன்கார்யத்துக்குத் தான் கடவனன்றிக்கே அவனையே பலமாகவுடையனா யிருக்குமென்று தன்னை நினைப்பான்.

(௨). தன்னையுள்ளபடி யறியவொட்டாதே விபரீதஜ்ஞாநத்தை ஜநிப்பித்து இருபத்துநாலு தத்வங்களினுடைய திரளாய், அநித்யமாய், எப்போது மொக்கப் பரிணமிக்கக்கடவதாய், ஒருநாளும் ஜ்ஞாநத்துக் கிருப்பிடமன்றிக்கே அநந்த து:கங்களை விளைப்பிக்கக் கடவதாய், சப்தாதி விஷயங்களிலே மூட்டி நசிப்பிக்குமென்று தன் தேஹத்தை நினைப்பான்.

(௩). ஆத்மஜ்ஞாநத்தையும், பகவத் ஜ்ஞாநத்தையும், பகவத் விஷயத்தில் ருசியையும், த்வரையையுங்குலைத்து, தேஹாத்மாபிமாநத்தையும், அஹங்கார மமகாரங்களையும், காமக்ரோதாதிகளையும் விளைப்பித்து, பலபடியாலும் அநர்த்தத்தைப் பண்ணுவார்களென்று தேஹத்தைப் பற்றிவரும் பந்துக்களை நினைப்பான்.

(௪). பகவதநுபவத்துக்கும் பகவத் கைங்கர்யத்துக்கும் விரோதிகளாய் ஸம்ஸாரவர்த்தகரா யிருப்பார்களென்று ஸம்ஸாரிகளை நினைப்பான்.

(௫). அஜ்ஞராய், அசக்தராய், எம்பெருமான்பக்கலிலே பிறந்து அவன்கொடுத்த பதங்களையுடையராய், அவனோடே யெதிரிட்டு துர்மாநிகளாய்,

தங்களைப் * போரப்பொலிய நினைத்து நாட்டாரை ப்ரமிப்பித்து அநர்த்தத்தைப் பண்ணுவார் சிலரென்று தேவதாந்தரங்களை நினைப்பான்.

(௬). பகவத்ஜ்ஞாநத்துக்கும் இதரவிஷய வைராக்யத்துக்கும் பகவத்பக்திக்கும் வர்த்தகராய், ஶேஷிகளாய், உசாத்துணையாய், ப்ராப்யத்துக் கெல்லைநிலமா யிருப்பார்களென்று ஸ்ரீவைஷ்ணவர்களை நினைப்பான்.

(௭). தன் கடாக்ஷத்தாலே என்னைத்திருத்தி, ஸர்வேஶ்வரன் கைக் கொள்ளுகைக்கு யோக்யனும்படி பண்ணி, அவன் திருவடிகளிலே சேர்த்து, * அறியாதன வறிவித்து, ஸ்வாமியாய், என்றுமொக்க வடிமைகொள்ளும் மஹோபகாரகனென்று ஆசார்யனை நினைப்பான்.

(௮). நம்முடைய ஸர்வாபராதத்தையும் பொறுப்பித்து, ஈஶ்வரஸ்வா தந்த்ர்யத்தையுங் குலைத்து, அவனுடைய காருண்ய வாத்ஸல்யாதி குணங்க ளைக்கிளப்பி, நமக்கு புருஷகார பூதையாய், மாதாவாய், ஸ்வாமிநியாய், ப்ராப்யையா யிருக்குமென்று பிராட்டியை நினைப்பான்.

(௯). ஸ்ருஷ்டிகாலத்திலே ஶரீரத்தையும் இந்த்ரியங்களையுந்தந்து, அந் தர்யாமியாய் நின்று ஸத்தையை நோக்கி, அத்வேஷத்தையும் ஆபிமுக்யத் தையும் ஸத்ஸங்கதி துடக்கமான ஆத்மகுணங்களையும் பிறப்பித்து ஸதாசார் யனோடே சேர்த்து, நம்முடைய ஸர்வாபராதங்களையும் பொறுத்து, ஸம் ஸார ஸம்பந்தத்தையுங்கழித்து, அர்ச்சிராதி மார்க்கத்தையும் பரமபதத் தையும் குணாநுபவத்தையுந்தந்து, யாவதாத்மபாவி நித்யகைங்கர்யங் கொள் ளும் ஸ்வாமியென்று ஸர்வேஶ்வரனை நினைப்பான்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

நவரத்நமாலேயம் ஸந்நிதி-த்யாயதா ஸதா ஹ்ருதி।
ஸந்த்யா யேநாத்ர திவ்யஸா தம் ஜகந்நாதகுருமாஶ்ரயே॥

நவரத்நமாலை முற்றிற்று.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## நவவிதஸம்பந்தம்.

(பிதா ச ரக்ஷக ஶ்ஶேஷீ பர்தா ஜ்ஞேயோ ரமாபதி: - ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்யமநூதித:) என்கிறபடியே—அகாரத்தாலே - பிதாபுத்ர ஸம்பந்தஞ்சொல்லி, (௧). (அவ-ரக்ஷணே) என்கிற தாதுவினாலே - ரக்ஷ்யரக்ஷக ஸம்பந்தஞ்சொல்லி, (௨). லுப்தசதுர்த்தியாலே - ஶேஷஶேஷி ஸம்பந்தஞ்சொல்லி, (௩). உகாரத்தாலே - பர்த்ருபார்யா ஸம்பந்தஞ் சொல்லி, (௪). மகாரத்தாலே - ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்பந்தஞ்சொல்லி, (௫). நமஸ்ஸாலே - ஸ்வஸ்வாமி ஸம்பந்தஞ்சொல்லி, (௬). நாரபதத்தாலே -

* போரப்பொலிய - மிகவும் பூர்ணமாக.

ஶரீரஶரீரி ஸம்பந்தஞ்சொல்லி, (௭). அயநபதத்தாலே - ஆதாராதேய ஸம்பந்தஞ் சொல்லி, (௮). ஆயபதத்தாலே - போக்த்ருபோக்ய ஸம்பந்தஞ்சொல்லி, (௯). ஆக, திருமந்த்ரத்தால் - நவவித ஸம்பந்தங்களைச் சொல்லித் தலைக்கட்டுகிறது.

நம்மாசார்யர்கள், ப்ரதமரஹஸ்ய தாத்பர்யமான நவவித ஸம்பந்தம் ஸ்வரூபஜ்ஞனுக்கு நித்யாநுஸந்தேயமென்று அநுஸந்தித்தும் உபதேஶித்தும் போருவார்கள்.

அவையெவையென்னில். (௧). விஶேஷண விஶேஷ்ய ஸம்பந்தம், (௨). ரக்ஷ்ய ரக்ஷகஸம்பந்தம், (௩). ஶேஷஶேஷி ஸம்பந்தம், (௪). பர்த்ருபார்யா ஸம்பந்தம், (௫). ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்பந்தம், (௬). ஸ்வஸ்வாமி ஸம்பந்தம், (௭). ஶரீரஶரீரி ஸம்பந்தம், (௮). ஆதாராதேய ஸம்பந்தம், (௯). போக்த்ருபோக்ய ஸம்பந்தம்.

(௧). இதில், விஶேஷண விஶேஷ்ய ஸம்பந்தமாவது - [1]. ப்ரக்ருத்யர்தஶங்கா நிவர்தகமாய், [2]. ஆஶ்ரயாஶ்ரயியாய், [3]. வ்யாவர்தக வ்யாவர்த்யமா யிருப்பதொன்று.

[1]. ப்ரக்ருத்யர்த ஶங்கா நிவர்தக மாகையாவது - ஸமஸ்தஶப்தகாரணமான அகாரஸ்வபாவத்தாலே தத்வாச்யனும், ஸமஸ்தஶப்த வாச்யமான சிதசித்துக்களுக்குக் காரணமாமிடத்தில் 'நித்யங்களானவை கார்யமாமிடத்தில் அநித்யங்களாமே' என்கிற ஶங்கையுதிக்க, அவை நித்யப்ரஹ்ம விஶேஷணமாகையாலே அநித்யத்வம் ஶங்கநீயமன்றென்று பரிஹரிக்குமதாகை.

[2]. ஆஶ்ரயாஶ்ரயியாவது - ஶௌக்ல்யம் படத்தைப்பற்றியல்லதுநில்லாதப்போலே, சிதசித்துக்கள் பகவத்ஸ்வரூபத்தைப் பற்றியல்லது ஸத்தையற்றிருக்கை.

[3]. வ்யாவர்தக வ்யாவர்த்ய மாகையாவது - இவை பகவத் ஸ்வரூபத்துக்குண்டான இதர வ்யாவ்ருத்திக்கு ப்ரகாஶகமாய், வ்யாவர்த்யமான பகவத்ஸ்வரூபம் வ்யாவர்த்தக மான இவற்றையொழிய ப்ரகாஶியாத படியுமாயிருக்கை. ஆக, நித்யகார்யா நாதித்வ ஸூசகமிந்த ஸம்பந்தம்.

(௨). ரக்ஷ்யரக்ஷக ஸம்பந்த மாகையாவது - [1]. தாதுஸித்தமாய், [2]. ப்ரக்ருத்யர்தாநந்தர பாவியாய், [3]. உபயஸ்வரூபோசிதமா யிருப்பதொன்று.

[1]. தாதுஸித்த மாகையாவது - (அவ - ரக்ஷணே) என்கிற தாத்வர்தமான ரக்ஷணம் - நிர்விஷயமாயும் நிராஶ்ரயமாயும் நில்லாமையாலே, (யேந ஜாதாநி ஜீவந்தி) இத்யாதி ப்ரஸித்தமான ரக்ஷ்ய ரக்ஷகஸ்வரூப ப்ரதர்ஶநமாகை.

[2]. ப்ரக்ருத்யர்தாநந்தர பாவித்வ மாகையாவது - (மூவாத்தனிமுதலாய் மூவுலகுங் காவலோன்) என்கிறபடியே, ப்ரக்ருத்யர்தமான காரணத்வத்துக்கநந்தரம் வேண்டுவதொன்றாகை.

[3]. உபயஸ்வரூபோசித மாகையாவது - ரக்ஷ்யரக்ஷக ஸ்வரூபமான பாரதந்த்ர்ய ஸ்வாதந்த்ர்யங் களுக்குச் சேருகை. பரதந்த்ரனுக்கு ஸ்வரக்ஷணாந்வயங் கூடாமையைக் காட்டுமிந்த ஸம்பந்தம்.

(௩). சேஷசேஷி ஸம்பந்தமாவது - [1]. விபக்திஸித்தமாய், [2]. தாத்பர்யபர்யவஸிதா ப்ரகாசகமாய், [3]. ஸமாநாதிகரண்யதாதர்சகமா யிருப்பதொன்று.

[1]. விபக்திஸித்த மாகையாவது - அகாரத்திலேறிக்கழிந்த சதுர்த்தி யிலுதித்த சேஷத்வம் - (யஸ்யாஸ்மி) இத்யாதிப்ரஸித்தமானசேஷ சேஷி களைக்காட்டுகை.

[2]. தாத்பர்ய பர்யவஸிதாப்ரகாசக மாகையாவது - தாத்பர்யமான ரக்ஷணம் சரீரியான சேஷிப்ரயோஜந மத்தனையென்று காட்டுகை.

[3]. ஸமாநாதிகரண்யதாதர்சக மாகையாவது - சேஷவஸ்து ஸ்வரூபம் சேஷிவிநியோகாநு குணமா யிருக்கையாயிற்று நிலைநின்ற வேஷமென்றுகா ட்டுகை. அதாவது - சேஷி சேஷத்வத்தை யழியமாறி விநியோகிக்கு மிட த்தில் பிற்காலியாத முறையுணர்த்தி, ஸ்வகதஸ்வரூபகுணத்தையும் ஸஹி யாததொரு ஸம்பந்தம்.

(௪). பர்த்ருபார்யா ஸம்பந்தமாவது - [1]. உகாரஸித்தமாய், [2]. விபக்த்யர்த்தசோதகமாய் [3]. ஸ்வரூப ப்ராப்தமா யிருப்பதொன்று.

[1]. உகாரஸித்த மாகையாவது - உகாரார்த்தம் அவதாரணார்த்தமாயி ருக்கை. அதாவது - ரக்ஷகனான புருஷோத்தமனுக்கே ரக்ஷ்யமான ஆத்மஸ் வரூபம் அற்றுத்தீர்ந்திருக்குமென்று தோற்றுகை.

[2]. விபக்த்யர்த்தசோதக மாகையாவது - பதிவ்ரதையினுடையசேஷ த்வம் அநந்யார்ஹமா யிருக்குமாபோலே, லுப்தசதுர்த்யர்த்தமான பகவச் சேஷத்துவமும் அநந்யார்ஹமென்று மறுக்களைந்திருக்கை.

[3]. ஸ்வரூபப்ராப்த மாகையாவது - பர்த்ருத்வ பார்யத்வங்கள் பும்ஸ் த்ரீத்வத்துக் கீடாமாபோலே, பர்த்ருபார்யா ஸம்பந்தம் ஸ்வாதந்த்ர்ய பாரதந்த்ர்யங்களுக் கீடாகை. அந்யார்ஹப்ரஸங்கஸஹமிந்த ஸம்பந்தம்.

(௫). ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்பந்த மாகையாவது - [1] மகாரநிருக்தமாய், [2] உகாரார்த்தாநு ஸந்தாநாபேக்ஷிதமாய், [3] அசித்வ்யாவ்ருத்தி வேஷமா யிருப்பதொன்று.

[1] மகாரநிருக்த மாகையாவது - (மந-ஜ்ஞாநே) என்கிற ஜ்ஞாநவாசி யான மகாரம் காட்டுகிற ஜ்ஞாத்ருத்வத்துக்கு ஜ்ஞேயம் பகவத்ஸ்வரூபாதிக ளாய்த் தோன்றுகை.

[2] உகாரார்த்தாநு ஸந்தாநாபேக்ஷித மாகையாவது - உகாரார்த்தமான பர்த்ரு பார்யா ஸம்பந்தாநு ஸந்தாநத்துக்கு ஜ்ஞாத்ருத்வமபேக்ஷிதமாகை.

[3] அசித்வ்யாவ்ருத்தி வேஷமாகையாவது - இந்த ஸம்பந்தங்களை யறிகையும், ஜ்ஞேயமும், ஜ்ஞாதாவாகையும். ஜ்ஞேயாதீநமுமாய், தத்ப்ரயோஜநமுமா யிருக்குமிந்த ஜ்ஞாத்ருத்வமென்று காட்டுமிந்த ஸம்பந்தம்.

(௬). ஸ்வஸ்வாமி ஸம்பந்தமாவது - [1] நமஶ்ஶப்தார்த்த தாத்பர்யமாய், [2] மகாரார்த்த நிபந்தந ப்ரமநாஶகமாய், [3] ஸ்வாபாவிகமா யிருப்பதொன்று.

[1] நமஶ்ஶப்த தாத்பர்யமாகையாவது-நமஶ்ஶப்தார்த்த மான அஹம் மமதா நிவ்ருத்தி, ஶேஷித்வாதி மாநித்வங்களையும் 'ஸ்வமதமன்று, பரமதம்' என்றுகாட்டி, ஶேஷியுமாய் அதிமாநியுமான வெம்பெருமானுடைமையுமாய்த் தோன்றுகை.

[2] மகாரார்த்த நிபந்தநப்ரம நாஶகமாகையாவது - மகாரார்த்தமான ஜ்ஞாத்ருத்வ நிபந்தநமாய் வந்தகர்த்ருத்வ ப்ரமத்தை யறுக்குமதாகை. அதாவது-பராதீநமான ஸ்வரூபத்தின் குணவிஶேஷங்களும் பராதீநமென்று ஸ்வாதீநதாப்ரதிபத்தியைக்கெடுக்கை.

[3] ஸ்வாபாவிக மாகையாவது - அஹங்காராதிகளைப்போலே வந்தேறியன்றிக்கே, (ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்) என்கிறபடியே ஜீவபரர்களுடைய ஸ்வஸ்வாமிஸம்பந்தம் ஸ்வதஸ்ஸித்தமாய்ப் போருகை. ஸ்வத்துக்கு ஸ்வரக்ஷண கர்த்ருத்வ மில்லையென்றும், ஸ்வாமிக்கே யதுதொழிலென்றுங் காட்டுகிற திந்தஸம்பந்தம்.

(௭). ஶரீரஶரீரி ஸம்பந்தமாவது - [1] நாராயணபதத்தில் ஸமாஸ விஶேஷஸித்தமாய், [2] நமஶ்ஶப்தார்த்த ஸ்வரூபப்ரகாஶகமாய், [3] ஸாமாநாதிகரண்யயோக்யமா யிருப்பதொன்று.

[1] ஸமாஸ விஶேஷஸித்த மாகையாவது - நாராயணபதத்தில் பஹுவ்ரீஹி ஸமாஸத்திலே வ்யாப்யமான நாரங்கள் ஶரீரமாய், அந்தர்வ்யாப்தியாலே வ்யாபகஸ்வரூபம் ஶரீரியாய்த் தோன்றுகை.

[2] நமஶ்ஶப்தார்த்த ஸ்வரூபப்ரகாஶக மாகையாவது - நமஶ்ஶப்தார்த்தமான ஸ்வஸ்வாமி ஸம்பந்தம், க்ருஹ க்ஷேத்ராதி ஸம்பந்தங்கள் போலன்றிக்கே அப்ருதக்ஸித்தமா யிருக்குமென்று காட்டுகை.

[3] ஸாமாநாதிகரண்ய யோக்யமாகை யாவது - ஸ்வரூபபேதத்தாலே பிந்நப்ரவ்ருத்தி நிமித்தமான ஜீவபரஸ்வரூபம் ஶரீரஶரீரியான ஐக்யத்தாலே யொன்றென்னலாகை. விஶிஷ்டாத்வைத ப்ரகாஶகமிந்த ஸம்பந்தம்.

(௮). தார்யதாரக ஸம்பந்த மாவது - [1] ஸமாஸாந்தர ஸித்தமாய், [2] ஶரீரஶரீரி ஸம்பந்தி லக்ஷணமாய், [3] அசித்விஶேஷ ஸ்திதி ஹேதுவா யிருப்பதொன்று.

[1] ஸமாஸாந்தர ஸித்தமாகையாவது - நாராயணபதத்தில் தத்புருஷ ஸமாஸஸித்தியையான பஹிர்வ்யாப்தியாலே நாரபதவாச்யங்கள் தார்யமாய், அயநபதவாச்யன் தாரகனுப்த் தோன்றுகை.

[2] ஶரீரஶரீரி ஸம்பந்தைக லக்ஷணமாகையாவது-ஆதேயத்வ விதேயத்வ ஶேஷத்வரூபமான ஶரீரலக்ஷணங்களிலும், ஆதாரத்வ நியாமகத்வ ஶேஷித்வரூபமான ஶரீரிலக்ஷணங்களிலும், ப்ரதாநமான ஆதேயத்வ ஆதாரகத்வரூபலக்ஷண மொன்றாய்த் தோன்றுகை.

[3] அசித்விஶேஷ ஸ்திதிஹேதுவாகையாவது - (அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி) என்று அந்தர்வ்யாப்திபோலே வேதநஸ்திதி ப்ரதாநமாகை யன்றியே பஹிர் வ்யாப்தியாலே சேதநாசேதநங்களிரண்டினுடையவும் வ்யவஸ்திதஸ்வரூபஸ்திதிவ்யாபாரங்களுக்குக்காரணமாய்த் தோன்றுகை. சிதசிந்நித்யஸ்திதிகாரணமிந்த ஸம்பந்தம்.

(கூ). போக்த்ருபோக்ய ஸம்பந்தமாவது - [1] சரமவிபக்தி விஷயமாய், [2] பூர்வஸம்பந்தப்ரயோஜந ப்ரதர்ஶகமாய், [3] ப்ரதிஸம்பந்தி போகாநுரூபமா யிருப்பதொன்று.

[1] சரமவிபக்தி விஷயமாகையாவது - (ஆய) என்கிற சதுர்த்தி விபக்தியிலே அநந்யார்ஹ ஶேஷபூதனான மகாரவாச்யனுடைய ஸஹஜஶேஷவ்ருத்திதோன்ற, அதில் கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் ஶரீரியான பரமஶேஷிக்கேயாய், ஶரீரமான ஶேஷபூதனுக்கன்றென் றிருக்கை.

[2] பூர்வஸம்பந்தப்ரயோஜந ப்ரதர்ஶக மாகையாவது - ஸர்பவிஷவத் தார்யதாரகத்வங்கள் நிஷ்ப்ரயோஜநமாய்விடாதே, ரஸநாரஸவஸ்துவத் தார்யதாரகங்களுக்கு அநுகூல க்ராஹ்யக்ராஹகரூப ப்ரயோஜநத்தைக்காட்டுமதாகை.

[3] ப்ரதிஸம்பந்தி போகாநுரூப மாகையாவது - கைங்கர்யப்ரதி ஸம்பந்தியான ஶேஷியினுடைய கைங்கர்ய ரஸாநுபவத்துக்கும், கைங்கர்யாஶ்ரயமான ஶேஷபூதனுடைய ஶேஷிபோகவிருத் தரஸத்வராஹித்யத்துக்கு மிடமாயிருக்கை. ஶேஷித்வத்திலும் ஶேஷத்வத்திலும் மறுக்களைந்ததிந்த ஸம்பந்தம்.

இதில், (க) விஶேஷண விஶேஷ்ய ஸம்பந்தஜ்ஞாநம் பிறக்கவே காரணாந்தரஶங்கையறும். (உ) ரக்ஷ்யரக்ஷக ஸம்பந்தஜ்ஞாநம் பிறக்கவே ரக்ஷகாந்தர ஶங்கையறும். (ங) ஶேஷ ஶேஷிஸம்பந்த ஜ்ஞாநம் பிறக்கவே ஶேஷ்யந்தர ஶங்கையறும். (ச) பர்த்ருபார்யா ஸம்பந்த ஜ்ஞாநம் பிறக்கவே அந்யார்ஹ ஶங்கையறும். (ரு) ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்பந்த ஜ்ஞாநம் பிறக்கவே ஜ்ஞேயாந்தர ஶங்கையறும். (சா) ஸ்வஸ்வாமி ஸம்பந்தஜ்ஞாநம் பிறக்கவே ஸ்வாதந்த்ர்ய ஶங்கையறும். (எ) ஶரீரஶரீரி ஸம்பந்தஜ்ஞாநம் பிறக்கவே ஸ்வரூபைக்ய ஶங்கையறும். (அ) தார்யதாரக ஸம்பந்த ஜ்ஞாநம் பிறக்கவே தாரகாந்தர ஶங்கையறும். (கூ) போக்த்ரு போக்ய ஸம்பந்தஜ்ஞாநம் பிறக்கவே போக்த்ருத்வஶங்கையறும்.— ஆக, நவவித ஸம்பந்தமு மறிந்து ஆநந்தித்திருக்கவும்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

நவவிதஸம்பந்தம் முற்றிற்று.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

யாத்ருச்சிகப்படி.

# திருமந்த்ரப்ரகரணம்.

யாத்ருச்சிக பகவத் கடாக்ஷத்தாலே பகவதாபிமுக்யம் பிறந்து ஸதாசார்ய ஸமாச்ரயணம் பண்ணின முமுக்ஷுவுக்கு ரஹஸ்யத்ரயமு மநுஸந்தேயம். அதில், ஸ்வரூபஶோதநார்த்தமாக ப்ரவ்ருத்த மாகையாலே ப்ரதமத்திலே யநுஸந்தேயமான திருமந்த்ரம் - ஸ்வரூபத்தையும், ஸ்வரூபாநுரூபமான பரம புருஷார்த்தத்தையும் ப்ரதிபாதிக்கிறது.

அப்பரம புருஷார்த்தத்துக் கநுரூபமான சரமோபாய ஸ்வீகாரத்தை விதிக்கிறது - சரமச்லோகம்.

விஹிதோபாய பரிக்ரஹத்தையும், ஸப்ரகார புருஷார்த்த ப்ரகாரத்தையும் ப்ரதிபாதிக்கிறது - த்வயம்.

அதில் திருமந்த்ரம் - எட்டுத்திருவக்ஷரமாய், மூன்று பதமாயிருக்கும். அதில் முதல் பதமான ப்ரணவம் - மூன்று பதமாயிருக்கும். அதில் ப்ரதம பதமான அகாரம் - ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வப்ரகாரத்தாலும் ஸர்வாத்மாக்களையும் ரக்ஷித்துக்கொண்டு போருகிற ஸர்வேச்வரனுக்கு சேஷமென்கிறது. இரண்டாம் பதமாய், அவதாரணார்த்தமான உகாரம் - வேறே சிலர்க்கு சேஷமன்றென்கிறது. மூன்றாம் பதமாய், இருபத்தஞ்சாமக்ஷரமாய், ஜ்ஞாநவாசியாயிருந்துள்ள மகாரம் - கீழ்ச்சொன்ன அநந்யார்ஹ சேஷத்வத்துக் காச்ரயம் தேஹாதி விலக்ஷணமான ஆத்மவஸ்துவென்கிறது.

இரண்டாம் பதமான நமஸ்ஸு 'ந' - என்றும் 'ம' என்றும் இரண்டு பதமாயிருக்கும். 'ந' என்றது-அன்றென்றபடி. 'ம:' என்றது - எனக்கென்றபடி. இரண்டுங் கூடி எனக்கன் றென்றபடி. எனக்கன் றென்கையாவது - எனக்கு நான் கடவனல்லனென்றிருக்கை.

மூன்றாம் பதமான நாராயணபதம் - 'ஸர்வசேஷியான நாராயணனுக்கு நித்யகைங்கர்யம் பண்ணவேணும்' என்று ப்ரார்த்திக்கும் படியைச் சொல்லுகிறது. நாராயணனென்றது - நாரங்களுக் கயநமென்றபடி. நாரங்களாவன- நச்வராதவஸ்துக்களினுடைய திரள். அவையாவன - திவ்யாத்மஸ்வரூபத்தையொழிந்த ஸர்வவஸ்துக்களும். அயநமென்றது - இவற்றுக் காச்ரயமென்றபடி. அங்ஙனன்றிக்கே, இவைதன்னை ஆச்ரயமாகவுடையனென்னவுமாம். இத்தால்-மேன்மையும் நீர்மையும் சொல்லிற்றாய்த்து. இதில்- 'சதுர்த்தி ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வப்ரகார கைங்கர்யங்களையுங் கொண்டருள வேணும்' என்று ப்ரார்த்திக்கும் படியைச் சொல்லுகிறது.

ஆக, 'ஸர்வரக்ஷகனான ஸர்வேச்வரனுக்கு அநந்யார்ஹ சேஷபூதனாய் எனக்குரியனன்றிக்கே யிருந்துள்ள நான், ஸர்வசேஷியான நாராயணனுக்கே நித்யகைங்கர்யம் பண்ணப் பெறுவேனாக வேணும்' என்று ப்ரார்த்தித்ததாய்த்து.

# சரமஶ்லோகப்ரகரணம்.

[ஸர்வதர்மாந்] - கர்ம ஜ்ஞாந பக்திகளை ஸப்ரகாரமாக வுபதேசிக்கக்கேட்ட அர்ஜுநன், அவற்றினருமையாலும், தன் ஸ்வரூபத்துக்குச் சேராமையாலும், ஸாத்யலாப நிமித்தமாக ஶோகிக்க, 'நான் முன்புபதேசித்தவற்றை ஸவாஸநமாகவிட்டு என்னையொருவனையுமே உபாயமாக பரிக்ரஹி, நானுன்னுடைய ஸர்வ விரோதிகளையும் போக்குகிறேன், நீஶோகியாதே கொள்' என்று இவனுடைய ஶோகத்தை நிவர்த்திப்பிக்கிறான்.

[ஸர்வதர்மாந்] - எல்லா தர்மங்களையும். கீழ்ச்சொன்ன ஸபரிகரங்களான வெல்லாவுபாயங்களையும். (பரித்யஜ்ய]-ருசிவாஸநைகளோடே விட்டு. [மாம்] - உன்கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு நிற்கிறவென்னை. [ஏகம்] - ஒருவனையுமே. [ஶரணம்] - உபாயமாக. [வ்ரஜ] - அத்யவஸி. [அஹம்] - ஸர்வஶக்தியான நான். [த்வா] - என்னையொழிந்த உபாயோபேயங்களை விட்டிருக்கிறவுன்னை. [ஸர்வபாபேப்ய꞉] - என்னைக்கிட்டுகைக்கு விரோதியாயிருந்துள்ளவை யெல்லாவற்றில் நின்றும். [மோக்ஷயிஷ்யாமி] - விடுவிக்கக்கடவேன். [மாஶுச꞉] - நீ ஶோகியாதேகொள்.

ஆக, 'ஸாங்கமான ஸர்வோபாயங்களையும் ஸவாஸநமாக விட்டு, வாத்ஸல்யாதி கல்யாணகுண விஶிஷ்டனானவென்னை யொருவனையுமே, நிரபேக்ஷஸாதநமாகஸ்வீகரி, ஸர்வஶக்தித்வாதி கல்யாணகுண விஶிஷ்டனான நான், என்னையே யுபாயமாகப் பற்றியிருக்கிற வுன்னை, ஸமஸ்தப்ரதிபந்தகங்களில் நின்றும் முக்தனாக்குகிறேன், நீ ஶோகியாதேகொள்' என்று அர்ஜுநனுடைய ஶோகத்தை நிவர்திப்பிக்கிறான்.

---

# த்வயப்ரகரணம்.

த்வயம், உபாய பரிக்ரஹத்தையும், உபேயப்ரார்த்தநத்தையும் ப்ரதிபாதிக்கிறது. இரண்டர்த்தத்தையும் ப்ரதிபாதிக்கையாலே யிரண்டு வாக்யமாயிற்று. இரண்டு வாக்யமாகையாலே த்வயமென்று திருநாமமாயிற்று. இதில் பூர்வவாக்யம் மூன்று பதமாய், உத்தரவாக்யம் மூன்று பதமாய், ஆக ஆறுபதமாயிருக்கும்.

இதில் முதல்பதம் - பெரிய பிராட்டியாருடைய புருஷகார பாவத்தையும், ஈஶ்வரனுடைய வாத்ஸல்யாதிகுண சதுஷ்டயத்தையும், திவ்யமங்கள விக்ரஹயோகத்தையுஞ் சொல்லுகிறது.

இதில் [ஸ்ரீ] ஶப்தம் - (ஸ்ரீயதே, ஶ்ரயதே) என்கிற வ்யுத்பத்தி த்வயத்தாலும், பெரிய பிராட்டியாருடைய மாத்ருத்வப்ரயுக்தமான ஸம்பந்த விஶேஷத்தாலே இவர்கள் குற்றம் பாராதே யெல்லார்க்கு மொக்கவாஶ்ரயணீயையாயிருக்கு மிருப்பையும், பத்நீத்வமாகிற ஸம்பந்தவிஶேஷத்தாலே ஸ்வரூபஸித்த்யர்த்தமாகவும் சேதநரக்ஷணார்த்தமாகவும் ஈஶ்வரனை யாஶ்ர

யித்துக்கொண்டிருக்கு மிருப்பையுஞ் சொல்லுகிறது. [மது]ப்பாலே - ஈஶ்வரனுக்கும் பிராட்டிக்கு முண்டான நித்ய ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. [நாராயண] ஶப்தம் - பிராட்டி தானே அபராதங்களையிட்டகற்றப் பார்த்தாலும், (என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்) என்று நோக்கக் கடவனான ஈஶ்வரனுடைய வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்யங்களைச் சொல்லுகிறது. [சரண] ஶப்தம் - ஸ்வரூபகுணங்களிலும் காட்டில் தானே கார்யஞ்செய்யக் கடவதான விக்ரஹவைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது. [ஶரணம்] - உபாயமாக. உபாயமாகிறது - அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தியையும் பண்ணித்தருமது. [ப்ரபத்யே] - பற்றுகிறேன். பற்றுகையாவது - மாநஸாத்யவஸாயம்.

[ஸ்ரீமதே] - பெரிய பிராட்டியாரோடே ஸம்ஶ்லிஷ்டனானவனுக்கு. இத்தால் - கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தி மிதுநமென்னு மிடத்தைச் சொல்லுகிறது. [நாராயணாய] - ஸர்வஶேஷியா யிருந்துள்ளவனுக்கு. இத்தால் - கைங்கர்யம் பண்ணுகைக்கு வகுத்த விஷயமென்கிறது. இதில் சதுர்த்தி - தேஶகாலாவஸ்தாப்ரகார நியம ரஹிதமான நித்யகைங்கர்ய ப்ரார்த்தநத்தை ப்ரதிபாதிக்கிறது. [நம] ஶ்ஶப்தம் - கீழ்ச்சொன்ன கைங்கர்யத்தில் விரோதி நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. கைங்கர்யத்துக்கு விரோதியாகிறது - போக்த்ருத்வப்ரதி பத்தியும், மதீயத்வப்ரதி பத்தியும்.

ஆக, ஸ்ரிய:பதியாய் ஸர்வஸுலபனான நாராயணன் திருவடிகளையே அபிமதஸித்திக்கும் தத்விரோதி நிவ்ருத்திக்கு முபாயமாக அத்யவஸிக்கிறேன்; ஸ்ரிய:பதியாய் ஸர்வஸ்வாமியான நாராயணனுக்கு நித்யகைங்கர்யம் பண்ணப்பெறுவேனாக வேணும், அதுக்கு விரோதியான அஹங்காரமமகாரங்களும் நிவ்ருத்தமாகவேணும் என்று ஸப்ரகார ஸாதந ஸ்வீகார பூர்வகமாக ஸ்வரூபாநுரூபமான நித்யகைங்கர்ய ப்ரார்த்தநத்தை ப்ரதி பாதிக்கிறது.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

யாத்ருச்சிகப்படி முற்றிற்று.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஸ்ரீமல்லோகாசார்ய குரவே நம:.

## பரந்தபடி.

# திருமந்த்ரப்ரகரணம்.

—[உபோத்காதம்.]—

* (நித்யோ நித்யாநாம்) (க) என்றும், (ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜா † வீஶநீஶௌ) (உ) என்றும், (ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ வித்த்யநாதீ) (ங) என்றுஞ் சொல்லுகிறபடியே ஆத்மஸ்வரூபம் நித்யமாயிருக்கச்செய்தேயும், (அஸந்நேவ ஸ பவதி) (ச) என்கிறபடியே - அநாதிகாலம் அஸத்வ்யவஹாரத்துக்கு விஷயமாய்ப்போந்தது - பகவத்விஷய ஜ்ஞாநராஹித்யத்தாலே யாகையாலே, (ஸந்தமேநம்) (ரு) என்கிறபடியே ஸத்வ்யவஹாரத்துக்கு விஷயமாம்போது ‡ பகவத்விஷய ஜ்ஞாநஸத்பாவத்தாலே யாகவேணும்.

இப்படிப்பட்ட ஜ்ஞாநவிஶேஷமாகிறது - ¶ ஈஶ்வரனுடைய ஶேஷித்வவிஷயஜ்ஞாநமும், உபாயத்வவிஷயஜ்ஞாநமும், உபேயத்வவிஷயஜ்ஞாநமுமிறே.

ஈத்ருஶமாநஜ்ஞாந விஶேஷத்துக்கு உத்பாதகமாயிருப்பது - அபௌருஷேயமாய், நித்ய நிர்தோஷமாய், ஸ்வத: ப்ரமாணமான வேதம்.

அந்த வேதந்தான், (அநந்தா வை வேதா:) (ரு) என்கிறபடியே - அஸங்க்யாதமா யிருக்கையாலும், (அல்பஶ்ச கால:) (சு) என்றும், (பஹுதஜீவிதமத்யல்பம்) (எ) என்றும், (நம்முடைநாள்) (அ) என்றும், இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே - சேதநர் பரிமிதகால வர்திகளா யிருக்கையாலும், உள்ளகாலந்தன்னிலே வேதத்திற்சொல்லுகிறவர்த்தத்தை யாராயவென்றிழிந்தால், (ஶ்ரேயாம்ஸி பஹுவிக்நாநி) என்றும், (பஹவஶ்ச விக்நா:) (சு) என்றுஞ்சொல்லுகிறபடியே ஶ்ரேய:ப்ராப்தி § ப்ரத்யூஹ பாஹுள்யத்தாலும்,

---

* நித்ய: - என்று பரமாத்மாவைச் சொல்லுகையாலே ப்ரபந்தாதியில் மங்களாசரணம் ஸித்தமாயிற்று.

† ஈஶாநீஶௌ - என்றிருக்க வேண்டியிருக்க 'ஈஶநீஶௌ' என்றது - சாந்தஸம்.

‡ 'ஸ்ரம்பஜ்ஞாநாஜ்ஞாநாப்யாம் ஆத்மநஸ்ஸத்பாவாஸத்பாவௌ தர்ஶயதி' என்கிற ஆநந்தமயாதிகரண பாஷ்யமநுஸந்தேயம்.

¶ 'ஸ்வஜ்ஞாநம் ப்ராபகஜ்ஞாநம் ப்ராப்யஜ்ஞாநம் முமுக்ஷுபி: | ஜ்ஞாநத்ரய முபாதேய மேதந்ய ந்நகிஞ்சந' என்கிற வசநத்தை யுள்கொண்டருளிச்செய்கிறார் - (ஈஶ்வரனுடைய) இத்யாதி. ஸ்வஜ்ஞாநத்தைச்சொன்னது - ஶேஷத்வ ப்ரதிஸம்பந்தியான ஶேஷிஸ்வரூபமு முக்தமென்று கருத்து.

§ ப்ரத்யூஹம் - விக்நம். 'விக்நோऽந்தராய: ப்ரத்யூஹ:' என்று கோஶம்.

க. ஶ்வே. சு - கங.
உ. ஷ்டி க - கூ.
ங. கீ. கங - ககூ.
ச. தை. ஆ. சு.

ரு. யஜுஷி. தை. ப்ரா. ங - கo-கக-ச.
சு. உத்தரகீதா. ங.
எ.
அ. தி. வா. க - ங - எ.

—வ்ரஜபதார்த்தம்—

(ஸூ) [வ்ரஜ]—கீழ் ஸ்வீகார ப்ரகாரத்தைச் சொல்லிற்று; இதில் ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது. கீழ்பரித்யாஜ்யங்களாகச் சொல்லப்பட்ட தர்மங்கள் ஸநாதநதர்மவ்யதிரிக்த தர்மங்களாகையாலும், இந்த தர்மந்தான் அவற்றில் அந்தர்பூதமானாலும் பரித்யாகவிஷயமாவது மோக்ஷஸாதநத்வவேஷமன்றிக்கே ஸாதநாங்கத்வமாகையாலும், ஸர்வதர்மபரித்யாகப்ரதிபாதநத்துக்கும் ஸித்த தர்மஸ்வீகாரவிதாநத்துக்கும் பரஸ்பரவிரோதமில்லை.

[வ்ரஜ] என்றது - (புத்த்யஸ்வ) என்கிறபடி. இந்த புத்தியாகிறது - த்யாஜ்ய கோடியிலுத்தீர்ணமாய், உபாயகோடியில் அநநுப்ரவிஷ்டமாய், ப்ராபகாந்தரபரித்யாகபூர்வகமாய், பகவத்ரக்ஷகத்வாநுமதிரூபமாய், சைதந்யகார்யமாய், ப்ரார்த்தநாகர்ப்பமாய், பகவந்முகவிகாஸஹேதுவாய், ஸ்வரூபாநுரூபமாய், வ்யபிசார விளம்ப விதுரமாயிருப்பதொரு அத்யவஸாயாத்மக ஜ்ஞாநவிஶேஷம். இதில் ஸாராம்ஶம் விஸ்ரம்பவிசேஷமென்றும் விஸ்ரம்பவிதுரமானபோது அகார்யகரமென்னுமிடமும் † த்வயத்திலே சொன்னோம். உபாயாந்தரபரித்யாகபூர்வகத்வமும், ஸ்வஸ்மிந் உபாயத்வப்ரதிபத்தி ராஹித்யமும், வாத்ஸல்யாதிகுணவிஶிஷ்டவஸ்துவிஷயத்வமும் துடக்கமானவை இப்ப்ரதிபத்தி விஶேஷத்துக்கு ஸ்வரூபம். (மாமேகம் ஶரணம் வ்ரஜ) என்கிறதுதானே ப்ரமாணம். பரித்யக்தஸாத்யஸாதநனாய் ஸ்வீகாரத்தில் உபாயத்வப்ரதிபத்திக்கு அயோக்யனாயிருக்குமவனிதுக்கதிகாரி. இந்த புத்திவிஶேஷம் ஏககரணயுக்தமாகவுமாம் கரணத்ரயயுக்தமாகவுமாம். இதிலுபாயத்வமில்லாமையாலே பலத்துக்கு வ்யபிசாரமில்லையென்னுமிடமும் த்வயத்திலேசொன்னோம்.

ஸௌலப்யாதிகுணவிஶிஷ்டவஸ்துகோசரத்வமிரண்டிலுமுண்டு. த்யாகவிஶிஷ்டத்வமும் நைரபேக்ஷ்யமுமிங்கு அதிரிக்தமானவர்த்தம்.

ஆக, பூர்வார்த்தத்தாலே- 1 த்யாஜ்யஸ்வரூபத்தையும், 2 தத்பாஹுள்யத்தையும், 3 த்யாகத்தையும், 4 தத்ப்ரகாரத்தையும், 5 அதினுடைய அங்கத்வத்தையும், 6 ஸ்வீகார்யவஸ்து ஸ்வரூபத்தையும், 7 இதினுடையநைரபேக்ஷ்யத்தையும், 8 ஸ்வீகாரப்ரகாரத்தையும், 9 ஸ்வீகாரத்தையும் சொல்லிற்று.

---

† தனித்வயத்திலே என்றபடி.

—அஹம்பதார்த்தம்—

(எ) இனிமேல், ப்ரபத்தவ்யக்ருத்யத்தையும், ப்ரபந்நக்ருத்யத்தையும் சொல்லுகிறது. விரோதிநிவர்த்தகத்வம் ப்ரபத்தவ்யக்ருத்யம்; நிர்பரத்வம் ப்ரபந்நக்ருத்யம். [அஹம்]—ஸர்வஜ்ஞத்வாதி குணவிசிஷ்டனான நான். கீழ், உபாயபரிக்ரஹத்துக்கு ஏகாந்தங்களான குணவிசேஷங்களைச் சொல்லிற்று; இங்கு, கார்யகரத்வத்துக்கு ஏகாந்தமான குணவிசேஷங்களைச் சொல்லுகிறது. வாத்ஸல்யாதிகளில்லாதபோது உபாயபரிக்ரஹமின்றிக்கே யொழியுமாபோலே, ஜ்ஞாநாதிகளில்லாதபோது கார்யகரமன்றிக்கே யொழியும். அசித்தும் சேதநனும் சேதநாந்தர்யாமித்வமும் பரத்வமும் வ்யூஹமும் தொடக்கமானவைகளல்ல வ்யாவர்த்யம், விபவாந்தரங்களும் இவ்விபவந்தன்னில் முன்னும் பின்னும் வ்யாவர்த்யம். தேஹேந்த்ரியமநःப்ராணாதிகளிலே ஆத்மபுத்தி பண்ணியிருக்குமவனுடைய அஹம்சப்த ப்ரயோகம் தத்ததிவஸ்துமாத்ரபர்யவஸிதமாயிருக்கும்; தேஹாதிவ்யதிரிக்த வஸ்துமாத்ர விஷயஜ்ஞாநவானுடைய அஹம்சப்தப்ரயோகம் சேதநமாத்ரபர்யவஸிதமாயிருக்கும்; ஈஶ்வரனுடைய அஹம்சப்தப்ரயோகம் உபயவ்யாவ்ருத்தமாயிருக்கும்.

ஜ்ஞாநமும் சக்தியும் சேஷித்வமும் பூர்த்தியும் இவ்விடத்தே அநுஸந்தேயம். இவையில்லாதபோது மேல்சொல்லுகிற விரோதி நிவ்ருத்தி கூடாது. இங்கு சக்தியாகநினைக்கிறது, :—1 (யானும்... இசைந்து) என்றும் 2 (இசைவித்தென்னை) என்றும் சொல்லுகிறபடியே சேதநனுடைய அநிவாதுஜநநத்துக்கும் ஸம்ஸார விமோசநத்துக்கு மடியான ஸாமர்த்யத்தை. அத்தைப்பற்ற ப்ரளயாபதி விமோசநமும், ஸர்வஸௌலப்யமும், ஸர்வவஸ்துக்களிலும் பரிஸமாப்யவ்யாபநவ்ருத்தியும் தொடக்கமானவை அத்யந்தஸுலபங்களென் னும்படியிருக்கும். இதில் சொல்லுகிற குணவிசேஷங்கள் சேதநனுடைய அநந்யஸாதநத்வத்துக்கும் ஈஶ்வரனுடைய பலப்ரதாத்ருத்வத்துக்கும் உபயுக்தங்களாயிருக்கும். (மாம்)என்று-[(உதீர்ண ருதரயிசரண:)என்கிறபடியே]இவன்கால்தன்றலையிலே பட நிற்கும் நிலையைச்சொன்னான்; [அஹம்] என்று-தன்கால் அவன்தலையிலேபட நின்றநிலையைச் சொல்லுகிறான். 3 (தேர்மன்னர்க்காய் அன்று தேரூர்ந்தானாகிலும்-தார்மன்னர் தங்கள் தலைமேலான்சாழலே) என்றதிறே. (மாம்) என்று- கையுமுழவுகோலுமாய் நின்றவேஷத்தைக் காட்டினான். [அஹம்] என்று-கையுந்திருவாழியுமாய்நின்ற வேஷத்தை

1. பெரியதிருவந்தாதி உசு.
2. தி-வா.ரு-அ-கூ.
3. தி-மொ. கக-ரு-அ.
[] குண்டலிதஞ்சிலகோசங்களிலில்லை.

க்காட்டுகிறான் * செழுந்தார்விசயனிறே. 1 (பற்றலர்வீயக்கோல் கையிற் கொண்டு) 2 (சங்கொடுசக்கரமேந்துந்தடக்கையன்) என்னா நின்றதிறே. (மாம்) என்று தர்மங்களைக் குலைக்கும் நிலையைக்காட்டினான்; அஹமென்று - அதர்மங்களைக்குலைக்கும் நிலையைக்காட்டுகிறான். மாம் என்கிறது உக்திக்கு விபரீதமான நிலையை; அஹமென்கிறது - அநுஷ்டாநத்துக்கு விபரீதமானநிலையை.

—த்வா பதார்த்தம்.—

(௮) (த்வா)—ஸாத்யமான ஸாதநங்களை ஸவாஸநமாகத்யஜித்து ஸித்தோபாய ஸ்வீகாரம்பண்ணியும், தேஹாத்மப்ரமந்தன்னையும், தேஹாதுத்தீர்ணமான ஆத்மவஸ்துவில் ஸ்வாதந்த்ர்யபுத்தியையும், அந்யசேஷத்வப்ரதிபத்தியையும், தச்சேஷத்வமாத்ரபுத்தியையும், ஸாத்யாந்தரங்களில் ஸாத்யதாபுத்தியையும், ஸாதநாந்தரங்களில் ஸாதநத்வபுத்தியையும், ஸித்தோபாயஸ்வீகாரத்தில் உபாயத்வபுத்தியையும், க்ஷுத்ரஸாத்யங்களகப்பட ப்ரவ்ருத்தி ஸாத்யமாயிருக்க துர்லபமான மோக்ஷபுருஷார்த்தத்துக்கு நிவ்ருத்தி ஸாத்யத்வம்அகடிதமென்கிற புத்திவிசேஷம் துடக்கமானவற்றையும் ஸவாஸநமாக த்யஜித்திருக்கிறவுன்னை.

கீழிற்பதத்தில் ஈஸ்வரஸ்வரூபஞ் சொல்லிற்று; இப்பதம் அதிகாரிஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறது. அங்கு, ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வங்களும் ப்ராப்தியும் நைரபேக்ஷ்யமும் சொல்லப்பட்டது; இங்கு, அஜ்ஞாநாசக்திகளையும் அப்ராப்தியையும் ஆகிஞ்சந்யத்தையும்சொல்லுகிறது. ஸ்வீகாரத்தி லுபாயபுத்தியிலுமகப்படச் சோம்பனாயிருக்கிற வுன்னை. இந்தப்ரதிபத்தி விசேஷத்திலும் உபாயத்வபுத்தி அநுவர்த்திக்குமாகில் உபாயாந்தரத்தோடொக்கு மித்தனை. ஈஸ்வரனே உபாயமென்கிற அத்யவஸாய விசேஷத்தில் ஸாதநத்வபுத்தியும் அஸக்ருத்கரணமுமுண்டானபோது, ததேகோபாயத்வமில்லை. ஆக எல்லாங்கூட, த்யாகஸ்வீகார விசிஷ்டனான வுன்னையென்றபடி.

—ஸர்வபாப பதார்த்தம்.—

(௯) (ஸர்வபாபேப்ய꞉) கீழ்நிவ்ருத்திக்கேகாந்தமான குணவிசேஷங்களைச் சொல்லிற்று; இது நிவர்த்யஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. பாபமாகிறது;—இஷ்டவிரோதியாயிருக்குமதுவும், அநிஷ்டஹேதுவாயிருக்குமதுவும். மோக்ஷப்ரகரணமாகையாலே இவ்விடத்தில் இஷ்டவிரோதிகளாகிறன-ஹவல்லா ஹவிரோதிகள். ஜ்ஞாநவிரோதியும், ருசிவிரோதியும், உபாயவிரோதியும் பண்டே நிவ்ருத்தமாய்த்து, இனிப்ராப்தி

---

1. தி.மொ.௨-௩-௧. 2. திருப்பாவை. ௧௪.

விரோதியிறேயுள்ளது? அத்தைப்ரதிபாதிக்கிறதிப்பதம். 1 (புண்யபாபே விதூய) என்றும் 2 (சார்ந்த விருவல்வினைகளும்சரித்து) என்றும் இத்யாதிகளிலே-பாபத்தோபாதி புண்யமும் த்யாஜ்யமாகச் சொல்லிற்றிறே; ஆகையாலே, புண்யபாபங்களிரண்டையும் பாபஶப்தத்தாலே சொல்லுகிறது.

பஹுவசநத்தாலே - அவற்றினுடைய பாஹுள்யத்தைச் சொல்லுகிறது. அதாவது- 3 (பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்) என்கிறபடியே- அஜ்ஞாநந்துடங்கி ஶரீரஸம்பந்த மெல்லையாக வுண்டானவை.

ஶரீரபாதஸமயத்தில் ஈஶ்வரஸ்ம்ருதிக்கு விஷயபூதனும்படியும், வாங்மநஸாதிலயப்ரகாரமும், உத்க்ரமணப்ரகாரமும், ஹார்தாநுக்ரஹகார்யமான மார்க்க விஶேஷப்ரகாஶமும், ஹ்ருதயகுஹாநிர்கமநமும், ஸூக்ஷ்மஶரீரஸம்ஸர்கமும், அர்சிர்வாஸர ஶுக்லபக்ஷோத்தராயண ஸம்வத்ஸர வாயு பாஸ்கர சந்த்ர வித்யுத் வருணேந்த்ர ப்ரஜாபதிகளாகிற ஆதிவாஹிகர்களுடைய ஶ்லாகாவிஶேஷங்களும், அண்டாவரணாதிக்ரமணமும், ப்ரக்ருதிலங்கநமும், விரஜாப்ராப்தியும், ஸூக்ஷ்மஶரீரவிஶ்லேஷமும், அமாநவகரஸ்பர்ஶமும், அகாலகால்யதிவ்யதேஶப்ராப்தியும், அபஹதபாப்மத்வாதிகுணகணப்ராதுர்பாவமும், பகவத்ஸங்கல்பகல்பிததிவ்யதேஹப்ரவேஶமும், அப்ராக்ருதஸரஸ்ஸம்ஸர்கமும், திவ்யாப்ஸரஸ்ஸங்கஸத்காரமும், அப்ராக்ருதமண்டலப்ராப்தியும், பகவத்ஸௌரபாதிஸம்ஸர்கமும், அப்ராக்ருதகோபுரப்ராப்தியும், ஸூரிபரிஷத்ப்ரத்யுத்கமநமும், ராஜமார்ககமநமும், ப்ரஹ்மவேஶ்மப்ரவேஶமும், ஸூரிபரிஷந்மண்டபப்ராப்தியும், ஸபத்நீகஸர்வேஶ்வரதர்ஶநமும், ஸ்துதிப்ரணாமாஞ்ஜலிப்ரமுகஸம்ப்ரமாநுவர்த்தநமும், பரமாத்மஸமீப ப்ராப்தியும், பாதபீடபர்யங்காரோஹணமும், பகவதுத்ஸங்கஸங்கமும், ஆலோகநாலாபாலிங்கநாத்யநுபவமும், ஸ்வஸ்வரூபகுணவிக்ரஹாத்யநுபவஜநித ப்ரீதிப்ரகர்ஷமும், நாநாவிதவிக்ரஹபரிக்ரஹபூர்வகஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தோசிதமான ஸர்வப்ரகார கைங்கர்யகரணமுமாகிற ப்ராப்திவிஶேஷங்கள் இதுக்கநந்தரத்திலே யநுஸந்தேயங்கள்.

ஸர்வஶப்தத்தாலே-(ஸர்வதர்மாந்பரித்யஜ்ய) என்று த்யாஜ்யங்களாகவிஹிதங்களாய் ஶாஸ்த்ரீயபுத்த்யா அநுஷ்டேயங்களாயிருக்கிற தர்மங்களில் உபாயத்வபுத்தியையும், அபுத்திபூர்வகமாக அநுஷ்டிதமான உத்தராகத்தையும், ப்ராரப்தத்தையும், லோகஸங்க்ரஹார்

1. முண்ட-உப. ௩-௧-௩:    2. தி-வா. ௧-௫-௧௦.
3. திருவிருத்தம் ௧.

தமாக வநுஷ்டேயங்களான தர்மவிசேஷங்களில் ஸ்வார்த்ததா புத்தியையும், ஆவ்ருத்த ப்ரபத்தியையும், பகவத் பாகவதவிஷயங்களில் உபசாரபுத்த்யா பண்ணும் அபசாரங்களையும், (பரி)என்கிற உபஸர்கத்தாலும் (ஏக) ஶப்தத்தாலும் சொன்னவற்றினுடைய அநுவ்ருத்தியையும் சொல்லுகிறது.

அதிகாரிகுறையாலேயாதல் உபாயபூதனான ஈஶ்வரன்குறையாலேயாதலிறே பாபங்களில் சிறுது கிடப்பது. உபாயாந்தரபரித்யாகமும் ஸித்தோபாயபரிக்ரஹமும் புஷ்கலமாகையாலே, அதிகாரிபக்கல் குறையில்லை. ஜ்ஞாநஶக்த்யாதிபுஷ்கலமாகையாலே, உபாயபூதனான ஈஶ்வரன்பக்கல் குறையில்லை.

—மோக்ஷயிஷ்யாமி பதார்த்தம்.—

(க0) (மோக்ஷயிஷ்யாமி-) கீழில்மூன்றுபதமும், நிவர்த்தகஸ்வரூபத்தையும், நிவர்த்யாஶ்ரயத்தையும், நிவர்த்யத்தையும், தத்பாஹுள்யத்தையும் சொல்லிற்று. இந்தபதம், நிவ்ருத்தியையும் நிவ்ருத்திப்ரகாரத்தையும் சொல்லுகிறது.

1 (சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே) என்கிறபடியே - அநாதிகாலஸஞ்சிதங்களான கர்மவிசேஷங்களெல்லாம் உன்னைக் கண்டுகூசி தானேவிட்டுப்போம்படி பண்ணுகிறேன். 2 (வானோமறிகடலோ) என்றும் 3 (யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம்) என்றும் சொல்லுகிறபடியே, வேறுசிலருடைய விசைவுகொண்டு பஹுப்ரயாஸத்தாலே போக்கவேண்டாதே, தன்னடையே விட்டுப்போம்படி பண்ணுகிறேன். பூர்வாகத்தோடு உத்தராகத்தோடு வாசியற ப்ரதிபந்தகங்களெல்லாம், அக்நிஸ்ப்ருஷ்டமான இஷீகதூலம்போலே *ஆயர்குலத்தினில்தோன்றும் மணிவிளக்கைக்கிட்டினால் 4 (தீயினில்தூசாகும்) என்கிறபடியே பிணமுங்காணவொண்ணாதபடி தக்தமாய்ப்போமிறே. பாபங்களாகிறன:—குப்பையிலாமணக்குபோலே உயரவெழுந்து பாம்புபோலேமிடத்தைப்பிடிப்பதொன்றன்றே. சேதநன்பண்ணின கர்மங்கள் க்ஷணத்வம்ஸிகளாகையாலே அப்போதே நசித்துப்போம், அஜ்ஞதையாலே கர்த்தாவானவிவனும் மறந்துபோம், ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனவீஶ்வரன் ஒன்றொழியாமேயுணர்ந்து கொண்டிருந்து ப்ராப்த காலங்களிலே தப்பாமே நிறுத்து அநுபவிப்பிக்கும். ஆகையாலே கர்மங்களாகின்றன - அவனுடையநிக்ரஹங்கள். ‘இக்கர்மங்களைப்பண்ணிப் போருகிறசேதநன், ஸத்த்வம்தலையெடுத்து ஒருக்காலவன் திருவடிகளி

1. பெரியாழ்வார் திருமொழி ரு-ச-ரு.
2. பெரியதிருவந்தா-ருச.
3. பெரியதிருவந்தா. உகூ.
4. தி-பாவை-ரு.

லே தலைசாய்த்தால், விலக்காமைபற்றாசாக ரக்ஷணஸ்வபாவனாயிருக்கும் ஈஶ்வரன் இவ்வளவும்பெற்றால் விடானிறே. ஆகையாலே, இவனுடைய பூர்வாவத்தை க்ஷமித்து உத்தராவத்தில் அவிஜ்ஞாதாவாயிருக்கும். இனியாரைக்கைக்கொண்டவை ஜீவிப்பது? உணர்ந்தபோது இவன்பக்கல் வ்யாமோஹாதிசயத்தாலே 1 (நன்றுசெய்தார்) என்றுஅவைதன்னை குணமாகக்கொள்ளுமாகையாலே, இவ்வதிகாரிக்கு ஒருப்ரகாரத்தாலும் அநாதிகாலார்ஜிதங்களான கர்மவிஶேஷங்களைக்குறித் தஞ்சவேண்டா. (மோக்ஷயிஷ்யாமி) என்கிறவார்த்தை தப்பாது என்று விஶ்வஸ்தனாயிருக்குமத்தனை வேண்டுவது’ என்று, நஞ்ஜீயரருளிச்செய்வர்.

2 (போர்த்தபிறப்பொடு நோயொடு மூப்பொடிறப்பவை பேர்த்துப்பெருந்துன்பம் வேரறநீக்கித் தன்தாளின்கீழ்ச் சேர்த்தியவன் செய்யுஞ் சேமத்தையெண்ணித் தெளிவுற்று) 3 (தெளிவுற்றுவீவின்றி நின்றவர்க்கின்பக்கதிசெய்யும்) என்று கீழருளிச்செய்தவார்த்தையறிந்தவர்களுக்கு அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமான இஷ்டப்ராப்தியன்றோபலம், ஆயிருக்க அநிஷ்டநிவ்ருத்திமாத்ரத்தையே பலமாகச்சொல்லுவானென், பகவல்லாபவ்யதிரேகமாக அநிஷ்ட நிவ்ருத்திமாத்ரமே பலமாயிருப்பது கேவலனுக்கன்றோ, முமுக்ஷுவானவிவ்வதிகாரிக்கு இரண்டும் பலமாய், அதுதன்னில் இஷ்டப்ராப்தி ப்ரதானமான பலமாயிருக்கும். அத்தைச்சொல்லாதே ததங்கதயா உபாதேயமான ப்ரதிபந்தக நிவ்ருத்திமாத்ரத்தையே பலமாகச்சொல்லி விடுவானென்னென்னில்;--விரோதி நிவ்ருத்தியும் பகவத்ப்ராப்தியுமாகிறபலத்வயத்திலும்வைத்துக்கொண்டு ஒரு பலத்தைச்சொன்னால் பலாந்தரம் தன்னடையே வருகையாலே சொல்லிற்றில்லை. 4 (மாமேவைஷ்யஸி ஸத்யந்தே) என்று-கீழிலுபாயத்துக்குச்சொன்ன பலந்தானே இவ்வுபாயத்துக்கு பலமாகையால் வேறிதுக்கு பலமின்றிக்கேயொழிகையாலே, பலகதநம் பண்ணிற்றில்லையென்னவுமாம்.

ஆனால்விரோதிநிவ்ருத்திதன்னைச் சொல்லுவானென்னென்னில் ; (மாமேவைஷ்யஸி) என்று-ஸ்வப்ராப்திலக்ஷணமான பலத்தையாய்த்து அங்குச்சொல்லிற்று; அதுக்கு பூர்வபாவியாய்ப்ரதிபந்தக நிவ்ருத்தி பூர்வகமாயிருக்கிற பலவிஶேஷம் அங்கு அநுக்தமாகையாலே தாத்ருஶமான பலவிஶேஷம் இவ்வதிகாரிக்கு அதிகமாகையாலும் இங்குச் சொல்லிற்று. இவனுக்கபிலஷிதமாய் பகவதநுபவாதிரூபமாயிருக்கிற ப்ரதானபலம், திரோஹிதங்களாயிருக்கிற மணித்யுமணிதீபாதிகளினு

1. முதலா. ச-கூ-உ.
2. தி-வா. எ-ரு-க0.
3. தி-வா. எ-ரு-கக.
4. கீதா. கஅ-சுரு.

டைய ப்ரகாசாதிகளைப்போலே ஸ்வதஸ்ஸித்தமாய் ப்ரதிபந்தகநிவ்ருத்திமாத்ரஸாகாங்க்ஷமாயிருக்கையாலே, நிவ்ருத்திப்ரதிபந்தகனானவிவனுக்கு ஸ்வத ஏவ ஆவிர்பாவமாயிருப்பதொன்றாகையாலே தனித்துச் சொல்லவேண்டாவிறே. 1 (வழித்தங்குவல்வினையை) என்றும் 2 (கண்ணபிரானை விண்ணோர்கருமாணிக்கத்தையமுதைநண்ணியும் நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு) என்றும் இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே - தேஹஸம்பந்தப்ரமுகமான ப்ரதிபந்தகவர்க்கம் ஔபாதிகமாயிறேயிருப்பது; ஆகையாலே, வந்தேறியான விரோதி கழிந்தால் தன்னடையே வருகையாலே சொல்லிற்றில்லை.

—[மாஶுசஶ்ஶ்லோகார்த்தம்]—

(கக) [மாஶுச:]—கீழெல்லாங்கூட, ஶோகநிவ்ருத்திக்குவேண்டும் பரிஹாரங்களை விஸ்த்ருதமாகச்சொல்லிற்று; இப்பதம், 'ஶோகநிவ்ருத்தியைச்சொல்லுகிறது. ஸாதநாந்தர ஸம்பந்தமும், ஸுகரஸாதநாதர்ஶநமும், விரோதிஸமூஹாநுவ்ருத்தியுமிறே ஶோககாரணம்.

துஷ்கரங்களான ஸாதநாந்தரங்களை வாஸநாஸஹிதமாக த்யஜிக்கச் சொல்லுகையாலே, ஸாதநாந்தரநிபந்தநமாக ஶோகிக்கவேண்டா. ஸர்வ ஸுலபனாய் நிருபாதிகவத்ஸலனாய் ஸர்வஸ்வாமியாய் ஶீலவானாய் நிரபேக்ஷஸாதநபூதனாய் பரமகாருணிகனாயிருக்கிறதன்னை நிரபேக்ஷஸாதநமாக ஸ்வீகரிக்கச்சொல்லுகையாலே, ஸுலபஸாதநாதர்ஶநத்தாலே ஶோகிக்கவேண்டா. 'ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ப்ராப்தனாயிருக்கிறநான், ஸாம்ஸாரிகஸகலதுரிதங்களையும் ஸவாஸநமாகப்போக்கி, நிரதிஶயாநந்தயுக்தனாம்படி பண்ணுகிறேன்' என்கையாலே விரோதிபாஹுள்யத்தை யநுஸந்தித்து ஶோகிக்கவேண்டா. உபாயஸ்வரூபத்தை யநுஸந்தித்தாலும் ஶோகிக்க யோக்யதையில்லை. அதிகாரிஸ்வரூபத்தை யநுஸந்தித்தாலும் ஶோகிக்க யோக்யதையில்லை. பலஸ்வரூபத்தை அநுஸந்தித்தாலும் ஶோகிக்க யோக்யதையில்லை. உபாயம் ஸுஶகமாகையாலே உபாயத்தினுடைய துஷ்கரத்வ நிபந்தநமாக ஶோகமில்லை. அதிகாரிக்கு கர்த்தவ்யமில்லாமையாலே தந்நிபந்தநமாக ஶோகிக்கவேண்டா. ஸர்வபாபமோக்ஷத்தை பலமாகச்சொல்லுகையாலே பலஸ்வரூப ப்ரயுக்தமாக ஶோகிக்கவேண்டா. த்யாஜ்யங்களில் கிடப்பதொன்றில்லாமையாலே ஶோகிக்கவேண்டா. கர்த்தவ்யம் மாநஸவ்யாபாரமாத்ரமாகையாலே ஶோகிக்கவேண்டா. ப்ரதிபந்தகம் நிஶ்ஶேஷமாகநிவ்ருத்தமாகையாலே தந்நிமித்தமாக ஶோகிக்க யோக்யதையில்லை.

1. பெரியதிருவந்தாதி ருஎ. 2. தி-வா. ரு-க-ரு.

உபாயாந்தரஶ்ரவணத்தில் ஶோகியாதொழிகைக்கு யோக்யதை யில்லாதாப்போலே இவ்வுபாயஶ்ரவணத்தில் ஶோகிக்கயோக்யதை யில்லை. ஸாதநாந்தரஶ்ரவணத்தில் ஶோகாநுவ்ருத்தியும் ஜ்ஞாத்ருத்வ கார்யம். ஸித்தஸாதநஶ்ரவணத்தில் ஶோகாபாவமும் ஜ்ஞாத்ரு த்வகார்யம். உபாயாந்தரஶ்ரவணத்தில் ஶோகாபாவமுண்டாய்த்தா கில் த்யாகஸ்வீகாரங்களில் அந்வயமில்லை; ப்ரபத்த்யுபாய பரிக்ரஹ த்துக்குப்பின்பு ஶோகாநுவ்ருத்தி யுண்டாய்த்தாகிலும் த்யாகஸ்வீகா ரங்களிலந்வயமில்லை. ஸ்வாமிக்காய்த்து பலித்வமுள்ளது; பலியாயி ருக்குமவனுக்காய்த்து உபாயாநுஷ்டாத்ருத்வமுள்ளது. ஸ்வாமி ஸ்வம் மான வஸ்துவையிழந்தால் ஶோகிக்கும், பலி பலமில்லாதபோது ஶோ கிக்கும், அநுஷ்டாதா அநுஷ்டாநவிரோதம்பிறந்தால் ஶோகிக்கும்; மூன்றிலுமனக்கந்வயமில்லாமையாலே ஶோகிக்கப்ராப்தியில்லை. முன்பு ஶோகித்திலனாகில் உபாயாதிகாரமில்லை, பின்பு ஶோகித்தானாகில் உபே யாதிகாரமில்லை. முன்பு ஶோகித்திலனாகில் உபாயாந்தரதோஷமறிந்தி லனும், பின்பு ஶோகித்தானாகில் உபாயகுணமறிந்திலனும். ஶோகா நுவ்ருத்திக்கு ஹேது உபாயஜ்ஞாநம்.

ஆக ஶோகநிவ்ருத்தியையும், ஸர்வபாபவிமோசநத்தையும், அப் பாபங்களுக்காஶ்ரயமான சேதநனுடையஸ்வரூபத்தையும், அவற்றுக்கு நிவர்த்தகனான ஈஶ்வரனுடைய ஜ்ஞாநஶக்த்யாதிகுண விஶேஷங் களையும், அவை கார்யகரமாம்படிபண்ணக்கடவதாய் சேதநகதமாயிருக் கிற புத்திவிஶேஷத்தையும், புத்திவிஶேஷப்ரகாரத்தையும், பு த்திவிஶேஷத்திலுபாயத்வபுத்திராஹித் யத்தையும், புத்திவி ஶேஷவிஷயத்தையும், அதுக்கு அங்கபூதமானபுத்த்யந்தரதத்பரி கரபரித்யாகத்தையும், அதுக்கு யோக்யதாபாதகங்களான ததிதரங்க ளினுடைய த்யாகத்தையும்சொல்லித் தலைக்கட்டுகிறது.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

பரந்தபடி

## ௩-வது த்வயப்ரகரணம்.

## —[உபோத்காதம்.]—

திருமந்த்ரத்தாலே ஸுஶிக்ஷிதமான பகவதநந்யார்ஹஶேஷ த்வஜ்ஞாநத்தை யுடையனாய், சரமஶ்லோகத்தாலே பகவத்ப்ராப் திக்கு ப்ரபத்திவ்யதிரேகேண விளம்ப விதுரமாய் ஸ்வரூபாநு

ரூபமாயிருப்பதொரு ஸாத⁴நவிஶேஷமில்லையென்று நிர்ணயித்து ப்ராப
கஸ்வீகாரபூர்வகமாகப்ராப்யத்தை லபி⁴க்கவேணுமென்கிற கௌதுகத்
தையுடையனாயிருக்கு மதி⁴காரிக்கு, ஸ்வஶேஷத்வாநுரூபமான உபா
யோபேயங்களை ப்ரதிபாதி³க்கிறது த்³வயம்.

ஜ்ஞானத்துக்கு ப²லம் தத³நுரூபமானவநுஷ்டா²நமாகையாலே ரஹ
ஸ்ய த்³வயத்திலும் ப்ரதிபாதி³தமான வுபாயோபேய விஷயஜ்ஞாநம் அநு
ஷ்டா²நஶேஷமாயிறே யிருப்பது.

ஆகையாலே உபாயவிஷயஜ்ஞாநத்தினுடைய ஸாப²ல்யஹேது
பூ⁴தமான உபாயாநுஷ்டா²நத்தை ப்ரதிபாதி³க்கிறது பூர்வவாக்யம்;
உபேயவிஷயஜ்ஞாநஸாப²ல்யஹேதுவாயிருக்கிற உபேயாநுஷ்டா²நத்து
க்கு பூர்வபா⁴வியாயிருக்கிற உபேயப்ரார்த²நத்தை ப்ரதிபாதி³க்கிறது
உத்தரவாக்யம்.

இதில் ப்ரதிபாதி³தமான உபாயாநுஷ்டா²நமும் உபேயப்ரார்த²நையு
மில்லாதபோது இவ்வதி⁴காரிக்கு ஸாத⁴கவ்யாவ்ருத்தியும் ஸாத்⁴யாந்தர
நிஷ்டா²தி வ்யாவ்ருத்தியு மின்றிக்கே யொழியக்கடவது.

ஆகையாலே, ஸ்வரூபாநுரூபமான ஸாத⁴நஸாத்⁴யங்களிரண்டை
யும் ப்ரதிபாதி³க்கிறவாக்யத்³வயமும் அநுஸந்தே⁴யமாயிருக்கும்.

பூர்வவாக்யாநுஸந்தா⁴நமில்லாதபோது ஸ்வவஶேக ஸாத⁴நத்வலா
ப⁴மில்லை; உத்தரவாக்யாநுஸந்தா⁴நமில்லாதபோது ஸ்வவஶேகஸாத்⁴ய
த்வலாப⁴மில்லை. † உத்தரவாக்யாநுஸந்தா⁴நம் ஸாத⁴கனுக்கும் ஸாதாரண
மாயிருக்கும், பூர்வவாக்யாநுஸந்தா⁴நம் அதி⁴காரித்ரய ஸாதா⁴ரணமா
யிருக்கும்; ஆகையாலே, உப⁴யாநுஸந்தா⁴நமு முண்டானாலாய்த்து அதி⁴
காரித்ரயவ்யாவ்ருத்தியுமுண்டாவது.

வாக்யத்³வயத்திலும் ப்ரதிபாதி³க்கப்படுகிற ஸாத⁴நஸாத்⁴யங்களை
யொழிந்த இதரஸாத⁴நஸாத்⁴யங்களிரண்டுக்கும் ஸ்வரூபாநநுரூபத்வம்
அவிஶிஷ்டமா யிருக்குமாகையாலே, அவை த்யாஜ்யங்களாகக்கடவன.
இவை யிவனுக்கு ஸ்வரூபத்துக்கநுரூபங்களாயிருக்கையாலே அத்யந்த
முபாதே³யங்களாகக் கடவது. ஸ்வரூபாநுரூபமாயிருக்கிற இந்த உபா
யோபேயங்களிறே வேத³தாத்பர்ய விஷயம்.

1 (தஸ்மாத³பி வத்⁴யம் ப்ரபந்நந் நப்ரதிப்ரயச்ச²ந்தி) 2 (தஸ்மாந்
ந்யாஸமேஷாந் தபஸாமதிரிக்தமாஹு:) 3 (ந்யாஸஏவாத்யரேசயத்)
4 (யோஸௌ ப்³ரஹ்மாணம்) 5 (த்வமேவஶரணங்க³த:) 6 (ஸக்ருதே³வப்ரபந்

†. இவ்வாக்யத்துக்குஸரியானவர்த²ங்கேட்டுக் கொள்ளக் கடவது.

1. யஜு. கா-காண்ட. ரு-ப்ர. ௫௫.
2. தை-உப. நா. ௬.
3. தை-உப. நா. ௬.
4. ஶ்வே-உப. ௬-௧௮.
5. ராமா. ஸு. ௫௮-௫௫.
6. ராமா-யு. ௧௮-௫௫.

நாய) 1 (பத்³தா⁴ஞ்ஜலிபுடம்) 2 (மஹத்யாபதி³ஸம்ப்ராப்தே ஸ்மர்தவ்ய:) 3 (நமஶ் சக்ருர்ஜநார்த³நம்) 4 (அநந்யஸாத்⁴யே ஸ்வாபீ⁴ஷ்டே), 5(யே நயேநயாதா நச்ஶதி) 6 (அநுஸஞ்சரந்) 7 (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) 8 (க்ரியதாமிதிமாம்வத³) 9 (தந்நியுக்த: கரிஷ்யாமி) என்று இத்யாதி³களிற் சொல்லுகிறபடியே-இந்த உபாயோபேயங்கள்தான் ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸாதி³ஸித்³த⁴ங்களானவளவன்றிக்கே, 10 (கழல்களவையே சரணாகக்கொண்ட) 11 (நாகணைமிசைநம்பிரான் சரணேசரண்) 12 (அடிக்கீழமர்ந்து புகுந்தேனே) 13 (நாயேன் வந்தடைந்தேன்) 14 (உலகமளந்தபொன்னடியேயடைந்துய்ந்தேன்) 15 (த்வத்பாத³மூலம் ஶரணம் ப்ரபத்³யே) 16 (அநந்யஶரணஶ் ஶரணமஹம்ப்ரபத்³யே),17 (வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்) 18 (அடியேனையாட்கொண்டருளே) 19 (ஐகாந்திகநித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி) 20 (நித்யகிங்கரோப⁴வாநி) என்றும், இத்யாதி³களிற் சொல்லுகிறபடியே- ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அநுஷ்டி²த்ததும் ப்ரார்தி²த்ததும் இவற்றையேயாகையாலே நமக்கு மிவையே உபாதே³யங்கள்.

ப்ராமாணிகத்வ முண்டேயாகிலும் ஆசார்யருசிபரிக்³ருஹீதத்வ மில்லாத போது ஆத³ரணீயத்வமில்லையிறே. ப்ராமாணிகத்வ முண்டாயிருக்கச்செய்தேயும், ஶிஷ்டர்களுடைய அநுஷ்டா²நராஹித்யத்தாலேயிறே அஷ்டகையில் பஶ்வாலம்ப⁴நம் அகர்த்தவ்யமாகிறது.

21 (ஆசார்யவாந்புருஷோவேத³) 22 (ஸவத: பரமோமத:) 23(த⁴ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம்) 24 (ஆசார்யநிஷ்டா²மகாங்க்ஷ) இத்யாதி³களிற் சொல்லுகிறபடியே-ஆத³ரணீயதைக்கு ப்ரயோஜகஹேதுவான ஆசார்யருசிபரிக்³ரஹம் இவற்றுக்குக்கனத்திருக்கையாலே இவையே ஆத³ரணீயங்கள்.

பிள்ளை, ஜீயரை, 'ப்ரபத்திக்கு ரிஷிச்ஶந்தோ³தே³வதாதி³கள் அநுஸந்தே⁴யங்களன்றிக்கேயொழிவானென்? ப்ரமாணம் சுருங்கியிருப்பானென்?அதி⁴காரி சுருங்கியிருப்பானென்' என்றுகேட்க; 'இதிலர்த²த்துக்குக்

---

1. ரா.யு.க அ-உஎ.
2. பார-ஸபா.கூO-சக.
3. பார-ஆரண்.ககூஉ-நள.
4. வி-ஸம்.
5. பரமஸம்.
6. தை-உப.ஸ்ருஷ்ட கO-நு.
7. ரா-அயோ.௯க-உஎ.
8. ரா.ஆர.கநு-எ.
9.
10. தி. வா.நு-அ-கக.
11. தி.வா.நு-கO-கக.
12. தி. வா. சு-கO-கO.
13. தி.மொ.க-கூ.க.
14. தி. மொ.நு-அ-கூ.
15. ஸ்தோத்ரரத்நம்.உஉ
16. ஶரணாகதிகத்³யம்.
17. தி-வா-௯-௯-க.
18. தி-மொ-க-கூ-அ.
19. ஸ்தோத்ரரத்நம்.சசு.
20. ஶரணாகதிகத்³யம்.
21. சா-உப-சு-கச-உ.
22. ஸஹஸ்ரநாம.
23. ஆபஸ்த-த⁴ர்ம-க-க-ச.
24.

கூட்டுமே வேண்டிலென்றோ இதுக்குக் கூட்டுவேண்டுவது, 1 (ருஷ்யாதீம் ச்ச கரந்யாஸமங்கந்யாஸஞ்சவர்ஜயேத்) என்றதிறேப்ரமாணம்; 2 (யோப்ரஹ்மாணம் விதயாதி பூர்வம்) 3 (நாராயண பரம் ப்ரஹ்ம தத்த்வந் நாராயண: பர:) 4 (ஹ்ரீஸ்ச தேலக்ஷ்மீஸ்ச பத்ந்யௌ) 5 (தஸ்மாந் ந்யாஸமேஷாந் தபஸாமதிரிக்தமாஹு:...ந்யாஸ இத்யாஹுர்மநீஷிண:) ஏவமாதிப்ரமாணங்களுமுண்டு. என்பக்ஷத்தாலிதுக்கு ப்ரமாணாபேக்ஷையில்லை. ஸம்ஸாரி கீழ்கழிந்ததுமறியான், மேல்வருவதுமறியான்; வர்த்தமாநத்திலும் பூதாம்ஸமறியான், பவிஷ்யதம்ஸமறியான்; இதிவன்நிலை; 6 (யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்) 7 (ஆநந்தோப்ரஹ்ம) 8 (ஸமஸ்தகல்யாணகுணாத்மகோஸௌ) என்று நிர்தோஷப்ரமாணத்தாலே கேட்டிருக்குமீஸ்வரன்படியிது. இருவர்ஸ்வபாவமும் ப்ரத்யக்ஷத்தாலும் நிர்தோஷஸாஸ்த்ரத்தாலும் அறிந்தபின்பு அவனை யிவன்பற்றுகைக்கு 9 (நிதித்யாஸிதவ்ய:) என்றாப்போலே ஒருவிதிவேணுமோ, இருவருடையவும் தர்மிக்ராஹகப்ரமாணமே யமையும். (அவரக்ஷணே) (மந ஜ்ஞானே) 10 (மால்தேடியோடும்மனம்) 11 (நோக்குமுணர்வு). தூர்பலனாயிருப்பானொருவனமிழ்ந்தானென்றால் பலவானாயிருப்பானொருவ னருகே நின்றால் அவனை யிவன்பற்றுகைக்கு ஒருத்தர் சொல்லவேணுமோ, முமுக்ஷுக்க ளதிகாரிகளாகையாலே அதிகாரிகள் சுருங்கிற்று' என்றருளிச்செய்தார்.

ஒருவன் வெட்டத்துடர்ந்து வாராநின்றால் அவன் ஸரணம் புக ரக்ஷித்திலனாகில் 'பாதகன்' என்றுலோகமடைய கர்ஹியாநின்றது; ரக்ஷித்தானாகில் 'ஒருவன் நீர்மையே' என்று லோகமாக கௌரவியாநின்றது.

ரவகுராக்ஷஸஸம்வாதம், நஹுஷப்ருஹஸ்பதி ஸம்வாதம்,வ்யாக்ரவாநரஸம்வாதம், மறவன் 'முயல்க்குட்டியைவிட்டுப்போந்தேன்' என்ன - அதுகேட்டு பட்டரருளிச்செய்த வார்த்தையும், பாஷ்யகாரர் சரமஸமயத்திலே 'த்வயத்தை யெப்போதுமநுஸந்திக்கை யெனக்கு ப்ரியம்' என்றருளிச்செய்தவார்த்தையும், பெரியகோயில்நாராயணரைக்குறித்து ஸபயபூர்வமாக 'த்வயமொழியத்தஞ்சமில்லை' என்றருளிச்செய்த வார்த்தையும், ஸசேலஸ்நாநபூர்வகமாக ஆர்த்தியோடே உபஸந்நனான சிறியாத்தானுக்கு 'த்வயமொழியத்தஞ்சமில்லை' என்று எம்பாரருளிச்செய்த வார்த்தையும், 'திருமந்த்ரத்திலேபிறந்து த்வயத்

---

1.
2. ஸ்வே-உப-சு. கஅ.
3. தை.உப.நா.சு.கக.ச.
4. புருஷஸூக்தம்.
5. தை.உப.நா.சு.
6. முண்ட.உப.க.க.கூ.
7. தை.உப.ப்ரு.சு.க.
8. வி.பு.சு.ரு.அச.
9. ப்ரு.உப.ச-ச-ரு.
10. இரண்டாந்திருவந்தாதி.உஎ
11. முதல்திருவந்தாதி-சுஎ.

திலேவளர்ந்து த்வயநிஷ்டராவீர்' என்று நஞ்ஜீயரைக்குறித்து அநந்தாழ்வான் ப்ரஸாதித்தவார்த்தையும், 'மந்த்ராந்தரங்களைச் சொல்லி விடுமித்தனையிறே' என்ன நஞ்ஜீயர் த்வயத்தையுபதேசித்து பிள்ளைக்கருளிச்செய்த வார்த்தையும், அம்மங்கியம்மாள் திருநாராயணபுரத்திலே காணச்செல்ல உடையவரருளிச்செய்தவார்த்தையும் தொடக்கமான பூர்வாசார்ய வசநங்கள், ருசிவிஸ்வாஸங்களுக்குறுப்பாக இவ்விடத்திலே அநுஸந்தேயங்கள்.

இங்குப்ரதிபாதிக்கிற உபாயோபேயங்களை, ஆசார்யருசிபரிக்ருஹீதமான இஸ்ஸந்தவிசேஷத்தையொழிய ஸந்தாந்தரத்தாலே அநுஸந்திக்கலாகாது.

'மெய்க்கன்றுக்கு இரங்கிப்போந்த வாஸனையாலே தோற்கன்று மடுத்தாலும் ஸுரபியானது இரங்கிப் பால் சுரக்குமாபோலே பொய்யான தமக்கு மிரங்குவது இஸ்ஸந்தவிஷேத்தைக்கேட்டாலாய்த்து; ஆகையாலே இதுவே யநுஸந்தேயம்' என்று பிள்ளைக்கு ஜீயரருளிச்செய்த வார்த்தை.

ஆகையாலே, த்வயம் ஆதரணீயம். பூர்வாசார்யர்கள் ரஹஸ்யத்ரயத்தையும் தங்களுக்கு தநமாக நினைத்துப் போரச்செய்தேயும், ஸர்வாதிகாரமாகையாலும், ஆசார்யருசிபரிக்ருஹீத மாகையாலும், புத்திபூர்வகமான அபசாரத்துக்கும் பரிஹாரமாகையாலும், கர்மாவஸாநத்திலேயன்றிக்கே ஶரீராவஸாநத்திலே மோக்ஷமாகையாலும், த்வயத்தை மிகவும் தஞ்சமாக நினைத்தும் போருவர்கள்.

சக்ரவர்த்தித்திருமகனோடு காகவிபீஷணாதிகளோடு வாசியற எல்லாருக்கும் அதிகாரமாயிருக்கையாலே ஸர்வாதிகாரமாயிருக்கும்; I (ரோகிணாமௌஷதம் யதா) என்கிறபடியே.

திருமந்த்ரம் ஶாஸ்த்ரருசிபரிக்ருஹீதம்; சரமஶ்லோகம் ஶரண்யருசிபரிக்ருஹீதம்; த்வயம் ஆசார்யருசிபரிக்ருஹீதம்.

இம்மூன்றுக்கும் மூன்று முண்டாயிருக்கச் செய்தேயும் இப்படி சொல்லுகிறது ஊற்றத்தைப்பற்ற.

த்வயம், கடவல்லியிலே அதீதமாகையாலே ஶாஸ்த்ரருசிபரிக்ருஹீதம்; ப்ரஹ்மாதிகளைக்குறித்து ஸர்வேஶ்வர னருளிச்செய்தானென்னுமிடம் ஶைவசாஸ்த்ரஸித்தமாகையாலே ஶரண்யருசிபரிக்ருஹீதம்; ஆசார்யருசிபரிக்ருஹீத மென்கைக்கு கீழே ஆசார்யவசநங்கள் சொன்னோம்.

'புருஷகாரபூர்வகமாக அபராதக்ஷாமணத்திலேயிழிந்தால், பூர்வாபராதங்களில் ஈஶ்வரன் அவிஜ்ஞாதாவாயிருக்கையாலே, க்ஷமித்தோ

---

I.

மென்கிற உக்திக்கும் *நக்ஷமாமிக்கும் விரோதமில்லை. ப்ரபத்த்யுத்தரகாலம் ப்ராமாதிகங்களையொழிய பு³த்³தி⁴பூர்வகமாக அபசாரம் கூடாது. ஸம்வத்ப்ரஸாவத்தைப்பார்த்தால், காதாசித்கமாகவரும் பு³த்³தி⁴பூர்வகமான வபசாரத்துக்கும் பரிஹாரமாம். அபசாரத்துக்கநந்தரம் அநுதாபம் பிறந்ததில்லையாகில், ஜ்ஞாநம்பிறந்ததுமில்லை' என்று ஜீயர் எண்ணாயிரத்துத் ¹ திருவாய்க்குலத்தாழ்வானைக்குறித்தருளிச்செய்தார். I (குன்றனையகுற்றஞ் செய்யினும் குணங்கொள்ளும்.)

உபாஸகனுக்கு, மோக்ஷத்துக்கு ஸாத⁴நமாகத்தா னநுஷ்டிக்கிற உபாஸநம் பக்வமாய் அநந்தரத்திலே கர்மக்ஷயம்பிறந்து முக்தனாகவேண்டுமாகையாலே, கர்மாவஸாநத்திலே மோக்ஷமாகக்கடவது; ப்ரபந்நனுக்கு, உபாயதயா கர்த்தவ்யமில்லாமையாலும், உபாயபூ⁴தனான ஈஶ்வரனுக்கு ஜ்ஞாநஶக்தியில் வைகல்யமில்லாமையாலும், வர்தமாந ஶரீரத்தையொழிய ஆரப்³த⁴ஶரீரத்தி லிச்சை⁴யில்லாமையாலும், ப்ரபத்த்யுத்தரகாலம் இஶ்ஶரீரத்தினுடைய ஸ்தி²திக்குஹேது தீவ்ரஸம்வேக³ராஹித்யமாகையாலும், ஶரீராவஸாநத்திலே மோக்ஷமாகக்கடவது.

ஸூக்ஷ்மஶரீரம்போலே யிஶ்ஶரீரமும் ஈஶ்வராநுக்³ரஹத்தாலே யிருக்கிறதென்னில், அது விரஜையளவும் த³மநஸாத⁴நமாயிருக்கிறது, இஶ்ஶரீரஸ்தி²திக்குப்ரயோஜநமில்லை; ஸ்வேச்சோ²த்தரமாகவிருந்தானாகில் ஸம்வநுக்³ரஹத்தாலே யென்னலாம், அல்லாமையாலே அவனுக்கு வைஷம்ய நைர்க்⁴ருண்யங்கள் ப்ரஸங்கி³க்கும். ஆகையாலே, ஶரீரஸ்தி²திக்கு ப்ராரப்³த⁴ஶேஷமேஹேது. ப்ரபத³நாநந்தரம் ஶரீரமோக்ஷமுண்டாவது பரமார்த்தியுண்டாகில், த³ர்ஶநரகப்ரவேஶாதிகளில் அஸஹ்யதையொழிய வர்த்தமாந ஶரீரத்தில் அஸஹ்யதையில்லை; ஆகையாலே வைத்தருளும். அப்போதே ஶரீரவிஶ்லேஷம்பிறக்கில் நச்சுப்பொய்கையென்று பீ⁴தராயிழிவாரில்லை. இவனொரு க்ஷணகாலமிருக்க அநேகாவதாரங்களில் கிடையாத ப²லம் ஸித்³தி⁴க்கும். சரமதே³ஹமாகையாலே ஈஶ்வரனுக்கு அதிலே ஆத³ரணீயதை நடக்கும். இவை அவாந்தரப²லங்கள். ஊர்த்⁴வோத்தரமா யிருக்கச்செய்தே விடமாட்டாதவன் ஸ்வலவமுண்டாகில் இதிலேவேர்ப்பற்றுமென்று ஈஶ்வரன் ஹிதகாமனாகையாலே 'ஶரீராவஸாநத்தளவும் கர்மப²லம் அநுப⁴வித்திடுவான்' என்று உதாஸீநனாயிருக்கும். ஆகையாலே ப்ரபந்நனுக்கு ப்ராரப்³த⁴கர்மாவஸாநம் பார்த்திருக்கவேண்டா.

திருமந்த்ரத்திலும் சரமஶ்லோகத்திலும் அர்த²ஜ்ஞாநத்தாலும்த்³வயஸ்ஸாத்⁴யமான ப²லம்இதில் ஶப்³தோ³ச்சாரணத்தாலே ஸுலப⁴மாம்.

---

I. முதல்திருவந்தாதி.

பூர்வாசார்யர்கள் மற்றையிரண்டிலும் அர்த்தத்தையே மறைத்துக் கொண்டுபோருவர்கள்; இதில் ஶப்தார்த்தங்களிரண்டையும் மறைத்துக்கொண்டுபோருவர்கள். மந்த்ரஶ்லோகங்களிரண்டிலும் ஶப்தத்தை வெளியிட்டு அர்த்தத்தை மறைத்துக்கொண்டு போருவர்கள்; த்வயத்தில் இரண்டையும் மறைத்துக்கொண்டு போருவர்கள். 1 (குஹ்யாநாங் குஹ்யமுத்தமம்) என்னதிறே.

வாச்யம் ஸக்ருத்கர்த்தவ்யமானுப்போலே, வாசகோச்சாரணமும் ஸக்ருத்கர்தவ்யம். 2 (தஸ்மாத் ஸக்ருத்க்ருதேநைவ கர்மணா யேந, மாநவ꞉। ஸக்ருஜ்ஜப்தேந மந்த்ரேண க்ருதக்ருத்யஸ் ஸதா பவேத்) என்றுப்ரஶம்ஸிக்க, 2 (மந்த்ரோ ஹி வித்யதே யேந ஸக்ருதுச்சாரிதேநவை- புருஷோ ஜீவலோகேஸ்மிந் க்ருதக்ருத்யோ பவிஷ்யதி) என்று ப்ரதிவசநம் பண்ணுகையாலே. இவ்வர்த்தம் கடவல்லியிலும் சொல்லிற்று. இத்தையறிய எல்லாமந்த்ரபலங்களும் ஸித்தியிக்கும். 2 (ஸர்வமந்த்ரபலாந்யஸ்ய விஜ்ஞாநேந பவந்திவை) என்கையாலே; 2 (ஏதந்

---

1. பார்ஹஸ்பத்யேயே பராஶரேண ப்ருஷ்டோ நாரத꞉—'மந்த்ராணாம் பரமோ மந்த்ரோ குஹ்யாநாங் குஹ்யமுத்தமம்। ரஹஸ்யாநாம் ரஹஸ்யஞ்ச ஸத்ய ஸ்ஸம் ஸாரதாரணம்। ஸர்வஸம் ஶயஹேத்தாச ஸர்வ கல்மஷ நாஶந꞉। ஶரணாகதிமந்த்ரஸ்து ஸர்வஸம்பச்சு ஹாவஹ꞉'

2. ஸாத்வததந்த்ரே பகவந்தம் ப்ரதி ப்ரஹ்மா—'பகவந் ஹித மாவிர்யாத மாத்மநாம் பத தாமய꞉। த்வத்ப்ராபகம் மஹத்கர்ம காருண்யவிவஶாத்மநாம்। அதீதா பஹவோ மந்த்ராஶ் ஶ்ரீமதஷ்டாக்ஷராதிகா꞉। ஏபி꞉ கர்மபி ரீஹாந ஸ்தாந் மந்த்ராந் ஸததஞ் ஜபந்। த்வாமாப்நோத்யேவ புருஷ꞉ புருஷம் புருஷோத்தம। ஏதாநி சோச்யமாநாநி கர்மாணி கருணாகர। து꞉கவிஜ்ஞேய ஸ்வரூபாணி து꞉ஷ்கராணி விபாகஶ꞉। மந்த்ராம் ஶ்சைகை கஶ ஸ்தாவஜ்ஜபமாநஸ்ய மாதவ। உக்தேநைவ சமார்கேண கச்சத்யாயுரபக்ஷயம்। தஸ்மாத்ஸக்ருத்......ஸதா பவேத்। தத்ஸ் ப்ரூஹி கர்ம தந்மந்த்ரந் து꞉யார்த்ர ஹ்ருதயோ ஹ்யஸி॥பகவாநுவாச—ஸத்யமுக்தாந்யஶக்தாநி கர்மாணி கமலாஸந। மந்த்ராணாஞ்ச யதாஶாஸ்த்ரம் அநுஷ்டாநந்நஶக்யதே। தத்கர்ம வித்யதேயேநக்ருதமாத்ரேண கர்மணா। மாம் ப்ராப்நோதி நரோ ப்ரஹ்மந் மமாத்மாச பவிஷ்யதி। மந்த்ரோ ஹி வித்யதேயேந......பவிஷ்யதி। கிந்து தஸ்யச மந்த்ரஸ்ய கர்மண꞉ கமலாஸந। நலப்யதேயிகாரீவா ஶ்ரோதுகாமோ பவா நர꞉। த்வந்து மத்பாத்யஸம் யோகாத் ஏதத்கர்மாணிவாஞ்சஸி। ப்ரவீமி ஸர்வகர்மேப்ய꞉ ஶ்ரீயோ மந்த்ரஏவச। ப்ரயமம் ஶ்ருணுமந்த்ராணாம் ராஜராஜமநுத்தமம்। ஸர்வமந்த்ரபலாந்யஸ்ய விஜ்ஞாநேந பவந்திவை। ஏதந்மந்த்ரமவிஜ்ஞாய யோநரோ மாமபீப்ஸதி। பாஹ்யாப்யாம் ஸாகரந்தர்துமலப்தித் வா ப்லவமிச்சதி। தஸ்மாத்யோ மாமபீப்ஸேத யோவா ஸதாவிதுமிச்சதி। மந்த்ரராஜமிமம் வித்யாத் குரோர் வசநபூர்வகம்। நாநு கூல்யந்நநக்ஷத்ரந்ந தீர்த்தாதிநிஷேவணம்। நபுரஶ் சரணந்நித்யஞ் ஜபம்வாபேக்ஷதே ஹ்யயம்' இத்யாதி.

மந்த்ரமவிஜ்ஞாய) என்கையாலே இத்தையறியாதபோது ஸம்ஸாரநிவ்ருத்திக்குபாயமில்லை. 1 (வாசிகம்மாநஸம்) இத்யாதியாலே உச்சாரணமொழிய ஸ்ம்ருதிமாத்ரத்தாலே த்ரிவிதகரணத்தாலும் பண்ணின பாபங்கள் போமென்று சொல்லும். 'அபிஜநவித்யாவ்ருத்தங்கள் மூன்றுமுடையவனேயாகிலும் த்வயத்துக்கதிகாரியன்றிக்கே யொழியுமாகில் அவனைக்கண்டால் விலங்கவேணுமென்று ஶாஸ்த்ரஞ் சொல்லிற்று. 'இம்மூன்றுமில்லையேயாகிலும் த்வயோச்சாரணம் பண்ணினவன் பூஜ்யதமனென்றும் சொல்லிற்று. ரக்ஷகன்க்ருதாத்மாவாகையாலே அஹ்ருதயோக்தியையும் ஸஹ்ருதயபூர்வோக்தியோடொக்க நினைத்திருக்கும். ஆநுகூல்யத்தில் தாரதம்யம்கொண்டுத்யாஜ்யபரிக்ரஹம் பண்ணுவது அபரிபூர்ணனாகிலிறே. பரிபூர்ணனாகையாலே ஆபிமுக்யஸூசகமொன்றுமிறே வேண்டுவது. '2 (பொய்யேகைமைசொல்லி) என்றும் 3 (புறனுரையேயாகிலும்) என்றும் நிரர்த்தகமான ஸமுத்ரகோஷத்தைக்காட்டில் ஸார்த்தங்களான வடபடாதி ஶப்தங்கள் ஶ்ரேஷ்டங்கள். அவற்றிற்காட்டில் தேவதாந்தரநாமங்கள் ஶ்ரேஷ்டங்கள். அவற்றில் காட்டில் பகவந்நாமங்கள் ஶ்ரேஷ்டங்கள். அவற்றில் வைத்துக்கொண்டு மூலமந்த்ரம்ஶ்ரேஷ்டம். மூலமந்த்ரம் ஸமுத்ரகோஷஸ்தாநீயமாம்படி த்வயம் ஶ்ரேஷ்டம். அதுக்கடி மூலமந்த்ரத்தில் ஆர்த்தமானவர்த்தம் த்வயத்திலே வாசகமாகை. வாச்யங்களில் ஸர்வேஶ்வரனுக்கும் அவ்வருகில்லாதாப்போலே, வாசகங்களிலு மிதுக்கவ்வருகில்லை, இதுவே வித்யாந்தம்' என்று ஜீயரருளிச்செய்வர்.

திருமந்த்ரம் ஆத்மபாரதந்த்ர்யப்ரதாநம், சரமஶ்லோகம் பகவத் ஸ்வாதந்த்ர்யப்ரதாநம், த்வயம் பகவத்பாரதந்த்ர்ய ப்ரதாநம். திருமந்த்ரம் ப்ராப்யப்ரதாநம். சரமஶ்லோகம் ப்ராபகப்ரதாநம், த்வயம் உபயப்ரதாநம். திருமந்த்ரம் மந்த்ரரூபம். சரமஶ்லோகம் விதிரூபம். த்வயம் அநுஷ்டாநரூபம். இதுக்கதிகாரி, திருமந்த்ரத்தில் த்ருதீயபதத்திலும், சரமஶ்லோகத்தில் ப்ரதமபதத்திலும், த்வயத்திலும் நிஷ்டையுடையவன். இதுக்கு த்வயமென்றுதிருநாமமாய்த்து ஸாதநஸாத்யங்களைச் சொல்லுகையாலே. இதொழிய நாலஞ்சுஹேதுக்களைச் சொல்லுவர்கள்.

இதுதான், பூர்வவாக்யம் மூன்றுபதமும், உத்தரவாக்யம் மூன்றுபதமும், ஆக ஆறுபதமாயிருக்கும். இதில் பூர்வவாக்யம், உபாயத்தை ப்ரதிபாதிக்கிறது; உத்தரவாக்யம் உபேயத்தை ப்ரதிபாதிக்கிறது. 4 (நா

1. பாத்ம.பு.
2. தி.வா.ருக.க.
3. முதல்திருவந்தா.41.
4. தி.வா'க.ரு.அ.

ளுநின்றடுகமபழமையங் கொடுவினையுடனேமாளும்) என்றும் 1 (புலனைந்துமேயும் பொறியைந்துநீங்கி) என்றும் 2 (ப்ரும்ஹவிதாப்நோதிபரம்) என்றும் இத்யாதிகளிற்சொல்லுகிறபடியே ஜ்ஞப்திதஶையில் உபாயத்துக்கு உபேயாந்த்ர பாவித்வமுண்டா யிருந்ததேயாகிலும், (மாமேகம்ஶரணம்வ்ரஜ-அஹந்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்றும் 3 (திருநாரணன்றாள்காலம் பெறச்சிந்தித்துய்மினோ) என்றுமித்யாதிகளிற் சொல்லுகிறபடியே வ்யுத்பத்திதஶையில் உபேயம் உபாயாந்த்ரபாவியாயிருக்கையாலே உபாயப்ரதிபாதகமான பூர்வவாக்யம் முற்பட்டவநுஸந்தேயமாய், உபேய ப்ரதிபாதகமான உத்தரவாக்யம் பிற்பட்டவநுஸந்தேயமாயிருக்கும். ஆகையாலேயிறே திருமந்த்ரத்தில் நமஸ்ஸுக்குப் பின்பு நாராயண பதமாச்சுது. இதில் பதத்ரயாத்மகமான பூர்வவாக்யத்தில், ப்ரதமபதம் ஸ்வீகார்யவஸ்துவைப் ப்ரதிபாதிக்கிறது. த்விதீயபதம் ஸ்வீகாரப்ரகாரத்தை ப்ரதிபாதிக்கிறது. த்ருதீயபதம் ஸ்வீகாரத்தை ப்ரதிபாதிக்கிறது.

—ஸ்ரீஶப்தார்தம்.—

(க) அதில் ஸ்ரீமத் என்கிற அம்சத்தாலே - புருஷகாரத்தையும், புருஷகாரத்தினுடைய நித்யஸந்நிதியையும் சொல்லுகிறது. ஸ்ரீஶப்தம் (ஸ்ரீயதே ஶ்ரயதே) என்கிற வ்யுத்பத்தித்வயத்தாலும்- பிராட்டியுடைய புருஷகார பாவத்துக்கு உபயுக்தங்களான குணவிஶேஷங்களைச்சொல்லுகிறது. அதிற்குணவிசேஷமாகிறது உபயஸம்பந்தம். அதில் கர்மணி வ்யுத்பத்தி, சேதநனோடுண்டான ஸம்பந்தவிசேஷத்துக்கு ப்ரகாஶகமாயிருக்கும்; கர்தரிவ்யுத்பத்தி, ஈஶ்வரனோட்டை ஸம்பந்தத்துக்கு ப்ரகாஶகமாயிருக்கும். சேதநனோடே மாத்ருத்வலக்ஷண ஸம்பந்தமுண்டாயிருக்கும்; ஈஶ்வரனோடே மஹிஷீத்வலக்ஷணஸம்பந்தமுண்டாயிருக்கும். மாத்ருத்வ லக்ஷணஸம்பந்தத்தாலே புருஷகார நிரபேக்ஷமாக ஸகல சேதநர்க்கும் ஆஶ்ரயணீயையாயிருக்கும்; மஹிஷீத்வப்ரயுக்தமாக ஈஶ்வரனோடே நித்யஸம்யுக்தையா யிருக்கையாலே புருஷகாரநிரபேக்ஷமாக ஈஶ்வரனை ஸேவியாநிற்கும். 4 (யஸ்யா: கடாக்ஷணமநுக்ஷணம்) இத்யாதியாலே-வ்யுத்பத்தித்வயத்தாலுமுண்டான வர்த்தத்தை ஆழ்வான் அருளிச்செய்தார். (ஶ்ருணோதி, ஶ்ராவயதி) என்கிற நிருக்திவிஶேஷத்தாலே - (ஸ்ரீயதே, ஶ்ரயதே,) என்கிறவ்யுத்பத்தித்வயத்தாலும் பலிதமானவர்த்தவிஶேஷத்தைச்சொல்லுகிறது. (ஶ்ருணோதி) என்றது கேளாநிற்குமென்றபடி; (ஶ்ராவயதி) என்றது கேட்பியாநிற்குமென்றபடி.

1. தி.வா.உ.அ.ச.
2. தை.உப.ஆந.க.க.
3. தி.வா.ச.க.க.
4. ஸ்ரீவைகுண்டஸ்தவம்.உகூ.

ப்ரதீப்தஶரணத்தில்பொருந்தாதாப்போலே ஸம்ஸாரமடிக்கொதி
த்து பகவத்விஷயத்தைக் கிட்டியல்லது யரிக்கமாட்டாதபடியான தஶா
விஶேஷத்தையுடையனாய் பகவத்ஸமாஶ்ரயணோந்முகனான சேதநன்,
1 (யதி ப்ரஹ்மகல்ப) இத்யாதிப்படியே காலதத்த்வமுள்ளதனையுமநுப
வியாநின்றாலும் சிறிது *வரையிட்டுக்காட்டக்கடவ தல்லாதபடிக்ரூரங்க
ளாயிருக்கிற அக்ருத்யகரண க்ருத்யாகரணப்ரமுகங்களான அபராத
விஶேஷங்களை கரணத்ரயத்தாலும் அநாதிகாலம் கூடுபூரித்து ஈஶ்வர
னுடைய 2 (க்ஷிபாமி) 3 (நக்ஷமாமி) என்கிற வெட்டியசொற்களுக்கு வி
ஷயபூதனாய்ப்போந்தானொருவனாகையாலே, அநாதிகாலார்ஜிதங்களா
ன தன்னுடைய வபராதவிஶேஷங்களையும் ஈஶ்வரனுடைய நிரங்குஶ ஸ்
வாதந்த்ர்யத்தையும் அநுஸந்தித்து பீதனாய், பிராட்டியுடைய நிரவதிக
மான காருண்யாதி குணங்களையும் தன்னோடவனுக்குண்டான ஸம்பந்த
விஶேஷத்தையும் புரஸ்கரித்து 'ஸாபராதனாய் அநந்யஶரணனாயிருக்
கிறவெனக்கு அபராத நிவ்ருத்திமாத்ரத்திலே ப்ரஸக்தையாய் அஶர
ண்யஶரண்யையா யிருக்கிறவள் திருவடிகளொழியப் புகலில்லை' என்று
இவன் விண்ணப்பஞ்செய்யும் வார்த்தையைத்தானே கேளாநிற்கும். ஈஶ்
வரனைக்குறித்து விண்ணப்பஞ் செய்யும் வார்த்தையை அவன் கேட்கும்
படி பண்ணாநிற்கும்.

இச்சேதநனுக்கு இருவரோடும் ஸம்பந்தமுண்டாயிருக்க அவனுக்கி
வள் புருஷகாரமாக வேண்டுகிறதென்னென்னில்; மாத்ருத்வநிபந்தந
மான வாத்ஸல்யாதிரேகத்தாலும், ஈஶ்வரனைப்போலே காடிந்யமார்தவங்
கள் கலந்திருக்கையன்றிக்கே கேவலமார்தவமேயாய் ஸாபராதரான
சேதநரை அபராதாநுகுணமாக நியமிக்குமிடத்தில் 4 (மர்ஷயாமீஹ
துர்பலா) என்கிறபடியே அஶக்தையாயிருக்கையாலும், 5 (த்வம் நீச
ஶஶவத்ஸ்ம்ருதஃ) என்கிறபடியே தன்திருவாயாலே இப்படி புல்லிதான
வார்த்தையை யருளிச்செய்யவேண்டும்படி விபரீதபுத்தியியாய் தன்
திறத்திலே † தீரக்கழிய வபராதத்தைப்பண்ணி 6 (ராவணோலோகரா
வணஃ) என்கிறபடியே ‡ இருந்ததே குடியாகக் கையெடுத்துக்கூப்பிட
வேண்டும்படி பரஹிம்ஸையே யாத்ரையாக வுடையனாயிருக்கிற ராவண
னுடைய தண்ணிமையைப் பாராதே அவனைக்குறித்து 7 (தேந மைத்ரீ
பவது) என்றும் 8 (மித்ரமௌபயிகங்கர்தும்) என்றும் ஹிதோபதே

* வரை=அளவு.
† தீரக்கழிய=அத்யந்தாதிகமாக.
‡ இருந்ததேகுடியாக=எல்லாருமொக்க.

1. ஸ்ரீவைகுண்டஸ்தவம். ௬௧.
2. கீதா. ௧௬-௧௮.
3. வராஹபு.
4. ரா-யு. ௧௧௬-௬௧.
5. ரா-ஸு.
6. ரா-ஸு.
7. ரா-ஸு. ௨௧-௨௦.
8. ரா-ஸு. ௨௧-௧௯.

ஸம் பண்ணுகையாலும், ராக்ஷஸிகள், ராவணன்பராஜிதனாகவும் பெருமாள் விஜயிகளாகவும் ஸ்வப்நங்கண்டு அத்தாலே பீதபீதைகளாக,-த்ரிஜடை, 1 (அலமேஷா பரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோபயாத்) என்று நாம் விடாதேயிருந்து தர்ஜநபர்த்ஸநங்களைப்பண்ணிநலியநம்மாலேநலிவுபடுகிறவள்தானே நமக்கு ஆபத்துண்டானகாலத்திலே நம்மைக்கைவிடாதே ரக்ஷிக்குமென்று சொல்லுகையாலும், இப்படி பிறர்சொன்னவளவன்றிக்கே பிராட்டிதானும் இவர்கள் நோவுபடுகிற ஸமயத்திலே 2 (பவேயம் ஶரணம் ஹிவ:) என்று 'நீங்கள் நோவுபடுகிறஸமயத்துக்கு நானிருந்தேன், நீங்களஞ்சவேண்டா' என்று அபயப்ரதாநம்பண்ணுகையாலும், இப்படி வ்யவஹாரமாத்ரமேயாய் அநுஷ்டாநம் விபரீதமாயிருக்கையன்றிக்கே, திருவடிவந்து 'ராவணன்பட்டான், பெருமாள்விஜயிகளானார்' என்று விண்ணப்பஞ்செய்த வார்த்தையைக் கேட்டு இவன்பண்ணினஉபகாரத்துக்கு ஸத்ருசப்ரத்யுபகாரங்காணாதே தடுமாறுகிற வவஸ்தையிலே 'பத்துமாஸம் தேவரீரை தர்ஜநபர்த்ஸநங்கள்பண்ணி நலிந்துபோந்த இப்பெண்பயல்களை நான் நினைத்த வகைகளிலே நலியும்படியவர்களைக்காட்டித்தரவேணும், நான் முன்பு தேவர்திருவடிகளிலே வந்தபோது இவர்கள் பண்ணின நலிவைப் பொறுக்கமாட்டாதே நொந்துபோனேன், இப்போதிவர்களை நிரஸிக்கைக்கொரு ப்ரதிபந்தகமில்லை, இவர்களை ஐம்பது அறுபதுவகைகளாலே கொல்லும்வகை சொல்லாநின்றேன், இவனுக்கு நாம் †பரிசிலாகக்கொடுக்கலாவதென் என்று தடுமாறவேண்டா, இவர்களை நிரஸிக்கும்படி யென்கையிலே காட்டித்தருமதொழிய எனக்குப்பண்ணும் ப்ரத்யுபகாரம் வேறில்லை' என்று விண்ணப்பஞ் செய்ய, திருவடிபண்ணின உபகாரத்தையும் ராக்ஷஸிகள் பண்ணின அபகாரத்தையும்பாராதே அப்போதவர்களுடைய வச்சமொன்றுமே திருவுள்ளத்தேபட்டு அவர்களுடைய ‡கண்குழிவு காணமாட்டாதபடியான மார்தவத்தாலே, 3 (நகஶ்சிந்நாபராத்யதி) என்றும் 4 (க:குப்யேத்) என்றும் 5 (ஜ[illegible]ர்ஷவலா) என்றும் திருவடியோடே மன்றாடி ஆர்த்ராபராயைகளானராக்ஷஸிகளை ரக்ஷிக்கையாலும், இளையபெருமாள் காட்டுக்கெழுந்தருளுகிறபோது பெருமாள் நிருத்திப்போகத்தேடினவளவிலே 6 (ஸீதாமுவாச) என்று பிராட்டி புருஷகாரமாகப் பெருமாளோடுகூடப் போகையாலும், ஸ்ரீவிபீஷணப்பெருமாள் 7 (ப்ரதீ

† பரிசில்=பச்சை=உபஹாரம். ‡ கண்குழிவு=தைந்யம்.

1. ரா-ஸு. ௨௭-௪௪.
2. ரா-ஸு. ௫௮=௯௦.
3. ரா=யு. ௧௧௫=௪௪.
4. ரா-யு. ௧௧௫-௬௮.
5. ரா=யு-௧௧௫=௪௧.
6. ரா=அயோ. ௬௧=௨.
7. ராநயு. ௧௪=௪.

யதாந் ஶாஶ்வதாய மைதிலீ) என்று - ஜீவிக்கவேண்டியிருந்தாயாகில் பெருமாள் தம்முடைமையுந்தாமுமாகச் சேரவிருக்கும்படி பண்ணப் பார்' என்று ராவணனைக்குறித்துப் பெருமாளும்பிராட்டியும்சேரவிருக்கைக்குறுப்பானவார்த்தைகளைச்சொல்லியும், த்ரிஜடையைப்பிராட்டிக்கு வ்யஸநங்களில் உசாத்துணையாக வைத்தும், † இப்படி பிராட்டிமுன்னாகப் பெருமாளை ஶரணம்புகுகையாலும், மஹாராஜர் திருவாபரணம் முன்னாகப் பெருமாளைப் பற்றுகையாலும், காகம் அபராதத்தைப் பண்ணிவைத்துப் பிராட்டி ஸந்நிதியிலே தலையறுப்புண்ணாதே பிழைக்கையாலும், ராவணனுக் கத்தனை அபராதமின்றிக்கேயிருக்க பிராட்டி ஸந்நிதியில்லாமையாலே தலையறுப்புண்கையாலும், பின்னையும் இளையபெருமாளைக் குறித்துப் பிராட்டிதன்னை வநத்திலே விட்டுப்போகாநிற்க 'தம்பிமாரோடொக்க நாட்டை ரக்ஷிக்க விண்ணப்பஞ்செய்யுமெ'ன்றருளிச் செய்கையாலும், மற்றுமிவை துடக்கமான ஸ்வபாவவிஶேஷங்களெல்லாவற்றாலுமாக, ஈஶ்வரனை ஆஶ்ரயிக்கும்போது இவள் புருஷகாரபூதையாகக்கடவள்.

முக்யமாக வெம்பெருமானை யாஶ்ரயிக்கையாவது-பிராட்டிமுன்னாக வாஶ்ரயிக்கை.

ஆச்சி, சிறியாத்தானுக்கு ஸம்வத்ஸரமாய் அவற்றை நெடுங்காலமகன்றுபோந்த விவ்வாத்மாவை எம்பெருமானோடே யிணைக்கைக்குப்

† 'விபீஷணேந சாபி ராத்ரா மம நிர்யாதநம்ப்ரதி। அநுநீத: ப்ரயத்நேந நசைதத்குருதே மதிம்। மம ப்ரதி ப்ரதாநஂஹி ராவணஸ்ய நரோசதே। ராவணம் மார்கத ஸங்க்யே ம்ருத்யு: காலவஶங்கத:। ஜ்யேஷ்டாகந்யாநலாநாம விபீஷணஸுதாகபே। தயா மமைததாக்யாதம் மாத்ரா ப்ரஹிதயா ஸ்வயம்' என்று' விபீஷணாழ்வான் ஸகுடும்பராகத்தம்முடையவுகப்பி லூன்றிப்போருமவர்' என்னுமத்தைத் திருவடிமுவத்தாலே பெருமாள் திருவுள்ளத்திலே படுத்திபுருஷ காரஞ்செய்கையாலே 'விபீஷணாழ்வானையும் அநலாதிகளைக்கொண்டு பெருமாளையாஶ்ரயிக்கும்படி பிராட்டி க்ருஷிபண்ணினாள்'என்னுமிடம் ஸித்தியம் என்று கருத்து. இவள்முன்னேவிபீஷணாழ்வானை பெருமாளையாஶ்ரயிக்கும்படி க்ருஷிபண்ணிற்றிலளாகில் இவருடைய ஆநுகூல்யத்தைப்பெருமாள் திருவுள்ளத்தில் வகுத்தவேண்டியதில்லையிறே. மித்ரமௌபயிகம்' என்று விழுவருக்குமுள்ளட வுபதேஶிக்குமவள் அநுகூலரைப் பெற்றால் க்ருஷிபண்ணச் சொல்லவேண்டாவிறே இதிஹாஸ:. (மஹாராஜரி) தி- 'ததர்ஶ கிரிஶ்ருங்கஸ்தாந் பஞ்சவாநரபுங்கவாந்' :என்று மஹாராஜருந் திருவடியும் நிற்கிற விடத்திலே 'தேஷாம் மத்யே விஶாலாக்ஷீ கௌஶேயங்கநகப்ரபம்। உத்தரீயம் வராரோஹா ஶுபாந்யாபரணாநிச। முமோச' என்று திருவாபரணங்களையும் பொகட்டு விஶேஷமாகக் கடாக்ஷித்துப்போகையாலே, அந்த திருவாபரணத்தை முன்னிட்டு கொண்டு பெருமாளை மஹாராஜர் பற்றினரிதிஹாஸ:,

பற்றாசாக நமக்குப் பிராட்டியுள்ள் என்று நிர்ஹரனாயிரு' என்றருளிச்செய்தார்.

ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாயிருக்குமீஶ்வரன் 1(உள்ளுவாருள்ளித்தெல்லாமுடனிருந்தறிதி) என்கிறபடியே-ஹ்ருதிஸ்யனாய்க்கொண்டு சேதநர்பண்ணும் அபராயங்களைக்குறித்து அவற்றுக்கீடாக நியமிக்கையாலே, ஸாபராயரானசேதநர் ஶரணோக்தியை ப்ரயோகித்தால் ‡ அதுவும் அபராய கோடிவடிதமா யிருக்குமிறே.

ஆகையாலே அநாதிகாலம் தான்பண்ணிப்போந்த அபராயங்களைப் பொறுத்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்யும்போது அந்தஃபுரபரிகரமாய்நின்று விண்ணப்பஞ்செய்ய வேண்டுகையாலே ஸர்வஜ்ஞனை ஈஶ்வரனையுங்கூட நிருத்தரனாம்படி பண்ணவற்றான தன்னுடைய உக்திவிஶேஷங்களாலும், 2 (பித்தர்பனிமலர்மேல் பாவைக்கு) என்றும் 3 (மலராள் தனத்துள்ளான்) என்றும் 4 (மாமலர்மங்கை மணநோக்கமுண்டான்) என்றும், 5 (அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்கும்மான்) என்றும், தன்னுடைய ஹோதியதாப்ரகர்ஷத்தாலும் மற்றுமுண்டான உசிதோபாயவிஶேஷங்களாலும் சேதநனுடைய அபராயங்கள் ஈஶ்வரன்திருவுள்ளத்திற்படாதபடிபண்ணி அநாதிகாலம் அகன்று போந்த இருவரையும் சேர்க்கக்கடவதாயிருக்கிற பிராட்டிஸ்வரூபம் சொல்லிற்று.

## —மதுவர்யம்.—

(2) மதுப்பாலே-புருஷகாரபூதையான பிராட்டியுடைய நித்யயோகம் சொல்லுகிறது. 6 (நித்யாநபாயிநீம்) என்றும் 7 (அகலகில்லேன்) என்றும் 8 (விஷ்ணோஶ்ஶ்ரீரநபாயிநீ) என்றும் 9 (ஹாஸ்கரேண ப்ரஹாயயா) என்றும் 10 (தன்னோடும்பிரிவிலாததிருமகள்) என்றும் சொல்லுகிறபடியே-ஈஶ்வரனோடே நித்யஸம்ஶ்லிஷ்டையா யிருக்கையாலே ஆஶ்ரயணோந்முகனான சேதநன், தன்னுடைய அபராயங்களையும் ஈஶ்வரனுடையஸ்வாதந்த்ர்யத்தையும் அநுஸந்தித்து பிற்காலிக்குமாபோலேபுருஷகாரபூதையானபிராட்டியினுடையஅஸந்நிதியை அநு

‡ அதுவும்-ஶரணோக்தியும். ஸ்வதஸ்வீகார மென்றபடி. 'ஸர்வாபராயங்களுக்கும் ப்ராயஶ்சித்தமான ப்ரபத்திதானும் அபாராய கோடியிலேயாய்க்ஷாமணம் பண்ணவேண்டும்படி நில்லாநின்றதிறே' இத்யாதி ஸ்ரீஸூக்திகளைக் கண்டுகொள்வது.

1. திருமாலை. ௩௪.
2. திருநெடுந்=௧௮.
3. மூன்றாமந்தா. ௩.
4. தி-மொ. ௮=௧௦=௧.
5. தி=வ்ா. ௩=௧௦=௮.
6. ஶரணாகதிகத்யம்.
7. தி. வா. ௬=௧=௧௦.
8. வி=பு. ௧=௮=௧௭.
9. ரா=ஸு. ௨௧=௧௬.
10. தி.மொ. ௪-௫-௫.

ஸந்தித்து * பிற்காலிக்கவேண்டாதே, ருசிபிறந்தபோதே ஆஶ்ரயிக்க லாம்படியிருக்கும்.

1 (நசஸீதா த்வயா ஹீநா) என்கிறபடியே - அக்ஷணம் விஶ்லேஷித்தால் ஸத்தாஹாநி பிறக்கும்படியாயிருக்கையாலும், தன்னைப் பிரிந்தபோது 2 (ஜகத்ஸஶைலம்) என்கிறபடியே - நாடுகுடிகெடவா தென்றறிந்திருக்கையாலும், பரத்வத்தோடு வ்யூஹத்தோடு விபவத்தோடு அர்சாவதாரத்தோடு அந்தர்யாமித்வத்தோடு வாசியற எல்லாவிடத்திலும் பிரியாதேயிருக்கும்.

[(திருமால்வந்தென்னெஞ்சு நிறையப்புகுந்தான்) (பாவைபூமகள் தன்னொடுமுடனேவந்தாய்), (என்மனத்தேபுகுந்தாய், சேர்ந்ததிருமால்) இத்யாதி.]

இவளுக்குமீஶ்வரனுக்குமுண்டான சேர்த்தியும் நித்யமாய் அநுபவமும் நித்யமாய் தத்கார்யமான ஹர்ஷமுமென்றுமுண்டாகையாலே, இச்சேதநனுக்குப் பிராட்டி அஸந்நிஹிதப்ரயுக்தமாக ஆஶ்ரயணவைமுகியம் பிறக்கையன்றிக்கே, இப்ரதிபத்திமாத்ரமேயாய்த்தபேக்ஷிதம். இதுண்டானபோது ஸர்வகாலமுமாஶ்ரயிக்கலாம்படியிருக்கும்.

ஆக, ஸ்ரீமச்சப்தத்தாலே - 3 (அஸ்யேஶாநாஜகத:) 4 (த்வம் மாதா ஸர்வலோகாநாம்) 5 (அகிலஜகந்மாதரம்) என்று இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே - ஜகத்துக்குப்பூஜ்யையாய், 6 (விஷ்ணுபத்நீ) என்றும், 7 (விஷ்ணோஶ்ஶ்ரீ:) என்றும், 8 (தேவதேவ திவ்யமஹிஷீம்) என்றுமித்யாதிகளிற் சொல்லுகிறபடியே ஈஶ்வரனுக்கு மஹிஷியாய், அவனுக்கத்யந்த பரதந்த்ரையாய், அவனுடைய ஸ்வரூபரூபகுணாதிகளைப்போலே அபரிச்சேத்யமாயிருக்கிற தன்னுடைய ஸௌந்தர்ய தாப்ரகர்ஷத்தாலே எப்போது மொக்கவவன்திருவுள்ளத்தைத்தன் பக்கலிலே துவக்கிக்கொண்டிருக்கக்கடவளாய், ஈஶ்வரன் வைஶ்வரூப்யமெல்லாங்கொண்டு ஸர்வகாலமுந் தன்னை யநுபவியா நின்றாலும் தன்னுடைய * குணரூபவிலாஸ சேஷ்டிதங்களாலே * அபூர்வவத்விஸ்மயங்களைப் பண்ணக்கடவளாய், இப்படியிருக்கிறதான் 9 (இறையு மகலகில்லேன்) என்கிறபடியே - வித்ரஹைக தேஶத்திலே காலதத்த்வமுள்ளதனையும் ஆழங்காற்பட வேண்டும்படி நிரவயிக

* பிற்காலிக்கை=பின் வாங்குகை.
1. ரா=அயோ. ௯-௯௧.
2. ரா=ஆர.
[] குண்டலிதம் சில கோஶங்களிலில்லை.
3. யஜு. ௪-காண்ட். ௪-ப்ர, ௧௨-அநு. ௯௭.
4. வி-பு. ௧-௯. ௧௨௯.
5. ஶரணாகதிகத்யம்.
6. யஜு. ௪-௪-௧௨-௯௭
7. வி. பு. ௧-௮-௧௭.
8. ஶரணாகதிகத்யம்.
9 தி. வா. ௬. ௧0-௧0.

ஹோதீயதா ப்ரகர்ஷத்தையுடையனாயிருக்கிற ஈஶ்வரனை க்ஷணகாலமும் விஶ்லேஷிக்கில் ஸத்தாஹாநிபிறக்கக்கடவளாய், 1 (யத்ர நாந்யத் பஶ்யதி) என்னும்படியான விஷயத்தை ஸர்வகாலமுமநுபவியாநிற்கச்செய்தேயும், ப்ரஜைகளுடைய ரக்ஷணத்தில் எப்போதும் திருவுள்ளங்கிடந்து * தேவதேவதிவ்யமஹிஷியான தன்னுடையமேன்மை ப்ரஜைகள்பக்கல் நடையாடாதே மாத்ருத்வநிபந்தநமான பந்தமே அநுவர்த்திக்கக்கடவதாய், ஸர்வலோகஜநநீத்வரூபமான ப்ராப்திவிஶேஷமன்றிக்கே, 2(அஶரண்யஶரண்யாம்)என்கிறபடியே-ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களாலுண்டானநிகர்ஷம்பாராதே * நிரூணமபிவத்ஸலனாய் ஸர்வஸுஹ்ருதஸமனாய் ஸ்ருஷ்ட்யவதாராதிமுகத்தாலே ஜகத்ரக்ஷணத்திலே தீக்ஷிதனாயிருக்கிற ஈஶ்வரன் (க்ஷிபாமி) (நக்ஷமாமி) என்றுதள்ளிக்கதவடைத்தாலும் தன்திருவடிகளிலேவந்துவிழலாம்படியான விசேஷப்ராப்தியையுடையளாய், ஈஶ்வரன் ஸ்வாதந்த்ர்யத்தையும் தந்தாமுடைய வ்யபராதத்தையும் பார்த்துத்தடுமாறினவவஸ்தையில், ஈஶ்வரன் முகத்தைப்பார்த்து, "ஸர்வஜ்ஞராய் ஸர்வஶக்திகராய் உபயவிபூதிநிர்வாஹகராயிருக்கிற தம்முடைய பெருமையையும், அஜ்ஞாநாஶக்திகளால் புஷ்கலராய் 3 (சிறுமானிடவர்) என்னும்படி யிருக்கிற விவர்களுடைய சிறுமையையும்பார்த்தால், பர்வதபரமாணுவுக்குச் சேர்த்தியில்லாதாப்போலே, உமக்கு மிவர்களுக்கும் 4 (கயயாஸீத்ஸமாகமஃ) என்கிறபடியே - ஒருப்ரகாரத்தாலும் சேர்த்தியற்றன்றோ விருக்கவடுப்பது, ஸப்ரயோஜநகடாக்ஷம் பண்ணியிவர்களை யங்கீகரிக்கைக்குயோக்யதையில்லாதபடி நீர் அவாப்த ஸமஸ்த காமராயிருந்தீர், உம்முடைய × தரத்துக்கீடான பச்சை யிவர்களாலிடப்போகாது, ஆனபின்பு, இருவருடைய ஸ்வரூபத்தைப்பார்த்தாலும் இரண்டுதலையும் சேர்க்கைக்கு யோக்யதையில்லை. இவர்களை அநாதரித்தால் உம்முடைய நாராயணத்வமும் † ஒருவாய்போய் ஸர்வரக்ஷகனென வும்முடைய ரக்ஷகத்வமும் விகலமாய் ஶீலாதிகுணங்களும் முடங்கப்பட்டு உம்முடைய ஸ்வாதந்த்ர்யமே தலையெடுத்து இவர்களும்முடைய சீற்றத்துக்கு இலக்காய் நஶித்துப்போமத்தனையாயிருந்தது, உமக்கு மிவர்களுக்குமுண்டான பந்தவிஶேஷத்தைப்பார்த்தால், 5 (உறவேல் நமக்கிங் கொழிக்கவொழியாது) என்கிறபடியே - ‡ குடநீர்வழிந்தாலும் போகாததொன்றாயிருந்தது, ஸ்ருஷ்

---

× தரம் - அதிஶயம். † ஒருவாய் - விகலமாய்,

‡ குடநீர்வழிக்கை - ஜலவடப்ரஹாரம்பண்ணுகை - நீயெனக்குப் பணியில்லை யென்று சொல்லிக்கொண்டிருக்கை.

---

1. ஹா-உப. எ-உச-க.
2. ஶரணாகதி.
3. நாய்ச்-தி-மொ. க0-க0.
4. ரா-ஸு. ருரு-உ.
5. திருப்பாவை. உஅ.

ட்யவதாராதி முகத்தாலே * எதிர்சூழல்புக்குத்திரிகிற உம்முடைய பேற்றுக்குநானிரக்கவேணுமோ, உம்முடைய ஸ்வரூபஸித்தியர்த்தமாக இவர்களை ரக்ஷிக்கவேண்டாவோ, 1 (அதிக்ராமந்நாஜ்ஞாம்)என்கிறபடியேஉம்முடையஆஜ்ஞாதிலங்கநம்பண்ணி நம்முடைச்சிற்றத்துக்குஅநாதிகாலமிலக்காய்ப்போந்தவர்களை, இவர்கள்பண்ணின வபராதத்துக்கு உசிதகண்டம்பண்ணாதே, இவர்கள்செய்ததப்புக்களைப் பொறுத்து இவர்களைரக்ஷித்தால், இவர்கள் அநாதிகாலம்சாஸ்த்ரமர்யாதாதிலங்கநம் பண்ணினப்போலே நாமும் அநந்தகாலம் சாஸ்த்ரமர்யாதாதிலங்கநம் பண்ணினோமாகோமோ, அஜ்ஞனானவிவன் தப்புச்செய்தான் என்ன ஸர்வஜ்ஞனான நாமும், தப்புச்செய்யவோ, இரண்டுதலையும் தப்புச்செய்வது ஒருதலையே யத்தையநுஷ்டித்து விடவமையாதோ, ஒருதலையில் தப்பை மாற்றக்கடவதாகத்துடங்கி இரண்டுதலைக்கும் தப்புண்டாக்குகிறாயன்றோ, இவர்களைரக்ஷித்தால் சாஸ்த்ரமர்யாதை குலையாதோ என்றன்றோ திருவுள்ளத்திலோடுகிறது, இவர்களை ரக்ஷணம் பண்ணாதே அபராதாநுகூலமாக்கி நியமித்தால் உம்முடையக்ருபாதிகுணங்கள்ஜீவிக்கும்படியென், நியமியாதேபோனால் சாஸ்த்ரம் ஜீவியாதாப்போலே ரக்ஷியாதபோது குணங்கள் ஜீவியாதே. ஆனபின்பு, க்ருபாதிகுணங்கள் ஜீவிக்கைக்காக இவர்களுடைய ரக்ஷணம் பண்ணவேண்டாவோ, ரக்ஷணத்தில் சாஸ்தரம் ஜீவியாதென்று சொல்லவேண்டா, சாஸ்த்ரத்தை விமுவர் விஷயமாக்கினால் குணங்களை அபிமுகர் விஷயமாக்கினாலிரண்டும் ஜீவிக்கும். ஆனபின்பு இவர்களை ரக்ஷித்தருளவேண்டாவோ, என்று இச்சேதநனை அபராதங்கள் பாராதே ஈஶ்வரன் விஷயீகரிக்கும்படியான பாசுரங்களைச்சொல்லி, விளக்குப் பொன்போலே நடுவே நின்று இரண்டுதலையையும் சேர்க்கக்கடவளாயிருக்கிற பிராட்டியாருடைய நித்யயோகத்தை ப்ரதிபாதிக்கிறது.

—[நாராயணபதார்த்தம்]—

(3) நாராயணபதம், இப்புருஷகார பூதையாயிருக்கிற பிராட்டிதானே தான் சேர்த்தயிவனை ஈஶ்வரன் கைவிடும்படியான பாசுரங்களைச் சொன்னாலும், 2(தோஷோயத்யபி தஸ்யஸ்யாத்)என்றும், 3(செய்தாரேல் நன்றுசெய்தார்) என்றும்சொல்லுகிறபடியே-அவளோடே மறுதலைத்து நோக்கும்படியான வாத்ஸல்யாதி குணங்களை ப்ரதிபாதிக்கிறது.

இப்பதத்தில் ப்ரதிபாதிக்கப்படுகிற வாத்ஸல்யாதிகுணங்களாகிறன - புருஷகாரபூதையான பிராட்டியாலே உத்பவிக்கப்பட்டு, (ப்ரப

1. ஸ்ரீரங்கராஜஸ்தவே. உ-கக.
2. ரா-யு. கஅ-ங.

த்யே) என்கிற பதத்திற்சொல்லப்படுகிற ஸ்வீகாரத்துக்குபயுக்தங்களாயிருப்பன சில.

வாத்ஸல்யமாவது-வத்ஸத்தின்பக்கல் தேநு இருக்குமிருப்பு. அதாகிறது - அதினுடைய தோஷத்தை போக்யமாகக் கொள்ளுகையும், க்ஷீரத்தைக்கொடுத்து வளர்க்கையும், எதிரிட்டவர்களைக் கொம்பிலும் குளம்பிலும்கொண்டு நோக்குகையுமிறே. அப்படியே, ஈஶ்வரனும், 1 (செய்தாரேல் நன்றுசெய்தார்) என்று- தோஷத்தை போக்யமாகக் கொண்டு, 2 (பாலேபோல்சீர்) என்கிற குணங்களாலே தரிப்பித்து, 3 (கதஞ்சந-நத்யஜேயம்) என்றும் 4 (அபயம் ஸர்வபூதேப்ய:) என்றும் அநுகூலர் நிமித்தமாகவும் ப்ரதிகூலர் நிமித்தமாகவும் நோக்கும்.

ஸ்வாமித்வமாகிறது-உடையவனாயிருக்குமிருப்பு; அதாகிறது - சேதநர் தன்னையழித்துக்கொள்ளுமன்று விடமாட்டாதே இவன்பக்கலிலே ப்ரவணனாய், கர்ஷகன் பயிர்த்தலையிலே குடில்வளைத்து நோக்குமாபோலே இவர்களுடைய ரக்ஷணார்த்தமாக நித்யஸந்நிதி பண்ணி விடாதே நோக்குகைக்குறுப்பான ஸம்பந்தவிஶேஷம்; அத்வேஷந் தொடங்கி கைங்கர்யமெல்லையாக நடுவுண்டானவவஸ்தாவிஶேஷங்களெல்லாமுண்டாக்குகிறது இந்த ஸம்பந்த விஶேஷமடியாகவிறே.

ஸௌஶீல்யமாவது - நித்யஸூரி நிர்வாஹகத்வத்தாலும் உபயவிபூதியோகத்தாலும் பெரியபிராட்டியாரோட்டைச் சேர்த்தியாலும் நிரங்குஶமான வைபவத்தையுடையனாயிருக்கிற ஈஶ்வரனுடைய ஸ்வரூபத்தையும், [(சிறுமானிடவர்) என்கிற] தங்கள் சிறுமையையுங்கண்டு, 5 (அவனெவ்விடத்தான்யானார்) என்னும்படியிருக்குமிறே; அப்படி அவன்மேன்மையையும் தங்கள் சிறுமையையும் பார்த்து ஆஶ்ரயணவைமுக்யம்பிறவாதபடி, தன்பெருமையையும் பாராதே இவர்கள்சிறுமையையும்பாராதே எல்லாரோடுமொக்க மேல்விழுந்து புரையற ஸம்ஶ்லேஷிக்கையும், இப்படி ஸம்ஶ்லேஷியாநின்றால் இவர்கள் கார்யம்செய்தானன்றிக்கே தன்பேறாகநினைத்து தன்னுடைய மேன்மை திருவுள்ளத்தில் நடையாடாதபடியிருக்கையும்.

ஸௌலப்யமாவது - அதீந்த்ரியனான தன்னை சேதநன் கண்ணாலேகண்டாஶ்ரயிக்கலாம்படி நயநவிஷயதாங்கதனாகை; அதினுடைய பூர்த்தியுள்ளது அர்ச்சாவதாரத்திலே; (மாம்) என்று காட்டின ஸௌலப்யம் பரத்வ மென்னும்படியிறே அர்ச்சாவதார ஸௌலப்யம். (மாம்) என்று கையுமுழவுகோலும் பிடித்த சிறுவாய்க்கயிறுமாய்க்

1. பெரியாழ்வார்தி-மொ.
2. பெரியதிருவந்-௫அ.
3. ரா-யு. ௧அ-௩.
4. ரா-யு. ௧அ-௩௪.
5. தி-வா. ௫-௧-எ.
[] குண்டலிதம் க்வாசித்கம்.

கொண்டு ஸாரதியாய்நின்ற நிலையையிறே பற்றச்சொல்லிற்று; அங்குத்
தை ஸௌலப்யம், 1 (மய்யாஸக்தமநா: பார்த) என்று- தன்பக்கலிலே
ஆஸக்தமான மநஸ்ஸையுடைய அர்ஜுநனொருவனுக்குமாயிருக்கும். அர்
சாவதார ஸௌலப்யம் ஸர்வவிஷயமாயிருக்கும்; நீயே நமக்குவேண்
டா, என்றவர்களையும் விடமாட்டாத ஸௌலப்யமிறேயிது; அந்தஸௌ
லப்யம் காதாசித்கமாயிருக்கும்; இந்த ஸௌலப்யம் ஸார்வகாலிகமா
யிறேயிருப்பது. ஸ்வீகாரத்துக்கு உபயுக்தங்களான குணவிசேஷங்க
ளொபாதி, உபாயத்வோபயோகிகளான குணவிசேஷங்களும் இவ்வி
டத்தே அநுஸந்தேயங்கள். ப்ரதமபதாநந்தரத்தில் அஸ்மச்சப்தத்
துக்குப்போலே இதுக்கு ஸங்கோசமில்லாமையாலே, அஸ்மச்சப்தா
ந்வயார்த்தமும் இவ்விடத்திலே அநுஸந்தேயம்.

—சரணபதார்த்தம்.—

(ச) [சரணௌ]--கீழ்ச்சொன்ன குணங்களை யொழியவும் தானே
விரோதி நிவர்த்தகமுமாய் அபிமதப்ராபகமுமாக வல்ல விக்ரஹவை
லக்ஷண்யத்தைச் சொல்லுகிறது. 2 (தெரிவை மாருருவமேமருவி) என்
கிறபடியே - இதரவிஷயங்களினுடைய பொரிபுறந்தடவின வடிவிலே
யகப்பட்டுப்போருகிற சேதநனுக்கு, 3 (தன்பாலாதரம்பெருகவைத்த)
என்கிறபடியே - தன்பக்கலிலே ப்ரேமத்தை யுண்டாக்கி இதரவிஷயங்க
ளில் ருசியைமாற்றி பின்பு தானே உபாயமாய் ஒருதேசவிசேஷத்திலே
போனாலும் 4 (ஸதா பஶ்யந்தி) என்கிறபடியே ப்ராப்யமும் தானே
யாகையாலே ஸ்வரூபகுணங்களிற் காட்டில் விக்ரஹமிறே உபாதேய
மாயிருப்பது. 5 (ஜிதந்தே புண்டரீகாக்ஷ) என்றும் 6 (சரணௌ த்வம் வ்ர
ஜாமி) என்றும் 7 (நஜாநே ஶரணம்பரம்) என்றும் (த்வத்பாதகமலாதந்
யத்) என்றும், 8 (பாதயோஸ்ஸ்மிதம்) என்றும், விக்ரஹத்தினுடைய
ருசிஜநகத்வத்தையும், உபாயோபேயத்வங்களையுமிறே ஜிதந்தையிலடை
வே ப்ரதிபாதிக்கிறது.

இவ்விடத்தில் திவ்யமங்கள விக்ரஹத்தைச்சொல்லுகிறதாகில் விக்
ரஹவாசகமான ஶப்தத்தை ப்ரயோகியாதே விக்ரஹைகதேஶமான
திருவடிகளுக்கு வாசகமான சரணஶப்தத்தை ப்ரயோகிப்பானென்
னென்னில்; மேல்ப்ரபதநம் பண்ணப்புகுகிற அதிகாரி நாராயணபதத்
திலே ஈஶ்வரனுடைய ஸ்வாமித்வத்தையும் சேஷித்வத்தையும் அநு
ஸந்தித்தவனாகையாலும், மாதாவினுடைய இதராவயவங்களிற்காட்டில்
க்ஷீரஸ்யந்தியான ஸ்தநத்திலே ப்ரஜைக்கு விசேஷஸ்நேஹமும் ப்ராப்

1. கீதை. எ-க.
2. பெ. தி-க. க ரு
3. திருமாலை. கசு.
4. புருஷஸூக்தம்.
5. 6. 7. 8. ஜிதந்தை.

தியுமுண்டாயிருக்குமாபோலே, இவனுக்கும், அம்ருதஸ்யந்தியான திருவடிகளிலே விசேஷப்ராப்தியும் ஸ்நேஹமும் கிடக்கக்கடவதாகையாலும், பாதக்ரஹணத்தில் க்ருபை அதிசயித்திருக்கையாலும், சரணசப்தப்ரயோகம் பண்ணுகிறது. 1 (நாளுநந்திருவுடையடிகள்தம் நலங்கழல் வணங்கி) என்றும் 2 (திருநாரணன்றாள்காலம்பெறச் சிந்தித்துய்மினோ) என்றும் இத்யாதிகளிற்படியே - உபதேசஸமயத்திலும் திருவடிகள் ரக்ஷகமென்று உபதேசித்து, 3 (கழல்களவையே சரணாகக்கொண்ட) என்றும் 4 (நாகணைமிசை நம்பிரான் சரணேசரண் நமக்கு) என்றும் 5 (அடிக்கீழமர்ந்து புகுந்தேனே) என்றும் இத்யாதிகளிற்சொல்லுகிறபடியே-அநுஷ்டாநதசையிலும் திருவடிகளையே ரக்ஷகமாக அத்யவஸித்தாரிறே நம்மாழ்வாரும். மற்றுமுள்ள ஆழ்வார்களும், பலவிடங்களிலும் திருவடிகளை உபாயமென்றருளிச்செய்தார்களிறே. 6 (ஸஹ் ராதுஸ் சரணௌயாமாஸ நிஸ்சய) என்று ஆழ்வார்க்கடியான இளையபெருமாளும் திருவடிகளையிறே உபாயமாக அத்யவஸித்தது. ப்ராப்யமும் ஸ்வரூபமும் ஸூரிகளோடு ஸமாநமாயிருக்குமாபோலே, ப்ராபகமும் ஸூரிஸமாநமாயிறே யிருப்பது.

ஆக, கீழேசொன்ன ஸ்ரீமத்தையும், நாராயணத்வமும் அகிஞ்சித்கரமான வவஸ்தையிலும் தானேகார்யம்செய்யவற்றான விக்ரஹவைலக்ஷண்யம் சொல்லுகிறது.

—சரணபதார்த்தம்—

(ரு) (சரணம்) † உபாயமாக. கீழ்ஸ்வீகார்யவஸ்துவைச் சொல்லிற்று; இங்கு ஸ்வீகாரப்ரகாரத்தைச் சொல்லுகிறது. 5 (அகலகில்லேன்

† 'உபாயே க்ருஹரக்ஷித்ரோஸ்சப்தஸ்சரணமித்யம் வர்ததே ஸாம்ப்ரதஞ்சைஷ உபாயார்த்தைகவாசகஃ' என்கிறபடியே ப்ரபத்திப்ரகரணவடிதமான யிந்தசரணசப்தத்துக்கு உபாயார்த்தகத்வம் ஸித்தமென்று திருவுள்ளம்பற்றி- (உபாயமாக) என்று சரண சப்தார்த்தமருளிச்செய்கிறார். 'இங்குச்சொல்லுகிற வுபாயத்வமாவது-பலப்ரதத்வமேயொழிய உபாயத்வமன்று' என்கிறபக்ஷம் சரணவரணாதிகாரியைக்குறித்து யீஸ் வரனுச்கு பலப்ரதத்வவ்யதிரேகேண வுபாயபாவத்தைச் சொல்லுகிற 'உபாயேக்ருஹரக்ஷித்ரோஃ' என்கிறவசநத்தாலே நிரஸ்தம். ரக்ஷித்ருத்வவ்யதிரேகேண யீஸ் வரனுக்குபாயத்வம் வசநஸித்தமாயிருந்தபோதிலும், அது கரணத்வஸ்வரூபமாகையாலும், கரணத்வம்-பாரதந்த்ர்யகர்ப்பத்வேந ஸ்வதந்த்ரனான ஸர்வேஸ்வரனிடத்தில் கூடாமையாலும், கர்த்ருத்வ கரணத்வங்கள் வ்யதிகரணத்வேந லோகத்தில் ஸம்ப்ரதிபந்நமாயிருக்கையாலும், கர்த்ருத்வாபேக்ஷயாகரணத்வமென்பதொருயர்மம் ஸித்திக்கமாட்டாமையாலே சரண

1. தி.வா.மொ.க.௩.அ.
2. தி.வா.மொ.ச.க.க.
3. தி.வா.மொ.ரு.அ.கக.
4. தி.வா.மொ.ரு-க௦-கக.
5. தி.வா.மொ.சு.க௦.க௦.
6. ஸ்ரீராமா.அயோத்.௩க-உ

தர்மோக்தமாயிருக்கச்செய்தே தனித்துச்சொல்லுகிறது - ப்ரபத்திக்கு அவைவேண்டாவென்று தோற்றுகைக்காக. அல்லாதபோது, ஸ்த்ரீ ஶூத்ராதிகளுக்கு அதிகாரமில்லையாமிறே. பஹுவசனத்தாலே அவதாரரஹஸ்யம், புருஷோத்தமவித்யை, தேஶவாஸம், திருநாமஸங்கீர்த்தநம் தொடக்கமானவற்றைச் சொல்லுகிறது.

—[பரித்யஜ்யபதார்த்தம்.]—

(௨)[பரித்யஜ்ய-]விட்டு. பரித்யாகம்,வாஸநாருசிகளோடே கூடவிட வேணுமென்னுமிடத்தைச் சொல்லுகிறது. அவைகிடக்குமாகில் மேற் சொல்லுகிற ஸாதநவிஶேஷத்தி லந்வயமின்றிக்கே யொழியக்கடவது. 'அநாதிகாலம் அநுபாயங்களிலே உபாயபுத்தி பண்ணினோமென்று லஜ்ஜாபுரஸ்ஸரமான த்யாகத்தைச் சொல்லுகிறது' என்றாழ்வான் பணிக்கும். த்யஜித்தோமென்கிற புத்தியும் த்யாகத்தோடொக்கும். ல்யப்பு- உபாயாந்தரத்யாகம் மேல்பற்றப்புகுகிற உபாயத்துக்கு அங்கமென்னுமிடத்தைச் சொல்லுகிறது. 'ப்ரபத்தியாவது-ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்றுகை' என்று அனந்தாழ்வான் வார்த்தை.

—[மாம்பதார்த்தம்.]—

(௩) [மாம்]-என்னை. த்வயத்தில் ப்ரதமபதத்திலே சொல்லுகிற அர்த்தவிஶேஷங்களெல்லாம் இப்பதத்திலே அநுஸந்தேயங்கள். அதாவது-ஶ்ரிய:பதித்வமும், வாத்ஸல்யாதிகுணசதுஷ்டயமும், திவ்யமங்களவிக்ரஹமும். (ஏஷநாராயண: ஶ்ரீமாந்) என்கையாலே ஶ்ரிய:பதித்வமநுஸந்தேயம். அதர்மபுத்தியாலே தர்மத்திலே நின்றும் நிவ்ருத்தனான அர்ஜுநன் குற்றம்பாராதே அபேக்ஷிதார்த்தங்களைத் தானேயருளிச்செய்கையாலே வாத்ஸல்ய மநுஸந்தேயம். தன்னுடைய பரத்வத்தைப் பலகாலு மருளிச்செய்த வளவன்றிக்கே, அர்ஜுநன் ப்ரத்யக்ஷிக்கும்படி பண்ணுகையாலே ஸ்வாமித்வ மநுஸந்தேயம். (ஹேக்ருஷ்ண ஹேயாதவ) என்று - அர்ஜுநன் தானே சொல்லும்படி அவனோடே கலந்து பரிமாறுகையாலே ஸௌஶீல்ய மநுஸந்தேயம். அப்ராக்ருதமான திருமேனியைக் கண்ணுக்கிலக்காம்படி பண்ணுகையாலே ஸௌலப்ய மநுஸந்தேயம். [மாம்] என்று காட்டுகிறது ஸாரத்யவேஷத்தோடே நிற்கிற நிலையையாகையாலே, திவ்யமங்களவிக்ரஹமநுஸந்தேயம்.

—[ஏகபதார்த்தம்.]—

(௪) [ஏகம்]-இவ்வுபாயத்தைச் சொல்லுமிடமெல்லாம் அவதாரணப்ரயோக முண்டாகையாலெ, ஸ்தாநப்ரமாணத்தாலே, உகாரம்போலே இதுவும் அவதாரண வாசகமாம். [வ்ரஜ] என்கிற பதத்தில் சொல்லப்புகுகிற ஸ்வீகாரத்தில் உபாயபுத்தி நிவ்ருத்தியைச்சொல்லுகிறது.

உபாயாந்தரோபகார ஸ்ம்ருதியும் உபாயபரிக்ரஹமும் உபாயாந்தரத் தோடொக்கும். 'ஏகஶப்தம் உபாயோபேயங்களினுடைய ஐக்யத் தையும் உபாயப்ராதாந்யத்தையும் சொல்லுகிறது' என்றுஞ் சொல் லுவர்கள்.

—[ஶரணஶப்தார்த்தம்.]—

(ரு) [ஶரணம்] உபாயமாக. உபாயமாகிறது - அநிஷ்டநிவாரகமு மாய் இஷ்டப்ராபகமுமாயிருக்குமது.

—[வ்ரஜஶப்தார்த்தம்.]—

(சு) [வ்ரஜ] புத்திபண்ணு. இந்த புத்தியாகிறது - த்யாஜ்ய கோடியிலும் அந்வயியாதே ப்ராபகாந்தரபரித்யாகபூர்வகமாய் பகவ த்ரக்ஷகத்வாநுமதிரூபமாயிருப்பதொரு அத்யவஸாயாத்மக ஜ்ஞாந விஶேஷம். இதுதான் உபாயாந்தரங்கள்போலே அஸக்ருத்கரணீய மன்று, கந்யகாப்ரதாநாதிகள்போலே ஸக்ருத்கரணீயம். அல்லாத போது, முன்புத்தையது கார்யகரமன்றிக்கே யொழியும்.

—[அஹம்பதார்த்தம்.]—

(எ) [அஹம்] ஸர்வஜ்ஞத்வாதிகுணவிஶிஷ்டனான நான். [மாம்] என்கிறவிடத்தில், வாத்ஸல்யாதிகுணங்களைச்சொல்லிற்று; இதில், ஜ்ஞா நஶக்த்யாதிகுணங்களைச் சொல்லுகிறது. வாத்ஸல்யாதிகளில்லாத போது உபாயபரிக்ரஹமன்றிக்கேயொழிகிறப்போலே, ஜ்ஞாநஶக்த் யாதிகளில்லாதபோது விரோதிநிவ்ருத்தியன்றிகே யொழியும். இங்குச் சொல்லுகிற ஶக்தியாவது - சேதநனுடைய அவிவாத ஜநநத்துக்கும் விரோதிநிவ்ருத்திக்கு மடியான ஸாமர்த்யம்.

—[த்வாபதார்த்தம்.]—

(அ) [த்வா] உபாயாந்தரங்களைவிட்டு என்னையே யுபாயமாகப்பற்றி யிருக்கிற வுன்னை. கீழில்பதத்தில் ஜ்ஞாநஶக்திகளும், ப்ராப்தியும், நை ரபேக்ஷ்யமும் சொல்லிற்று. இங்கு, அஜ்ஞாநாஶக்திகளும், அப்ராப்தி யும், ஆகிஞ்சந்யமும் சொல்லுகிறது.

—[ஸர்வபாபஶப்தார்த்தம்.]—

(கூ) [ஸர்வபாபேப்ய:]-எல்லாபாபங்களில் நின்றும். இங்கு பாபங் களாகச் சொல்லுகிறது - பகவல்லாபவிரோதிகளை. (சார்ந்தவிருவல் வினைகளும்) என்று - முமுக்ஷுவுக்கு பாபத்தோபாதி புண்யமும் த்யா ஜ்யமாகச் சொல்லுகையாலே புண்யபாபங்களிரண்டையும் பாபஶப்த த்தாலே சொல்லுகிறது. பஹுவசநத்தாலே- அவற்றினுடைய பன்மை யைச் சொல்லுகிறது. அதாகிறது - அவித்யா கர்ம வாஸநா ருசி ப்ரக் ருதிஸம்பந்தங்கள். ஸர்வஶப்தத்தாலே - கீழே த்யாஜ்யமாக விஹி

தங்களாய் ஸாத்யதாவைஶிஷ்ட்யியாலே அநுஷ்டேயமான தர்மங்களில், ஸ்வார்த்ததாப்ரதிபத்தியையும். உபாயபுத்தியையும், ஆவ்ருத்த ப்ரவ்ருத்தியையும், ப்ராரப்தத்தையும், லோக ஸங்க்ரஹார்த்தமாக அநுஷ்டேயமான கர்மங்களில் ஸ்வார்த்ததாப்ரதிபத்தியையும், பகவத் பாகவதவிஷயங்களில் உபசாரபுத்தியா பண்ணுகிற அபசாரங்களையும், பரிஎன்கிற உபஸர்க்கத்தாலும் ஏகவசநத்தாலும் த்யாஜ்யமாகச்சொன்னவற்றினுடைய அநுவ்ருத்தியையும், அவஶிஷ்டமான உத்தராவத்தையும் சொல்லுகிறது. இப்படி கொள்ளாதபோது, 'மாஶுச:'என்கிற விதிசேராது. பாபங்களிலே சிறிதுகிடப்பது, அதிகாரி குறையாலேயாதல், ஈஶ்வரன் குறையாலே யாதலிறே. த்யாகஸ்வீகாரங்கள் பூர்ணமாகையாலே அதிகாரிபக்கல் குறையில்லை, ஜ்ஞாநஶக்திகள் பூர்ணமாகையாலே ஈஶ்வரன்பக்கல் குறையில்லை.

—[மோக்ஷயிஷ்யாமியினர்த்தம்]—

(க0) [மோக்ஷயிஷ்யாமி]-முக்தனும்படி பண்ணக்கடவேன். (சும்மெனாதே கைவிட்டோடி) (காணேவொருங்கிற்றுங்கண்டிலமால்) என்கிறபடியே - அநாதிகாலார்ஜிதமான கர்மங்கள் உன்னைக்கண்டஞ்சி போனவிடம் தெரியாதபடி தன்னடையே விட்டுப்போம்படி பண்ணுகிறேன். விரோதிநிவ்ருத்தியும் அபிமதப்ராப்தியு மிரண்டும் பலமாயிருக்க ஒன்றைச் சொல்லுவானென்னென்னில்; ஒன்றைச்சொன்னால் மற்றையது தன்னடையே வருகையாலேசொல்லிற்றில்லை. (மாமேவைஷ்யஸி) என்று கீழிலுபாயத்துக்குச்சொன்ன பலமொழிய இவ்வுபாயத்துக்கு வேறு பலமில்லாமையாலே சொல்லிற்றில்லை யென்னவுமாம். ஆனால் விரோதிநிவ்ருத்திதன்னைச் சொல்லுவானென்னென்னில்; அது அதிகமாகையாலே சொல்லிற்று. விரோதிநிவ்ருத்திபிறந்தால் பலம் ஸ்வதஸ்ஸித்தமாகையாலே தனித்துச்சொல்ல வேண்டாவிறே.

—[மாஶுசஶ்ஶப்தார்த்தம்.]—

(கக) [மாஶுச:]- ஶோகியாதேகொள். உபாயாந்தரங்களை விடுகையாலும், என்னையே உபாயமாகப் பற்றுகையாலும், விரோதியை நேராகப்போக்குகிறே னென்கையாலும், உனக்கு ஶோகிக்க ப்ராப்தியில்லை. உனக்கு கர்தவ்யமில்லாமையாலே உன்னைப்பார்த்து ஶோகிக்கவேண்டா, எனக்கு ஜ்ஞாநஶக்தி கருணாதிகளில் வைகல்யமில்லாமையாலே என்னைப்பார்த்து ஶோகிக்கவேண்டா. விரோதியாகிறது-என்னுடைய நிக்ரஹமாகையாலும் அதில் கிடப்பதொன்றில்லாமையாலும் அத்தைப் பார்த்து ஶோகிக்கவேண்டா. அநாதிகாலம் ஶோகியாதிருந்தாப்போலே யிருப்பதொன்று-இப்போது நீ ஶோகிக்கையாவது. நீ ஶோகித்தாயாகில் உன்கார்யத்திலே நீஅதிகரித்தாயாவுதி. ஶேஷபூதனுடையபேறு ஶேஷியது, பேறுடையவனது இழவு, இழவுடையவனுக்கு

ஶோகமுள்ளது, ஆனபின்புநீ ஶோகிக்கக்கடவையோ. தநத்தையிழந்தால் தநவானன்றோ ஶோகிப்பான், தநந்தான் ஶோகிக்குமோ. 'ஸர்வப்ரகாரத்தாலும் நானுன்னைக் கைவிடேன் அச்சங்கெட்டிரு' என்று, (வாரேற்றிளமுலையாய் வருந்தேனுன்வளைத்திறமே) என்கிறபடியே அர்ஜுநன் கண்ணீரைத் துடைக்கிறான்.

(வார்த்தையறிபவர்) என்கிறபாட்டும், (அத்தனாகி) என்கிறபாட்டும் இதுக்கர்த்தமாக வநுஸந்தேயம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்;

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஶ்ரிய:பதிப்படி.

## ௩-வது. த்வயப்ரகரணம்.

### —[உபோத்காதம்.]—

அபௌருஷேயமாய் நித்யநிர்தோஷமா யிருந்துள்ள வேதத்திலும் வேதார்த்தத்தை உபப்ரும்ஹிக்கக்கடவதான ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களிலும் அவிகீதமாக ப்ரஸித்தமாய், எம்பெருமானுடைய ஸர்வஸ்வம்மாய், ஆழ்வார்களுடையவும் ஆசார்யர்களுடையவும் தநமாய், பகவதநந்யார்ஹ ஶேஷபூதமான ஆத்மஸ்வரூபத்துக்கு அத்யந்தமநுரூபமா யிருந்துள்ள ஸாதநவிஶேஷத்தையும் ஸாத்யவிஶேஷத்தையும் அடைவே வாக்யத்வயமும் ப்ரதிபாதிக்கிறது.

பூர்வாசார்யர்கள் ரஹஸ்யத்ரயத்தையும் தங்களுக்கு தநமாக நினைத்துப்போருவர்கள்.

அதில் ப்ரதமரஹஸ்யமான திருமந்த்ரம் ப்ராப்ய ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறது; சரமஶ்லோகம் ப்ராபகஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறது. அவை யிரண்டிலும் ருசியுடையனான வதிகாரி அவற்றை விஶதமாக வநுஸந்திக்கிற படியைச் சொல்லுகிறது த்வயம். இம்மூன்றையும் தஞ்சமாக நினைத்துப்போரா நிற்கச்செய்தேயும், ஸர்வாதிகாரமாகையாலும், ஆசார்யருசிபரிக்ருஹீதமாகையாலும், இத்தையே மிகவும் தஞ்சமாக நினைத்துப்போருவர்கள். புத்திபூர்வகமான வபசாரங்களுக்கும் பரிஹாரமாகையாலும், கர்மாவஸாநத்திலன்றிக்கே ஶரீராவஸாநத்திலே மோக்ஷமாகையாலும், இதுவே தஞ்சம்.

ரகுராக்ஷஸ ஸம்வாதம், வ்யாக்ரவாநரஸம்வாதம், நஹுஷ ப்ருஹஸ்பதி ஸம்வாதம், கபோதோபாக்யாநம், மறவன் 'முசில்க்குட்டியை விட்டுப்போந்தேன்' என்ன அதுகேட்டு பட்டரருளிச்செய்த

வார்த்தையும், ஸ்ரீபாஷ்யகாரர் சரமஸமயத்திலே 'எப்போதும் த்வயத்தை அநுஸந்திக்கை எனக்குப்ரியம்' என்றருளிச்செய்த வார்த்தையும், பெரியகோயில் நாராயணரைக்குறித்து ஶபயபுரஸ்ஸரமாக 'த்வயமொழியத் தஞ்சமில்லை' என்றருளிச்செய்தவார்த்தையும், ஸசேலஸ்நாந பூர்வகமாக ஆர்த்தியோடே உபஸந்நனான சிறியாத்தானுக்கு ஆஜ்ஞையிட்டு, 'த்வயமொழியத்தஞ்சமில்லை' என்று எம்பாரருளிச்செய்த வார்த்தையும், 'திருமந்த்ரத்திலேபிறந்து த்வயத்திலேவளர்ந்து த்வயநிஷ்டராவீர்' என்று நஞ்ஜீயரைக்குறித்து அனந்தாழ்வான் ப்ரஸாதித்த வார்த்தையும் துடக்கமான பூர்வாசார்ய வசநங்கள், ருசிவிஶ்வாஸங்களுக்குறுப்பாக இவ்விடத்திலே அநுஸந்தேயங்கள்.

இதுதான், பூர்வவாக்யம்-மூன்றுபதமும், உத்தரவாக்யம்-மூன்றுபதமும் ஆக ஆறுபதமாயிருக்கும். அதில் முதல்பதம், புருஷகார பூதையான பிராட்டியுடைய நித்யயோகத்வதயும், ஆஶ்ரயணீயனானவெம்பெருமானுடைய குணவிக்ரஹங்களையும் சொல்லுகிறது; இரண்டாம்பதம், அத்திருவடிகள் உபாயமென்னுமிடத்தைச் சொல்லுகிறது; மூன்றும்பதம் அத்திருவடிகளை உபாயமாக பரிக்ரஹிக்கும்படியைச் சொல்லுகிறது; நாலாம்பதம், உபாயபரிக்ரஹபலமான கைங்கர்யத்துக்கு விஷயம் மிதுநமென்னுமிடத்தைச் சொல்லுகிறது; அஞ்சாம்பதம் அவ்வஸ்து ஸர்வஸ்வாமியென்னுமிடத்தையும் கைங்கர்யப்ரார்த்தநையையும் சொல்லுகிறது; ஆறும்பதம், கைங்கர்யவிரோதி நிவ்ருத்தியைச் சொல்லுகிறது.

—[ஶ்ரீஶப்தார்த்தம்.]—

(க) அதில் ப்ரதமபதத்தில், ஸ்ரீஶப்தம், (ஸ்ரீயதே, ஶ்ரயதே) என்கிற வ்யுத்பத்தித்வயத்தாலும்- பிராட்டி சேதநனுக்கு ஆஶ்ரயணீயையா யிருக்குமிருப்பையும், ஈஶ்வரனை யெப்போதுமொக்க ஆஶ்ரயித்துக்கொண்டிருக்கு மிருப்பையும் சொல்லுகிறது. [ஸ்ரீயதே] என்றது-ஆஶ்ரயிக்கப்படாநின்றாளென்றபடி. [ஶ்ரயதே]என்றது-ஆஶ்ரயியாநின்றாளென்றபடி. புருஷகாரமாம்போதைக்கு இருவரோடும் ஸம்பந்தமுண்டாகவேணும். சேதநரோடே மாத்ருத்வஸம்பந்த முண்டாயிருக்கும்; ஈஶ்வரனோடே மஹிஷீத்வஸம்பந்த முண்டாயிருக்கும்.

(ஶ்ருணோதி-ஶ்ராவயதி) என்கிற நிருக்தி விஶேஷங்களாலே-(ஸ்ரீயதே, ஶ்ரயதே) என்கிற வ்யுத்பத்தி த்வயத்தாலும் பலிதமான அர்த்தத்தைச்சொலுல்கிறது.

[ஶ்ருணோதி]என்றது-கேளாநிற்குமென்றபடி;[ஶ்ராவயதி]என்றது-கேட்பியாநிற்குமென்றபடி. ஆஶ்ரயிக்கவிழிந்த சேதநன், தன்னபராதத்தையும் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்தையும் நினைத்தஞ்சி, இரண்டுக்கும் பரி

ஹாரமாக, பிராட்டியுடைய காருண்யாதி குணங்களையும் தன்னோடவளுக்குண்டான ஸம்பந்தவிஶேஷத்தையும் முன்னிட்டுக்கொண்டு, 'ஈஶ்வரன்பக்கல் பகலறுத்துக்கொண்ட எனக்கு அஶரண்யஶரண்யையான தேவரீர் திருவடிகளொழியப் புகலில்லை' என்று இவன் விண்ணப்பஞ்செய்யும் வார்த்தைகளைக்கேளாநிற்கும்; ஸர்வஜ்ஞனை விஶ்வரனையுங்கூட நிருத்தரனும்படி பண்ணவற்றான தன்னுடைய யுக்திவிஶேஷங்களாலும் தன்னுடைய ஸௌந்தர்யதாப்ரகர்ஷத்தாலும் மற்றுமுண்டான உசிதோபாயங்களாலும், இவள் இவனபராதங்களை அவன் திருவுள்ளத்திலே படாதபடிபண்ணி இவன் விண்ணப்பஞ்செய்யும் வார்த்தையைக்கேட்கும்படி பண்ணுநிற்கும். சேதநனுக்கு இருவரோடு ஸம்பந்தமுண்டா யிருக்கச்செய்தேயும், மாத்ருத்வநிபந்தநமான வாத்ஸல்யாதிரேகத்தாலும், ஈஶ்வரனோபாதி காடிந்யமார்த்தவங்கள் கலந்திருக்கையன்றிக்கே, இவள் பக்கலுள்ளது மார்த்தவமேயாய் இத்தலையில் கண்குழிவுகாண மாட்டாதபடி யிருக்கையாலும், தன்பக்கலிலே தீரக்கழியவபராதத்தைப்பண்ணின ராவணனுக்கு மகப்பட ஹிதோபதேசம் பண்ணும்படி குற்றங்கள் திருவுள்ளத்தில் படாதபடி யிருக்கையாலும், ராக்ஷஸிகள் அபராதத்தில் நின்றும் மீளாதிருக்கச்செய்தே அவர்கள் அஞ்சின வவஸ்தையிலே (ஹவேயம் ஶரணம் ஹிவஃ) என்று அபயப்ரதாநம் பண்ணும்படி யிருக்கையாலும், திருவடியோடே மன்றாடி அவர்களை ரக்ஷித்துத் தலைக்கட்டுகையாலும், நில்லென்ன பெருமாள் தாமே, பிராட்டி முன்னிலையாகப் பற்றுகையாலே, இளையபெருமாளைக் கூடக்கொண்டு போருகையாலும், ஸ்ரீவிபீஷணப்பெருமாள் குடும்பஞ்வாரா பிராட்டிக்கு ஆநுகூல்யத்தைப்பண்ணி பெருமாளை ஶரணம்புகுறுகையாலும், காகமபராதத்தைப்பண்ணிவைத்து பிராட்டி ஸந்நிதியாலே தலைபெற்றுப்போகையாலும், அத்தனையபராதமின்றிக்கேயிருக்க இவள் ஸந்நிதியில்லாமையாலே ராவணன் தலையறுப்புண்ணக் காண்கையாலும், மற்றுமிவை துடக்கமான ஸ்வபாவ விஶேஷங்கள் எல்லாவற்றாலும், ஈஶ்வரனை ஆஶ்ரயிக்கும்போது பிராட்டி புருஷகாரபூதையாகக்கடவள்.

—[மதுப்பினர்யம்.]—

(௨) மதுப்பு புருஷகாரபூதையான பிராட்டியுடையநித்யயோகத்தைச்சொல்லுகிறது. (அகலகில்லேனிறையும்) என்கிறபடியே - இவளொன்றுமொக்க விஶ்வரனைப் பிரியாதிருக்கையாலே, ஆஶ்ரயிக்கவிழிந்த சேதநனுக்கு இவள் ஸந்நிதியில்லையென்று பிற்காலிக்கவேண்டாதே ருசிபிறந்தபோதே ஆஶ்ரயிக்கலாம்படி யிருக்கும்.

—[நாராயணபதார்த்தம்,]—

(௩) [நாராயண] பதம், சேர்க்கக்கடவ பிராட்டிதானே * சிதகுரைத்தாலும், (செய்தாரேல் நன்றுசெய்தார்) என்று அவளோடே மறுதலைத்து நோக்கு மெம்பெருமானுடைய வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்யங்களாகிற குணங்களைச்சொல்லுகிறது.

வாத்ஸல்யமாவது-வத்ஸத்தின்பக்கல் தேநு இருக்குமிருப்பு; அதாகிறது-அதினுடைய தோஷத்தை போக்யமாகக்கொள்ளுகையும் க்ஷீரத்தைக்கொடுத்து வளர்க்கையும், எதிரிட்டவர்களைக் கொம்பிலுங் குளம்பிலுங்கொண்டு நோக்குகையுமிறே; அப்படியே, ஈஶ்வரனும் இவனுடைய தோஷத்தை போக்யமாகக்கொண்டு, (பாலேபோல்சீர்) என்கிறபடியே-குணங்களாலே யரிப்பித்து, (அபயம் ஸர்வபூதேப்யஃ) என்கிறபடியே-அநுகூலர் நிமித்தமாகவும் ப்ரதிகூலர் நிமித்தமாகவும் நோக்கும்.

ஸ்வாமித்வமாவது-இவன்விமுகனான தஶையிலும் விடாதே நின்று ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகைக்கு ஹேதுவாயிருப்பதொரு ஸம்பந்தவிஶேஷம்; அதாகிறது-உடையவனா யிருக்குமிருப்பு; அத்வேஷந்துடங்கி கைங்கர்யபர்யந்தமாகவுண்டான ஸ்வபாவவிஶேஷங்களையெல்லா முண்டாக்குகிறது இந்தஸம்பந்த விஶேஷமடியாகவிறே.

ஸௌஶீல்யமாவது-உபயவிபூதியோகத்தாலும் பெரியபிராட்டியரோட்டைச் சேர்த்தியாலும் நிரங்குஶஸ்வதந்த்ரனாயிருக்கிற ஈஶ்வரனுடைய மேன்மையையும் தங்கள் சிறுமையையும்பார்த்து (அவனெவ்விடத்தான் யானார்) என்று பிற்காலியாமே எல்லாரோடுமொக்க மேல்விழுந்து புரையறக்கலக்கையும், அதுதன்பேறாக விருக்கையும், எதிர்த்தலையி லபேக்ஷையின்றிக்கே யிருக்கக்கலக்கையும்.

ஸௌலப்யமாவது-கண்ணுக்கு விஷயமின்றிக்கே யிருக்கிறதான் கண்ணாலேகண்டு ஆஶ்ரயிக்கலாம்படி யெளியனாகை.

அதினுடைய பூர்த்தியுள்ளது அர்ச்சாவதாரத்திலே யிறே; (மாம்) என்று காட்டின ஸௌலப்யம் பரத்வமென்னும்படியிறே அர்ச்சாவதார ஸௌலப்ய மிருக்கும்படி. அர்ஜுநனொருவனுக்குமேயாய்த்து அந்தஸௌலப்யம், நீயெனக்கு வேண்டாவென்கிறவர்களையும் விடமாட்டாத ஸௌலப்யமிறேயிது. அதுகாதாசித்கம், இது எப்போதுமுண்டு.

—[சரணஶப்தார்த்தம்.]—

(௪) [சரணௌ]-திருவடிகளை. ருசிஜநகமுமாய் ப்ராப்யமுமாயிருக்கிறுப்போலே ப்ராபகமுமாயிருப்பது திருமேனியிறே. திருமேனியைச் சொல்லுகிறதாகில் திருவடிகளுக்கு வாசகமான ஶப்தத்தாலே சொல்

வானென்னென்னில்; மேல்ப்ரபத்தி பண்ணப்புகுகிற வதிகாரி அநந்யார்ஹஶேஷத்வஜ்ஞானத்தையுடையவனாகையாலே, ஸ்வாமிஸந்நிதியி லிவன்பாசுரம் இப்படியல்லதிருமையாலே சொல்லுகிறது. (திருநாரணன்றாள்) (திருவுடையடிகள்தம் நலங்கழல்) (கழல்களவையே சரணாகக்கொண்ட) (நாகணைமிசை நம்பிரான் சரணேசரண்) (அடிக்கீழமர்ந்து புகுந்தேனே) என்று சொல்லுகிறபடியே - திருவடிகளிறே உபாயமாயிருப்பது.

## —ஶரணஶப்தார்த்தம்.—

(ரு) [ஶரணம்-] உபாயமாக, உபாயமாகிறது-அநிஷ்டத்தைப்போக்கி யிஷ்டத்தைப் பண்ணித்தருமது. அநிஷ்டமாகிறது-அவித்யையும், அவித்யாகார்யமான ராகத்வேஷங்களும், புண்யபாபரூபமான கர்மங்களும், தேவாதி சதுர்வியஶரீரங்களும், ஆத்யாத்மிகாதிதாபத்ரயபரம்பரைகளும்; இஷ்டமாகிறது - புண்யபாபநிவ்ருத்தியும், சரீரவிஶ்லேஷமும், அர்சிராதிமார்க்கமநமும், பரமபதப்ராப்தியும், பரமாத்மதர்ஶநமும், கைங்கர்யங்களும். அதில் ப்ரதாநமாக இஷ்டமாயிருப்பது கைங்கர்யம்; அதுக் குறுப்பாகையாலே இஷ்டங்களாயிருக்கும் மற்றுள்ளவை.

## —ப்ரபத்யே பதார்த்தம்.—

(சு) [ப்ரபத்யே]-பற்றுகிறேன் - (பத கதௌ) என்கிற தாதுவுக்கு அர்த்தம்-கதி; இங்கு கதியாக நினைக்கிறது-புத்திவிஶேஷத்தை. இந்தபுத்திவிஶேஷமாகிறது - அநந்யார்ஹஶேஷத்வஜ்ஞானகார்யமாய், இதரோபாயவ்யாவ்ருத்தமாய், ஸர்வஶக்தி ரக்ஷகத்வாநுமதிரூபமாய், ஸக்ருதநுஷ்டேயமாய், வ்யபிசாரவிளம்பவிரஹமாய், ஸர்வாதிகாரமாய், நியமஶூந்யமாய், அந்திமஸ்ம்ருதிநிரபேக்ஷமாய், ஸுலபமாய், யாச்ஞாகர்ஹமாய், நிருபாதிகவ்யவஸாயரூபமாயிருப்பதொருஜ்ஞானவிஶேஷம். இந்த ஜ்ஞானத்தில் ப்ரயோஜநாம்ஶமாயிருப்பது ஒருவிஶ்வாஸம். உக்த்யாபாஸ வசநாபாஸ ஹஸ்த்யாபாஸங்களாலும், ஈஶ்வரப்ரதீக்ஷை தொடக்கமான வற்றாலும், இவ்வத்யவஸாயவிஶேஷம் குலையாதிருந்தபோதாய்த்து பலஸித்தியுள்ளது. இங்குச்சொல்லுகிறப்ரபத்தி கரணத்ரயத்தாலேயுண்டாகவுமாம், ஏககரணத்தாலேயுண்டாகவுமாம்; பலஸித்தியில் குறையில்லை. இப்பதத்தில் வர்த்தமாநநிர்தேஶத்தாலே-காலக்ஷேபஹேதுவாகவும் போகஹேதுவாகவும் ஈஶ்வரப்ரீதிஹேதுவாகவும் யாவச்சரீரபாதம் இந்தபுத்திவிஶேஷம் அநுவர்த்திக்குமென்னுமிடம் ஸூசிதமாகிறது. (ஸக்ருதேவ) என்கையாலே-பலத்துக்கொருக்காலமையும்.

—[உத்தரவாக்யார்த்தம்.]—

(எ) உத்தரவாக்யம், ப்ரபத்திகார்யமாய், ஶ்ரிய:பதி விஷயமாயிருந்துள்ள கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கிறபடியைச்சொல்லுகிறது. கீழ்ச்சொன்னஸாதநம் ஃபலசதுஷ்டயஸாதாரணமாயிருக்கையாலே, இவனுக்கபேக்ஷிதமான ஃபலவிஶேஷத்தை நியமிக்கிறது.

இதில் ப்ரதமபதம், கைங்கர்யப்ரதிஸம்பந்தி மிதுநமென்னுமிடத்தைச்சொல்லுகிகிது. ஶேஷத்வப்ரதி ஸம்பந்தி மிதுநமானால் கைங்கர்யப்ரதிஸம்பந்தியும் மிதுநமாயிறே யிருப்பது. (கோலத்திருமாமகளோடுன்னைக்கூட) (ஒண்டொடியாள் திருமகளும் நீயும்) (திருமாற்கரவு) என்கிறபடியே- தனித்திவர்களுக்கு ப்ராப்யத்வமில்லை. (அல்லிமாமலராள் தன்னொடுமடியேன்கண்டுகொண்டு) என்கிறபடியே - இச்சேர்த்தியிலே பற்றினவிறே ஸ்ரீவிபீஷணப்பெருமாளைப்போலே உஜ்ஜீவித்துப்போகலாவது. அல்லாதபோது ராவண ஶூர்ப்பணகிகளைப்போலே விநாஶமே ஃபலமாயிருக்கும். பூர்வவாக்யத்தில்மதுப்பு, ஆஶ்ரயிக்குமவர்களை ஈஶ்வரனோடேசேர்க்கைக்காகப் பிரியாதிருக்குமிருப்பைச் சொல்லுகிறது; இந்தமதுப்பு, இவன்பண்ணும் கைங்கர்யத்தை ஈஶ்வரன் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப்படுத்திகைங்கர்யங் கொள்ளுகைக்காகப் பிரியாதிருக்கு மிருப்பைச் சொல்லுகிறது.

—[நாராயணபதார்த்தம்.]—

(அ) இரண்டாம்பதம், கைங்கர்யவர்த்தகமாக அநுஸந்தேயமாயிருந்துள்ள குணவிக்ரஹவிபூதி யோகத்தைச்சொல்லுகிறது. கீழ்உபாயபரிக்ரஹத்துக்கு ஏகாந்தமாகச்சொன்ன குணங்களும், இங்கே ப்ராப்யத்வேநவநுஸந்தேயங்கள். கீழில், மற்றை குணங்களிலுங்காட்டில் ஸௌலப்யம் ப்ரதாநமாயிருக்கும்; இங்கு, ஸ்வாமித்வம் ப்ரதாநமாயிருக்கும்.

—[சதுர்த்தியினர்த்தம்.]—

(௯) இதில் சதுர்த்தி, கைங்கர்யப்ரார்த்தநத்தைச் சொல்லுகிறது. (ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி - வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம்) என்கிறபடியே-இச்சேதநன், அபிநிவேஶாதிஶயத்தாலே தேஶகாலாவஸ்தாப்ரகார நியமவிதுரமாக ப்ரார்த்திக்கக்கடவனா யிருக்கையாலே, ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வப்ரகாரத்தாலும் பண்ணும் வ்ருத்திவிஶேஷத்தைச்சொல்லுகிறது. ஶேஷத்வஜ்ஞாநகார்யமான வுபாயபரிக்ரஹத்துக்கு அநந்தரம் ப்ராப்தமாயிருக்கையாலே, இந்தசதுர்த்திக்கு தாதர்த்யமர்த்த மாகமாட்டாது; உத்துங்கதத்த்வத்தைக்குறித்துப்பர தந்த்ரனான சேதநன்பண்ணுகிற வ்ருத்தி

விஶேஷமாகையாலே, விஷயஸ்வபாவத்தாலும் ஆஶ்ரயஸ்வபாவத்தாலும் ப்ரார்த்தனையே அர்த்தமாகக்கடவது.

## —[நமஶ்ஶப்தார்த்தம்]—

(௧௦) நிரதிஶயபோக்யமான பகவத்விஷயத்தை விஷயீகரித்திருக்கையாலும், நிரஸ்தஸமஸ்தப்ரதிபந்தகமான ஸ்வரூபத்தை ஆஶ்ரயமாகவுடைத்தாயிருக்கையாலும், அத்யர்த்த ப்ரியரூபமான கைங்கர்யத்தில் பாரதந்த்ர்யவிரோதியான ஸ்வப்ரயோஜநத்வபுத்தியை நிவர்த்திப்பிக்கிறது- நமஸ்ஸு. பகவந்முகவிகாஸஹேதுவாகையாலே இது நமக்கு ஆதரணீயமென்கிற ப்ரதிபத்தியொழிய இதிலே போக்த்ருத்வப்ரதிபத்தியும் மதீயத்வப்ரதிபத்தியும் நடக்குமாகில் அபுருஷார்த்தமாயிறேயிருப்பது. ஸ்வரூபவிரோதியென்றும், ஸாதநவிரோதியென்றும், ப்ராப்திவிரோதியென்றும், ப்ராப்யவிரோதியென்றும், சதுர்விதமாயிருக்கும் விரோதி. அதில், திருமந்த்ரத்தில் உகாரத்தாலும் நமஸ்ஸாலும்-ஸ்வரூபவிரோதி நிவ்ருத்தியை ப்ரதிபாதிக்கிறது; சரமஶ்லோகத்தில் அர்த்தத்வயத்தாலும்-ஸாதநவிரோதி நிவ்ருத்தியையும் ப்ராப்திவிரோதி நிவ்ருத்தியையும் ப்ரதிபாதிக்கிறது; ப்ராப்யவிரோதி நிவ்ருத்தியைச் சொல்லுகிறது-இந்தநமஸ்ஸு. அதாவது * ஏறூருமிறையோனிற்படியே அவனுக்குறுப்பல்லாத ஆத்மாத்மீயங்கள் த்யாஜ்யமென்கை. போகவிரோதியான ஶேஷத்வாநுஸந்தாநமும், ஆத்மஸமர்ப்பணம்போலே ஸ்வரூபவிருத்தம்.

ஆக புருஷகார ஸ்வரூபத்தையும், உபாயஸ்வரூபத்தையும், உபாய பரிக்ரஹத்தையும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியையும், கைங்கர்யத்தையும், அதுக்கு விரோதியான அஹங்காரமமகாரங்களினுடைய நிவ்ருத்தியையும் சொல்லித் தலைக்கட்டுகிறது.

பூர்வவாக்யத்துக்கர்த்தமாக, (அகலகில்லேன்) என்கிறபாட்டை அநுஸந்திப்பது; உத்தரவாக்யத்துக்கர்த்தமாக, (சிற்றஞ்சிறுகாலே) என்கிறபாட்டை அநுஸந்திப்பது.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஶ்ரிய:பதிப்படி ஸம்பூர்ணம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# தத்த்வஶேகரம்

---

## —[உபோத்காதம்]—

† பும்ஸ்பர்ஶக்லேஶ ஸம்பாவநாகந்தவிதுரமாய், ப்ரத்யக்ஷாதி

---

† நத்வா ஸ்ரீரங்கநாயமேஶம் ஸ்ம்ருத்வா குருபரம்பராம் |
கரோமி பாலபோதார்த்தம் தத்த்வஶேகரடிப்பணீம் ||

பரமகாருணிகனான பேரருளாளன் உபயகாவேரிமத்யத்திலே பிள்ளை லோகாசார்யராகவவதரித்தருளி ஸகல சேதநோஜ்ஜீவநார்த்தமாக வேதாந்தார்த்தங்களை தத்த்வஶேகரப்ரபந்தரூபேண வெளியிடுகிறார். இப்ப்ரபந்தந்தான் அர்த்தபஞ்சகப்ரதிபாதகபரமாயிறே யிருப்பது. ஆகையாலிது ப்ரகரணபஞ்சகமாயிருக்கும். 'ஸர்வஸ்மாத்பரனான நாராயணனுக்கு' என்று ப்ரதமப்ரகரணார்த்தத்தையும், 'ஸர்வப்ரகார பரதந்த்ரரான ஸர்வாத்மாக்களினுடையவும்' என்று த்விதீயப்ரகரணார்த்தத்தையும், 'ஸ்வரூபத்துக்கநுரூப புருஷார்த்தமான கைங்கர்யத்தை' என்று மூன்றாம்ப்ரகரணார்த்தத்தையும், 'அநாதியாக—ஜ்ஞானவிஶேஷம்' என்று சதுர்த்தபஞ்சமப்ரகரணங்களுடைய வர்த்தத்தையும் ஸங்க்ரஹித்தருளிச்செய்திருக்கையாலே. இதுதான் ஸ்ரீபாஷ்யார்த்தங்களை ஸங்க்ரஹமாகக் காட்டவற்றாயுமிருக்கும். ப்ரதமத்விதீயாத்யாயங்களில் ப்ரஹ்மத்தினுடைய ஜகத்காரணத்வத்தை ப்ரதிபாதிக்கையால் பரஸ்வரூபத்தையும், அதில் ஆத்மாதிகரணாதிகளில் ஜீவஸ்வரூபத்தை ஸ்பஷ்டமாக நிரூபிக்கையாலே ஜீவஸ்வரூபத்தையும், த்ருதீயாத்யாயத்தில் வைராக்யபாதமான ப்ரதமபாதத்தில் விரோதிஸ்வரூபத்தையும் மேலுபாஸநாதிஸ்வரூபஶோதநம் பண்ணுகையாலே உபாயஸ்வரூபத்தையும், நான்காவதத்யாயத்தில் உபாஸகனான சேதநனுடைய பலமான ப்ரஹ்மப்ராப்திப்ரகாரத்தை யருளிச்செய்கையாலே பலஸ்வரூபத்தையும் ஸுஸ்பஷ்டமாக இவ்விடத்திலு மருளிச்செய்கையாலே அதினுடைய ஸங்க்ரஹத்வ மிதுக்குக் கூடுமென்றறியவும். ஸ்ரீபாஷ்யம் அத்யாய சதுஷ்டயாத்மகமா யிருக்கிறாப்போலே இதுவும் ப்ரகரண சதுஷ்டயாத்மகமாயிருக்குமென்றுஞ் சொல்லுவர்கள். 'பும்ஸபர்ஶே' த்யாரப்ய 'நிரூபணஜ்ஞானவிஶேஷம்' இத்யந்தமுபோத்காதம். 'நாராயணன்' என்றுதுடங்கி 'அவனையே ப்ரதிபாதிக்கின்றன' என்கிற பர்யந்தம் வக்ஷ்யமாண பரஸ்வரூப நிர்ணயஸங்க்ரஹம்.

ப்ரதமம் அபௌருஷேயத்வாதியுக்தங்களான வேதங்களையும், ததுபப்ரும்ஹணங்களான ஸ்ம்ருதீதிஹாஸபுராணாதிகளையும், ப்ரமாணதமமாக வங்கீகரித்துக்கொண்டு பரபக்ஷநிரஸந பூர்வகமாக ஸ்வமதஸ்தாபநம் பண்ணியருளுகிறார்- (பும்ஸ்பர்ஶே)த்யாதிநா. க்ரந்தாதியில் பும்ஶப்தப்ரயோகம் பண்ணுகையாலே மங்களாசரணமும் அர்த்தாத்ஸித்தமென்று கண்டுகொள்வது. 'பும்ஸ்பர்ஶே' த்யாதிவாக்யத்தாலே வேதத்துக்கு அபௌருஷேயத்வ நித்யத்வ நிர்தோஷத்வங்கள் அருளிச்செய்தாராயிற்று. 'அதஏவச நித்யத்வம்' 'வேதாம்ஶ்சைகே ஸந்நிகர்ஷம் புருஷாக்யா:' என்று பூர்வோத்தரமீமாம்ஸா ஶாஸ்த்ரங்களிலிவ்வர்த்தம் ஸாதிக்கப்பட்டது. புருஷபுத்திமூல ப்ரமவிப்ரலம்பப்ர

ப்ரமாணவிலக்ஷணமாயிருந்துள்ள நிகிலவேதஜாதத்துக்கும், † ததுபப்ரும்ஹணங்களான ஸ்ம்ருதீதிஹாஸபுராணாதிகளுக்கும் க்ருத்யம்-ஸகலஸம்ஸாரிசேதநர்க்கும் தத்த்வஜ்ஞாநத்தை ஜநிப்பிக்கை.

---

மாதாஶக்தி ரூபதோஷ சதுஷ்டய ஸம்பாவநாகந்ய ஶூந்யமாய் என்றபடி. (ப்ரத்யக்ஷாதி) என்கிறவாதிஶப்தம் அநுமாநாதிபரம். (நிகிலவேதஜாதத்துக்கும்) என்று ஸாமாந்யேந அருளிச்செய்தது- பூர்வோத்தரபாகபேதபிந்நமான வேதம் ஏகஶாஸ்த்ரமென்று அறிவிக்கைக்காக. பூர்வமீமாம்ஸை என்றும், உத்தரமீமாம்ஸை என்றும் ஸமாக்யாபேதத்தாலும், கர்மப்ரஹ்மரூபேணப்ரதிபாத்யார்த்தபேதத்தாலும், ஜைமினீயம் பாதராயணமென்கிற கர்த்ருபேதத்தாலும் ஶாஸ்த்ரபேதமுண்டென்கிற ஶங்கைக்கு விஷயமாயிருந்ததேயாகிலும் நிரூபணீயமானவேதம் உபநிஷத் விஶிஷ்டமாகையாலே ஏகமாகையாலும், ரகுவம்ஶாதி நிர்மாணத்தில்போலே கர்த்ருபேதமப்ரயோஜகமாகையாலும், பாரதாதிவசநங்களாலே ஸ்ரீவேதவ்யாஸபகவானுக்கு ஜைமினி நேரே ஶிஷ்யனாகையாலும், 'யஜ்ஞேநதாநேந' என்று ப்ரஹ்மஜ்ஞாநத்துக்கு கர்மாபேக்ஷையுண்டாகையாலும், 'ஸம்ஹிதமேதச் சாரீரகஞ் ஜைமினீயேந ஷோடஶலக்ஷணேநேதி ஶாஸ்த்ரைகத்வஸித்தி:' என்று வாக்யகாரரான போதாயநருடைய வசநமுண்டாகையாலும், ப்ரதமஸூத்ரார்த்தவிசாரத்திலப்படியே பாஷ்யகாரருமருளிச்செய்கையாலும், பூர்வோத்தரஶாஸ்த்ரங்களுக்கு ஐக்யம் ஸித்தம். இத்தால் தத்த்வநிரூபணத்துக்கு முக்யப்ரமாணம் வேதமென்றதாயிற்று. 'வேதா: ப்ரமாணம்' 'தர்மஞ் ஜிஜ்ஞாஸமாநாநாம் ப்ரமாணம் ப்ரதமம் ஶ்ருதி:' 'ஆதௌ வேதா:ப்ரமாணம்' என்னக்கடவதிறே.

†(ததுபப்ரும்ஹணே)த்யாதி 'அநந்தா வை வேதா:' என்கிறபடியே வேதமஸங்க்யாதமாயிருக்கையாலும், அதீதமான ஶாகைகளுடைய அர்த்தமறிகை அஶக்யமாயிருக்கையாலும், பரமபுருஷனாலே நியமிக்கப்பட்டுள்ள பரமர்ஷிகள் கல்பந்தோறும் நிகிலஜகதுபகாரார்த்தமாக வேதார்த்தங்களை ஸ்மரித்து அத்தை விஸ்தரமாகப்ரவர்த்திப்பித்த பூர்வபாகவிவரணமான ஸ்ம்ருதிகளுக்கும், உத்தரபாகவிவரணங்களான இதிஹாஸபுராணாதிகளுக்குமென்றபடி. இத்தால் உபப்ரும்ஹணங்களான ஸ்ம்ருத்யாதிகளாலேயே வேதார்த்தநிர்ணயம் பண்ணவேணுமென்றதாயிற்று. 'இதிஹாஸபுராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத் । பிபேத்யல்பஶ்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி' என்னக்கடவதிறே. (ஸ்ம்ருதீதிஹாஸபுராணாதிகளுக்கும்) என்கிறவிடத்தில் ப்ரதமம் த்வந்த்வஸமாஸம். அநந்தரம் 'ஸ்ம்ருதயஶ்ச இதிஹாஸபுராணாநி ச ஸ்ம்ருதீதிஹாஸபுராணாநி' என்று த்வந்த்வகர்ப்பமான த்வந்த்வம். த்ரிபதத்வந்த்வமும் ஸாதுவேயாகிலும் இதிஹாஸபுராணங்களுக்குத்தரபாகோபப்ரும்ஹணத்திலே துல்யவதேகக்ரியாந்வயத்வமிருக்கையாலும், 'இதிஹாஸபுராணம்' இத்யாதி த்வந்த்வப்ரயோகம் பலவிடங்களிலேயிருக்கையாலே 'அவயவப்ரஸித்தேஸ் ஸமுதாயப்ரஸித்திர்பலீயஸீ' என்கிறந்யாயமிங்கு ப்ரவர்த்திக்கையாலும் த்வந்த்வகர்ப்பத்வந்த்வமேயுக்தம். ஆக தத்த்வநிர்ணயத்துக்கு முக்யமான ப்ரமாணம் வேதமென்றும், ததநுரோதேந ஸ்ம்ருதீதிஹாஸபுராணாதிகள் ப்ரமாணங்கள், தத்விருத்தங்களானவைகள் அப்ரமாணங்கள் என்றுஞ் சொல்லிற்றாயிற்று. 'விரோதே த்வநபேக்ஷம் ஸ்யாத் அஸதி ஹ்யநுமாநம்' 'ஸ்ம்ருத்யந

†தத்த்வஜ்ஞாநமாவது- ஸர்வஸ்மாத்பரனான நாராயணனுக்கு, ஸர்வப்ரகாரபரதந்த்ரரான ஸர்வாத்மாக்களினுடையவும், ஸ்வரூபத்துக்கநுரூபபுருஷார்த்தமான கைங்கர்யத்தை, அநாதியாக ப்ரதிபந்தித்துக்கொண்டு போருகிற கர்மஸம்பந்தத்தை, நிவர்த்திப்பிக்குமுபாயம்-*தச்சரணாரவிந்தஶரணாகதி என்கிற நிரூபணஜ்ஞாந விஶேஷம்.

---

வகாஶதோஷப்ரஸங்க இதி சேந்நாந்யஸ்ம்ருத்யநவகாஶதோஷப்ரஸங்காத்' என்று ஸூத்ரகாரர்களிவ்வர்த்தத்தை ஸ்தாபித்தார்களிறே. புராணாத்யபேக்ஷயா இதிஹாஸத்துக்கு ப்ரமாணப்ராபல்யமுண்டென்பது விஸ்தரேண பெரியடிப்பணியில் எழுதப்பட்டது. (ஸ்ம்ருதீதிஹாஸபுராணாதிகளுக்கும்) என்கிறவாதிஶப்தத்தாலே ஸ்ரீபாஞ்சராத்ரஶாஸ்த்ரம் சொல்லப்படுகிறது. அவற்றையுமிவர்தாமே ப்ரமாணமாக மேலே உதாஹரிக்கையாலே ஸ்ம்ருதிஶப்தத்தாலே அதுக்கும் மூலபூதமான இவற்றை ஸங்க்ரஹித்தருளினாராகவுமாம். இதிஹாஸபுராணஶப்தங்களாலே அவற்றில் ப்ரமாணதமத்வேந ப்ரதிபாதிக்கப்பட்ட ஸ்ரீபகவச்சாஸ்த்ரமு மர்த்தாதுக்தமென்னவுமாம். பகவச்சாஸ்த்ரம் மந்வாதிஸ்ம்ருதிகளுக்கு மூலபூதமென்னுமிடமும், இதிஹாஸாதிகளில் ப்ரமாணதமத்வேந ப்ரதிபாதிதமென்னுமிடமும் ஶ்ருதப்ரகாஶிகையில் (௨-௨-௪௧.) வ்யக்தம்.

† (தத்த்வஜ்ஞாநமாவது) இதி- ப்ரதமப்ரகரணத்தில் ஸர்வவிலக்ஷணனான ஸர்வேஶ்வரனுடைய ஸ்வரூபஶோதநம் பண்ணுகையாலே திருமந்த்ரத்தில் ப்ரணவஸ்தமான அகாரார்த்தத்தையும், அந்யஶேஷத்வத்தை நிவ்ருத்திப்பிக்கிற அவதாரணவாசகமான உகாரார்த்தத்தையும், த்விதீயப்ரகரணத்தில் ஜீவாத்மஸ்வரூபஶோதநமுகத்தாலே பகவச்சேஷத்வத்தை ஜீவாத்மாக்களுக்கு ஸ்தாபிக்கையாலே லுப்தசதுர்த்தீவிஶிஷ்டப்ரதமாக்ஷரோக்தஶேஷத்வாஶ்ரயபூத ஜீவாத்ம ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிற த்ருதீயாக்ஷரமான மகாரார்த்தத்தையும், மூன்றும்ப்ரகரணத்தில் பூர்வப்ரகரணத்திற்சொன்ன ஶேஷத்வாஶ்ரயபூதனான ஜீவாத்மஸ்வரூபத்துக்கு அநுரூபமான கைங்கர்யத்தைச் சொல்லுகையாலே நாராயணபதகடித வ்யக்தசதுர்த்தியினர்த்தத்தையும், நான்காம்ப்ரகரணத்தில் கைங்கர்யத்தினுடைய விரோதிஸ்வரூபத்தைச் சொல்லுகையாலே நமஃபதஸ்தஷஷ்ட்யந்தமான மகாரத்தினுடைய வர்த்தத்தையும், பஞ்சமப்ரகரணத்தில் விரோதிநிவ்ருத்திக்குபாயங்களான பக்திப்ரபத்திகளை யருளிச்செய்கையாலே நம:பதார்த்தத்தையும் விஸ்தரேணவருளிச்செய்கையாலே திருமந்த்ர வ்யாக்யாநமாயிருக்குமிப்ப்ரபந்தம். (ஸ்வரூபத்துக்கநுரூப புருஷார்த்தமான கைங்கர்யத்தை) என்றது-ஸ்வரூபம் பகவச்சேஷத்வமே யாகையாலும், அது ஸித்திப்பது கிஞ்சித்காரத்தாலே யாகையாலும், 'நா கிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம்' என்று கிஞ்சித்காராபாவத்தில் அது ஸித்திக்கமாட்டாதாகையாலும், அந்த ஶேஷத்வஸ்வரூபத்துக்கு அநுரூபமான கைங்கர்யத்தை என்றபடி. 'ஸ்வரூபத்துக்கநுரூபமான கைங்கர்யம்' என்னாதே 'புருஷார்த்தமான' என்றருளிச்செய்ததுக்குக் கருத்து - கைங்கர்யம் ப்ரார்த்தித்தே பெறவேண்டுவதொன்றாகையாலே. 'ஏதேஷாம் ஸம்ஸாரமோசநம் பகவத்ப்ரபத்திமந்த்ரேண நோபபத்யதே' என்கிற வேதார்த்தஸங்

† நாராயணன் ஸர்வஸ்மாத்பரனானபடி யெங்ஙனேயென்னில்,-பரத்வசிஹ்நங்களான ஜகத்காரணத்வ முமுக்ஷூபாஸ்யத்வ மோக்ஷப்ரதத்வங்களுள்ளது இவனுக்கேயாகையாலே இவனே ஸர்வஸ்மாத்பரன்.

---

ரீரஹ ஶ்ரீஸூக்தியைத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார்—(அநாதியாக) இத்யாதி. (தச்சரணாரவிந்த ஶரணாகதி) என்றது-புருஷகாரபூதையான லக்ஷ்மீ விஶிஷ்டனாய், அவளாலே உத்பூதங்களான வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்ய ஜ்ஞாநஶக்திப்ராப்தி பூர்த்யாதிகளான வாஶ்ரயண ஸௌகர்யாபாதகாஶ்ரிதகார்யாபாதக கல்யாண குண பூர்ணனான நாராயணனுடைய, வஜ்ராங்குஶத்வஜ ஸரோருஹ ஶங்கசக்ரமத்ஸ்ய ஸகல ஶகல்பககல்பிதாங்க சரணஸரோஜங்களை, இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்டநிவாரணத்துக்கும் தப்பாதவுபாயமாகப் பற்றுகையாகிற ப்ரபத்தி என்றபடி. இத்தால்-த்வயஸ்ய பூர்வவாக்யார்த்தை யருளிச்செய்தாராயிற்று ப்ரபத்திதானும்- ஸ்வதந்த்ரோபாயமாயும், பக்த்யுபாயத்துக்கு அங்கமாயுமிருக்கும். இவ்வர்த்தம் மேலே ஸ்பஷ்டமாகவருளிச்செய்கிறார். 'பக்தியோகநிஷ்டஸ்யாபி தந்நிர்வ்ருத்த்யர்த்தம் ததங்கத்வேந ப்ரபத்தேரபேக்ஷிதத்வாத், ப்ரபத்திநிஷ்டஸ்ய ஸ்வதந்த்ரதயோபாயத்வாச்ச (ப்ரபத்திமந்த்ரேண நோபபத்யதே) இத்யுக்தம்' என்று வேதார்த்தஸங்க்ரஹ வ்யாக்யாநத்தில் ஶ்ருதப்ரகாஶிகை. பக்த்யங்கதயா ப்ரபத்திபண்ணுமவர்களுக்கும், புருஷகாராபேக்ஷை ஆவஶ்யகமாகையாலே ப்ரஸித்திவாசகமான 'தத்' ஶப்தத்தாலே லக்ஷ்மீவைஶிஷ்ட்யஞ் சொன்னதுக்கு விரோதமில்லை என்றறியவும். 'அதிகாரித்ரயத்துக்கும்புருஷகாரமவர்ஜநீயம்' என்னக்கடவதிறே. ஆக இவ்வாக்யத்தால் வக்ஷ்யமாணார்த்தஸங்க்ரஹம்பண்ணியருளினாராயிற்று.

† 'ஸர்வஸ்மாத்பரன் நாராயணன்' என்று ப்ரதிஜ்ஞாதார்த்தஸ்யீகரணார்த்தம் ஆக்ஷேபபூர்வகம் 'ஸ்வஸங்க்ரஹணாய ஸம்க்ஷேபேணோபந்யஸ்யதே' என்று தீபத்திலே யருளிச்செய்தபடியே ஸங்க்ரஹேண வுபந்யஸித்தருளுகிறார்—(நாராயணனி)த்யாதிநா. (பரத்வசிஹ்நங்களான) என்றது-பரத்வலக்ஷணங்களான என்றபடி. (ஜகத்காரணத்வ) இத்யாதி 'காரணந்து த்யேய:' என்கையாலும், 'நாராயணமநுத்யாயேத்' என்றிருக்கையாலும், காரணபூதனானவனே முமுக்ஷூபாஸ்யனாகவேண்டுகையாலும், யாவனொருவன் முமுக்ஷூபாஸ்யனாகிறான், அவனே மோக்ஷப்ரதனாக வேண்டுகையாலும், வக்ஷ்யமாண ஶ்ருதிஸ்ம்ருதி ஶதங்களாலே நாராயணனுக்கே ஜகத்காரணத்வாதிகள்ஸித்திக்கையாலும், 'மோக்ஷந்தாபயதி சதுர்முகாதீநாம் ஸர்வேஷாமபி விநா விஷ்ணுபக்த்யாகல்பகோடிபிர்மோக்ஷோ நவித்யதே' 'புருஷோ நாராயண: பூதம்பவ்யம் பவிஷ்யச்சாஸீத் ஸஏஷ ஸர்வேஷாம் மோக்ஷதஶ்சாஸீத்' 'முக்திப்ரதாதா ஸர்வேஷாம் விஷ்ணுரேவ நஸம்ஶய:' 'மோக்ஷமிச்சேஜ்ஜநார்தநாத்' இத்யாதிகளிலும் நாராயணனுக்கே மோக்ஷப்ரதத்வம் கண்டோக்தமாகையாலும் பரத்வசிஹ்நங்களான ஜகத்காரணத்வ ரக்ஷகத்வஸம்ஹர்த்ருத்வ முமுக்ஷூபாஸ்யத்வமோக்ஷப்ரதத்வங்களிவனுக்கே அஸாதாரணமாகவுண்டாகையாலே இவனே ப்ரஹ்மேஶருத்ரபுருஹூதாதிகளிற்காட்டில் பரன் என்றபடி.

† மஹோபநிஷத்தும், ஸுபாலோபநிஷத்தும், நாராயணோபநிஷத்தும், ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களும், 1 (ஏகோ ஹவை நாராயண ஆஸீத்) 2 (திவ்யோ தேவ ஏகோ நாராயண:) 3 (அத புருஷோ ஹவை நாராயணோऽகாமயத) 4 (அப ஏவ ஸஸர்ஜாதௌ) 5 (நாராயணோ ஜகந்மூர்த்தி:) 6 (விஷ்ணோஸ் ஸகாஶாதுத்பூதம்) என்று நாராயணாதி திவ்ய ஶப்தங்களாலே ஜகத்காரணத்வத்தைச் சொல்லுகையாலே இவனே காரணபூதன்.

‡ சாந்தோக்ய வாஜஸநேய கௌஷீதக்யாதிகளில் 7(ஸத்) 8 (ப்ர

---

† தத்ரப்ரமாணந்யுதாஹரதி—(மஹோபநிஷத்துமி)த்யாதி. 'ஏகோ ஹவை நாராயண ஆஸீந் ந ப்ரஹ்மா நேஶாந:' என்று ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளுக்கும் காரணபூதனாக நாராயணனைச் சொல்லிற்றிறே. 'நைவேஹ கிஞ்சநாக்ர ஆஸீத் × சக்ஷுஶ்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயண: ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:' என்று ஸுபாலோபநிஷத்தில் கண்டத்வயத்தாலும் நாராயணனுக்கு ஸர்வாந்தர்யாமித்வாதிகள் சொல்லப்பட்டது. ஆகையால் ஸர்வாந்தர்யாமி ஸ்ரீமந்நாராயணனே. இவ்வர்த்தமந்தர்யாம்யதிகரணத்தில் ஸாதிக்கப்பட்டது. நாராயணோபநிஷத்தில் கண்டசதுஷ்டயத்திலும் நாராயணனுக்கே ஜகத்காரணத்வாதிகளுக்தமாயிற்று. 'இதிஹாஸபுராணாப்யாம்' என்று அவிஶதத்தை விஶதீகரிக்கும் ஸ்ம்ருத்யாதிகளைக்கொண்டு வேதார்த்தத்தை நிர்ணயிக்கவேண்டுமாகையாலே உதாஹ்ருதஶ்ருதிகளுடைய உபப்ரும்ஹணங்களான ஸ்ம்ருத்யாதிவசநங்களை யுதாஹரித்தருளுகிறார்—(அபஏவே)த்யாதிநா. எல்லாஸ்ம்ருதிகளுங்கிடக்க மநுஸ்ம்ருதியை யெடுத்ததற்கு ஹேது - இதினுடைய ப்ராமாணதமத்வத்தை த்யோதிப்பிக்கைக்காக. 'மந்வர்த்தவிபரீதாது ஸா ஸ்ம்ருதிர்ந ப்ரஶஸ்யதே' என்னக்கடவதிறே. 'யத்வை கிஞ்ச மநுரவதத் தத்பேஷஜம்' இதிஶ்ருதேஶ்ச. இவற்றை 'மாநவம் யாஜ்ஞவல்க்யஞ்ச ஆக்நேயம் தாக்ஷமேவ ச। காத்யாயநம் வைஷ்ணவஞ்ச ஸ்ம்ருதிஷட்கந்து ராஜஸம்' என்று ராஜஸஸ்ம்ருதிகளிலே பரிகணித்திருந்தாலும், ஸுபாலோபநிஷதுபப்ரும்ஹணத்வத்தாலே ஸாத்விகாம்ஶபூயஸ்த்வமுண்டாயிருக்கும். கிந்து ஹாரீதாதிகளிற்போல ஸாத்த்விகாஸாதாரணதர்மங்கள் முக்யத: ப்ரதிபாதிதங்களல்லாமையாலே ராஜஸேஷுபரிகணநம் பண்ணியிருக்கிறதென்றறியவும். 'அத்ர ஸுபாலோபநிஷதர்த்தோ பகவதா மநுநா அநுஸந்தீயதே' என்று ஶ்ருதப்ரகாஶிகை.

‡ ஆக 'ஸ்ரீமந்நாராயணனே ஸர்வஸ்மாத்பரன்' என்றருளிச் செய்தாராய்நின்றார்கீழ்; இனி ஜகத்காரணத்வப்ரதிபாதகவாக்யங்களில் 'ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்' 'ப்ரஹ்மவா இதமேகமேவாக்ர

---

1, மஹோப. ௧-௧-௧.
2. ஸுபா. ௬-௧.
3. நாராயணோப. ௧.
4- மநு. ௧-௮.
5. { ஹார.ஶா.மோ. ௧௮௦-௧௧. / மாத்ஸ்யேச. ௫௨-௨௦.
6. வி.பு. ௧-௧-௩௧.
7. சா,உப. ௬-௨-௧.
8. ப்ரு.உப. ௩-௪-௧௦.

ஹ்ம) 1 (ஆத்மா)திஶப்தங்களாலேயும் சில வஸ்துக்களைக் காரணமாகச்சொல்லாநின்றதே யென்னில்; † பஶ்வதிகரணந்யாயத்தாலே ஸாமாந்யஶப்தமும் விஶேஷபர்யவஸாயியாகையாலே, ஸதாதிஶப்தங்களும் இவனையே ப்ரதிபாதிக்கின்றன.

—[சதுர்முககாரணத்வபக்ஷாநுவாதம்.]—

‡ நநு, 2 (ஹிரண்யகர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே) 3 (யாதா யதாபூர்

ஆஸீத்' 'ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத்' என்று ஸத்-ப்ரஹ்ம-ஆத்மாதிஶப்தங்களாலும், ப்ரகரணாந்தரங்களில் பரஞ்ஜ்யோதி: பரமாத்மாதிஶப்தங்களாலும் காரணவஸ்துவை நிர்தேஶித்திருக்கையாலே ஸம்ஶயம்பிறக்குமாகையால் அந்தஸம்ஶயவாரணமுகேந பூர்வோக்தார்த்தத்தை ஸ்திரீகரித்தருளுகிறார்—(ஸாங்கேதிகமே) த்யாதிநா. (ஸத் ப்ரஹ்மாத்மாதி) என்கிறவாதிஶப்தத்தால் ஆகாஶப்ராணேந்த்ர ப்ரஜாபதிஹிரண்யகர்ப்ப ருத்ரஶிவாதி ஶப்தங்கள் சொல்லப்படுகின்றன.

† (பஶ்வதிகரணந்யாய)மாவது 'பஶுநா யஜேத' என்கிறவிடத்தில் பஶு ஸாமாந்யவாசியான பஶுஶப்தமும் 'சாகஸ்ய வபாயா மேதஸ:' என்கிற மந்த்ரத்தில் சொல்லுகிற சாகஶப்தோக்த விஶேஷத்தில் பர்யவஸிக்கிறதென்று நிர்ணயிக்குமது. இது பூர்வமீமாம்ஸையில் (6-8-31) 'சாகோ வா மந்த்ரவர்ணாத்' என்கிறவிடத்திலுக்தம். இத்தையே ஸாமாந்யவிஶேஷ ந்யாயமென்று சொல்லுவர்கள். அந்த ந்யாயத்தால் ஸாமாந்ய ஶப்தங்களான ஸதாதிஶப்தங்கள் விஶேஷமான நாராயண ஶப்தத்தில் பர்யவஸிக்கக்கடவன. இங்ஙனன்றாகில் ஜகத்துக்கு அநேககாரணத்வம் ப்ரஸங்கிக்கும். ஏககாரணத்வஞ் சொல்லுகிற ஏவகாரகடிதங்களான ஶ்ருதிகளுக்கும் விரோதம் வரும். ஆகையால் ஸாமாந்யஶப்தங்களுக்கு விஶேஷத்தில் பர்யவஸாநங் கொள்ளவேணும். 'ஸத்' ஶப்தமும் ப்ருஹத்வப்ருஹ்மணத்வஸாதாரணமாயிருக்கையாலே ப்ரஹ்மஶப்தோக்த விஶேஷத்திலே பர்யவஸிக்கக்கடவது. ப்ரஹ்மஶப்தமும் சேதநாசேதநஸாதாரணமாயிருக்கையாலே, சேதநவாசகமான ஆத்மஶப்தோக்தவிஶேஷத்தில் பர்யவஸிக்கக்கடவது. ஆத்மஶப்தமும் ஸர்வசேதநஸாதாரணமாகையாலே நாராயணஶப்தோக்த விஶேஷத்தில் பர்யவஸிக்கக்கடவது. ஹிரண்யகர்ப்ப ஶிவாதி ஶப்தங்கள் ஸாமாந்யஶப்தங்கள் என்று மேலே ஸுஸ்பஷ்டமாகையாலே விஶேஷ ஶப்தங்களாகமாட்டாது.

‡ ஆக இவ்வளவால் ஸமந்வயாத்யாயார்த்தத்தை யருளிச்செய்தாராயிற்று; இத:பரமவிரோதாத்யாயார்த்தத்தை விஸ்தரேண வருளிச்செய்கிறார். அதில் ப்ரதமம் ஈக்ஷதிகர்மாதிகரணோக்த ந்யாயத்தாலே சதுர்முகனுக்கு ஜகத்காரணத்வாதிகளி லந்வயமில்லையென்னு மிடத்தை தர்ஶிப்பிக்கைக்காக தத்பக்ஷத்தை வுபந்யஸித் தருளுகிறார்—(நநு) இத்யாதியாலே. (ஹிரண்யகர்ப்ப) இதி-இந்தஶ்ருதி ப்ரஸித்தனான ஹிரண்யகர்ப்பனையே காரணத்வேந சொல்லுகிறது. இதில் சொல்லு

1. ஐத-உப. க-க-க, 2. யஜு. ச-காண்டம். க-அ-ரு.
3. தை-நா. சா-க-ருக.

வமகல்பயத்) 1 (ப்ரஜாபதிஃ ப்ரஜா அஸ்ருஜத) 2 (அஜஸ்ய நாபாவய் யேகமர்பிதம் யஸ்மிந் விஶ்வா பு⁴வநாநி தஸ்யு:॰ என்று † ஹிரண்ய கர்பாதிவிஶேஷஶப்³தங்களாலே சொல்லுகையாலே, ப்³ரஹ்மா காரணமாகக்குறையென்னென்னில்.—

## —[தத்பக்ஷநிராஸம்.]—

‡ அதுசொல்லவொண்ணுது; 3 (யோ ப்³ரஹ்மாணம் விதஃாதி பூர்வம்) 4 (தத்ர ப்³ரஹ்மா சதுர்முகோஜாயத) 5 (நாராயணுத் ப்³ரஹ்மா ஜாயதே) 6(ஸப்ரஜாபதிரேகஃ புஷ்கரபர்ணே ஸமபவத்) 7(விராஜோ அதிபுருஷஃ) 8 (யந்நாபிபத்மாத் பவந்மஹாத்மா ப்ரஜாபதிர் விஶ்வஸ்ருத் விஶ்வரூபஃ) 9 (ப்³ரஹ்மவை ப்³ரஹ்மாணம் புஷ்கரேஸஸர்ஜ) 10 (ஹிரண்யகர்பம் பஶ்யதி ஜாயமாநம்) என்று-ஸ்ருஜ்யனென்றும், 4 (நவ்ப்³ரஹ்மா) 11 (ப்³ரஹ்மாதிஷு ப்ரலீநேஷு) என்று ஸம்ஹார்யனென்றும், 12 (யுகோகோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ:। புந ஸ்த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ருமஃ) 13 (ப்ராஜாபத்யந் த்வயா கர்ம பூர்வம் மயி நிவேஶிதம்) 14 (மமவேதா ஹ்ருதஸ்ஸர்வே தாநவாப்யாம் பலாதிதஃ) 15(யஸ்மாதநபராயஸ்ய

கிற யர்மங்களவனுக்கே ஸம்பவிக்கையாலே. 'ஸதாயாரப்ருதிவீந்த்யாமுதே மாம்' என்கிறவண்டாந்தர்கதபதார்த்த தாரணாதிகளும் அண்டாதிபதியான இவனுக்குக் கூடும். 'யஸ்யசாயாம்ருதம்யஸ்யம்ருத்யு:' என்கிற வம்ருதம்ருத்யுஶப்³தங்களும் தேவபோக்யமான வம்ருதத்தையும், ப்ராணங்களை யபஹரிக்குமதான ம்ருத்யுவையுஞ் சொல்லுகிறது. இவையிரண்டுக்கும் தந்நியாம்யத்வங்கூடும். ஆகையால் ப்ரஸித்த ஹிரண்யகர்பபரமென்று பூர்வபக்ஷாபிப்ராயம்.

† (ஹிரண்யகர்பாதி விஶேஷ ஶப்³தங்கள்) என்றது-ஸதாதிஶப்³தங்கள்போலே கேவலஸாமாந்யமாயில்லாமல் விஶேஷ ஶப்³தங்களாயிருக்கையாலே ஹிரண்யகர்பாதி ஶப்³தங்கள் விசேஷ நிஷ்டங்கள் என்றபடி.

‡ அவனுக்கு ஸ்ருஜ்யத்வ ஸம்ஹார்யத்வ கர்மவஶ்யத்வாஜ்ஞத்வாதிகளுண்டாகையாலே காரணத்வ முமுக்ஷூபாஸ்யத்வ மோக்ஷப்ரதத்வங்கள் கூடாதென்றுத்தரமருளிச்செய்கிறுர்—(அது சொல்லவொண்ணுது) என்று துடங்கி. 'யுககோடி ஸஹஸ்ராணி' என்கிற ஶ்லோகார்

1. யஜு.௨-காண்-௧-௧
2. யஜு.௪-காண்.௬-௨.
3. ஶ்வே-௬-௧௮.
4. மஹோப.௧-௨.
5. நாரா-உப.
6 ந்ருஸிஹ்மதாபநீ. ௧-௧.
7. புருஷஸூக்தம்.
8. மஹோப.
9. அயர்-மோபயஶ்³ராஹ்மணம். பூர்வபாகம். ௬-௧௬-௧.
10. ஶ்வே-௪-௧௨.தை-நா-௬-௧௦.
11. விஷ்ணுயர்மே-௭௦-௨௦.பார-ஸபா-௪௩-௧௫.
12. இதிஹாஸஸமுச்சயே ௧௪-௮.
13. உத்தரஶ்ரிராமா. ௧௦௪-௭.
14. பார-ஶா-மோ. ௩௪-௮-௩௩.
15. மாத்ஸ்யபு.௧௮௨-௮௫.

ஶிரஶ்ஶிந்நந்த்வயா மம) என்று- 'ஸர்வேஶ்வரஸமாராதநத்தாலே தன்பதம் பெற்றான்' என்றும், 'அஸுரர் கையிலே வேதங்களைப் பறி கொடுத்தான்' என்றும், 'ருத்ரனாலே பரிஹ்ருதனானான்' என்றும், இவனை க்கர்மவஶ்யனாகச்சொல்லுகையாலே.

† ஹிரண்யகர்ப யாத்ரு ப்ரஜாபதிஶப்தங்கள், அபர்யவஸாந

---

யம்—(ஸர்வேஶ்வரஸமாராதநத்தாலே) இதி. 'மம வேதாஹ்ருதா:' என்றதினர்த்தம்—(அஸுரர்கையிலே) இதி. 'யஸ்மாத்தநபராயஸ்ய' என்கிறதினர்த்தம்—(ருத்ரனாலே) இதி.

† காரணத்வ ப்ரதிபாதகவாக்யகதங்களான ஹிரண்யகர்பாதிஶப்தங்கள் நாராயணபரங்கள் என்று அருளிச்செய்கிறார்—(ஹிரண்யகர்பேத்யாதி) அத்ராயமபிப்ராய:—'ஹிரண்யகர்பஸ்ஸமவர்த்ததாக்ரே' என்கிறவிடத்தில் ஹிரண்யகர்பஶப்தம் நாராயணபரம். 'அக்ரேஸமவர்த்தத' என்று காரணத்வஞ்சொல்லியிருக்கையாலே. 'பதிரேக ஆஸீத்' என்கிற வநவச்சிந்ந பதித்வமும் ஸ்ரீமந்நாராயணனுக்கே யுள்ளது. 'பதிம்விஶ்வஸ்ய' என்று நாராயணாநுவாகாதிஸித்தமாகையால், 'ஸதாதாரப்ருதிவீந்த்யாமுதேமாம்' என்கிற ப்ருதிவ்யாதியாரணமும் நாராயணனுக்கே அஸாதாரணமாயுள்ளது. 'விஷ்ணுநாவித்ருதே பூமீ' 'ஏதஸ்யவாக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கிதத்யாவாப்ருதிவ்யௌ வித்ருதௌ திஷ்டத:' 'விஷ்ணுரேதே தாதாரப்ருதிவீமபிதோ மயூகை:' இத்யாதிஶ்ருதே:. 'யஸ்யச்சாயாம்ருதம்யஸ்யம்ருத்யு:' என்கிற காரணப்ரகரணஸ்தமான அம்ருதம்ருத்யுஶப்தங்கள் முக்தபத்த பரங்களாகையாலே பந்தமோக்ஷஹேதுத்வமும் அவனுக்கேயுள்ளது. 'ஸம்ஸாரபந்தஸ்திதிமோக்ஷஹேது:' 'தமேவம் வித்வாநம்ருத இஹபவதி' என்கையாலே. 'யஸ்யவிஶ்வஉபாஸதே' 'யத்ராதிஸூர உதிதௌவ்யேதி' என்று ப்ரதிபாதிக்கப்படுகிற வாதித்யாதி ஸர்வதேவதா நியமநமும் அவனுக்கே ப்ரத்யபிஜ்ஞாபகம். 'பீஷாஸ்மாத்வாத:பவதே' 'கம்பநாத்' 'யஆதித்யேதிஷ்டந் யஸ்ஸர்வேஷுதேவேஷுதிஷ்டந்' இத்யாதிஶ்ருதே:. இந்த ஶ்ருதி பரமாத்மாவான நாராயணபரை என்று ஸ்பஷ்டமாகவே பாத்மபுராணத்தில் கோவர்தநபர்வதபூஜாநந்தரம் இந்த்ரஸ்தவத்திலே 'அக்ரே ஹிரண்யகர்பஸ்த்வம் ஸஞ்ஜாதஸ்ய ஸமவர்த்தத। த்வமேவைக:பதிரஸிபுருஷஸ்த்வம் ஹிரண்மய:। ப்ருதிவீந்த்யாமிமாம் தேவத்வமேவத்ருதவாந் ப்ரபோ। ஆத்மதாபலதா யஶ்ச விஶ்வஸ்ய ஜகதீஶ்வர:। உபாஸ்யஸே த்வம்த்ரிதஶை: ப்ரஶிஷம் ஜகதாம் பதே। அம்ருதம்சைவ ம்ருத்யுஶ்ச தவச்சாயே ஸநாதநே। தஸ்மை தேவாய ஹவதேவிதேம ஹவிஷாவயம்' என்று விஶதீகரிக்கப்பட்டது. கிஞ்ச 'யமந்தஸ்ஸமுத்ரேகவயோ வயந்தி' வித்யுத: புருஷாததி' என்று ஸமுத்ராந்தர்வர்த்திவித்யுத்வர்ண புருஷப்ரதிபாதகத்தோடும், 'அம்பஸ்யபாரே' 'என்கிற வநுவாகத்தோடும்,' ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ' என்கிற லக்ஷ்மீபதித்வ ப்ரதிபாதகமான வுத்தரநாராயணாநுவாகத்தோடும், இந்தவஷ்டர்சத்துக்கு ஏகத்வமுண்டாகையாலே இதுவும் நாராயணபரமே. 'அத்பிஸ்ஸம்ப்ருதோ ஹிரண்யகர்ப இத்யஷ்டௌ' என்றிறே தைத்திரீயத்தில் படிப்பது. அம்பஸ்யாநுவாகம் நாராயணபரமென்னுமிடம் விஸ்தரேண பெரியடிப்பணியில் எழுதப்பட்டது. ஸ்ரீ விஷ்ணு

வ்ருத்தியாலேயாதல், அவயவ ஶக்தியாலேயாதல் (நாராயணப்ரவ்ருத்தியாலேயாதல்,) நாராயணவாசகங்கள்.

(அஜஸ்யநாபாவய்யேக மர்பிதம்) என்கிற விடத்தில், [அர்பிதம்] என்றது- ஆவிர்பூதம் என்றபடி. [ஏகம்] என்றது-புஷ்கரத்தை. I (அஜஸ்யநாபாவய்யேகம் யஸ்மிந் விஶ்வம் ப்ரதிஷ்டிதம்। புஷ்கரம் புஷ்கராக்ஷஸ்ய தஸ்மை பத்மாத்மநே நம:) என்று மஹாபாரதத்திலே வ்யாவியாதமாகையாலே.

—[ருத்ரகாரணத்வபக்ஷாநுவாதம்.]—

† நநு 2 (யதா தம ஸ்தந்நதிவா நராத்ரி: நஸந்நசாஸச்சிவ ஏவ

---

ஸ்ம்ருதியில் 'ஹிரண்யகர்பஸ்ஸமவர்த்ததாக்ரே இத்யஷ்டாபிர்ஹவிர் நிவேதயேத்' என்று பகவதீயவிர்நிவேதநத்தில் விநியோகித்திருக்கையாலும் பகவத்ப்ரதிபாதகத்வமிதுக்குஸித்தம். ஹிரண்யகர்பஶப்தம்- 'ஹிரண்யகர்ப: ஶத்ருக்ந:' 'ஹிரண்யகர்போ பூகர்ப:' 'ஹிரண்யகர்பம் த்வாமாஹு:' 'ஹிரண்யகர்போ பகவாந்' 'ஹிரண்யகர்பஸ் ஸவிதா லோகக்ருத் லோகப்ருத்விபு:। அகாரவாச்யோ பகவாந் ஸ்ரீபூநீளாபதி: ப்ரபு:' இத்யாதிவசநங்களில் நாராயணபரமாகவுங் காண்கையாலே சதுர்முகனுக்கே வஸாதாரணமாகக் காணுமையாலே பரமவிஶேஷமான நாராயணஶப்தத்திலே பர்யவஸநமாய் அவனையே இந்த ஶப்தங்காட்டுகிறதென்றதாயிற்று. அத ஏவ தாத்ருஶவேதமும் நாராயணபரம். 'ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதா பூர்வ மகல்பயத்' என்கிறவாக்யம் * அம்பஸ்யாநுவாகஸ்யமாகையாலே. 'அநாதிநிதநோ தாதா' 'ஆதாரநிலயோ தாதா' 'ஏகஸ்ததேவோ பகவாந் தாதா நாராயணஸ்ஸ்வயம்' 'பத்மநாப: ப்ரஜாபதி:' 'பூர்வம்ப்ரஜாநி ஸர்கேத்வாமாஹுரேகம் ப்ரஜாபதிம்' 'ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம் விஷ்ணுர்ப்ரஹ்மமயோமஹாந்। ஈஶ்வரந்தம் விஜாநீம: ஸபிதாஸப்ரஜாபதி:' இத்யாதிகளிங்கே அநுஸந்தேயங்கள்.

† ஆக சதுர்முக காரணத்வ ப்ரதிபாதக வாக்யங்களுக்கு நாராயணபரத்வம் ஸாதித்தார்; இனி ருத்ரகாரணத்வ ப்ரதிபாதகவாக்யங்களுக்கு நாராயணபரத்வம் ஸாதிக்கத் திருவுள்ளம்பற்றி ப்ரதமம் பூர்வபக்ஷத்தை ஸங்க்ரஹேண வுத்க்ஷேபித்தருளுகிறார்—(நநு யதா) இத்யாதிநா. இவ்விடத்தில் பூர்வபக்ஷிகளுக்கு அபிப்ராயம்—ஸதிவிர ஹ்மாத்மாதி ஶப்தங்களுக்குவிஶேஷ ஶப்தஸாபேக்ஷத்வமுண்டாகையாலே ஸர்வநிஷேதபூர்வக ஏவகாரவடித ஶிவஶப்தத்திலே அவைகள் பர்யவஸிக்கின்றன. 'ஏகோ ஹவை நாராயணஆஸீத்' என்கிற விடத்தில் ஹவைஶப்தம் 'ஸர்வாணிஹவா இமாநிபூதாநி ஆகாஶாதேவ ஸமுத்பத்யந்தே. என்கிறவிடத்திற்போலே அநுவாதஸூசக மாத்ரம்; ஆகையாலிந்த வாக்யம் அநுவாதபரமாய் வாக்யாந்தரஸாபேக்ஷமாயிருக்கும். அதாவது 'தத்வ்ருத்தமேவகாரஶ்ச ஸ்யாதுபாதேயலக்ஷணம்' என்கிறபடியே விதித்வஸூசக ஏவகாரத்தையுடைய 'ஶிவ

---

I. பார ஶா. சஎ-ருஅ. 2. ஶ்வே. ச-கஅ.

கேவலஃ) 1 (காரணந்துய் யேயஃ) 2 (ஸர்வைஶ்வர்யஸம்பந்ந ஸ்ஸர்வே

---

ஏவகேவலஃ' என்கிற வாக்யத்தாலே சொல்லப்பட்ட ஶிவஶப்தத்தை யேயநுவதிக்கிறது. ஆகையாலந்த நாராயணஶப்தமும் ஶிவஶப்த விஶேஷணமாய்க்கொண்டு அதிலே பர்யவஸித்து நிற்கும்.—என்று. இவ்விடத்தில் ஸித்தாந்தம் 'அப்ராப்தே ஶாஸ்த்ரமர்த்தவத்' என்கிற ந்யாயத்தாலே ஸ்வதஃ ப்ராப்தமான விதிவாக்யத்துக்கு 'ஹவை' ஶப்தம் ஹஞ்ஜகமாகமாட்டாது. 'யதாக்நேயோஷ்டாகபாலஃ' என்கிறவிடத்தில் 'யதிவரத்தயோமஃ ப்ராயம்யமித்யாதியுதிதேஶ்யலக்ஷணம்' 'என்கிறபடியே அநுவாதஸூசக 'யத்' ஶப்தமுண்டாயிருக்கச்செய்தேயும், 'வசநாநித்வபூர்வத்வாத்' என்கிற ஸூத்ரத்தில் விதித்வம் ஸ்தாபிக்கப்பட்டது ப்ரமாணாந்தராப்ராப்தமாயிருக்கையால். அப்படியே 'உபரிஹிதேவேஷீயோ யாரயதி' என்கிறவிடத்தில் ஹி ஶப்தமுண்டாயிருக்கச்செய்தேயும் 'விதிஸ்துயாரணே பூர்வத்வாத்' என்கிற ஸூத்ரத்தில் விதித்வம் ஸ்தாபிக்கப்பட்டது. ஆகையால் 'ஹவை' ஶப்தம்-ஸ்வதஃப்ராப்தமனவிதிக்கு ஹஞ்ஜகமன்று, அபிது ப்ரமாணாந்தரத்தாலே விதிஹதிருத்தில் ப்ரயுக்தமான ஶப்தத்துக்கு மதிப்ரதர்ஶகமாமித்தனே. 'ஸர்வாணிஹவா' என்கிறவாகாஶகாரணத்வ வாக்யத்தில் அயோதியத்வத்தாலே விதிக்கு ஹஞ்ஜகம் வருகையால் 'ஹவா' ஶப்தம் அநுவாதரூப ஜ்ஞாபகமாகிறது. இங்கே ப்ரமாணாந்தராப்ராப்தத்வத்தாலும், விதித்வஹஞ்ஜகா ஹவத்வத்தாலும், 'ஹவை' ஶப்தம்-ஸ்வதஃ ப்ராப்த விதித்வஹஞ்ஜகமாகமாட்டாது. 'ஶிவஏவ' என்கிற வாக்யத்தால் விதிக்கு ஹதிநம்வாரதோ என்னில்-வாராது, 'ஶிவாஸ்ஸ்தேஸந்து பந்தாநஃ' இத்யாதிகளிலே அர்த்தாந்தரபரத்வமுண்டாகையாலே ஸாமாந்யஶப்தமாகையால். ஸாதாரணமாகிலும் விதிஹஞ்ஜகமுண்டென்னில் 'ஸதேவ' இத்யாதிஶப்தத்தால் 'ஶிவஏவ' என்கிற வாக்யத்துக்கு அநுவாதத்வமுண்டு, ஆகையால் ஸாதாரணமான ஶிவஶப்தம் நாராயணபர்யவஸாயியாகக் கடவது, 'ஏகோஹவை' என்கிற வாக்யத்துக்கநுவாத ரூபத்வமுமுண்டு. ததாபி 'விஷ்ணுஸ்ததாஸீத் ஹரிரேவநிஷ்களஃ' இத்யாதிகளுடைய ஸமாநார்த்தவாக்ய ஶ்ரவணத்தாலே அநுவாதத்வமுண்டொழிய விருத்தியார்த்தபரவாக்யாநுவாதத்வமுண்டாகமாட்டாது. ஶிவகாரணத்வாநுவாதமென்னும் பக்ஷத்தில் 'நப்ரஹ்மாநேஶாநஃ' என்கிற வநந்தரவாக்யத்தோடும், 'த்ர்யக்ஷஃ ஶூலபாணிஃ புருஷோஜாயத' என்கிற வாக்யத்தோடும் வ்யாஹதியுண்டாம். ஆகையால் 'யதாதமஃ' என்கிற வாக்யம்-நாராயணபரத்வப்ரதிபாதக வாக்யாநுவாதபரம். இந்தவநுவாதவாக்யத்துக்கு புரோவாத வாக்யம் 'அவ்யக்தமக்ஷரே லீயதே' ×நஸந்நாஸந்நஸதஸத' என்றும் 'நைவேஹகிஞ்சநாக்ர ஆஸீத் அமூலமநாதாரமிமாஃ ப்ரஜாஃ ப்ரஜாயந்தே திவ்யோ தேவஏகோநாராயணஃ' என்றுஞ்சொல்லுகிற ஸுபாலோபநிஷத்துமுதலானவை. இதில் 'யத்' ஶப்த 'ஹவை' ஶப்தாதியுபந்யரஹிதத்வேந அநுவாதத்வாஹாவ முண்டாயிருக்கையாலும் புரோவாதத்வம் ஸம்ஹவிக்கையாலும், ஶப்தத்தாலேயே 'யதாதமஃ' என்கிற ஸரூபத்வமுண்டாயிருக்கையாலும். இப்படி ஸுபாலோபநி

---

1. அதர்வஶிவா.　　　　　　　　2. அதர்வஶிவா.

ஶ்வரஶ்ஶம்ஹாராகாஶ மயி யே யி யேயஃ) என்று-ஶ்வேதாஶ்வதராய ர்வ ஶிவாதிகளிலே ருத்ரனைக் காரணஹேதனுகச்சொல்லா நின்றதே யென்னில்.

—[தத்பக்ஷ நிராஸம்.]—

† அதுவுமநுபபந்நம்; 1 (ஶாதிஶாதாத் த்ர்யக்ஷஶ்ஶூலபாணிஃ புருஷோஜாயத,) 2 (நாராயணாத்ருத்ரோ ஜாயதே) 3 (லலடாத் க்ரோ யஜோருத்ரோ ஜாயத) 4 (இந்த்ரோ வருண ஸ்ஸோமோ ருத்ரஃ பர்ஜ ந்யோ யமோ ம்ருத்யு ரீஶாநஃ) 5 (த்ர்யக்ஷஃ வண்ய பரஶாமஜீஜநத்) 6 (ப்ரஹ்மணஃபுத்ராய) என்று ஏவமாதிவாக்யங்களாலே மஹோபநி ஷத்தும், நாராயணோபநிஷத்தும், ஸுபாலோபநிஷத்தும், ப்ருஹதா ரண்யகமும், அயர்வணமும், ஸாமவேதமும் ஸ்ருஜ்யனுகவும், 7 (நேஶா நஃ) என்று ஸம்ஹார்யனுகவும் சொல்லுகையாலே.

---

ஷதிவாக்யத்துக்கு பஜீவ்யத்வமுண்டாகையாலே தாதிருஶ வாக்யஸித்தி யமாய் ப்ரளயகாலஸ்யிதனுன நாராயணனைய 'யதாதமஃ' என்றநுவதி த்து, அவனுக்கு தமஸ்ஸம்பந்தத்தாலே ப்ராப்தமாகிற வமாங்களய ஶங்காநிரஸார்யமாக 'ஶிவஏவகேவலஃ' என்றும் வாக்யத்தாலே ஶக் த்யா மங்களரூபத்வத்தையே விதிக்கிறது. ஏதாதிருஶமங்களரூபனுன நாராயணனுக்கு 'தக்ஷரம்' என்று 'ஏதத்வைதக்ஷரம் மார்மி ப்ரா ஹ்மணு அபிவதந்தி அஸ்யூலம்' என்கிற ப்ருஹதாரண்யக மார்மி ப்ராஹ்மணோக்த ஸர்வாமங்கள ப்ரத்யநீக மங்களகுணைகதாநமான வக்ஷரஶப்தவாச்யமான பரப்ரஹ்மத்தை வுபதேஶித்து, 'தத்ஸவிதுர் வரேண்யம்' என்கிற வித்தாலே மாயத்ரீயான பரப்ரஹ்மவித்யாப்ரதி பாதியத்வத்தைச் சொல்லி 'ப்ரஜ்ஞாசதஸ்மாத்' என்று ஶாஸ்த்ரவிதிய நிவில ஜமஜ்ஜந்மாதிகாரணீஹேதஸர்வஜ்ஞத்வாதி விஶிஷ்டமான ப்ர ஹ்மத்தை ரூபத உபதேஶிக்கையாலே இவ்வாக்யம் நாராயணபரத்வ ப்ரதிபாதக பரமென்னுமிடம் ப்ரகரணத்தாலும் ஸித்தம்-என்று. அய மர்யமேஸவயஸ்வோபவக்ஷ்யதே.

† தஸ்யோத்தரமாஹ—(அதுவுமநுபபந்நமி)தி. சஸ்தா - பூர் வோக்த சதுர்முவ காரணத்வவாதஸமுச்சயஃ. தஸ்யஹேதமாஹ —(ஶாதிஶாதாத்) இத்யாதி. சிலஶ்ருதிகளிலும் புராணாதிகளிலும் ருத்ரனுக்கு நாராயணாஜ்ஜந்யத்வமும், சதுர்முவாஜ்ஜந்யத்வமுஞ் சொ ல்லியிருந்ததேயாகிலும் 'சதுர்முவஸ்ய நாராயணாத்மாகத்வாத் ருத் ரஸ்ய நாராயணஸ்ருஷ்ட்ருத்வ ஶ்ருதிஶ்சாவிருத்தியா' என்கிற ஶ்ருத ப்ராகாஶிகா ஸ்ரீஸூக்திபரகாரத்தாலேயாதல், ஏவம்ருத்ரஸ்யப்ரஹ்மா நுஜத்வ ப்ரஹ்மபுத்ரத்வே அபிகல்பபேதாத் உபபத்யதே' என்கிறஸ் தோத்ர ரத்நபாஷ்ய ஸ்ரீஸூக்திப்ரகாரத்தாலேயாதல் அவிரோயேந பரிஹரித்துக்கொளளக்கடவது.

---

1. மஹோப-க-௩.
2. நாராய-உப.
3. ஸுபா-உ-வ.
4. ப்ரு-உப.௩-௪.
5. அயர்வ.
6. ஸாம.
7. மஹோப. க-க.

† ஶதபதப்ராஹ்மணத்திலே 1 (ஸம்வத்ஸரே குமாரோ ஜாயத, ஸோரோதீத், தம் ப்ரஜாபதிரப்ரவீத், குமார கிம் ரோதிஷி, யச் ச்ரமாத் தபஸோऽதிஜாதோऽஸீதி, ஸோऽப்ரவீத், அநபஹதபாப்மாஹமஸ்மி) இத்யாதிகளிலே-ருத்ரன் உத்பந்நனானவளவிலே ரோதநம்பண்ண, அவனைப்பார்த்து ப்ரஜாபதி 'நீ அழுகிறதென்' என்று கேட்க, 'நான் அநபஹத பாப்மா, என் பாபங்கள் போம்படி யெனக்கு நாமகரணம் பண்ண வேணும்' என்ன, இவனழுகையாலே 'உனக்கு ருத்ரனென்று பேராகக்கடவது' என்ன, 'எனக்கின்னமும் சிலபேர்கள் வேணும்' என்ன, பவ ஶர்வ ஶாந பஶுபதி பீமோக்ர மஹாதேவ ரூபமான நாமஸப்தகத்தையும் அஷ்ட மூர்த்தித்வத்தையுங் கொடுத்தானென்று சொல்லிற்று.

‡ இதுதான், ஸ்காந்தபுராணத்திலே 2 (உந்மத்தவதுந்மத்தஃ ப்ரஹஸந் ப்ரஹஸதாமபி। ராத்ரௌ ஶ்மஶாநே பர்யடஸி தத்கிமேதத்த வேஶ்வர) இத்யாதியாலே தேவி 'ஶ்மஶாநபர்யடநந்துடக்கமான நிஹீநவ்ருத்திகளை நீ அநுபவிக்கைக்கடியென்' என்று கேட்க, 3 (அஹம் ஶோணிதபங்காலஃ கராலவதநோऽம்பிகே। ரௌத்ரே முஹூர்த்தே ஸம்பூதோ ஹரே ரோதிமி விஸ்வரம்) இத்யாதியாலே - தன்னுடைய உத்பத்தியையும் ரோதநத்தையும் நாமஸப்தக மூர்த்யஷ்டகங்களையும்பெற்றபடியையுஞ்சொல்லி, 4 (ரௌத்ரே முஹூர்த்தே ஜாதோ

† ஶ்ருதிகளில் ருத்ரனுக்கு ஸ்ருஜ்யத்வஸம்ஹார்யத்வங்கள் சொல்லுகையாலே காரணத்வங் கூடாதென்பதை யருளிச்செய்து தத்ஸ்பஷ்டீகரணார்த்தமாக கர்மவஶ்யத்வாஜ்ஞத்வாஶக்திமத்வாதிகளையும் விஸ்தரேணவருளிச்செய்கிறார்—(ஶதபதே) த்யாதிநா. இப்படியே ஶைலாலிப்ராஹ்மண ஶதருத்ரீய ப்ராஹ்மணாதிகளிலுங்கண்டுகொள்வது. 'குமாரஃ ஜாயத' என்கிறவித்தால் ஸ்ருஜ்யத்வமும், 'அநபஹதபாப்மாஹமஸ்மி' என்கிறவித்தால் கர்மவஶ்யத்வமும், 'ஸோரோதீத், த்யாதிகளாலே தத்ப்ரஸாதிதைஶ்வர்யத்வமும் சொல்லிற்றாயிற்று.

‡ 'இதிஹாஸபுராணாப்யாம்' என்கிறபடியே உதாஹ்ருதஶ்ருதிக்குத் தகுதியானவுபப்ருஹ்மண வசநத்தைக்காட்டுகிறார்—(இதுதானி) தி. (இதுதான்) என்றது-ஶதபதஶ்ருத்யர்த்தந்தான் என்றபடி. (இவ்விடத்திலே) என்றது-ஸ்காந்தபுராணத்திலே என்றபடி. (ப்ரஜாபதிஸம்வாதத்தாலே) என்றது - 'ப்ரஜாபதேஶ்சஶ்ருத்வா ஶக்தஃ' என்கிற ப்ரஜாபதி ஸம்வாதத்தாலே என்றபடி, (இந்தஶ்ருதியில்) என்றது-ஶதபதப்ராஹ்மண ஶ்ருதியில் என்றபடி. (இந்தஸ்ம்ருதியில்) என்று பாடமானபோது 'ப்ரஜாபதேஃ' என்கிற ஸ்காந்த புராணத்திலிருக்கிற ப்ரஜாபதி ஸம்வாதமென்றபடியாம்.

1. ஶதபத.௯-௧-௧-௩-௮.
2. ஸ்கா - ஶைவத்திலுங்காண்கின்றன. ஶைவ-பு-ஸநத்-ஸம் ௩௰-௧௩.
3. ஶை-பு-ஸ-ஸம் 30-20.
4. ஶை-பு-ஸ.ஸம்.௩௰-௬௭, ௪௧.

ஹம் ரௌத்ரகர்மா ததோ ஹ்யஹம்। யத்பவத்யுசிதம் கர்ம புருஷஸ்ய ஶ்ரேயஸே ஹிதே। தத்தேநாவஶ்யகர்தவ்யம் ம்ருஜ்யேவா யதிவேதரத்। ப்ரஜாபதேஶ்ச கஶ்ஶக்த ஆதேஶம் கர்துமர்ஹஸி) இத்யாதியாலே தன்னுடைய நிஹீநாசரணஹேது கர்மமென்று சொன்னானென்று வ்யாபியாதமாய்த்து. இவ்விடத்திலே, (ஹரேரோதிமிவிஸ்வரம், ததோ மாம் பாணிநா ஸ்ப்ருஷ்ட்வா லோகேஶஃ ப்ராஹ கேஶவஃ) என்று-ஹரி கேஶவஶப்தங்களாலே உபக்ரமித்து, ப்ரஜாபதிஶப்தத்தாலே உபஸம்ஹரிக்கையாலே, இந்த ஶ்ருதியில் (ஸ்ம்ருதியில்) ப்ரஜாபதி ஶப்தம் நாராயண பர்யவஸாயியாகக்கடவது.

† மார்கண்டேய வைஷ்ணவபுராணாதிகளிலேயும், 1 (ருத்ரஸர்கம் ப்ரவக்ஷ்யாமி தந்மே நிகதித ஶ்ருணு) என்று இவ்வர்த்தத்தைச் சொல்லிற்று.

‡ 2 (அஸ்ய தேவஸ்ய மீடுஷ:) 3 (மஹாதேவ ஸ்ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வாத்மாநம் தேவதேவோ பபூவ) என்று இவனுடைய பதம் கர்மாதீநமென்று சொல்லிற்று.

---

† இன்னமும் ஸ்ருஜ்யத்வத்திலுப ப்ருஹ்மணங்களை தர்ஶிப்பிக்கிறார்—(மார்கண்டேயே)தி. ஆதிஶப்தத்தால்-பாத்மோத்தர நாரஸிம்ஹ வாராஹபாகவத லைங்க கௌர்மவாயு புராணாதிகளும், ஶ்ரீராமாயண பாரதங்களுஞ் சொல்லப்படுகிறது.

‡ இவனுக்கு காரணத்வமில்லாமைக்கு ஹேத்வந்தர மருளிச்செய்கிறார்— (அஸ்யே)தி. 'அஸ்ய தேவஸ்ய மீடுஷோ வயோ விஷ்ணோரேஷஸ்ய அவப்ருதே ஹவிர்பிஃ விதேஹி ருத்ரோத்ரியம்மஹத்வம் இதிபஹ்வ்ருசஶ்ருதிஃ. (அஸ்ய) ஸ்வேதரஸமஸ்தவஸ்து விலக்ஷணனாய் ஶ்ருத்யாதிப்ரஸித்தனாய், (தேவஸ்ய) அநிதரஸாதாரணமாய் அத்யத்புதமாய் அப்ரதிஹதக்ரீடாவிஜிகீஷா வ்யவஹாரத்யுதிஸ்துதிப்ரவ்ருத்தி நித்யநிரவத்ய நிரதிஶயாநந்த கல்யாணகுணகணமஹோததியாய், (மீடுஷஃ)- 'மிஹ-ஸேசநே' என்கிற தாதுவிலேநிஷ்பந்நமாய், மீடுஷ:-ஸேக்துஃ' என்றாய், ஸேக்துஃ-என்றது-தாதுஃ என்றாய், உதாரன் என்றபடியாய், அதாவது-ஸகலபலப்ரதனாய், (ஏஷஸ்ய)-அபிமதபலார்த்தத்தையும் பொருட்டுயாசநீயனாய், (அஸ்ய-விஷ்ணோஃ)-ஸர்வவ்யாபநஶீலனாய், ஸர்வாந்தர்யாமியான நாராயணனுடைய, (அவப்ருதே)-ஸர்வமேதாக்யயாகத்திலே, (ஹவிர்பிஃ)-விஷ்ணுவைக்குறித்து ஸமர்பித்தஸ்வாத்மபர்யந்த ஹவிஸ்ஸுக்களாலே. (வயஃ)- ஶரீரதயாங்கதனான, (ருத்ரஃ)-உத்பந்நனுமளவில் அழுகையாலே ருத்ரனென்கிறபேரையுடைய ஸம்ஹார கர்தாவானஶிவன், (ருத்ரியம் மஹத்வம்)-ருத்ரஸம்பந்தியான ஸம்ஹர்த்ருத்வரூபமஹத்வத்தை, (விதேஹி). பெற்றான். (ஹி) என்று-ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. ஹேதுவாதல்.—என்றிதுக்குப்பொருள்.

---

1. மாக.பு.௫௨.௧.வி-பு.௧.அ.௧. 2. பஹ்வ்ருசஸ.
3. பார.ஶா-௨௦-௧௨.

† ஸ்ரீவராஹ புராணத்திலே, [1] (தவ விஷ்ணோ: ப்ரஸாதேந மயா தத் த்ரிபுரம் ஹதம்...... தஸ்ய பாபஸ்ய தோஷேண நஶ்யந்தி மம விசேஷ்டிதம்) என்று- த்ரிபுரதஹநத்தாலுண்டான பாபமடியாக, யோகமாயை, ஐஶ்வர்யநாஶம், ஹ்ருதயஸந்தாபம், நிஶ்சேஷ்டித்வங்கள் இவனுக் குண்டாய்த்ததென்றும் சொல்லிற்று.

---

† இன்னமுமிவனுக்கவரத்வத்தில் ஸ்ரீவராஹபுராண வ்ருத்தாந்தத்தைக்காட்டுகிறார்—(ஸ்ரீவராஹபுராணத்திலே) இதி. அதாவது-ஸ்ரீவராஹபுராணத்தில் நூற்றிமுப்பத்தாறுமத்யாயத்தில் ஸ்ரீவராஹநயனார் பூமிப்பிராட்டியைக்குறித்து அர்சாவதாரமாஹாத்ம்யமருளிச்செய்யுமவஸரத்தில் 'யாவனொருவன் ஶ்மஶாநஞ்சென்று ஸ்நாநஞ்செய்யாமல் அர்சாரூபியான என்னை ஸ்பர்ஶிக்கிறான். அவன் அவ்வபராதத்தாலே நிஹீநஜந்மத்தையடைந்து பூலோகத்தில் அநேகவர்ஷம் ஸஞ்சரிப்பன்' என்று அருளிச்செய்ய அத்தைக்கேட்டு 'ஏதந்மே பரமம் குஹ்யம்' என்று துடங்கி பிராட்டி 'ருத்ரனும் பஹுதாப்ரஶம்ஸிதமாயிருந்துள்ள ஶ்மஶாநத்துக்கு தேவர் தோஷஞ்சொல்லாநின்றீர், இதுக்கடி என், அவற்றை யருளிச்செய்யவேணும்' என்று குதூஹலையாய்க்கேட்க 'ஶ்ருணு தத்வேந மே தேவி' என்றுதுடங்கி 'இவ்வர்த்தமிதுபர்யந்தம் ஜ்ஞாநிகளுமறிந்திலர், இவற்றை என்னிடத்தில் கேள்' என்று சொல்லி 'க்ருத்வா ஸுதுஷ்கரம் கர்ம' என்றுதுடங்கி 'த்ரிபுரதஹநத்தில் பாலர்களையும் வ்ருத்தர்களையும் கர்ப்பிணிகளான ஸ்த்ரீகளையும் வதஞ்செய்தபாபத்தாலே நஷ்டைஶ்வர்யாதிகனாய் தத்பாபவிமோசநகாமனாய் அதில் ப்ரவ்ருத்தனாய் அதிதுர்பலனான ருத்ரனை நான் பார்த்து 'நீ இப்படி நிற்பதற்கடி என்' என்று கேட்டும், 'உன்னுடைய ஹிதார்த்தமாகவே நானிவ்விடம் வந்தது' என்று சொல்ல, அவனும் 'ததோ மம வச: ஶ்ருத்வா' என்றுதுடங்கி என்னுடைய வசநத்தைக்கேட்டவுடனே லப்தஸம்ஜ்ஞனாய் பாபஸந்தப்தலோசநனாய்க்கொண்டு மதுரமான வார்த்தையைச் சொன்னான். அதாவது-'ஶ்ருணு தத்வேந மே தேவ' என்று துடங்கி 'உன்னுடைய ப்ரஸாதத்தாலே த்ரிபுரதஹநஞ்செய்தவிடத்தில் கர்ப்பிண்யாதிகளைவதஞ்செய்த பாபத்தால் நஷ்டைஶ்வர்யகனானேன்' என்கிறமுதலானவைகளைச்சொல்லி 'என்னுடைய யிந்த து:கங்களெல்லாம் நஶித்து பூர்வஸ்வபாவனாம்படிக்குபாய மருளிச்செய்யவேணும்' என்று கேட்க, நானும் 'ஏவஞ்சிந்தாத்மநஸ்தஸ்ய மயா ருத்ரஸ்ய பாஷிதம்। கபாலமாலாம் நிர்ஹ்ருத்ய ஸமலம் கச்ச ஶ்மஶாநகம்' என்றுசொல்ல, பின்பவனும் 'உவாச மாம் புநர்வ்யக்தம் மாம் வேத்ய ஜகத்பதே। கிந்நு ருத்ரஸ்ஸமலோ விஷ்ணோ யத்ர கச்சாமஹே வயம்' என்று கேட்க, 'ததஸ்தஸ்ய வச: ஶ்ருத்வா ஶங்கரஸ்ய மஹேஶ்வரி। தத்பாபஶோதநார்த்தாய மயா வாக்யம் ப்ரபாஷிதம்। ஶ்மஶாநஸமலம் ருத்ர பூதிகோவ்ருணகர்யிக:' என்று துடங்கி அவனுக்கு தத்பாபவிஶோதநார்த்தமாக ஶ்மஶாநவாஸாதிகளை விதித்து, பின்பு 'என்னுடைய பக்தரான கௌதமரிஷியினுடைய ப்ரஸாதத்தாலே பரிஶுத்தனாவாய்' என்று வரங்கொடுத்து அந்தர்த்தானமானபடியைச்சொல்லி 'ருத்ரோபி ஸுமஹத்தே தத்ர ஶ்மஶாநே பாபஸம்வ்ருதே। அதோ நரோசதே பூமே ஶ்மஶாநம்

---

1. வராஹபு. ௧௩௬-௩௧.

எங்ஙனே யென்னில் (கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே ஒுணவாந் கஶ் ச வீர்யவாந் - யர்மஜ்ஞ:) என்று மூன்று ஒுணத்தினுடைய விவரணம் ஸ்ரீராமாயணம். [ஒுணவாந்] என்கிறது ஶீலஒுணத்தை. [வீர்யவாந்]என்கிறது அந்த ஶீலம் கண்டொதுங்கினவர்களுடைய விரோயிவர்ஒத்தைக் கிழங்கெடுத்து அவர்களைக் காற்றாட்ட வல்லனுகிறது. [யர்மஜ்ஞ:] என்று ஸம்ஸாரிகளுடைய ஊர்ஒதியைக்கண்டு இவத்துக்கு நம்மையொழிய புகலில்லை இனி நம்மாலே நம்மைப்பெறு மத்தனையென்று ஶரணுஒதி யர்மமே பரம யர்மமென்றிருப்பரென்கிறது. [ஶீலவத்தை] யாகிறது - அபிஷேக விவிநம் பிறந்ததென்று வெருப் பன்றியே, (வநவாஸோ மஹோஊய:) என்று காடேறப் புறப்பட்டுப்போவது, (ஆவாஸந்த்வஹமிச்ஊாமி) என்று ரிஷிகள் பக்கலிலே சென்று தாழ நிற்பது, (கிங்கரௌ ஸமுபஸ்யிதௌ) என்பது, ஜந்மவ்ருத்தங்களில் குறைய நிற்கிறவர்களை (உகந்த தோழநீ) என்பது, இப்படிகளாலே சீலவத்தையை மூதலித்தது. மாரீச ஸுபாஹுக்கள் வயம்துடக்கமாக ராவண வயபர்யந்தமாக நடுவுண்டானப் ப்ரதிகூல நிரஸநத்தாலே வீர்யவத்தையை மூதலித்தது. காக விபீஷணுதிகளை ஸ்வீகரிக்கையாலே யர்மஜ்ஞதையை மூதலித்தது.

எங்கே கண்டோமென்றில், ஸர்வலோகஜநநியான பிராட்டி திறத்திலே காகம் அபராயம்பண்ணுகையாலே பரமக்ருபாளுவான பெருமாள் திருவுள்ளத்தாலும் இவன் வயீயனென்று ப்ரஹ்மாஸ்த்ரத்தைவிட (ஸ தம் நிபதிதம் பூமௌ ஶரண்யஶ் ஶரணுஒதம் - வயார்ஹமபி காகுத்ஸ்ய: க்ருபயாபர்யபாலயத்ஸ || ஸபித்ராசபரித்யக்தஸ்ஸுரைஶ் ச ஸமஹர்ஷிபி:- த்ரீந்லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம்ஒத:) என்கிறபடியே புறம்புபுகலற்று வந்துவிழுந்தவித்தை ஶரணுஒதியாக்கி ரக்ஷித்து விட்டான். ஶரண்யனென்கையாலே காகவிஷயமான ஸ்வீகாரம் கண்டோம்.

(ப்ரதீயதாம் ஊாஶரயாய மைதிலீ) என்று பெருமாளையும் அவருடைமையும் சேர்த்திருக்க விசையா யென்று ராவணனுக்கு ஹிதம்சொல்லக் கேளாதே (த்வாந்துயிக்குலபாம்ஸநம்) என்று பரிஹவித்துப் புறப்படவிட (பரித்யக்தா மயா லங்கா) என்று விட்டுப் புறப்படுகிறபோது ஒரு தலை நெருப்புப் பட்டுப்பற்றிவேவ புறப்படுவாரைப் போலே அங்கடி கொதித்து புறப்பட்டு (ராவணோநாமஊர்வ்ருத்த:) என்றுதங்கிர்ஷுத்தை முன்னிட்டுக்கொண்டு (ஸோஹம் பருஷிதஸ்தேந ஊாஸவச்சாவமாநித: - த்யக்த்வா புத்ராம்ஶ் ச ஊாராம்ஶ் ச ராவவம் ஶரணம்ஒத:) என்று ஶரணம் புகுந்தவனை முதலிகள், இவன் ஜந்மவ்ருத்தங்கள் இருந்த படியாலும், வந்தவரவு இருந்தபடியாலும், இவனுடையநினைவு இருந்தபடியாலும், வந்தகால மிருந்தபடியாலும், ஶரணுஒதனுடைய வார்

த்தை ஜீவிக்கும் மோக்ஷியென்று அதிலே கலந்து நலியலாமென்றுவ
ந்து ஶரணம் புகுந்த படியாலும், கனத்த மதிப்பரோடே வரித்தலாட
தட்டுப்படுமென்று பார்த்து தன்னவயவங்களோபாதி விரகறிந்து தப்ப
லாம்படி நாலுபேரைக் கொண்டுவந்த படியாலும், ராவணன் தம்பியாய்
அவன் சோத்தையுண்டு அவனாபத்காலத்திலே விட்டுப் போரஸம்ஹவமி
ல்லாமையாலும், இவன் நம்முயிர் நிலையிலே நலியவந்தானென்று நிஶ்ச
யித்து (வத்⁴யதாம்) என்றுகொண்டு ஸர்வப்ரகாரத்தாலும் இவனை
கைக்கொள்ள வொட்டோம்' என்று நிற்க, 'நீரிவனை விடுகைக்குறுப்பாக
யாதொரு அநுபபத்தி சொன்னீர் அவை நமக்கு ஸ்வீகரிக்கைக்குடலா
மித்தனை, அவன் வத்⁴யனே யாகிலும் மித்ரபாவமுடையவனாய் வந்த
வனை (நத்யஜேயம்) என்று அவனை விடில் நமக்கு ஸத்பாவ மில்லை'
என்று ப்ரக்ருதியிருந்த படியைச்சொல்லி, (ஆர்த்தோவா யதிவா த்ருப்தஃ
பரேஷாம் ஶரணங்கதஃ) என்கிறபடியே ஆர்த்தனாய் வரவுமாம் செருக்க
னாய் வரவுமாம் நம்பக்கலிலே ஶரணம் புகுந்தவனை (அரிஃப்ராணாந்பரித்
யஜ்ய ரக்ஷிதவ்யஃ க்ருதாத்மநா) ப்ராணனையழிய மாறி ரக்ஷிப்பன், (ப்
ராணாநபி) என்றாய் விட்டது. ஶரணாகதனுக்கும் தம்மையழிய மாறி ர
க்ஷிக்குமது தன்னேற்றம். செய்ததாகப் போந்திராமையாலெ (ஸக்ர்
மநா) என்னு ப்ராணனையழிய மாறிரக்ஷிப்பன். (ப்ராணாநபி) என்றாய்
விட்டது. ஶரணாகதனுக்கும் தம்மையழிய மாறிரக்ஷிக்குமது தன்னேற்
றம். செய்ததாகப் போந்திராமையாலே (ஸக்ருதேவ ப்ரபந்நாய தவா
ஸ்மீதிச யாசதே - அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம்
மம) என்று ப்ரக்ருத்யநுரூபமான ப்ரதிஜ்ஞையைப் பண்ணி, (கண்
டோர்வசநமுத்தமம்) என்று கண்டுபாவியாநத்தைச் சொல்லி, (ப
த்³தா⁴ஞ்ஜலிபுடம் தீநம் யாசந்தம் ஶரணாகதம்) இவைதானெவை யென்
னில் [பத்³தா⁴ஞ்ஜலிபுடம்] என்றது காயிகமான ப்ரபத்தி, [தீந]மென்
றது மாநஸமான ப்ரபத்தி, [யாசந்தம்] என்றது வாசிகமான ப்ர
பத்தி; [ஶரணாகதம்] கீழே இவை மூன்றையும் சொல்லி வைத்து [ஶர
ணாகதம்]என்கையாலே (தே வயம்பவதாரக்ஷ்யா பவத்³விஷயவாஸிநஃ)
என்றுகந்தருளின தேஶங்களிலே அபிமானித்த வெல்லைக்குள்ளே கிட
ந்துவிடுகையும் ஶரணாகதி, அவைத்திலே யொன்றுண்டாகிலும் விடே
னென்ற விடத்திலும் மஹாராஜர் தெளியாமையாலே, இவருடைய ப்ர
க்ருத்யநுகுணமாக இவரைத் தெளிவிப்போமென்று பார்த்தருளிபண்டு
கலங்கினவிடத்தில் நம்முடைய ஶக்தியைக்கண்டு தெளிந்தார். அத்தை
புரஸ்கரிக்கவே தெளிவரென்று பார்த்து (பிஶாசாந் தாநவாந் யக்ஷாந்
ப்ருதிவ்யாஞ் சைவ ராக்ஷஸாந்) என்றித்யாதிப்படியே யெதிரிகளடைய
ஒரு கலத்திலே யுண்டு வொருமுகம் செய்துவந்தாலும் (அங்குல்யக்³
ரேண தாந்ஹந்யாம்) நஞ்சிறுவிரலிலே நகாக்ரத்துக்குமிரை போரார்கள்

காணுமென்று தம்முடைய ஶைலத்தைச் சொல்லவே ராமஹார்தியத்தாலே மஹாராஜர் தெளிந்துவந்து விபீஷணன் நம்மிலும் பரிவனாய்வந்தான், பெருமாள்கடுகக் கைக்கொண்டருளும்படி விண்ணப்பம் செய்வோமென்று பெருமாள்பாடே வந்து கடுகக் கைக்கொண்டருளீரென்று விண்ணப்பஞ்செய்ய, நாமவன் வந்தபோதே கைக்கொண்டோம், உம்முடைய அநுமதிபார்த்திருந்தோமித்தனை காணும். [ஆநயைநம்] அவன்நிற்கிற நிலைகண்டா லெனக்காறியிருக்கலா யிருந்ததோ கடுகக்கொண்டு புகுரீரென்ன, மஹாராஜரும் பரிகரமும் ஶஹிரங்கமென்னும்படி ராமபரிஸரத்தில் இவனை அந்தரங்கனென்னும்படி கைக்கொண்டு (செல்வ விபீடணற்கு வேறாக நல்லானை) என்கிறபடியே அபிஷிக்தனாக்கி ரக்ஷித்தானென்கையாலே ஶரண்யனுடைய ப்ரபாவமும் ஶரணாகதனுடைய ப்ரபாவமும் சொல்லிற்று.

இப்ப்ரகரணந்தன்னில் சொல்லிற்றாயிற்ற தாத்பர்ய மென்னென்னில், ப்ரஹஸ்தாதிகளினுடைய வாக்யங்களிலே ஆஸுரப்ரக்ருதிகளோடு ஸஹவாஸம் பண்ணலாகாதென்னுமிடஞ் சொல்லி, தன்னை நலிய நினைத்தவனுக்குங்கூட ஹிதஞ்சொன்ன ஸ்ரீவிபீஷணாழ்வான் படியாலே ஸத்துக்களோடே ஸஹவாஸம் பண்ணவேணுமென்னு மிடஞ் சொல்லி, இவன் சொன்ன ஹிதங்கேளாத ராவணன்படியாலே ஆஸுரப்ரக்ருதிகளுக்கு ஹிதஞ் சொல்லலாகா தென்னுமிடஞ்சொல்லி, (யத்ரராமஃ) என்று பெருமாளிருந்தவிடத்தே வருகையாலே பகவத்ஸந்நிதியுள்ள தேஶமே ப்ராப்ய மென்னுமிடஞ் சொல்லி, (பரித்யக்தா மயா லங்கா) என்று விட்டுப்போந்தபடியாலே பகவதநுபவத்துக்கு விரோதியான தேஶம் த்யாஜ்யமென்னு மிடம் சொல்லி, இருந்தபடி யெழுந்திருந்து வருகையாலே அதிகாரத்துக்கு புரஶ்சரணாதிகளில்லை யென்னுமிடஞ்சொல்லி, ஶரணாகதனை (வத்⁴யதா) மென்கை பகவத் விஷயத்தில்பரிவரிருக்கும்படிசொல்லி, (வத்⁴யதா) மென்றவர் தம்மை அநுவர்த்தித்துப் புகுருகையாலே ததீயரை புருஷகாரமாகக் கொண்டே பற்றவேணுமென்னு மிடஞ்சொல்லி, மஹாராஜரை இசைவித்துக்கொள்ளுகையாலே அவனும் ததீயரை புருஷகாரமாகக் கொண்டல்லது கைக்கொள்ளரென்னுமிடஞ் சொல்லி, (ராவணோநாமதுர்வ்ருத்தஃ) என்று சொல்லிக்கொண்டு வருகையாலே ஶரணம்புகுவார் தந்தாமுடைய நிக்ருஷ்டதையை முன்னிட்டுக்கொண்டு ஶரணம் புகவேணுமென்னுமிடஞ்சொல்லி, ஆக இப்படிகளாலே அதிகாரிக்கு வரும் விஶேஷணங்கள் சொல்லிற்று.

ப்ரபத்திபண்ணினார் விஷயத்தில் தாம் செய்யும் திறங்கள் நிரூபிக்கையாலே (ஸுக்ரீவம்ஶரணங்கதஃ) (ஸுக்ரீவம்நாதமிச்ச²தி) என்று தமக்கொரு ஆபத்துவந்தாலும் ப்ரபத்தியைப்பண்ணுமித்தனை. ஶரணாகதனும் தனக்கு பலித்ததென்ன (ஸமுத்ரம்ராகவோராஜா ஶர

ணாமர்ந்துமர்ஹதி) என்று ஶரண்யனுக்குபதேஶிப்பது மித்தையே. ராவணனைப்போ லன்றிக்கே (ப்ரக்ருத்யாயர்மஶீலஸ்து) என்று யர்ம ஶீலராகையாலே அலச்சாயல் பட்டிருந்தது. ஶரணாமதிகொண்டுகந்த கடலுக்கு ஒரு குளப்படியன்றோ விக்கடலென்னுக் கடலின் காலிலே விழுந்து ஶரணம் புகுவரிவர், அந்த நோயாசை யிறேயிது. ஸர்வேஶ்வரன் ஸ்வாதந்த்ர்யத்தாலே முசித்து ஆஶ்ரிதபாரதந்த்ரயத்தை யாமைப்பட்டு (பிதரம்ரோசயாமாஸ) என்று வந்து பிரந்தான். அங்கே முடியவைக்கப் பார்த்தார்கள். கைகேயீவரவ்யாஜத்தாலே அத்தைத் தப்பினான். (ஆவாஸந்த்வஹமிச்ஶாமி) என்று ரிஷிகளுக்கு பரதந்த்ரராக வாமைப்பட்டான்.

அவர்களே (ந்யாயவ்ருத்தாயதாந்யாய• பூஜயாமாஸ—ரீஶ்வரம்) என்று ஸ்வாதந்த்ர்யத்தை வெளியிடத் தொடங்கினார்கள். அவர்களைவிட்டு அறிவிலாக்குரங்கின் காலைப்பிடிப்போமென்று பார்த்தான். அவன் (தாஸோஸ்மி) என்று எதிரே காலைப்பிடித்தான். அத்தைவிட்டுக் கடலொரு தேவதை, நம்மைகும்பிடு கொள்ளுமென்று பார்த்து அதின் காலைப்பிடித்தான். அவன் சதிரனன்றோ, 'வந்து முகங்காட்டினால் ஶரண்யராவுதோ' மென்று முகங்காட்டானே. இவர்க்கு பழைய ஸ்வாதந்த்ர்யம் தலையெடா. கொண்டுவா தக்கானை யென்பரோ. நாம் ஶரண்யராய் அவன் நியாம்யனாய்வந்தால் அவன் தன்ஸ்வரூபம் நஶிக்கும். தொடுத்த அம்புக்கிலக்கானேனாகில் ரூபநாஶமிறே யுள்ளதென்று முகங்காட்டுமே முகங்காட்டுந் தனைபோதுமிறே ஸ்வாதந்த்ர்ய முள்ளது. வந்து முகம்காட்டினால் முன்புத்தை அபராயத்தை யறியானே. கோழைகளைப்போலே, உனக்கன்றுகாண் இவ்வம்புக்கிலக்காக வுன்னெதிரிகளை காட்டென்று மித்தனையிறே இதுவிறே ஸ்ரீராமாயணத்தில் ஸந்திரஹேணப்ரபத்தி விஷயமாக நின்றநிலை.

மஹாபாரதத்தாலும் ஆபந்நரானார்க்கு வஶிஷ்டாதிகளுபதேஶிப்பது ப்ரபத்தியை.

எங்ஙனேயென்னில், (ஸர்வேஷாமேவலோகாநாம் பிதா மாதாச மாயவ:-தச்ஶய் வமேந•ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷபா:) என்று விதிக்க, அநுஷ்டாநவேளையிலே (த்ரௌபதீ யா ஸஹிதாஸ்ஸர்வே நமஶ்சக்ரூர் ஜநார்தநம்) என்று நமஸ்ஸு—ஶரணபர்யாயமாகையாலே ப்ரயோகித்தார்கள்.

த்ரௌபதியும் அந்த பெரியஸபையிலே து—ஶ்ஶாஸநனென்பானொரு முறட்டுப்பயல் வாசாமகோசரமான பெரிய பரிபவத்தைப் பண்ண, யர்மம் ஜயிக்கிறது என்றிருந்த பர்த்தாக்கள் ஐவரும், யர்மமில்லை யென்றிருந்த நூறுவரும், யர்மாயர்மவிவேகம் பண்ணமாட்டாத த்ரோணபீஷ்மாதிகளும், இப்படி நிர்லஜ்ஜரான ஸபையிலே ப்ர

பத்தியை வெளியிடப்பிறந்த ஹாநியவதி யாகையாலே லஜ்ஜையுடைய வனை நினைத்து [ஶங்வசக்ரகதாபாணே] என்கையில் வளையோபாதி யேயுன்கையில் ஆயுதமும் என்பரிஹவத்தைப் போக்குதல், உன் கையில் திருவாழியைப்போக்குதல், ஶெய்யவேணும். த்யாகக்கொடி கட்டிக்கிடக்க புறங்கால் வீங்குவாரைப்போலே திருவாழியேந்தியிருக்க நான் பரிஹவப்படுவதே ? * எப்பொழுதும் கைகழலாநேமியான் நம் மேல்வினை கடிவானிறே. [த்வாரகாநிலய] இப்போது முதலியார் வர்த்திக்கிறது ஶ்ரீவைகுண்டத்திலேயோ. [அச்யுத] பற்றினாரைக் கைவிடோமென்றது பண்டோ, இன்றன்றோ. [கோவிந்த] கோவிந்தாபிஷேகம் பண்ணிற்று தளர்ந்தாரை நோக்குகைக்கன்றோ, கடலிலே வர்ஷித்தாப் போலே நித்யஸூரிகளை ரக்ஷிக்கவோ. [புண்டரீகாக்ஷ] இக்கண்படைத்தது ஆர்தரக்ஷணம் பண்ணவன்றோ, துஶ்ஶாஸநாதிகளை யிடுவித்து பரிஹவிக்கைக்கோ. [ரக்ஷமாம் ஶரணாகதாம்] என்கைவிட்டேனென்று ப்ரபத்தியைப் பண்ணினாள்.

(கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணாமாம் தூரவாஸிநம்-ருணம் ப்ரவ்ருத்தமிவ மேஹ்ருதயாந்நாபஸர்பதி) என்று ஶரண்யப்ரஹாவமுஞ் சொல்லிற்றிறே.

(அத பாதகபீதஸ்த்வம் ஸர்வஹாவேந ஹாரத-விமுக்தாந்ய ஸமாரம்ஹோ நாராயணபரோஹவ) என்று தர்மபுத்ரனுக்கு தர்மதேவதை ஸர்வஹரந்யாஸத்தைப்பண்ணி யிராயென்றானிறே. [தஸ்மாத்வம் லோகஹர்தாரம் விஷ்ணும் ஜிஷ்ணும் ஶ்ரியம்பதிம்-கோவிந்தம்கோபதிம் தேவம் ஸததம் ஶரணம்வ்ரஜ) (தமாநந்த மஜம்விஷ்ணு மச்யுதம் புருஷோத்தமம் - ஹக்திப்ரியம் ஸுரஶ்ரேஷ்டம் ஹக்த்யாத்வம் ஶரணம்வ்ரஜ) என்றும் (ஸோஹந் தேவதேவேஶ நார்ச்சநாதௌ ஸ்துதௌநச-ஸாமர்த்ய யவாந் க்ருபாமாத்ரமநோவ்ருத்திப்ரஸீதமே) என்றும்; †

ஶ்ரீஶாண்டில்ய ஹகவானும், ஸம்ஸாரிகளுடைய துர்கதியையும் ஹகவல்லாஹத்தில் ஶீர்மையையு மநுஸந்தித்து தான் க்ருபாளுவாகையாலே (வ்ருதைவ ஹவதோ யாதா ஹூயஸீ ஜந்மஸந்ததி:-தஸ்யாமந்யதமம் ஜந்ம ஸஞ்சிந்த்ய ஶரணம்வ்ரஜ) கெடுவிகாள் ஸம்ஸாரபாந்தராய் ஜநித்துப்போருகிற நீங்கள் ஒரு ஜந்மத்தை பூவுக்கிட்டோம் போலவன்று ஒரு ப்ரபத்தியைபண்ணிபிழைக்கவல்லிகோளே என்று தன் ஶெல்லாமையாலே ஶொன்னானிறே.

க்ருஷ்ணனும் (மாமேவயேப்ரபத்யந்தே மாயாமேதாந்தரந்திதே) என்று நான் கர்மாநுகுணமாக பிணைத்தஸம்ஸாரதுரிதம் ஒருவராலும் விடுத்துக்கொள்ளவொண்ணாது, என்னையே உபாயமாகப் பற்றினார்க்கு நானே போக்கிக்கொடுப்பேனென்றும், (மாமேகம் ஶர

† க்ரந்த மநந்தவிதமாயிருக்கிறது. கோஶாந்தரங்களில் காண்க.

ணம்வ்ரஜ) என்று தூஸித்தலையிலே ப்ரபத்தியை பலவிடங்களிலும் வியி த்துப் போருகையாலும் இம்மஹாபாரதத்துக்கு மிதுவே தாத்பர்யம்.

ஜிதந்தையிலும் ஶ்வேதத்வீபவாஸிகள் ஸர்வேஶ்வரனுடைய புறப்பாட்டிலே கண்ணழகுக்குத்தோற்று (ஜிதந்தேபுண்டரீகாக்ஷ நமஸ்தேவிஶ்வபாவந) என்பது (ஸர்வதாசரணத்வந்த்வம் வ்ரஜாமி ஶரணம்பரம்) (நகாமகலுஷஞ்சித்தம்) என்பது (தவசரணத்வந்த்வம்வ்ரஜாமி) என்பதாய் அடிதோறு மடிதோறும் ப்ரபத்தி பண்ணுவர்கள்.

இப்ப்ரபத்திதன்னை (அஹமஸ்ம்யபராதாநாமாலயோऽகிஞ்சநோऽகதி: - த்வமேவோபாயபூதோமே பவேதி ப்ரார்த்தநாமதி:-ஶரணாகதிரித்யுக்தா ஸா தேவேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம்.) என்று ருத்ரன் அதிகாரி ஸ்வரூபத்தையும் ப்ரபத்தி லக்ஷணத்தையுஞ்சொல்லி, இத்தை ஸர்வேஶ்வரன் பக்கலிலே ப்ரயோகிப்பானென்று ஶொன்னானிறே.

(அநந்யஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிஶ்வாஸபூர்வகம் - ததேகோபாயதாயாச்ஞா ப்ரபத்திஶ்ஶரணாகதி:) என்றிவ்விரண்டு ஶ்லோகமும் ப்ரபத்தியினுடைய லக்ஷணவாக்யம்.

(ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம் - ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸோ கோப்த்ருத்வவரணந்ததா - ஆத்மநிக்ஷேபகார்பண்யே ஷட்விதாஶரணாகதி:) என்று இது ப்ரபத்திக்கு அங்கம். ப்ரபந்நனை பின்பு பிறக்கும் ஸம்பாவிதஸ்வபாவங்கள் என்று சொல்லிற்று.

ஶ்ருதியும் இத்தை உபப்ரும்ஹணம் பண்ணின ரிஷிகளுமித்தை ஆதரித்து, அவர்கள் ஆதரிக்குமளவன்றிக்கே (தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாஶ்ச) என்று ஆப்தபரிக்ரஹமே ப்ரபலப்ரமாணம், வேதம், இவர்கள் பரிக்ரஹத்துக்கு ஸங்கோசித்துப்போமித்தனை யென்கையாலே இதுக்கு ஆப்த பரிக்ரஹம் ப்ரபலம்.

எங்ஙனேயென்னில்,-தர்மபுத்ரன் (ஶ்ருத்வா தர்மாநஶேஷேண பாவநாநிச ஸர்வஶ:) என்று புருஷார்த்தஸாதநங்களையும் மற்றும் பரமபாவநமானவற்றையும் ஸ்ரீபீஷ்மரோடே அதிகரித்து (புநரேவாப்யபாஷத) என்று திரியிட்டுக்கேட்டான். கீழ் ஸர்வத்தையு மதிகரித்தானாகில் திரியிட்டுக்கேட்டதுக்குக் கருத்தென்னென்றில், நான் ஶாஸ்த்ர ஸம்யஜ்ஞாநத்தாலே அதிகரித்தது புருஷார்த்தமாகமாட்டாதென்று

(கோ தர்மஸ்ஸர்வதர்மாணாம் பவத: பரமோ மத:) என்று கீழ்ச் சொன்ன தர்மங்களெல்லாவற்றிலும் வைத்துக்கொண்டு உனக்கபிமதமாக நிர்ணயித்திருக்க வேணுமேதென்ன (ஏஷமேஸர்வதர்மாணாம் தர்மோऽதிகதமோ மத:) என்று தர்மங்களில் வைத்துக்கொண்டு அதிகமாக நினைத்திருக்கு மர்த்தமிதுவேகாணென்று ஶொன்னான்.

அசலையான லக்தியாலே ஆஸ்ரயிக்கப்பாராயென்று உபதேசிக்கையாலே ஆசார்யருசி பரிக்ருஹீதமே ப்ரபலப்ரமாணம்.

ஸ்வஸக்தியால் பிறந்த ஜ்ஞாநமின்றிக்கே நிர்ஹேதுக ஸூவத்ப்ரஸாதலப்தஜ்ஞாநமுடையராய் நமக்கு பரமாசார்யர்களான ஆழ்வார்களும் ஸாஸாநுஷ்டிதராய் ப்ரபத்தியைப்பண்ணுவது, ப்ராப்யத்தில் த்வரையாலே ப்ரபத்தியை பண்ணுவதாகா நிற்பர்கள்.

எங்ஙனே யென்னில் (நெறிவாசல்தானேயாய் நின்றானை) என்றும் (மாலடியே கைதொழுவான்) என்றும் (அம்பரமொன்றில்லையடை) என்றும் (தன்னிலங்கைவைத்தான்சரண்) என்றும் பொய்கையாழ்வார், (பனிமலராளங்கவலங் தொண்டானடி - பைங்கமலமேந்திப் பணிந்தேன்) என்றும் (அவரிவரென்றில்லை யரவணையான்பாத மெவர்வணங்கி) என்றும் (அன்றிடரடுக்கவாழி யான்பாதம் பணிந்தன்றே) என்றும் பூதத்தார், (அரணும் நமக்கென்று மாழிவலவன்) என்றும் (சக்கரத்தான் தாள்முதலே நங்கட்குச்சார்வு) என்றும் பேயார், (பழகியான் தாளே பணிமின்) என்றும் (அடைக்கலம் புகுந்த வென்னை அஞ்சலென்ன வேண்டுமே) யென்றும் திருமழிசைப்பிரான், (திருப்பொலிந்த சேவடியென் சென்னியின் மேல்பொறித்தால்) என்றும் (உன்னருள் புரிந்திருந்து) என்றும் பெரியாழ்வார், (நாராயணனே நமக்கே பறை தருவான்) என்றும் (வேங்கடத்துச் செங்கண்மால் சேவடிக்கீழடி வீழ்ச்சி விண்ணப்பம்) என்றும் நாச்சியார், (திருக்கமலபாதம் வந்து) என்று திருப்பாணாழ்வார், (கற்றினம்மேய்த்தவெந்தை கழலிணைபணிமின்) என்றும் (சிலையினா லிலங்கைசெற்ற தேவனே தேவனாவான்) என்றும் (உன்கடைத்தலை யிருந்துவாழும் சோம்பரையுகத்தி) என்றும் ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார், (உன்சரணல்லால் சரணில்லை) என்றும் (உன்பற்றல்லால் பற்றில்லை) என்றும் (உன்னிணையடியே யடையலல்லால்) என்றும் (மற்றாரும்பற்றிலே னென்றவனைத் தாள் நயந்த கொற்றவேற்றானை) என்றும் பெருமாள், (நலம்புரிந்திறைஞ்சும் திருவடியடைந்தேன்) என்றும் (நாயேன் வந்தடைந்தேன்) என்றும் (ஆற்றேன் வந்தடைந்தேன்) என்றும் (உலகமளந்தபொன்னடியே யடைந்துய்ந்தேன்) என்றும் (கண்ணனே களைகணீயே) என்றும் (நின்னடியிணை பணிவன் வருமிடரகல மாற்றோ வினையே) என்றும் திருமங்கையாழ்வார், (அலர்மேல் மங்கையுறைமார்பா) என்றும் (புகலொன்றில்லாவடியே னுன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே) என்றும் (நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு) என்றும் (முகில்வண்ணனடியை யடைந்தருள் சூடியுய்ந்தவன்) என்றும் (கழல்களவையே சரணாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன்) என்றும் (ஆறெனக்கு நின்பாதமே ஸரணாகத் தந்தொழிந்தாய்) என்றும் (உன்னாலல்லால் யாவராலு மொன்றுங் குறைவேண்டேன்) என்றும்

(ஆத்தன்றாமரையடியன்றி மற்றிலமரணே) என்றும் (ஆவிக்கோர்பற்றுக்
கொம்பு நின்னலா லறிகின்றிலேன்) என்றும் நம்மாழ்வார், (மேவினே
னவன் பொன்னடி) என்றும் (அன்பன் றன்னையடைந்தவர்கட்கெல்லா
மன்பன்) என்றும் ஸ்ரீமதுரகவிகள்.

ஆக இவ்வாழ்வார்களைப் பின்சென்ற ஆளவந்தாரும் (நதர்மநிஷ்
டோஸ்மி... அகிஞ்சநோநந்யகதிः) (தவசரணயோः) என்றும், (அஶரண்
யஶரண்யா மநந்ய ஶரணஶ் ஶரணமஹம் ப்ரபத்யே) (லோகவிக்ராந்த
சரணௌ ஶரணந்தே உவ்ரஜம் விபோ) என்றும் எம்பெருமானாரும்.

ஆக இப்படி வேதங்களும், ருஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்
களும், (லோகே ஸத்த்வம் பரோதர்மः) என்றும் (ராமோ விக்ரஹவாந்
தர்மः) என்றும் (க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்) என்றும் விரோதி
நிவ்ருத்தி பூர்வகமான நிரதிஶய புருஷார்த்தமான கைங்கர்யத்தைப் பெற்
று உஜ்ஜீவிக்கைக்கு இதுவல்லது வேறு உபாயமில்லை; ஆதலாலிப்படி
ப்ராமாணிகனான சேதநனுக்கு ப்ரபத்தியைப் பற்றவடுக்கு மென்றறுதி
யிட்டார்கள்.

நம்மாசார்யர்களுக் கிங்ஙனே யிருப்பதொரு நிர்வந்த முண்டு.

லோகயாத்ரையில் பரிமாற்றங்களடைய வேதயாத்ரையிலேசேர்
த்து அநுஸந்திப்ப தொன்றுண்டு.

அதெங்ஙனே யென்னில், பாதிரிக்குடியிலே, பட்டர் ஒரு வேடன
கத்திலே வர்ஷத்துக்கொதுங்கி யெழுந்தருளி யிருக்கச்செய்தே வேட
னைப்பார்த்து இவ்விடங்களிலே விஶேஷமென்னென்று கேட்டருள, 'இ
ங்கே புதுஶாக ஒரு விஶேஷங் கண்டேன், காட்டில் ஒரு ம்ருகம் பிடிக்
ககப் போனேன், அங்கே முயல்குட்டியைப் பிடித்துக் கூட்டிலே விட்
டேன், இதினுடைய தாய் பல்காலம் துடர்ந்துவர அத்தைப் பின்ஶாய்
ந்து வுள்வாஶலளவும் வந்துபுகுறப் புக்கவாறே முன்னேவந்து ஊண்ட
னிட்டுக்கிடந்தது. பின்னை யித்தை விட்டேனென்று இவ்விஶேஷத்தை
விண்ணப்பம் ஶெய்தான். இத்தைக்கேட்டு பட்டரும் விஷாதாயரு
ளிச்செய்கிறார்—(மாமேகம் ஶரணம்வ்ரஜ) என்கிற ஜ்ஞாநம் முயலுக்கி
ல்லை; (அரிःப்ராணங் பரித்யஜ்ய ரக்ஷிதவ்யः) என்கிற ஜ்ஞாநம் வேட
னுக்கில்லை; இவையன்றிக்கே இருக்க வாதுகனாயிருக்கிற விவனிது ஶெ
ய்யக்கடவனானால், பரமசேதனனானவன் பக்கலிலே ப்ரபத்தியை உப
யோகித்தால் யென்னாகக் கடவதோ வென்று விஷாதரானார்.

தானும் தன்னுடைய ஸ்த்ரீயுமாக ஒரு காட்டிலேயிருக்க நாம் ஶெ
ன்று புக்கவாறே துணுக்கென் றெழுந்திருந்து பஹுமாநங்களைப் பண்
ணிச் செய்தானிவன். நம்வாஶியறிந்து செய்தானொருவனல்லன, இவன்
ஜந்மமிது, பரஹிம்ஸைபண்ணி ஜீவிக்கும்வ்ருத்தம். இப்படியிருக்க
இவன் நம்மைக் கொண்டாடிற்றுத் தானபிமானித்த நிழலுக்குள்ளொ

துங்கிறேனோ மென்றிறே. இனி பரமசேதநனாய் பரமக்ருபாளுவான ஸர்வேஶ்வரன ஸிமாஹித் துகந்தருளின 'திவ்யதேஶங்களைப்பற்றி வர்த்திக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களளவிலே யிவனென்னினைத்திருக்கிறானோ வென்று விதயரானார்.

மற்றைநாளையில் ப்ரயாணத்திலே தூரவெழுந்தருளின ஆயாஸத்தாலே அமுது செய்து ஜீயர்மடியிலே கண்வளர்ந்தருளினார். அப்போது வெடிந்தது. கெட்டேன்; என்னை யெழுப்புற்றிலீர், கால்நடையே வழிநடந்த விடாயை மதியாதே யென்பக்கலிலே யித்தனை பரிவராயிருந்த விடம் உமக்கு நாம்ஸொன்ன த்வயத்தை விஶ்வஸித்த மனமிறே யென்றருளிச் செய்தார்.

ஹட்டர்தாம் எம்பாரோடே ரஹஸ்யங் கேட்டாராயிறே யிருப்பது. இப்படி யிருக்கச் செய்தே எம்பெருமானார் இவர் பதஸ்யராகிறபோது யிவர்கையிலே புஸ்தகத்தைக் கொடுத்து ஸந்நிதியிலே த்வயத்தைச் சொல்லி பெருமாள் திருவடிகளிலே கொண்டுபுக்கு 'நான் இவருக்கு வேண்டும் வித்யை கொடுத்தேன், நீரிவருக்கு வேண்டுமாயுஸ்ஸை கொடுத்தருளவேணு' மென்று பெருமாள் திருவடிகளிலே காட்டிக் கொடுத்து த்வயத்தைச்சொல்லி ஶரணம்புக்கார்.

சிறியாத்தான் எம்பார் ஸ்ரீபாதத்திலே ஸ்ரீஹாஷ்யம் வாஶித்துச் சமைந்துபோகக் காலமானவாறே தீர்த்தமாடி யீரப்புடைவையோடே தண்டனிட்டுக்கிடந்தான். 'இதுவென் தாஶரதி, எழுந்திரா யுனக்கபேக்ஷையென்' என்று கேட்டருள 'ம்லேச்ச தேஶத்தேறப்போகப் புகாநின்றேன், அங்கு நமக்கு தஞ்சமாக ஒருவார்த்தை கேட்கலாவாறில்லை. திருவுள்ளத்தில் ப்ரியதமமாகவும், ஹிததமமாகவும் அறுதியிட்டிருக்கு மர்த்தத்தை எனக்கருளிச்செய்ய வேணுமென்ன, (எம்பெருமானார் ஸ்ரீபாதமே பெரியபிராட்டியார் ஸ்ரீபாதமே பெருமாள் ஸ்ரீபாதமே) த்வயத்திலறுதியிட்டிருக்கு மர்த்தத்துக்கு மேற்பட ஶ்ரேஷ்டமாயிருப்பதொரு அர்த்தமில்லை யென்றருளிச் செய்தார்.

சிறியத்தானை யழைத்து "திருக்கண்ணபுரத்திலே ஆய்ச்சி ஸ்ரீபாதத்தேறப்போய் வரவல்லையே, உனக்குக் கூலி கொடுக்கும்" என்றருளிச் செய்தார். அப்படியே அவ்வருகேபோய் ஆய்ச்சி ஸ்ரீபாதத்திலே ஸேவித்து விடைகொண்டு போரப்புக்கவாறே சிறியாத்தானுக்கருளிச் செய்த வார்த்தை,—"எம்பெருமான் நாராயணனாயிருக்க அநாதிகாலம் அவ்வுறவையறுத்துக் கொண்டிருந்த சேதநனை யவன் திருவடிகளிலே பிணைக்கைக்குப் பற்றாசு பிராட்டியுண்டென்று நிர்பரனாயிரு" என்றருளிச் செய்தார். இத்தைக் கேட்டருளி எம்பார் "தட்டுக்கூலிக்கு மவ்வருகே போய்த்து" என்றருளிச் செய்தார். இப்படியே யிருப்பதொரு அர்த்தமில்லையாகில் ஸம்ஸாரிசேதநனுக்குள்ளதடைய எம்பெரு

மானுடைய நிக்ரஹத்துக்கு ஹேதுக்களாய்க்கிடக்க, எம்பெருமானை ப்ராபிக்க வேறொரு பொருளில்லை யென்றருளிச் செய்தார்.

பெற்றி ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்தாளொரு கொற்றியம்மைக்கு குருபரம்பரை முன்னாக த்வயத்தை யருளிச் செய்து விட்டார். அவள் சிறிதுநாள் கழித்தவாறே எனக்குப் பிராட்டி திருமந்த்ரத்தை யருளிச் செய்யவேணுமென்று கேட்க இவளுக்கினி பிராட்டி திருமந்த்ரத்தைச் சொல்வோமாகில், இன்னமொரு மந்த்ரத்தைச் சொல்லென்று இத்தை அநாதரித்துத் போமென்று பார்த்து, எல்லாமந்த்ரங்களி லுள்ளதெல் லாமுண்டென்னும் நிஷ்டை பிறக்கைக்காக "பிராட்டி திருமந்த்ரமும் உனக்குச் சொன்ன த்வயத்திலந்தர்கதம், அங்கே சொன்னோம் காண்" என்று அருளிச் செய்தார். பிராட்டி திருமந்த்ரத்தை ஜபித்துக் கொள்ளும் ஃபலத்தை இதுதன்னையே ஜபித்துக்கொள்ளென்று அருளிச் செய்தார்.

வீராணத்து அருளாளப் பெருமாளெம் பெருமானார், நஞ்ஜீயர் ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயிக்கைக்கு நம்பிள்ளையை புருஷகாரமாகக் கொண்டுவந்தார். இவனைக் காட்டிக்கொடுத்து இவனுக்கு ஹிதத்தை யருளிச்செய்ய வேணுமென்ன, "ஸம்ஸாரிகளி லொருவர்க்கும் ஹிதம்சொல் லலாகாதென்று ஸ்வப்நம் கண்டேன், அவனுக்கு நீர் சொல்லுமெ"ன்றருளிச் செய்தார். "ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயிக்க வந்தவனுக்கு, எழுந்தருளியிருக்கச்செய்தே நான் சொல்லுகையாவதென், அவனுக்கு ஸ்ரீகோபால மந்த்ரத்தையாகிலும் அருளிச்செய்ய லாகாதோ? ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்தானாய்போந்தபடி" என்று விண்ணப்பம் செய்ய, ஆனாலப்படி செய்கிறோமென்று ஆயர்தேவன் திருவடிகளிலே கொண்டு குருபரம்பரை முன்னாகத்வயத்தை அருளிச்செய்தார். இத்தைக்கண்டு "அருளிச்செய்யப்புக்கதொன்று தலைக்கட்டிற்று ஒன்றாயிருந்தது" என்ன, "என்னை யொழியப்போமாகில் போகிறதென் றிருந்தேன், இனித்தான் சொல்லவேண்டினபின்பு நான் விஶ்வஸித்திருக்குமதொழிய வேறொன்றைச்சொன்னோமாகில் அவனை விப்ரலம்பித்தேனாகாதோ" என்றருளிச்செய்தார்.

நம்பிள்ளை நஞ்ஜீயரை "அல்லாத தர்ஶநங்களுக்கு அதிகாரிகளும் போரவுண்டாய் ப்ரமாணங்களும் போரவுண்டாயிரா நின்றது. நம்தர்ஶநத்துக்கு ப்ரமாணங்களும் சுருங்கி அதிகாரிகளும் சுருங்கி யிருப்பானே" னென்று கேட்க, அதிகாரிகளன்றியிலே யொழிந்தது ஸம்ஸாரிகள ஜ்ஞராகையாலே. எங்ஙனே யென்னில், "ஜ்யோதிஷ்டோமாதிகளைப்பண்ணி ஸ்வர்க்கத்தை லபிப்பானென்று ஶாஸ்த்ரங்கள் சொன்னால் அவ்வளவும் போகாதே ஜ்யோதிஷ்டோமாதிகள் பண்ணி புத்ரபஶ்வந்நாதிகளை புருஷார்த்தமாகப் பற்றி போராநின்றார்கள். ஸ்வர்க்கந்தான் நரகஸ்தாநமென்னும்படியா யிருக்கிற அபுநராவ்ருத்திலக்ஷணமோக்ஷத்துக்

கு அதிகார முண்டாகப் போகிறதோ" என்று அருளிச்செய்தார். ப்ர
பத்திக்கு ப்ரமாணாபேக்ஷையில்லை என்றிருப்பன். (யஸ்ஸர்வஜ்ஞஸ்
ஸர்வவித்) (ஆநந்தோ ப்ரஹ்ம) (ஸமஸ்தகல்யாணகுணாத்மகோ
ஸௌ) என்கிற நிர்தோஷ ப்ரமாணத்தாலே அவன் ஸர்வஜ்ஞன், ஸர்வ
ஶக்தன், ப்ராப்தன், ஸமஸ்தகல்யாணகுணாத்மகன் என்னுமிடம் ப்ர
ஸித்தம்; நாமஜ்ஞரஶக்தரென்னுமிடமும் நமக்கே தெரியும், ஆகை
யாலே அமிழ்ந்துமவன் நெடியவன்கையைப் பிடிக்கச்சொல்ல வேணு
மோ, தன்னாபத்தே யுபதேஶிக்கு மென்றருளிச் செய்தார்.

எம்பெருமானார்க்கிங்ஙனே யிருப்பதொரு நிர்பந்தமுண்டு, எங்ங
னே யென்னில், கண்ணழிவற்றானொரு வைஷ்ணவனைக்கண்டா லவனு
க்கு ப்ரீதிக்கு போக்குவீடாக ஒரு த்வயத்தை யருளிச் செய்வர். பிற
ருடைய துர்கதியைக்கண்டால் திருவுள்ளத்தா லிரங்கி யருளிச் செய்
வதும் த்வயத்தை. பெரியகோவில் நாராயணன் மகனை ஏகாயனரோ
டே கூடியிருக்கக்கண்டார், அவனைக் கையைபிடித்துக்கொண்டு பெருமா
ள் திருவடிகளிலே புக்கு "பாலனாகையாலே யுனக்கொரு ப்ரமாணங்க
ளால் ஸ்தாபிக்கப்ப போகாது; நான் ஸகலவேதஶாஸ்த்ரங்களையுமா
ராய்ந்து பார்த்தவிடத்தி லிவ்வாத்மாவுக்குத் தஞ்சம் த்வயத்துக் கவ்வ
ருகு கண்டிலேன். நீயும் அத்தை விஶ்வஸித்திரு" என்று ஸ்ரீசடகோ
பனை யெடுத்துச் சூழறுத்துக் கொடுத்தார். அவருமன்றுதுடங்கி த்வய
நிஷ்டராய்ப் போனார்.

எம்பெருமானார் வெள்ளைஶாத்திப் போஶலராஜ்யத்தேற வெழுந்
தருளி திருநாராயணபுரத்திலே யெழுந்தருளியிருக்கச் செய்தே அம்
மங்கியம்மாள், பிரிவாற்றாமையாலே திருமேனியும் வெளுத்து வைத்ய
ர்களும் பரிஹாரம்பண்ண வென்றுபக்ரமித்தவாறே "நிதாந மறிந்து
பரிஹரிக்கவேண்டாவோ, எம்பெருமானார்பிரிவாற்றாமையாலே வந்
தது, அவர் திருவடிகளிலே கொண்டுபோய் விடுங்கோள்" என்றார்.
அங்கேற நடந்தவ்விடத்திலே யெழுந்தருளி யிருக்கச்செய்தே அந்தவிட
த்திலே எம்பெருமானாரைக்கண்டு அவரணைத்துத் தழுவிக்கொண்டார்.
உடம்பில் ஶோகம்போய்த்து. என்னைப்பிரிந்து உடம்பு வெளுத்து
இத்தனை தூரம் வந்தவருக்கு நாம் பண்ணுமுபகார மென்னென்று
பார்த்தருளி முன்புசொன்ன த்வயத்துக்கு மேற்படக்கண்டிலோம்
அது தன்னையே யின்னம் கேட்க்கலாகாதோ வென்று ஒரு த்வயத்
தை யருளிச்செய்தார்.

ஆழ்வான் பரமபதத்தேறப் போகைக்கு, பெருமாள்பாடே வீடு
பெற்றுக் கூட்டத்திலே வந்திருக்கச்சேய்தே "இனிப்பெருமாளை நம்மால்
விலக்கப்போகாது. இனி அந்திமகாலத்திலே என்னையழைத்து வாருங்
கோள்" என்று அந்திமஸமயத்திலே எழுந்தருளி ஆழ்வானுக்குச் செ
வியில் த்வயத்தை அருளிச்செய்தார். அருகிருந்த முதலிகள் இஸ்ஸம

யத்திலே த்வயத்தைச்சொல்ல வேணுமோவென்று கேட்க, "ஆழ்வான் ப்ரக்ருதியறியீர்களோ, இத்தஶையிலே த்வயத்தைச் சொன்னால் கர்ப்பூர நிகரத்தை நாவிலே யிட்டாப்போலே யிருக்குங்காண்" என்றருளிச் செய்தார்.

எம்பெருமானாரந்திம தஶையிலே முதலிகளடையத் திரண்டிருந்து "எங்களுக்கு தஞ்சமாய்த் திருவுள்ளத்துக்கு ப்ரியமா யிருப்பதொன்றை நாங்கள் விஶ்வஸித்திருக்கும்படி அருளிச்செய்ய வேணு"மென்று கேட்க, "எல்லாரும் ஶ்ரீபாஷ்யத்திலே வாஸனை பண்ணுகையே நமக்கு ப்ரியம், அதுக்கு மாட்டாதார் திருநந்தவநஞ் செய்து திருப்படிதாமம் பறித்துத் திருமாலையெடுக்கையும் ப்ரியதரமாயிருக்கும்; அதெல்லாருக்கு மொக்கச் செய்யப்போகாது, த்வயத்திலே வாஸனை பண்ணி விஶ்வஸித்திருக்கை மிகவும் ப்ரியதமமாயிருக்கு" மென்றருளிச்செய்தார்.

அநந்தாழ்வான் போஸலராஜ்யத்திலே எழுந்தருளினபோது ஜீயருடைய பூர்வாஶ்ரமத்திலைஶ்வர்யமு மிவர்செருக்கு மிருக்கும்படியை அநுஸந்தித்தும்போந்தானாய் ஜீயரிவைத்தையடையவிட்டு ஸந்ந்யஸித்தெழுந்தருளினபோது அவரைக்கண்டு உன்னுடைய மார்தவமும், உன்னுடைய ஶெருக்கும் கிடக்க ஸந்ந்யஸித்தாயென் றருளிச்செய்து இனி செய்யலாவதில்லைபிறேயென்று குளிரநோக்கி திருவேங்கட முடையானே இவனைப் பார்த்தருள வேணுமென்று வேண்டிக்கொண்டு "திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயநிஷ்டனாவாய்" என்று வாழ்த்தினான். "கோயிலேறப்போனாலொரு மடமும் கார்யமுமாகக் கடவது, அப்போது பட்டரை த்ருஷ்டா த்ருஷ்டங்க ளிரண்டுக்கும் கடவரென்று நினைத்துப் போவதொரு போக்குண்டு, அதிலே ஒன்றை பட்டரைக்கொண்டு கொள்வது, ஒன்றை பெருமாளைக் கொண்டு கொள்வது. அங்ஙனே செய்யாதபோது நீரொருகோடி த்ரவ்யத்தை பட்டர் கையிலே கொடுத்தாலுமவர் செருக்காலே அரைக்ஷணத்திலே யழித்து விடுவர், உம்முடைய காரியத்திலாராயாதபோது நீர் பட்டரை வெறுப்புதிராகிலுமக்கு விநாஶமாம். பெருமாளோடே வெறுத்தபோது பட்டரைக்கொண்டு தீர்த்துக்கொள்ளலா" மென்று பணித்தான்.

சிறியண்டானம்மாளந்திம தஶையிலே பணித்தவார்த்தை:—"திருவேங்கடமுடையான் தன் ஸ்வரூபத்தை மறந்து என் ஸ்வரூபத்தை அநுஸந்தித்தானாகில் எனக்குப் பழைய நரகம் போராது. இன்னமும் சில நரகம் ஸ்ருஷ்டிக்கவேணுமென்றிரானின்றேன், என்ஸ்வரூபத்தை மறந்து தன்ஸ்வரூபத்தை யநுஸந்தித்தானாகி லெனக்குப் பழைய திருநாடுபோராது, இன்னமும் சில திருநாடு ஸ்ருஷ்டிக்கவேணுமென்றிரானின்றேன்".

மருதூர்நம்பி அந்திமதஶையிலே தம்முடைய ஊரிலே எம்பெருமானாரெழுந்தருளி யிருக்கச் செய்தே விண்ணப்பஞ்செய்த வார்த்தை,

“மூன்று ஜன்மம் திருவடிகளிலே ப்ராதிகூல்யம் பண்ணின ஶிஶுபா லன் திருவடிகளைப் பெற, அநேக ஜந்மாபராதத்தைப் பண்ணிப்போந்த நான் திருவடிகளைப் பெறுதொழிகைவழக்கோ”வென்ன, அப்போதே திருவடிகளைப் பெற்றார்.

நம்பி திருவழுதிவளநாடுதாஸர்க்கும் பிள்ளைதிருநறையூரரையர்க்கும், பட்டரருளிச்செய்தவார்த்தை:—“பொய்யேயாகிலுமவனுகந்தருளினதொருகோயிலிலே புக்குப்புறப்பட்டுத் திரியவே அந்திமதஶையிலே எம்பெருமான் முகங் காட்டும்; அவன் முகங் காட்டவே இவ்வாத்மா திருந்துமென்று எம்பெருமானுக் கில்லாததுமாய் இவ்வாத்மாவுக்குள்ளதுமாய் அவனைப் பெறுகைக்குப் பெரு விலையனுமாயிருக்குமுபாயம் அஞ்சலி” என்றருளிச்செய்தார். கருட முத்ரைக்குப் பாம்பு அகப்படுமாபோலே ஸர்வஶக்திகனான ஸர்வேஶ்வரனும் (அஞ்ஜலிः பரமா முத்ரா) என்கிறபடியே அகப்படும்.

ஆக இப்படி ஆசார்யருசி பரிக்ருஹீதமாயாய்த்திருப்பது த்வயம். இதினுடைய ஆநுபூர்வியைச் சொல்லி அதுக்குள்ளீடான அர்த்தத்தைச்சொல்லி விடவமையாதோ? இவ்விதிஹாஸங்களெல்லாம் திரள நீர் சொன்னத்துக்கு ப்ரயோஜநமென்னென்னில், புறம்புள்ள ப்ரமாணங்கள் கிடக்கச்செய்தே இத்தனையும் ஆப்தர் பரிக்ரஹித்துப்போந்ததொன்றாகாதே யென்று கேட்கிறவனுடைய நெஞ்சிலே இதினுடைய வைபவம்பட்டு ருசிவிஶ்வாஸங்களுக் குறுப்பாக.

திருக்கண்ணபுரத்திலே செருகவர்மானெல்லா வபராதங்களையும் ‘க்ஷமஸ்வ’ என்று வேண்டிக்கொள்வதும் செய்தார். க்ஷமித்தோமென்று பகவதுக்தியுமுண்டாயிருந்தது.

(நக்ஷமாமிகதாசந) என்று என்னடியார் திறத்தில் அபராதம் பண்ணினவர்களை ஒருக்காலும் பொறேனென் றுண்டாயிருந்தது. இதுசேருகிறபடி யென்னென்றுகேட்க ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்திலே அபசாரத்தைப் பண்ணிவைத்துத் தான் முன் நின்று ஶரணம் புகுமன்று பொறேனென்றது. புருஷகாரத்தை முன்னிட்டுக்கொண்டு ஶரணம் புகுருகையாலே இவர்க்கு ‘க்ஷமஸ்வ’ என்னத்தட்டில்லை, அவனுக்கும் பொறுத்தோமென்னத்தட்டில்லை. ஆகையாலே அஸஹ்யாபசாரத்துக்குமிதுவே பரிஹாரம். ப்ரஜைபண்ணினகுற்றம் தாய்பொறுத்தால் பின்னை யாராய்வாரில்லையிறே.

பக்திநிஷ்டனுக்கு கர்மாவஸாநத்திலே மோக்ஷமாவானேன்? ப்ரபந்நனுக்கு ஶரீராவஸாநத்திலே மோக்ஷமாவானேன்! [தஸ்ய தாவதேவ சிரம்] அவனுக்கவ்வளவே விளம்பம். [அத ஸம்பத்ஸ்யே] அநந்தரம் ஸம்பந்நனாகக்கடவன் என்கிற ஶ்ருதி இருவர்க்கும் பொதுவன்றோ; கர்மாவஸாநே மோக்ஷமென்னவுமாம், ஶரீராவஸாநே மோக்ஷமென்னவுமாமென்று இத்தைநியமிப்பாராரென்ன,—பக்திநிஷ்டனுக்கிருக்க

விருக்க உபாஸநம் பக்வமாகையாலே பலமுண்டு, ப்ரபந்நனுக்கு கர்த்தவ்யமொன்றில்லாமையாலும், ஈஶ்வரனுக்கு அஜ்ஞாநாஶக்திக ளில்லாமையாலும், இங்கொரு ப்ரயோஜந மில்லாமையாலும், ப்ரபந்ந னுக்கு ஶரீராவஸாநத்திலே மோக்ஷம். ஆனால் ஜ்ஞாநம் பிறந்தபோதே ஶரீரம்போகா தொழிவானென்னென்னில், பகவத்விஷயத்திலே தீவ்ர ஸம்ஸர்கமில்லாமையாலே இவனுக்குள்ளமாத்ரந்தான் கர்மக்ஷயம் பிற ந்தவாறே ஶரீரம் விடுமாகில் அநந்தரம் நரகமாயிருக்குமாகிலத்தைத் தப்பி எம்பெருமானைப் பெறலாயிருக்குமாகில் பெற்றலாகாதோ வென் னென்றே இவனிருப்பது. இப்போதே ப்ரக்ருதியை விடவேணுமென் னும் த்வரை ப்ரபத்தி காலத்தில் பிறவாமையாலும், இவனிருந்தால்பின் னையுஞ்சில அநுகூலரைக் கிடைக்குமென்று ஈஶ்வரனுக்கு மிருக்கையா லே ப்ரியமாயிருக்கும். ஆனாலிருக்குந்தனைநாளும் ஸுகோத்தரமாக வையாதொழிவானென்னென்னில், துஃகோத்தரமா யிருக்கச்செய்தே யு மித்தை விடமாட்டாதவன் இதிலே அல்பஸுகங் காணுமாகில் பின் னையவ்வருகு நினையானே. அவனுக்கு ஹிதமேபார்க்குமவனாகையாலே உபாஸகனுக்கு இருக்க விருக்க விதிலே உபாஸநம் பக்வமாகிற வோபாதி யிவனுக்கு மிருக்க விருக்க இதிலே ருசி பிறக்கைக்குடலாம்; நம்மையே உபாயமாகப் பற்றினானாகில் இனிமேலொரு போகியான வநுபவங்கொ டுக்க விருந்தோமாகி லினி ஶரீரம் விடுந்தனையும் கர்மாநுகுணமாக ஜீவி க்கிறானென்று உதாஸீநனாயிருக்கும்.

நஞ்ஜீயர் உபாஸகருக்குச்சொன்ன கர்மமடைய ப்ரபந்நனுக்கு தே ஹயாத்ராஶேஷமாக ரஹஸ்யத்திலே யுண்டென் றருளிச்செய்வர். திரு மந்த்ரத்தை யிடக்கைப் பத்துக்கொண்டெண்ணுகை கர்மயோகம், அதினுடைய அர்த்தாநுஸந்தாநம் பண்ணுகை ஜ்ஞாநயோகம், அவ்வர்த்த மிருக்கை பக்தியோகம், பக்திபரவஶராய் எம்பெருமானே நிர்வாஹக னென்று துணிகை ப்ரபத்தி.

ப்ரபந்நர்தான் த்ரிவியராயிறே யிருப்பது. பக்திபரவஶராய் ஸா தநாநுஷ்டாநக்ஷமரல்லாமையாலே ஶரணம்புகுவாரும் ஸ்வரூபஜ்ஞா நத்தாலே யவனைப்பற்றி யிருப்பாரும், இவை யிரண்டுமொழியத் தந்தா முடைய அஜ்ஞாநாஶக்திகளையும் அவனுடைய ஜ்ஞாநஶக்த்யாதிகளையும் முன்னிட்டுக்கொண்டு ஶரணம் புகுவாருமாய் த்ரிவியரா யிருப்பர். உபா யம் எம்பெருமானே. அங்கம் அவனுடைய ஜ்ஞாநஶக்த்யாதி குணங் கள்.

திருமந்த்ரத்தை யொழிந்த ஶாஸ்த்ரங்களடைய சேதநனுடைய ஜ்ஞாநஶக்த்யாதிகள்கொண் டெம்பெருமானைப் பெறலாமென்றது. திருமந்த்ர மிவனுடைய பாரதந்த்ர்யஜ்ஞாநத்தாலே பெறலாமென்

றது. சரமஶ்லோக மிவனுடைய பாரதந்த்ர்யமும் விலக்காமைக் குறிப்பா மித்தனை; பகவத்ப்ரபத்தியே சரமமான உபாயமென்கிறது. த்வயத்திலிவனுக்கு விடச்சொன்ன வர்கமு மழகியதாக விடவும் போகாது. பற்றச்சொன்ன வர்கமும் அழகியதாகப்பற்றவும் போகாது. நாமோ அஜ்ஞர், அஶக்தர், அப்ராப்தர்; ஈஶ்வரன் ஸ்வதந்த்ரன், நாமென்செய்யக்கடவோமென்று அஞ்சுவார்க்கு அஞ்சவேண்டாதபடி தோஷமேபச்சையாக, நின்றநிலையிலே பெறலாமென்கிறது.

ஆகையாலே க்ரியையாலும் ஜ்ஞாநத்தாலும், துணிவினாலும், பெற வேணும். ருசிமாத்ரமுடையார்க்குப் பாஶுரமாத்ரத்தாலே பெறலா மென்கிறது த்வயம். (மாதவனென்றதேகொண்டு) என்றும் (ஶரணமித் யபி வாசமுதீரயந்) என்றும் சொல்லக்கடவதிறே.

வாச்யங்களில் ஸர்வேஶ்வரனுக்கு அவ்வருகில்லாதாப்போலே உபாதேயமான வாசகஶப்தங்களில் த்வயத்துக்கவ்வருகில்லை. (மாச திரிதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா) என்னக்கடவதிறே. தன்னாலே எம்பெருமானைப் பெறப் பார்க்கையிளிம்பு; தன்னைப்போகட்டு எம்பெருமானாலே எம்பெருமானைப்பெறப்பார்க்கை சதிர். இவனுடைய வ்யாபாரமு மீஶ்வரஸ்வாதந்த்ர்யமும் ஜீவியாதபடி பண்ணவல்ல பெரிய பிராட்டியார்ஸம்பந்தங்கொண்டே எம்பெருமானைப்பெறப்பார்க்கை மாசதிர்.

ஜ்ஞாந கர்மாநுக்ருஹீதையான பக்தியோகத்தை முமுக்ஷுவுக்கு பகவத்ப்ராப்தி ஸாதநமென்று ஶாஸ்த்ரங்கள் சொல்லாநிற்க, நம்மாசார்யர்களும் ஆழ்வார்களும் இவர்களுக்குள்ள ஜந்மவ்ருத்த ஜ்ஞாநங்களில் குறைந்தப்ரபந்நராயிருப்பாரு மிப்ரபத்தியை விஶ்வஸித்து நிர்பரரா யிருக்கிறது என்கொண்டென்னில், அநாதிகாலம் பண்ணின ஸாஷீதிபூர்வாபராதங்களுக்கு ப்ராயஶ்சித்த மாகையாலும், ஸர்வாதிகாரமாகையாலும், ஆசார்யருசிபரிக்ருஹீதமாகையாலும், கர்மாவஸாநம் பார்த்திராதே தேஹாவஸாநத்திலே மோக்ஷத்தைத் தருகையாலும், மற்றை யுபாயங்களுக்கு அங்கமாகவிதித்து இவ்வுபாயத்துக்கு அத்தைத்தவிர்த்துக் கொடுக்கையாலும், விரோதியினுடைய ப்ராபல்யத்தாலும், தன்னுடைய ரக்ஷணத்தில் தனக்கு ப்ராப்தியில்லாமையாலும், ரக்ஷகனுக்கு ரக்ஷிக்கை முறைமையாகையாலும், நம்மாசார்யர்கள் த்வயத்தையே தஞ்ஜமாக நினைத்திருப்பர்கள்.

எம்பெருமானுடைய க்ருபை உபாயம். க்ருபைக்கடி இவனுடைய கதிஶூந்யதை. இவனுடைய ஸுக்ருதமாலோவென்னில், ஸுக்ருத துஷ்க்ருதங்களிரண்டு மப்ரயோஜகம், எங்ஙனேயென்னில் ருஷிகளையும் காகவிபீஷணாதிகளையு மொக்க ரக்ஷிக்கையாலே.

திருமந்த்ரம் ப்ராப்ய ப்ரதாநம். சரமஶ்லோகம் ப்ராபகப்ரதாநம். த்வயமிவை யிரண்டிலும் ருசியுடையா ரிவ்விரண்டையும் சேர வநு

ஸந்திக்கும்படி சொல்லுகிறது. திருமந்த்ரம் ஸ்வரூபம் சொல்லுகிறது. ஸ்வரூபாநுரூபமான உபாயவிதானம் பண்ணுகிறது சரமஶ்லோகம். விஹிதமான உபாயத்தினுடைய அநுஷ்டானம் த்வயம். திருமந்த்ரம் ஸ்வரூபம் சொல்லுகிறதென்கிறவிடம் ஆத்மஸ்வரூபம்சொல்லுகிறதோ பரஸ்வரூபம் சொல்லுகிறதோவென்னில், பரஸ்வரூபம் ஸித்தமாகையாலே அதில் ஸாதிக்கவேண்டுவதில்லை. இவனுடைய ஸ்வரூபமிறே திரோஹிதமாய்க் கிடக்கிறது. அத்திரோதாயகம்போய் நிஷ்க்ருஷ்டவேஷமான ஸ்வரூப மின்னதென்றறியவேண்டுகையாலே ஆத்மஸ்வரூபம் சொல்லுகிறது.

பரஸ்வரூபஞ் சொல்லுகிறதென்றாலும் ஈஶ்வரஸ்வரூபம் ஸம்பாதிக்கிறதொன்றன்றிறே. அறியாதவனுக்குச் சொல்லுகிறதாகையாலே பரஸ்வரூபம் சொல்லுகிற திருமந்த்ரம் ப்ராப்யப்ராதாந்யமென்றபோதே ப்ராபகம்அப்ராதாந்யேந உண்டாகக்கடவது. எப்பதத்திலே என்னில், திருமந்த்ரத்தில் நமஸ்ஸிலே (மஃ) என்று ஷஷ்டீவிபக்தி, எனக்கென்கையாலே; அத்தை நகாரம் நிஷேதிக்கையாலே தன்னோடு தனக்குண்டான அந்வயத்தைத் தவிர்க்கிறது. தான் என்று வைத்து தன்னோடு தனக்கந்வயமில்லையென்னுமிடத்துக்குக் கருத்து என்னென்னில், தன்னோடு தனக்கந்வயமில்லையென்றவிடம் ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத பாரதந்த்ர்யத்தைச் சொன்னபடி. இப்பரதந்த்ரவஸ்துவுக்கு ஸ்வதந்த்ரன் ரக்ஷகனாக வேண்டுகையாலே அவ்வழியாலே ஈஶ்வரனுடைய உபாயபாவம் ஆர்த்தமாகவும் சொல்லிற்றாகக்கடவது. அங்ஙனன்றியே ஸ்தாநப்ரமாணத்தாலே ஶாப்தமாகவும் சொல்லக்கடவது. ஸ்தாநப்ரமாணங்கொண்டு ஶாப்தமாதல் ஆர்த்தமாதல் செய்யவேண்டுகையாலே அப்ராதாந்யேந ப்ராபகம். ப்ராப்யப்ரதாநமே திருமந்த்ரம். திருமந்த்ரம் ஸ்வரூபஜ்ஞாநவைஶத்யஹேதுவென்றநுஸந்திக்கக்கடவோம். த்வயம் இவைத்தினுடைய அர்த்தாநுஸந்தானமென்றனுஸந்திக்கக்கடவோம். சரமஶ்லோக மிவைத்துக்கு ப்ரமாணமென்றநுஸந்திக்கக்கடவோம். திருமந்த்ரம் ஸகல வேததாத்பர்யமென்றநுஸந்திக்கக்கடவோம். சரமஶ்லோகம் ஶரண்யனுக்கு அபிமதமென்றநுஸந்திக்கக்கடவோம். த்வயம் ஆசார்யருசி பரிக்ருஹீதமென்றநுஸந்திக்கக்கடவோம்.

ஆக எல்லார்க்கு மபிமதலாபத்துக்கும் அநபிமத நிவ்ருத்திக்கும் அவனே உபாயமாக ஸ்வீகரிக்கை. இது தன்னில் நிஷ்டையி லருமையாலே யிதுதான் ரஹஸ்யமுமாய் அதிக்ருதாதிகாரமுமா யிருக்கும்.

த்வயமென்று திருநாமமானபடி எங்ஙனேயென்னில், உபாயோபேயமான வர்த்தத்வயத்துக்கும் வாசகமான வாக்யத்வயத்தை யுடையதாகையாலே. இத்தால் கர்மாத்யுபாயாபாஸநிவ்ருத்திபூர்வகமான உபாயத்துக்கும் ஐஶ்வர்யாத்யுபேயாபாஸ நிவ்ருத்திபூர்வகமான உபே

யத்துக்கும் தந்த்ரேண புஷ்கலமாகச் சொல்லுகையாலே வாக்யத்வய மென்று திருநாமமாய்த்து. இதுதான் நம்மாசார்யர்களுக்கு நித்யாநுஸந்தாநமுமா யிருக்கும். இதுசொன்னவன் ஆசார்யனாகவுங்கடவன். கேட்டவன் ஶிஷ்யனாகவுங் கடவதா யிருப்பதொரு வ்யவஸ்தையையுண்டு. இதுதான் வாக்யத்வயமென்று மந்த்ரத்வமுண்டு, திருமந்த்ரத்தினுடைய விஶதாநுஸந்தாநமாகையாலே. மந்த்ரத்வமாவது. (மநநாத் மந்த்ர) மாதல். (மந்தாரந்த்ராயத இதி மந்த்ர:) ஆதல். யாவதாயுஷம் மநநம்பண்ணினாரையும் தரிப்பிக்குமதாகையாலே மந்த்ரத்வமுண்டென்கிறது.

ருஷிச்சந்தோ தேவதைகளில்லையாவானே னென்று நஞ்ஜீயரைக் கேட்க இது சொல்லுகிறவர்யத்துக்குக் கூட்டுவேண்டுமென்றன்றோ இதுக்குக் கூடவேண்டுவதென் றருளிச்செய்தார்.

த்வயத்தி லர்யத்தை ஸுஜீபண்ணி ஸந்நிதாந்தரத்தாலே திருமுன்பே விண்ணப்பம் செய்யலாமோவென்று நஞ்ஜீயரைக் கேட்க இஶ் ஸந்நிதந் தன்னாலே விண்ணப்பம் செய்யவேணுமென் றருளிச்செய்தார். இப்பாசுரத்துக்குச்சுரக்குமர்யம் வேறொரு பாசுரத்துக்குச் சுரவாதுகாணென் றருளிச்செய்தார்.

அவதாரிகை முற்றிற்று.

இதுதான் ஆறுபதமாய் பத்தர்யமநுஸந்யேயமா யிருக்கும். [ஸ்ரீம ந்நாராயண சரணௌ] என்று ஸமஸ்தபதம், மேலுடைய வ்யஸ்தபதம். நாலிரண்டர்யம் சேர்ந்திருக்குமது ஸமாஸபதம், இதுதன்னில் முதற் பதம் ப்ரக்ருதி ப்ரத்யயங்களா யிருக்கும். [ஸ்ரீ] யென்றவிடம் ப்ரக்ருதி. [மந்] என்றவிடம் ப்ரத்யயம்,

[ஸ்ரீ] என்கிற திருநாமத்துக்கு (ஶ்ரிஞ் ஸேவாயாம்) என்கிற யாதுவிலே முடிக்கையாலே ஸேவ்யமானை என்கிறது. ஆராலே ஸேவிக்கப் படும், ஆரை ஸேவிக்குமென்னு மபேக்ஷையிலே (ஸ்ரீயத இதி ஸ்ரீ:) என்றும் (ஸ்ரயதஇதிஸ்ரீ:) என்றும் வ்யுத்பத்தியாய் இதில் [ஸ்ரீயதே] என்று தன்னையொழிந்த த்ரிவியாத்மவர்க்கத் தாலுமாஶ்ரயிக்கப்படுமவளென்கிறது. [ஸ்ரயதே] என்கையாலே இவள் தான் எம்பெருமானை யாஶ்ரயியாநின்றாளென்று ஸ்ரீயென்னும் திருநாமத்தை யுடையவளா யிருக்கும். இத்தால் தன்னையொழிந்த த்ரிவிய சேதநருடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளிவளுடைய கடாக்ஷாதீநமா யிருக்கு மென்னுமிடத்தையும், இவள்தன்னுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளவனுடைய கடாக்ஷாதீநமா யிருக்கு மென்னுமிடத்தையும் சொல்லிற்று.

ஆக இவர்களைக் குறித்துத் தான் ஸ்வாமிநியாய் அவனைக்குறித்துத் தான் பரதந்த்ரையாயிருக்கையே இவள் திவ்யாத்மஸ்வரூபத்துக்கு ஸ்திதியென்னுமிடத்தைச் சொல்லிற்று.

இத்திருநாமந்தான் புருஷகாரத்தைக் காட்டுகிறது, தன்னையொழிந் தார்க்குத் தான் ஸ்வாமினியாயவனைக்குறித்துப் பரதந்த்ரை என்றுங்கா ட்டில் புருஷகாரத்தைக் காட்டுமோ இப்படி யெண்ணில் புருஷகார மாவாருடைய லக்ஷணமிதுக்குண்டாகையாலே. புருஷகாரமாவார்க்கு இரண்டிடத்திலுங் கூடல் துடக்குண்டாகவேணும். தன்னை யொழிந்தா ரோடு தனக்குக் கூடல் துடக்கில்லையாகில் கார்யம் தீரக்கழியச்செய்யக் கூடாது. கார்யம் கொள்ளுமிடத்தில் தனக்கு ப்ராப்தி யில்லையாகில் கா ர்யம் வாய்க்கச் செய்விக்கக் கூடாது. ஆக விரண்டிடத்தில் ப்ராப்தியும் புருஷகார மாவார்க்கு அபேக்ஷிதமாகையாலே இத்திருநாமந்தான் புரு ஷகாரத்தைச் சொல்லிற்று.

இன்னமும் 'நிருக்தத்திலே இவ்வர்யந் தன்னை முக்தகண்டமாகச் சொல்லிற்றெ'ன்று நஞ்ஜீய ரருளிச் செய்வ தொன்றுண்டு. அதாவது, [ஶ்ருணோதீதிஶ்ரீ:, ஶ்ராவயதீதிஶ்ரீ:] என்னும் வ்யுத்பத்தியாலும் அதில் [ஶ்ருணோதீதிஶ்ரீ:] என்று ஸம்ஸாரபய பீதரான சேதநர்கள் தந் தாமுடைய ஆர்த்தியையு மபராதத்தையு மீஶ்வரனுடைய ஸ்வா தந்த்ர்யத்தையும் அநுஸந்தித்து இப்படி இருக்கிறவெங்களை அவன் திருவடிகளிலே சேர்க்கவேணுமென்று திருமுன்பே விண்ணப்பம் செ ய்தால் ஆமிமுகியம்பண்ணிச் செவிதாழ்த்துக் கேட்குமென்னுமிடத் தையும் [ஶ்ராவயதீதிஶ்ரீ:] என்று தான்கேட்டவார்த்தையையவன் செவி யிற் படுத்திப் பொறுப்பித்துச் சேர்க்கு மிடத்தையும் சொல்லுகிறதெ ன்பர்கள்.

இவ்வர்த்தம் வ்யுத்பத்திஸித்தமேயன்று. ப்ரமாண ஸித்தமும், (ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ,) (அஸ்யேஶாநா ஜகத:) என்று ஜகத்துக்கீஶாநை என்கையாலே இவர்களைக் குறித்து ஸ்வாமிநி யென் னுமிடத்தைச் சொல்லிற்று.

(நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஶ்ரீரநபாயிநீ,) (விஷ்ணுபத் நீ) என்கையாலே அவனைக்குறித்துப் பரதந்த்ரை யென்னுமிடம் சொல்லிற்று.

இப்படியொழிய சேதநரோடு ஸமானை என்னுதல் ஈஶ்வரனோடு ஸ மானை என்னுதல் சொல்லுவது சேராது.

ஆனால் (பும்ப்ரதாநேஶ்வரேஶ்வரீம்) என்று அவனிலுமிவளுக்கு ஆதிக்யஞ் சொல்லுகிற ப்ரமாணங்கள்சேருகிறபடியெங்ஙனே என்னில், அவளுடைய போக்யதையிலுண்டான வைபவத்தைப்பற்ற அவனுக் குண்டான ப்ரணயித்வ பாரதந்த்ர்யமா மித்தனை. (பித்தர்பனிமலர் மேற்பாவைக்கு) என்றும் (மலராள்தனத்துள்ளான்) என்றும் (மாமலர் மங்கை மணநோக்க முண்டான்) என்றும் (அல்லிமலர்மகள் போக மயக்குக்களாகியும் நிற்குமம்மான்) என்றுஞ் சொல்லுகையாலே தன் போக்யதையாலே யவன் நெஞ்சைத்துவக்கிக்கொண்டாய்த்திருப்பது.

அவன் ஸ்வரூப மெல்லைகாண வொண்ணாத வைஷவம்போலே இவளு டைய ஸ்வரூப மணுவாயிருக்கச்செய்தே இவளுடைய ஷோதீயதையி லுண்டான வைஷவஞ் சொல்லிற்றாகக்கடவது. அவன் ஸ்வரூப மெல் லைகாணிலும் காணவொண்ணாது காணுமிவளுடைய ஷோதீயதையி லேற்றமிருக்கும்படி. இவளுடைய ஸ்வரூபமணுவாயிருக்கச் செய்தே ஷோதீயதையாலே அவனதில் இவள் ஸ்வரூபத்துக்கு வைஷவஞ் சொ ல்லலாமோ வென்னில், மூறுக்கம் பூவுக்கும் செங்கழுநீர் பூவுக்கும் நிற மொத்திருக்கச் செய்தே தனக்கு விசேஷணமான பரிமளத்தாலே செ ங்கழுநீர் பெருவிலையனாய்த் தென்றால் வேறொன்றாலே வந்த உத்கர்ஷ மாகாதிறே. அப்படி இவள் ஸ்வரூபமு மவனுக்கு சேஷமாயிருக்கச் செய்தேயு மவனிலு மிவளுக்கு ஏற்றம் சொல்லிற்றென்றால் வே றொன்றாலே வந்த வேற்றமாகாதிறே. ஆகையாலே ஜகத்து இருவர்க் கும் சேஷமாயிருக்கையாலே ஜகத்துக்கு பூஜ்யையாயிருக்கும். ஸ்வரூ பேண ப்ரணயித்வத்தாலே யவனுக்கு பூஜ்யையா யிருக்கும். (த்ரயா ணாம் ஹரதாதீநாம் ஹிராத்ருணாம் தேவதாசயா) என்றும் (தத்ர பூஜ்யப தீர்யோக்கி பரிஹாஷா ஸமந்விதம், ஸவிஜோடயம்) என்று பூஜ்யவாச கமா யிருக்கையாலே (பூஜ்யை) என்கிறது,

இது ப்ரமாணஸித்தியமேயன்று, லோகஸித்தியம். எங்ஙனே யென் னில், ப்ரஜைகளைக்குறித்துத் தாய்ஸ்வாமிநியாய், ஹர்த்தாவைக்குறி த்துப் பரதந்த்ரையா யிருக்கச்செய்தே இவள் ஷோதீயதையைப்பற்றவ வன்பரதந்த்ரனாமென்ன, அவளுடைய ஸ்வாதந்த்ர்யம் சொல்லா திறே. இவன் ப்ரணயித்வமா மித்தனையிறே. இப்ப்ரணயித்வத்தாலே ப்ரஜைகளுக்கு ரக்ஷணமாய்த் தலைக்கட்டுகிறது. எங்ஙனே யென்னில், தாஸதாஸிகள் பணிசெய்கைக்காகவும் புத்ராதிகளுடைய வ்யுத்பத்திக் காகவும் பிதாவானவன் நியமியத்தால் மாதாவின் நிழலிலே யொதுங்கி நின்றுஅவனிவளுக்கும் உதவியனான வளவிலே இவைத்தின் குற்றத்தை ப்பார்க்கக் கடவதோதா வென்று இவள் காட்டிக்கொடுக்கக் காணுனின் றேமிறே. ஆகையாலே புருஷகாரமும் லோகஸித்தியம், ஆகவிப்பதத் தால் புருஷகாரம் சொல்லிற்று.

ஆக இங்குத்தை ஸ்ரீமத்பதத்துக்கு அவனி லிவளுக்கு ஏற்ற மென் னென்னில் ப்ராப்தி யிருவர்க்கு மொத்திருக்கச் செய்தே இவைதன்னு டைய வபராயங்களைப் பொறுப்பித்து அவன் திருவடிகளிலே சேர்ப் பிக்கு மேற்றஞ் சொல்லிற்று. இனிமேல் ப்ரத்யயம், [ஸ்ரீயதே] என் கிற வர்த்தமாநத்தை வ்யாக்யாநம்பண்ணுகிறது. (மந்) என்று மது ப்பைச் சொல்லுகிறது. (நித்யயோகேமதுப்) என்னக்கடவதிறே. (இறையுமகல கில்லேன்) என்றும், (நித்யாநபாயிநீ) என்றும் சொல்லு கிறபடியே ஒருக்காலும் பிரியாதிருக்கு மென்கிறது. இத்தால் ஃலித் ததென்னென்னில், புருஷகாரஷூதையான விவள் நித்யவாஸம் பண்ணு கையாலே ஆஸ்ரயிப்பார்க்குக் காலம் பார்க்க வேண்டா வென்கிறது. அதாவது, ஈஸ்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் தந்தாமுடைய ஸ

ஸாரித்வத்தையு மநுஸந்தித்துக் கைவாங்க வேண்டாதபடி யிருக்கை. அவனுடைய ஸர்வஜ்ஞத்வத்தையும் தந்தாமுடைய ஸாபராதத்வத்தையும் அநுஸந்தித்து இழக்கவேண்டாதபடி யிருக்கை. ஆகையாலே அவனும் ஸர்வகாலமும் ஆஶ்ரயணீயனுமா யிருக்கும். இவளுடைய ஸந்நிதியாலே ஸர்வகாலமு மாஶ்ரயிக்கலா யிருக்கும். ஏதேனும் காலமும், ஏதேனுமதிகாரமுமாம்.

ருசிபிறந்தபோதே யிவர்களை யவன்திருவடிகளிலே சேர்ப்பிக்கும் பாஶுரமென்னென்னில், ஒரு தலை ஜந்மம், ஒரு தலை மரணம், நடுவே காமக்ரோத லோபமோஹ மதமாத்ஸர்யங்கள், ஈஶ்வர் பெருமையிது, அவைத்தின் சிறுமையிது, உமக்கு ஸத்ருஶமான பச்சையிவர்களாலிடப்போகாது, இவர்களிடம் பச்சைகொண்டு, வயிறுநிறையும் ஸாபேக்ஷரல்லர் நீர், ஆனபின்பு இவர்களைப் பார்த்தாலுமமை வந்து கிட்டவொண்ணாது, உம்மைப்பார்த்தாலு மும்மைக் கிட்டவொண்ணாது, நாமே இவைத்துக்கு விலக்கடிகளைப் பண்ணி வைத்து இவர்களைக் கைவிடுகையாவது, உம்முடைய நாராயணத்வமொருவாயா யும்முடைய ரக்ஷணஸ்வரூபத்தையு மிழக்கு மித்தனை காணும், உம்முடைய ஸ்வரூபஸித்தியர்த்தமாக விவர்களைக் கைக்கொள்ளவேணுங் காணும், உம்முடைய பேற்றுக்கு நான் காலைக்கட்டியிரக்கவேண்டிற்றேவென்றிவள் சொன்னாலவன் சொல்லுமதேதென்னில், (அதண்ட்யாந்தண்டயந்ராஜா) என்கிறபடியே ஸாபராதரை தண்டிக்கச் சொல்லுகிற ஶாஸ்த்ரம் ஜீவியாதபடியோ நாம் ஸ்வரூபம் ஸம்பாதிப்பதென்றும். ஆனால் 'ஶாஸ்த்ரம் ஜீவிக்கவேணுமாகில் உம்முடைய க்ருபை ஜீவிக்கும்படியென், அத்தைச் சொல்லிக்காணுமென்றுமிவள். ஆனாலும் 'ஶாஸ்த்ராநுவர்த்தநம் பண்ணவேணும் காணெ'ன்றுமவன். ஆனால் 'உம்முடைய க்ருபையும் ஜீவித்து ஶாஸ்த்ரமும் ஜீவிக்கும்படி வழியிட்டுத் தருகிறேன், அத்தைச் செய்யப்பாருமெ' ன்றுமிவள். ஆனால் 'சொல்லிக்காணெ' ன்றுமவன். 'உம்முடைய பக்கலிலே வைமுக்யத்தைப்பண்ணி விஷயப்ரவணராயிருக்கிறவர்கள் பக்கலிலே தண்டிக்கச் சொல்லுகிற ஶாஸ்த்ரத்தை விநியோகங் கொள்வது, உம்முடைய பக்கலிலே ஆபிமுக்யத்தைப் பண்ணி என்னைப் புருஷகாரமாகக் கொண்டும்மை ஆஶ்ரயித்தவர்கள் பக்கலிலே உம்முடைய க்ருபையை விநியோகங் கொள்வதெ'ன்று அவனைக் கேட்பித்துச் சேரவிடும்.

இப்படி காரியப்பாடாகச் சொல்லி புருஷகாரமாகைக்காகவே நித்யவாஸம் பண்ணுகிறது. அவனுக்கு போக்யரூபமாகவன்றோ வென்னில், ஆம்; போக்யரூபமாகை எங்ஙனே யென்னில், அவளோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே அவனுக்குப் பிறந்த ஹர்ஷத்துக்குப் போக்குவீடாக இவளுக்கென்ன உபகாரத்தைப் பண்ணுவோமென்று தடுமாறு

வதொரு தடுமாற்றமுண்டு. அதுதான் ப்ரணய கலஹத்தில் பரிமாறும் பரிமாற்றத்திலேயென்று தோற்றுமோபாதி இவன் தடுமாறி நோக்கும ந்நோக்கிவள் கண்ணிலே தோற்றும். அப்போதைத் தடுமாற்றத்துக் குப் போக்கடி காட்டாதபோது அவனுடைய வாத்ஸல்ய மிழக்க வருமெ ன்னுமத்தாலே 'இவைத்தினுடைய வபராதத்தைப் பொறுத்துக் கைக் கொள்ளீர்' என்று தன் திருப்புருவத்தாலே ஒரு நெளி நெளிக்கும். இவ னவள் புருவம் நெளிந்தவிடத்திலே குடநீர் வழிக்குமவனாகையாலே இவைத்தையும் ரக்ஷித்துத் தானுமுளனாம். இதுகாணுமிவளுக்கு மிவனு க்கு முண்டான சேர்த்தி யிருந்தபடி. ஆகையா லிரண்டு வகைக்கும் ப்ரணயித்வம் செல்லாநிற்கச் செய்தே இருவருடைய ஹர்ஷமும் வழி ந்து புறப்பட்டுச் சேதநருடைய ரக்ஷணமாய்த் தலைக்கட்டும். ஆனாலிரு வர்க்கும் ப்ரணயரஸமுண்டானபோது இவைத்தினுடைய ரக்ஷணமாய் அல்லாதபோது ரக்ஷணம் குறைந்தோ விருப்பதென்னில், இவளோட் டை ஸம்ஶ்லேஷம் நித்யமாகையாலே அநுபவம் நித்யமா யிருக்கும். அநுபவம் நித்யமாகையாலே ஹர்ஷமும் நித்யமா யிருக்கும். ஹர்ஷமும் நித்யமாகையாலே ஹர்ஷத்தால் வந்த நோக்கும்நித்யமாயிருக்கும். அந்த நோக்கு நித்யமாகையாலே ரக்ஷணமும் நித்யமாயிருக்கும்.

இந்நித்ய ரக்ஷணம் மதுப்பில் நித்யயோகத்தாலே வந்த ரக்ஷணத் திலேற்றம். எங்ஙனேயென்னில், இதிறே ஸர்வாத்மாக்களுக்கும் பற்றாசு, அங்ஙனன்றிக்கே த்ரிபாத்விபூதியையும் தன் ஸ்வரூபாநுரூபகுண விபூதிகளாலே யநுபவித்துச் செல்லாநிற்கச்செய்தே ஜகத்ரக்ஷண மும் திருவுள்ளத்திலே பட்டு நிர்வஹித்துக்கொண்டு போருகிறாப்போலே இவளுமவனுடைய போக்யதையை விளாக்குலைகொண்டநுபவியா நிற்கச்செய்தேயும் ப்ரஜைகளுடைய ரக்ஷணமும் திருவுள்ளத்திலே பட்டு நிர்வஹித்துக்கொண்டு போரக்கடவதாய்த்து வஸ்துஸ்வபாவமிருக்கும் படி. ப்ரஜைகள் விஷயத்தில் தான் (தேவதேவதிவ்ய மஹிஷீம்) என்கிற மேன்மை யநுவர்த்தியாது. ப்ராப்தியிறே யநுவர்த்திப்பது, எல்லார்க்கு மொக்க வரையாதே தாயாயிருக்கும்.

பூர்வாவஸ்தையைப் பார்த்து அஞ்சவேண்டாதே மடியிலே சே ன்றணுகலாயிருக்கும். அசரண்யசரண்யையிறே. பகவத்விஷயத் திலும், புறம்புகலார்க்கும் புகலாயிருக்குமந்த ஸர்வஸாதாரணமான ப்ராப்தியின்றியே, விசேஷஸம்பந்தமுண்டு, (செய்தாரேல் நன்று செய்தார்) என்கிறவனுடைய கையும் வில்லுமாய்ச்சீறினாலுமிவள் திரு வடிகளிலே புகலாயிருக்கும். ஆகையாலே ஜந்மவ்ருத்தங்களில் உத்க் ருஷ்டரோடு அபக்ருஷ்டராடு வாசியற நின்றநிலையிலே பகவத்ஸமா ஶ்ரயணம் பண்ணலாவது, அவளோட்டை ஸம்பந்தத்தாலும், இவள் திருமார்பிலே நித்யவாஸம்பண்ணுகையாலுமிறே. ஆகையாலே ஸர்வா திகாரம் ஸூசிப்பிக்குமது இப்பதத்திலேயாயிருக்கும்.

ஆக இப்படித்தாலே புருஷகாரஞ்சொல்லி மதுப்பாலே யவனுக்கு மறுக்கவொண்ணாத புருஷகாரத்தினுடைய நித்யயோகஞ் சொல்லிற்று.

இப்படி புருஷகாரபூதையாயிருக்கிற இவள்தானொருகுறை சொல்லும்போதும், (என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்) என்னும் வாத்ஸல்யாதிசயத்தையுடைய னாகையாலே, மேல் நாராயணனென்கிறது. (தன்னடியார் திறத்தகத்து) அவன் தன்னடியாரென்கைக்குமிவள் சிதகுரைக்கைக்கும் ஒரு சேர்த்தியில்லையிறே. பெற்றதாய் நஞ்சிடக்கூடாதிறே. இனி யிவளவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் இவற்றினுடைய ஸாபராதத்வத்தையு மநுஸந்தித்து இவற்றின் பக்கலிலென்னாய் விளைகிறதோவென்று அதிசங்கைபண்ணி, யிவனைச்சோதிக்கிறாளிறே. அவனிவளுடைய மார்தவத்தையும், ஔதார்யத்தையுமநுஸந்தித்து, இனியிவளிவற்றின் பக்க லெவ்வளவா யிருக்கிறாளோ வென்றிவளை அதிசங்கைபண்ணுமவன். தன்னபேக்ஷைக்காக இவர்கள் ரக்ஷணம் பண்ணுகிறானோ, தன் அபேக்ஷையில்லாதபோது ரக்ஷணம் திருவுள்ளத்தி லுண்டோ இல்லையோவென்று சோதிக்கிறாளாகவுமாம்.

ஆகவிப்படி யொருவரை யொருவரதிசங்கைபண்ணி நோக்குமிருவருடைய நிழலையும் பற்றியிறே உபயவிபூதியுங் கிடக்கிறது. தன்னை புருஷகாரமாகக் கொண்டு அவனை யுபாயமாகப் பற்றின அநந்யப்ரயோஜநரை யொருவரையொருவரதிசங்கை பண்ணி நோக்கும்படியிறே. இனி யிவளவனை அதிசங்கைபண்ணிச் சிதகுரைக்குமன்று நம்மைப்பற்றினார்க்கு அக்குறை யில்லை காணென்று அவளோடுங் கூடமன்றாடுங்காருணிக்யம் சொல்லுகிறது. அக்குற்றமென்கிறானிறே- இவள் சொன்ன குற்றம் தன்வாயால் சொல்லமாட்டாமையாலே. 'இல்லை, நானிப்போது கண்டேன்' என்று ஸாக்ஷிபூர்வகமாகக் காட்டிக்கொடுத்தாலும் ஆனாலவர்கள் தான் தர்மாதர்மங்களும், ஒருபரலோகமும், ஒருபரதேவதையும், இல்லை யென்று செய்கிறார்களோ? ப்ராமாதிகத்துக்கு நாமுளோமென்றன்றோ செய்கிறது. ஆனபின்பு கூட்டுகையுங்கள் தேவையாமித்தனை போக்கி ஒரு மிதுநத்துக்கு இவர்கள் குழைச்சரக்காயிருக்கப் பிரிக்கையுங்கள் தேவையோவென்று, கூட்டின ஸ்ரீவைஷ்ணவர்களோடும், கூட்டின பிராட்டியோடும் மறுதலித்து நோக்கும் காருணிக்யம் சொல்லுகிறது.

[நாராயண]-வாத்ஸல்ய ஸௌசீல்ய ஸௌலப்ய ஸ்வாமித்வங்கள், இவை நாராயண சப்தார்த்தம். ஆனாலு மிந்நாராயண சப்தத்துக்கு ஸௌலப்யத்திலே நோக்கு.

[வாத்ஸல்ய] மாவது - வத்ஸத்தின் பக்கல் தாய் இருக்குமிருப்பை ஈஶ்வரன் ஆஶ்ரிதர் பக்கலிலே யிருக்கு மென்கிறது. அதாவது-சுவடு

பட்டதரையில் புல்தின்னாத பஶு தன்கடையாலே புறப்பட்ட கன்றினுடைய தோஷத்தைத் தன் வாயாலே தழும்பற நக்கித் தன் முலைப்பாலாலே யரிப்பிக்குமாபோலே ஆஶ்ரிதருடைய தோஷங்களைத்தனக்கு போக்யமாகவிரும்பித் தன் கல்யாண குணங்களாலே அவர்களை யரிப்பிக்கை. எங்கே கண்டோமென்னில் (தஸ்ய-தோஷ꞉) அவனுடைய தோஷமன்றோ, ஶரணாகதனுடைய தோஷமன்றோ, அது நமக்கபிமத விஷயத்திலழுக்கன்றோ, என்று மேல் விழுந்து விரும்பும்படியிறே வாத்ஸல்ய மிருப்பது. தமக்குப் பரிவரான மஹாராஜரையும் தம்பால் ஸக்தையான பிராட்டியையும் விட்டு அவன் தோஷமேதேனுமாகிலும் இன்றுவந்த ஶரணாகதனை விடில் நாமுளோமென்று, அநுகூலரோடேயுமலைந்து ரக்ஷிக்கும்படியிறே வாத்ஸல்யகுண மிருப்பது.

(ஶீலம்ஹி நாம, மஹதோ மந்தைஸ்ஸஹ நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்வம் ஶீலம்.) அதாகிறது-சிறியவனோடே பெரியவன் வந்துகலவா நின்றால் தன் பெருமை யிவன் நெஞ்சில் படாமே நம்மோட்டையாவனொருவ னென்று புரையறக்கலக்கலாம்படி யிருக்கை. அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கும் அவ்வருகாய் அப்ராக்ருதனாய் உபயவிபூதி போகத்தாலும் பெரிய வேற்றத்தை யுடையனாய், (அவனெவ்விடத்தான்) என்னும்படி யிருக்கிறவன் நித்ய ஸம்ஸாரிகளுக்கு மவ்வருகே கழியப் போனானென்றும் இவனோடே வந்து கலவா நின்றாலிவனஞ்சி யிறாய்க்கவேண்டாதபடி தானே மேல் விழுந்து புரையறக்கலக்கை ஶீலகுணமாவது. இப்படி கலக்கப் பெற்றது இவனுக்குக் கார்யஞ் செய்ததாக வன்றியே, அது தன் பேறாக நினைத்து இருக்கை ஸுஶீலம்.

[ஸ்வாமித்வ] மாவது-கர்ஷகன் பயிர்த்தலையிலே குடில்கட்டி நோக்குமாபோலே உடைமை யுனக்கல்லே னென்று முடித்துக்கொண்டவனும் தன்னுடைமையானது தோற்றத் தானிவற்றை விடமாட்டாதே இவற்றினுடைய ரக்ஷண சிந்தை பண்ணியிருக்கிற விருப்பு. அதாவது இவனுக்குத் தன் ஸௌஹார்தத்தாலே யாத்ருச்சிகஸுக்ருதத்தை யுண்டாக்கி, அதடியாக அத்வேஷத்தையுண்டாக்கி, அதடியாக ஆபிமுக்யமுண்டாக்கி, அதடியாக ருசியை யுண்டாக்கி, அதடியாக ஸத்ஸம்பாஷணத்தை யுண்டாக்கி, அதடியாக ஆசார்யஸமாஶ்ரயணத்தை யுண்டாக்கி, ஸம்யக்ஜ்ஞாநத்தைப் பிறப்பித்து, ஶரீரயாத்ராயநத்திலே நிஷ்டையைப் பிறப்பித்து, கண்ணழிவற ப்ராப்யத்திலே ருசியைப்பிறப்பித்து, விரோதிநிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுத்து, அர்சிராதிமார்க்கப்ரவேஶத்தை யுண்டாக்கி, லோகப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்து, ஸ்வரூபப்ரகாஶத்தைப் பிறப்பித்து, பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தியையும் பிறப்பித்து, இவைதுடக்கமான பகவதநுபவத்தையும் இவ்வநுபவஜநிதமான ப்ரீதியாலே பண்ணப்படுவதான நித்யகைங்கர்யத்தையேவிக்கொள்வதாக வந்திப்படிக்கு பரமஶேஷித்வம் ஸ்வாமித்வமாவது.

[ஸௌலப்ய] மாவது, அதீந்த்ரியமான பரமவஸ்து இந்த்ரிய கோசரமாம்படி எளிய ஸம்ஸாரிகளுக்குங் கண்டாஶ்ரயிக்கலாம்படி தன்னை யெளியனாக்கிக்கொடுக்கை. அதாகிறது "மாம்" என்று கொண்டு ஸேநாதூளியும் கையுமுழவு கோலுமாய் ஸாரதியாய் நிற்கிற நிலையையிறே உபாயமாகப் பற்றென்று விதிவாக்யத்தில் சொல்லிற்று. அந்த ஸௌலப்யத்தை யாய்த்து இங்குச்சொல்லுகிறது. அதுதான் பரத்வம் என்னலாம்படியிறே இங்குத்தை நாராயணஶப்தத்தில் ஸௌலப்யம்.

எங்ஙனே யென்னில், அங்கு (மய்யாஸக்தமநா: பார்த) என்றுகொண்டு தன்பக்கலிலே ஆஸக்தமான மநஸ்ஸையுடைய அர்ஜுநனொருவனையும் நோக்கியிறே ஸுலபனாய்த்து. இங்கு எல்லார்க்கு மோக்கஸுலபனாயிருக்கும். அங்கு முன்புமில்லை பின்புமில்லை. நாமறியாத நாளிலு முண்டாய், நாமறிந்தநாளிலு முண்டாயிருக்கிற வேற்றமிந்த ஸௌலப்யம். இதர குணங்களுண்டானாலும் கண்ணுக்கு விஷய மானாலல்லது போக்கி இதரகுணங்கள் ஜீவியாமையாலே ஸௌலப்யம் ப்ரதாநமாகிறது.

இதரகுணங்களுபாயமா மிடத்தில், ஸௌலப்யம், எளியனான விவனளவிலே தன்னை யெளியனாக்குகையாலே, இவனே உபாயமென்கிறது. ஸுஶீலம், இப்படி கலக்கிற விது, தன் பேறாகக் கலக்கையாலே அவனே உபாயமென்கிறது. ஸ்வாமித்வம், ஸம்ஸாரிசேதநனை நித்யஸூரிகள் கோர்வையிலே கொண்டுபோய் வைத்தால் நிவாரகரில்லாத நிரங்குஶஸ்வாமித்வ முபாயமென்கிறது.

ஆகவிங்குச் சொன்ன நாலு குணங்களும் பற்றுகைக்குப் பற்றாசானவோபாதி ஜ்ஞாநஶக்த்யாதி குணங்களும் மோக்ஷப்ரதத்வத்திலே விநியோகம். எங்ஙனேயென்னில், இவனும் விடுமதறிந்து விடுகைக்கும் பற்று மதறிந்து பற்றுகைக்கும் ஸர்வஜ்ஞனாகவேணும். ஜ்ஞாநமுண்டானாலும் ப்ரயோஜநமில்லை ஶக்தனன்றாகில். அது, அநாதிகாலார்ஜிதமான பாபங்களைத் துணித்துத்தாவி அக்கரைப்படுத்தும்போது, ஸர்வஶக்தியாகவேணும். ஶக்தனானாலும் ப்ரயோஜநமில்லையிறே நிரபேக்ஷனன்றாகில். நிரபேக்ஷனாகிலும் ப்ரயோஜநமில்லையிறே ப்ராப்தியில்லையாகில். ஆக ஸர்வஜ்ஞத்வமும், ஸர்வஶக்தித்வமும், அவாப்தஸமஸ்தகாமத்வமும், ஸர்வஶேஷித்வமும், இவைநாலு குணமும், ஸர்வஸாதாரணமான ரக்ஷணத்துக்குடலா யிருக்கும்.

ஓரளவிலே ஆஶ்ரிதகதமோக்ஷப்ரதத்வத்துக்கு முடலாயிருக்கும் ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக பலப்ரதனவனாகில் இவர்களுக்கு மவனுக்கும் ப்ராப்தி யொத்திருந்ததாகில் புருஷகாராபேக்ஷை யென்னென்று நஞ்ஜீயர் பட்டரைக்கேட்க, 'வாரீர் ஜீயரே அவள் ஸந்நிதிக்கும் அவன் ஸந்நிதிக்கு முள்ளவாசி அந்வயவ்யதிரேகங்களாலே கண்டு கொள்

யோஜந மென்னென்னில், இவனுக்கு விஹிதமா யிருப்பதொன் றில்லாமையாலே அவஶமாகப் புகுந்தாலும் இவனுக்கவை பந்தகமாக மாட்டாது என்னு மாகாரந் தோற்றுகைக்காகச் சொல்லுகிறது. அதவா மோக்ஷோபாயத்வேந விதிநிஷேதாத்மகமான, ஸகல தர்மத்தையுஞ் சொல்லுகிறதென்று சொல்லுவர்கள். ஆகையாலே நரகபதநஹேதுவாய், ஸகல ஜந்துக்களுக்கும் த்யாஜ்யமுமாய் புத்தி பூர்வகமுமாயிருந்துள்ள பகவதபசாராதிகளும் ப்ரஹ்ம ஹத்யாதிகளும், பரிஹரணீயமென்றதாய்த்து.

ஶரணாகதிப்ரபாவத்தாலே அவை பந்தகமின்றியிலே யொழிந்தாலும் ஶரணாகதனுக்கிவை கர்தவ்யமன்றென்னுமிடம் சொல்லித்தாய்த்து.

(2) (பரித்யஜ்ய), த்யாகப்ரகாரத்தைச் சொல்லுகிறது. இதுவும், த்யாகமும் ல்யப்பும் உபஸர்கமுமாய் மூன்று ப்ரகாரத்தோடே கூடியிருக்கும். இங்குச் சொலுகிற த்யாகம் ஸ்வரூபேண த்யாகத்தைச் சொல்லுகிறதோ, உபாயபுத்த்யா த்யாகத்தைச் சொல்லுகிறதோ, பலத்யாகத்தைச் சொல்லுகிறதோ வென்னில், (மா பலேஷு கதாசந) என்று கீழ் பலத்யாகத்தைச் சொல்லுகையாலே கேவல மதுவுமாகமாட்டாது. இனி உபாய புத்தித்யாகமாதல் ஸ்வரூபத்யாகமாதலாகக் கடவது. உபாயபுத்தித்யாக மென்றபோது, நிஜகர்மாதி பக்த்யந்தம் அவஶ்யமநுஷ்டேயமாய்விடும். இப்படி யநுஷ்டேயமாம் பக்ஷத்தில் ப்ரபத்தி ஸ்வதந்த்ரோபாய மாகமாட்டாது. ஆகையாலிவை ஸ்வரூபேண த்யாஜ்ய மாகக்கடவது.

இனியிவற்றில் நம்மாசார்யர்கள் அநுஷ்டிக்கிறவை, ஶிஷ்யபுத்ரர்களுடைய உஜ்ஜீவநார்த்தமாக வாந்ருஶம்ஸ்யத்தாலே அநுஷ்டிக்கிறார்களித்தனை. இப்படி யநுஷ்டியாதபோது, பகவத்விபூதிபூதரான சேதநர்க்கு நாஶஹேது வாகையாலே ஈஶ்வரனுக்கநபிமதராவர். ஆகையாலே, யாதோராளவாலே லோகஸங்க்ரஹம் பிறக்கும்; யாதோராளவாலே ஶிஷ்யபுத்ரர்களுக்குஜ்ஜீவநமுண்டாம், அவ்வளவு மநுஷ்டேயமென்ற தாய்த்து. ப்ரவ்ருத்திதர்மந்தானே, அபிஸந்திபேதத்தாலே நிவ்ருத்தி தர்மமானவோபாதி, நிவ்ருத்திதர்மமும் ப்ராப்யதர்மமாகக்கடவது. இவ்விடத்தில் வர்ணாஶ்ரமதர்மம், லோகஸங்க்ரஹதயா அநுஷ்டேயமாயிருக்கும். வைஷ்ணவதர்மம் ப்ராப்யதயா வநுஷ்டேயதமமாயிருக்கும். இவ்விடத்தில் அகரணே ப்ரத்யவாயமும் எம்பெருமானுடைய வநபிமதத்வமும் தன்னுடைய புருஷார்த்த ஹாநியுமாகக்கடவது.

ஆகையாலே (விஹிதத்வாச்சாஶ்ரமகர்மாபி) (ஸஹகாரித்வேந ச) என்கிற உபயப்ரகாரத்தாலும் அநுஷ்டிக்கிறார்களல்லர்.

பரிஶப்தத்தாலே த்யாகத்தின் மிகுதியைச் சொல்லுகிறது. இப்பரிஶப்தம் (பரி ஸாகல்யே) என்று ஸகலத்தையும் விடச்சொல்லுகிறதானாலோ வென்னில், அது ஸர்வஶப்தத்தில் உக்தமாகையாலே, இவ்விடத்தில் வேறே அர்த்தமாகவேணும். அதாவது, ஸவாஸநத்யாகத்தைச் சொல்லுகிறது. ஸவாஸநமாகவிடுகையாவது, 'ஶுக்திகையிலே ரஜதப்ரமம்போலே அநுபாயங்களிலே உபாய புத்திபண்ணினோமாகாதே' என்று கொண்டு லஜ்ஜாபுரஸ்ஸரமாக விடுகை. இப்படி விடுகைக்கு ஹேது, ஸ்வரூபத்தினுடைய பகவத்பாரதந்த்ர்யாநுஸந்தாநத்தாலே, ஸ்வரக்ஷணத்தில் தனக்குப் பிறந்த அநந்வயம். ஸ்வரூபத்தில், தன்னோடும் பிறரோடும் ப்ராப்தியுண்டாமன்றாய்த்து, தானும் பிறரும் ரக்ஷகராகைக்கு ப்ராப்தியுள்ளது. இனி, ஸ்வரக்ஷணத்தி விழிகையாவது, தாய் முலைப்பாலுக்குக்கூலி கேட்குமாபோலே, தன்னுடைய ஶேஷத்வத்தையு மழித்து அவனுடைய ஶேஷித்வத்தையுமழிக்கை. உபாயங்களை விடுகையாகிறது, இவை நமக்குபாயமன்றென்கிற நைராஶ்யம். நைராஶ்யத்துக்கு ஹேது, அஶக்தியும், அப்ராப்தியும்.

(த்யஜ்ய) என்கிற ல்யப்பாலே, (ஸ்நாத்வா புஞ்ஜீத) என்கிறபடியே, உபாய ஸ்வீகாரத்துக்கு உபாயாந்தரத்யாகத்தினுடைய அங்கத்வஞ் சொல்லுகிறது. யாகத்திலிழியு மவனுக்கு தத்வ்யதிரிக்த ஸர்வதர்மத்யாக மங்கமாகிறுப்போலே யிதுவுமாத்ம யாகமாகையாலே தத்வ்யதிரிக்த ஸர்வதர்மத்யாகமங்கமாகக்கடவதென்று முன்பே சொல்லிற்று. இத்தால் ஶாஸ்த்ரவையர்த்யமும் பரிஹரிக்கப்பட்டது.

விட்டே பற்றவேணுமாகில் ஸர்வாதிகாரத்வபங்கம் வாராதோ வென்னில், அஶக்தனுமாய் அயோக்யனுமானவன் ஸ்வரூபஜ்ஞாந வைஶத்யத்தாலே விட்டுப் பற்றக்கடவன். அல்லாதவர்களும் உக்த லக்ஷணத்தாலே அஶக்தராயிருக்குமத்தனை போக்கி ஸர்வத்திலு மஶக்தராயிருப்பாரொருத்தருமில்லையே. அவர்களும் விக்நவிலம்பாஸஹ யமுடையராகில், யதாயோக்யம் விட்டுப் பற்றக்கடவர்கள். ஆகையாலே ஸர்வாதிகாரபங்கம் வாராது. இப்படி கொள்ளாதே ஸர்வோபாயஶூந்யனுக்கிது உபாயமென்னும் பக்ஷத்தில், ஸர்வோபாய ஶூந்யராயிருப்பா ரொருத்தருமில்லை யாகையாலே, அந்தபக்ஷத்துக்கு மிந்த தூஷணம் வரும். ஆகையாலே, த்யாகம் அங்கமென்கிறவிது, உபபந்நம்.

ஆக இத்தால் த்யாகப்ரகாரஞ் சொல்லிற்று.

இவ்விடத்திலே பிள்ளையருளிச்செய்து போருவது ஒருவார்த்தையுண்டு. அதாவது, "பதர்க்கூட்டை விட்டுப் பர்வதத்தை அண்டைகொள்வாரைப்போலே பற்று என்கிறான்" என்று. அது எங்ஙனேயென்னில், அவை ஸாத்யங்க ளாகையாலும், பலவாகையாலும். அசேதநங்க

ளாகையாலும், பதர்க் கூட்டிறே. இவன் ஸித்யஸ்வரூபனுகையாலும், ஒருவனுகையாலும் பரமசேதநனுகையாலும் பர்வதம்.

(ங) அநந்தரம், பற்றும் விஷயத்தையும், பற்றும் ப்ரகாரத்தையுஞ் சொல்லுகிறது. (மாம்) என்று, ஸ்வீகார்யமான உபாயத்தைச் சொல்லுகிறது. உபாயமாவது, இஷ்டப்ராப்த்யநிஷ்டநிவ்ருத்தி ஸாதநமாயிருக்கையாலே, இஷ்டப்ராப்த்யநிஷ்டநிவ்ருத்த்யுபயோகியான பரத்வ ஸௌலப்யங்கள், (மாம்) என்கிறபதத்திலே விவக்ஷிதம்.

எங்ஙனேயென்னில், (ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:, நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்) என்கிறபடியே, (மாம்) என்கிறவன் ஸ்ரீமானுமாய் நாராயணனுமா யிருக்கையாலே.

ஸ்ரிய:பதித்வ நாராயணத்வங்கள் பரத்வஸௌலப்யஹேதுவாகிறபடி யெங்ஙனே என்னில், ஸ்ரீயாகிறாள்,—ஸர்வருடையவும் ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்தி ஸித்த்யர்த்தமாக ஆஸ்ரயணீயையா யிருக்கையாலே. "இவளுக்குப் பதி" என்கையாலே, பரத்வம் சொல்லிற்று. (ஸ்ரத்தயா தேவோ தேவத்வமஸ்நுதே), (அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா) (திருவுடையடிகள்)(திருமகளார் தனிக்கேள்வன் பெருமையுடையபிரான்) என்னக்கடவதிறே. ஸ்ரீயாகிறாள் ஜகந்மாதாவாயிருக்கையாலே. "இவளுக்குப் பதி" என்கையாலே ஸௌலப்யஞ் சொல்லிற்று. (மாதவோ பக்தவத்ஸல:) (கோலமலர்ப்பாவைக்கன்பாகிய வென்னன்பேயோ) என்றும் நாராயணஸப்தத்துக்கர்த்தம் ஜகத்காரணத்வமும் ஜகதந்தராத்மத்வமு மாகையாலே, ஜகத்காரணத்வப்ரயுக்தமான பரத்வமும், ஜகதந்தராத்மத்வ ப்ரயுக்தமான ஸௌலப்யமும் சொல்லப்பட்டது.

ஆக, (மாம்) என்று, "ஸ்ரீமானுமாய் நாராயணனுமாயிருந்த வென்னை" என்றபடி. இத்தாலநுஷ்டாந வாக்யத்தில் ஸ்ரீமச்சப்தத்தையும் நாராயண ஸப்தத்தையும் ஸ்மரிப்பிக்கிறது. இதுக்கு ஹேது வித்யநுஷ்டாநங்களிரண்டும் ஏகார்த்தமாக வேண்டுகையாலே. ஆக, இத்தால் ஸ்ரீமந்நாராயணனே ஸரண்யனென்றதாய்த்து. நாராயணஸப்தந்தானே அவனைப் பரிபூர்ணனுகக் காட்டச்செய்தே ஸ்ரீமச்சப்தத்தாலே விஸேஷித்தது, இவர்கள் அஞ்சாதே சென்று ஆஸ்ரயிக்க வல்லராகைக்கும், அவனிவர்களைத் தன்பேறாக ரக்ஷிக்கைக்கும் உறுப்பாகச் சொல்லுகிறது. ஆனால் ஸ்ரீமச்சப்தந்தானே, அவனைப் பரிபூர்ணனுகக் காட்டச்செய்தே, நாராயணஸப்தத்தாலே விஸேஷிக்கிறது, பிராட்டியை விடிலும் நிலமங்கை கைவிடிலும் கைவிடாதஸ்வபாவனென்னுமிடமும், அந்யநிரபேக்ஷமாக ஸரணாகதபரிபாலநம் பண்ணவல்லனென்னுமிடமுஞ் சொல்லுகிறது. ஆகையால் இவ்விஸிஷ்டவேஷத்திலாஸ்ரயித்தாலாய்த்து

ஃபலவிரோதியியுள்ளது. பிரிவிலாஶ்ரயிக்கையாவது, தேவதாந்தர ஸமாஶ்ரயண துல்யமாம்.

"அன்று உன்முவங்காணில் முடிவேன்" என்கையாலே முவந்தோன்றாமல் நடத்தினேன்; இன்று, "உன் முவங்காணுவிடில் முடிவேன்" என்கையாலே "முவம் தோற்றநின்று நடத்தினேன்" என்று, தன் வ்யாபாராதிகளைக் காட்டுகிறான். அதாகிறது, "என்கையில் மடல் உன்கையிலே வரும்படியாகவும், என் தலையில் முடி உன் தலையிலே வரும்படியாகவும் வேணுமென்றாசைப்பட்டு, உன்காலென்தலையிலே படும்படி தாழநின்றேன்" என்று தன்ஸௌலப்யத்தைக் காட்டுகிறான் (மாம்) என்று. "நீ ஶப்தாதிவிஷயங்களிலே மண்டித்திரிகையாலே யுன்னுடம்பில் புகரைப்பாராய், உன்னை விநியோகங்கொள்ளப் பெறுமையாலே உடம்பு வெளுத்திருக்கிற வென்னைப்பாராய்" என்று தன் வ்யாமோஹகுணத்தை சட்டையவிழ்த்துவிட்டுக் காட்டுகிறான் என்றதாய்த்து.

இவ்விடத்தில், ஶரண்யஶரண்யதைக்கு உபயுக்தமாகப்பத்துகுணங்கள நுஸந்தேயங்கள். (மாம்) என்கிறவஸ்து ஸமஸ்தகல்யாணகுணாத்மகமாயிருந்ததே யாகிலும் உபாஸிக்குமிடத்து விதியைகள் தோறுஞ் சிலகுணவிஶேஷங்களு பாஸ்யமாக குணயோகத்தில் நிஷ்கர்ஷித்தாப் போலே, ப்ரபத்திவித்துக்களான நம்மாசார்யர்கள் ஶரண்யத்வத்துக்குபயுக்தமாகப் பத்துகுணங்களை யநுஸந்தித்துப்போருவர்கள். அவையாவன, ஸர்வஜ்ஞத்வ (௧) ஸர்வஶக்தித்வ (௨) பரமகாருணிகத்வ (௩) பரமோதாரத்வ (௪) ஆஶ்ரிதவத்ஸலத்வ (௫) அஶரண்யஶரண்யத்வ (௬) அநாலோசிதவிஶேஷாஶேஷலோகஶரண்யத்வ (௭) ஸர்வஸ்வாமித்வ (௮) ஶ்ரிய꞉பதித்வ (௯) நாராயணத்வங்கள் (௰). இத்தால் "உன்னிலும் உன் கார்யம் அறிவேனுமாய், உன்னிலும் உன்காரியஞ் செய்யக்ஷமனுமாய், உன்னிலும் உன்காரியத்துக் குகப்பேனுமாய், உன் கார்யம் செய்யுமிடத்தில் என்கார்யமாகச் செய்வேனுமாய், உன் குற்றம் காணாதிருப்பேனுமாய், உன் குற்றம் போக்யமாக விருப்பேனுமாய், உனக்குப்பற்றில்லாதபோதும் பற்றாயிருப்பேனுமாய், உன் பேறு என்பேறா யிருப்பேனுமாய், உன்னிலு முன்கார்யஞ் செய்கைக்கு ப்ராப்தனுமாய், உனக்கு மெனக்கும் தாரகையாயிருந்துள்ள ஸர்வேஶ்வரிக்காக வுன்கார்யஞ் செய்வேனுமாய், நீரிலே நெருப்பெழுந்தாப்போலே இவளே குற்றங்காட்டினாலும் விடவொண்ணாத ஸம்பந்தத்தை யுடையேனுமா யிருக்கிற வென்னை" என்றபடி.

அஹம். (மாம்) என்கிறவிடத்திலே ஆஶ்ரயணத்துக்கேகாந்தமான சிலகுணங்களையும், அஹமென்கிறவிடத்திலே ஃபலப்ரதாநத்துக்கேகாந்தமான சிலகுணங்களையும் அநுஸந்தித்துப் போருவாருமுண்டு. ஆஶ்ரயணத்துக்கேகாந்தமான குணங்களாவன—வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌஶீல்யமும், ஸௌலப்யமும்.

(க) [வாத்ஸல்ய]மாவது, அசிரஜாதமான வத்ஸத்தின்பக்கல் பஶுவுக்குண்டான காமம்; அதாவது, சுவடுபட்ட தரையிலே புல்தின்னாத பஶு அன்றீன்ற கன்றின் தோஷத்தை தோஷமென்று கருதாதே தனக்கு போக்யமாகக் கொள்ளுமாபோலே ஆஶ்ரிதருடைய தோஷத்தைத் தன்பேறாகப்போக்கி, தன் கல்யாணகுணங்களாலே தரிப்பிக்கை.

(உ) [ஸ்வாமித்வ]மாவது, இழவுபேறு, தன்னதாம்படியான குடற்றுடக்கு.

(௩.) [ஸௌஶீல்ய]மாவது (அவாக்யநாதர:) என்கிறபடியே நிரவதிகவைபவத்தையுடைய தன்னைத் தாழவிட்டு ஒரு நீராகக் கலக்கை.

(௪) [ஸௌலப்ய]மாவது, அதீந்த்ரியமானவடிவை இந்த்ரியகோசரமாக்கிக்கொண்டு ஸுலபனாகை.

இவை யாஶ்ரயணத்துக்குபயுக்தமாகிறபடி எங்ஙனேயென்னில், தன் தோஷம் கண்டிறாயாமைக்கு வத்ஸலனாகவேணும்; நம்மைரக்ஷிக்குமோ ரக்ஷியானோவென்கிற அச்சங்கெடுகைக்கு ஸ்வாமியாகவேணும்; தன் சிறுமை கண்டு பிற்காலியாமைக்கு ஸுஶீலனாகவேணும்; தூரஸ்தனாயிருக்குமென்றஞ்சாமைக்கு ஸுலபனாகவேணும்.

இந்நாலுகுணமும் ஆஶ்ரயணோபயோகியென்னுமிடத்தை, நம்மாழ்வார் ஶரணம் புகுகிறவிடத்தில்(நிகரில் புகழாய் உலகம் மூன்றுடையாய் என்னை யாள்வானே, நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே) என்றருளிச்செய்தருளினார். (மாம்) என்கிற நிலைதன்னிலே இவை யெல்லாமுண்டு; எல்லாருடையவும் கண்ணுக்கிலக்காய்ப் பாண்டவர்களுக்கு ஸுலபனாய் நிற்கிற ஸௌலப்யமும், இவர்களில் அந்யதமனென்னலாம்படி ஸஜாதீயனாய்க் கொண்டு நிற்கிற ஸௌஶீல்யமும், (விஸ்ருஜ்ய ஸஶரஞ்சாபம்) என்று கையில் வில்லைப்புகட்டு யுத்தாதுபரதனாய் குதிரைக்குட்டியான வர்ஜுநனை யுத்தத்திலே மூட்டினபின்பு அவனுடைய இழவு பேறு தன்னதாம்படியான ஸ்வாமித்வமும், (மமப்ராணாஹி பாண்டவா:) என்று அவர்களை யொழியத் தனக்குச் செல்லாதபடியான வாத்ஸல்யமும், தோற்றநின்று வ்யாபரிக்கையாலே.

பலப்ரதாநத்துக்குபயுக்தமான குணங்களாவன — ஸர்வஜ்ஞத்வ, ஸர்வஶக்தித்வ, அவாப்தஸமஸ்தகாமத்வ, நிருபாதிகஶேஷித்வ, பரமதயாளுத்வங்கள்.

இவை பலப்ரதாநத்துக்கு பயுக்தமாகிறபடி எங்ஙனேயென்னில், ஸர்வஜ்ஞத்வமாகிறது ஶரணாகதனுடைய இஷ்டாநிஷ்டங்களை யறியவல்லனாகை; ஸர்வஶக்தித்வமாவது, நித்யஸம்ஸாரிகளை நித்யஸூரிகளோடே ஒருகோவையாக்க வல்லவனாகை; இது செய்யுமிடத்தில் ப்ரயோஜநநிரபேக்ஷமாகச் செய்யும்போது, அவாப்த ஸமஸ்தகாமனாகவேணும்.

தன்பேறாகச்செய்யும் போதைக்கு நிருபாதிகஶேஷியாகவேணும். இக்குணங்களெல்லாம் சுவர்த்தலையில் பூனைபோலே ஸம்ஸரிப்பிக்கைக் குறுப்பாயிருக்கையாலே, இக் குணங்களிவனுடைய உஜ்ஜீவநத்துக் குறுப்பாம்போது பரமதயாளுவாகவேணும். ஆகையாலே க்ருபாஸஹக்ருதமான ஜ்ஞாநஶக்த்யாதிகளிவனுக்குஜ் ஜீவநமென்றதாய்த்து. (விதிவாய்க்கின்று காப்பாரார்,) (சேமஞ்செங்கோனருளே,) (ஆழியானருளே,) (துணியேனினி நின்னருளல்லதெனக்கு) (க்ருபயா கேவலமாத்மஸாத்குரு) (கேவலம் மதீயயைவ தயயா) என்றாழ்வார்களோடு ஆசார்யர்களோடு வாசியற க்ருபா குணத்தினுடைய ப்ராதாந்யம் அருளிச்செய்யப்பட்டதிறே. க்ருபாஸஹக்ருதஜ்ஞாநஶக்த்யாதி குணங்கள் ஶரண்யதைக் குபயுக்தமென்னுமிடத்தை (ஶக்தேஸ்ஸூபஸதத்வாச்ச க்ருபாயோகாச்ச ஶாஶ்வதாத்। ஈஶிதவ்யஸம்பந்தா தநிதம் ப்ரதமாதபி ரக்ஷிஷ்யத்யநுகூலாந்ந: இதியா ஸுத்ருடா மதி:। ஸவிஶ்வாஸோ பவேச்சக்ர ஸர்வதுஷ்க்ருதநாஶந:) என்று பகவச்சாஸ்த்ரத்திலே சொல்லிற்று. (ஏவமவஸ்திதஸ்யாப்யர்த்தித்வமாத்ரேண பரமகாருணிகோ பகவாந் ஸ்வாநுபவப்ரீத்யோபநீதைகாந்திகாத்யந்திக நித்யகைங்கர்யைகரதிரூப நித்யதாஸ்யம்தாஸ்ய தீதி விஶ்வாஸபூர்வகம் பகவந்தம் நித்யகிங்கரதாம் ப்ரார்த்தயே) என்று எம்பெருமானாரருளிச்செய்தருளினார். (பாபீயஸோபி ஶரணாகதிஶப்தபாஜோ நோபேக்ஷணம் மம தவோசித மீஶ்வரஸ்ய। த்வஜ்ஜ்ஞாநஶக்தி கருணாஸு ஸதீஷு நேஹ பாபம் பராக்ரமிது மர்ஹதி மாமகீநம்) என்றாழ்வானுமருளிச்செய்தருளினான். கீழுக்தமான குணங்களெல்லாம் ஶரண்யத்வோப யுக்தங்களா யிருக்கும். (மாம்-அஹம்) என்கிறபதங்களில் பிரித்தநுஸந்திக்கைக்கு ஹேது, (மாம்) என்கிறபதத்திற் சொல்லுகிற குணங்கள் (வ்ரஜ) என்கிறவிடத்திலதிகாரிக்ருத்யமான விஶ்வாஸ ஜநகமாத்ரமாயிருக்கையாலேயும், அஹமென்கிற விடத்திற் சொல்லுகிற குணங்கள் விஶ்வாஸ ஜநகங்களாயிருக்கச் செய்தேயும் உபாயக்ருத்யமான பாபவிமோசநத்துக்குப் பரிகரமா யிருக்கையாலே பாபவிமோசகனைச் சொல்லுகிற அஹம்ஶப்தத்திலே அநுஸந்திக்க வேண்டுகையாலேயும். கீழுக்தமான குணங்களெல்லாத்தாலும் (வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்றார்வுற்ற வென்னை யொழியவென்னில் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப்பருகினான்) என்கிறபடியே ஒரு சேதநனைப் பெற்றாகில் ஜீவித்தல் இல்லையாகில் நாவிலும் பல்லிலும் நீரற்றுக்கிடக்கும்படியான வவனுடைய வ்யாமோஹ குணமேயிவனுக்கு தாரகம். (உய்வுபாயம்மற்றின்மைதேறி) என்றருளிச்செய்தருளினாரிறே ஆழ்வார்.

நாட்டில் ஶரண்யரைக்காட்டி லிவனுக்கு விஶேஷம், நிருபாதிகஸம்பந்தமும், நிருபாதிகரக்ஷகத்வமும். இந்த குணவிஶேஷம் இவ்விடத்திலே, த்வயத்திலே சரணஶப்தத்தாலே சொல்லப்பட்ட விக்ர

ஹத்தையுஞ் சொல்லுகிறது. அதாவது, ஸௌநாய-ஸீமயஸரிதமான திருக்குழலும், கையுமுழவுகோலும், பிடித்தசிறுவாய்க் கயிறும், தேருக்குக்கீழே நாற்றின திருவடிகளும், திருச்சதங்கையுமாய்க் கொண்டிருக்கு மிருப்பு.

இத்தால் ஶரண்யவஸ்து, ஸர்வரக்ஷகமுமாய், ஸமஸ்தகல்யாண குணாத்மகமுமாய், ஸவிக்ரஹமுமாயிருக்கு மென்றதாய்த்து. "ஸ்ரீமந்நாராயணசரணௌ" என்றிறே ஶரணாகதிமந்த்ரம். (அலர்மேல் மங்கையுறைமார்பா) என்று தொடங்கி (அடிக்கீழமர்ந்து புகுந்தேனே) என்றிறே அபியுக்தர்வார்த்தையும்.

இத்தால் ஸத்வாரகமாக வவனே ஹஜிக்குமுபாயாந்தரங்களில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. உபாயாந்தரங்களிற் காட்டிலிவ்வுபாயத்துக்கைகாந்த்ய முண்டென்னு மிடத்தை த்யோதிப்பிக்கிறது. இத்தாலிவ்வுபாயம் ஸ்வரூபத்துக் கநுரூபமாகக்கடவது.

(ச) (ஏகம்) இந்த ஏக ஶப்தத்தை ஶரணஶப்தத்துக்கு விஶேஷணமாக்கி அத்விதீயமான உபாயமென்றபடியாய், அதாகிறது, ஸமாதியயிகதரிதர மென்று நம்மாசார்யர்களிலே சிலர் நிர்வஹிப்பர்கள்.

நஞ்ஜீயரிதுக்கு "அவயாரணத்தைச் சொல்லுகிறது" என்று அருளிச்செய்வர். எங்ஙனே யென்னில், (த்வமேவோபாய பூதோமேபவ) என்றும், (தமேவஶரணங்கச்ச) என்றும் (மாமேவ யே ப்ரபத்யந்தே) என்றும் (தமேவசாத்யம் புருஷம் ப்ரபத்யே) என்றும் ஸ்யாநப்ரமாண ஸித்தமாகையாலே.

ஆனாலிவ்வவயாரணத்துக்கு வ்யாவர்த்யமாவதேதென்றால், கீழே உபாயாந்தரங்களை த்யாஜ்யங்களாகச் சொல்லுகையாலே, அவற்றை வ்யாவர்த்திக்கிற தென்ன வொண்ணாது [மாமெ]ன்று அஸாயாரணாகாரத்தைக் கீழே சொல்லுகையாலே, தேவதாந்தரம் வ்யாவர்த்ய மென்ன வொண்ணாது.

பின்னை எதாவதென்றால், இனியிங்குள்ளது ஸ்வீகார்யமும் ஸ்வீகாரமும் ஸ்வீகர்த்தாவுமாகவேணுமிறே. அதில், ஸ்வீகார்யனுபாயமாய் நின்றால், இனியுள்ளது ஸ்வீகாரமும் ஸ்வீகர்த்தாவுமிறே. அந்த ஸ்வீகர்த்தா வோபாதி ஸ்வீகாரமும், உபாயத்தில் புகாதென்கிறது. ஆவதென், (உபாயோபேயத்வே ததிஹ தவதத்த்வங் நதுகுணௌ) என்கிறபடியே உபாயத்வம் நித்யமேயாகிலும், இவனுடைய ஸ்வீகாராநந்தரமாகவன்றோ உபாயமாகிறது; (யதநந்தரம் யத்பவதி தத்தஸ்ய காரணம்) என்கிறபடியே, இந்த ஸ்வீகாரா நந்தரமாகவல்லது ஈஶ்வரனுடைய உபாயபாவம் ஸித்தியாமையாலே, இது உபாயமாதல் ஸஹகாரியாயாதலாக வேண்டாவோ வென்னில், (மாமேகம் ஶரணம் வ்ரஜ) என்று உபாயஸ்வீகாரமாகச் சொல்லுகையாலே ஸாக்ஷாதுபாயத்வமிதுக்கில்லை.

இனி ஸஹகரிக்கையாவது, உத்பத்தியிலே ஸஹகரித்தல், ஃபலப்ரதாநத்திலே ஸஹகரித்தல் ஆய்த்து. ஸித்த்யுபாயம் கர்மஜ்ஞாந ஸாத்யமாகையாலே, உத்பத்தியிலே சேதந ஸாபேக்ஷம்; அசேதந மாகையாலே, ஃபலப்ரதாநத்தில் ஈஶ்வரஸாபேக்ஷம்; இவ்வுபாயம் ஸித்தவஸ்துவுமாய் நிருபாதிக ஸர்வஸுஹ்ருத்து மாயிருக்கையாலே உத்பத்தி நிரபேக்ஷம். ஸர்வஜ்ஞத்வாதி கு³ணவிஶிஷ்டமாகையாலே ஃபலப்ரதாநத்தில் நிரபேக்ஷம்.

ஆனல், (யதீ³யத்ஸாங்க³ம் தத்தத் ஸாத⁴நம்) என்கிறபடியே உபாயம் ஸாங்க³மாயன்றோ யிருக்கவேணும். இவ்வுபாயம் ஸித்³த⁴மாயிருக்கிற படியென்னென்னில், உபாயமாகில் ஸாங்க³மா யிருக்கவேணு மென்கிற நிர்ப³ந்த⁴மில்லை. அவை ஸாத்⁴யமுமாய் அந்யஸாபேக்ஷமுமா யிருக்கையாலே, ஸாங்க³மாக வேண்டித்தித்தனை. இவ்வுபாயம் ஸித்³த⁴முமாய் அந்யநிரபேக்ஷமுமா யிருக்கையாலே, நிரங்க³மா யிருக்கும்.

ஆனல், உபாயாந்தரங்களுக்கு முபாயத்வவ்யபதே³ஶம் பண்ணுகிறது, ஃபலப்ரதை³களான தே³வதைகளுக்கு ப்ரஸாத³கங்களான முகத்தாலேயன்றோ, அவ்வோபாதி இவ்வுபாயமுமீஶ்வரப்ரஸாத³கமானலோவென்னில், தே³வதைகளில் சேதநர்க்கு பூர்வமே ஃபலத்தைக் கொடுப்பதாக நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே, இச்சேதநருடைய க்ரியையாய்த்து, அவர்கள் ப்ரஸாத³த்தை ஜநிப்பிக்கிறது.

ஈஶ்வரவிஷயத்தில் வந்தால், ஸர்வாத்மாக்களுக்கும் ஸ்வரூபாவிர்பா⁴வத்தை யுண்டாக்குவதாக பூர்வமேவ சிந்தித்து அவஸரப்ரதீக்ஷனாய்ப் போருகையாலே, அவனுக்கு ப்ரஸாத³ஜநகமாகச் செய்யவேண்டுவதொன்றில்லை. உண்டென்றிருக்கையாகிறது தன்ஸ்வரூப பாரதந்த்ர்யத்தையுமழித்து அவனுடைய ரக்ஷகத்வத்தையும் ஸோபாதி⁴கமாக்குகிறனித்தனை.

ஆனல் மோக்ஷத்துக்குத் தன்னை யொழிய உபாயாந்தரங்களை விதி⁴ப்பானென்னென்னில், இதை யிவர்களுக்கு ஹிதமாய் விதி⁴க்கிறனல்லன், அர்த்²திவர்க³த்தின் † பெருமையாலே, கோயிலங்காடியிலே யெல்லாச்சரக்கும் பாரித்து வைக்கிறப்போலே, (த்ரைகு³ண்யவிஷயா வேதா³ நிஸ்த்ரைகு³ண்யோ ப⁴வார்ஜுந) (முத்திரத்துவாணியத்திரண்டிலொன்று நீசர்கள் மத்தராய் மயங்குகின்ற திட்டதி லிறந்துபோந்து) என்கிறபடியே சேதநருடைய ருச்யநுகு³ணமாகத்தன் செல்லாமையாலே விதி⁴க்கிறனித்தனை.

புருஷோத்தமவித்³யையில், புருஷோத்தமத்வ வேத³நத்தாலல்லது வழியில்லை யென்கிற விதுவும் அவனிட்டவழக்கு. 'ஶரணம்' என்கிற

† இவ்விடத்தில் - பெருமை என்கிறது - ப³ஹுத்வத்திலேயாகக்கடவது. 'அபவர்க³த்தின் பெருமை' என்றும் பாடாந்தரங் காண்கிறது.

விதுவும் அந்த மத்யமாதிகாரிகளுக்கு. ருச்யநுகுணமான ஸாதநங்களில் இதல்லதுபோக்கி, அவ்யவஹிதஸாதநமொன்றில்லை யென்று அல்லாத உபாயங்களிற் காட்டிலிவ்வுபாயத்தினுடைய வேற்றமும் அல்லாத வதிகாரிகளில் காட்டில் இவ்வதிகாரியினுடைய வேற்றமும் சொல்லுகிறதித்தனை.

(மாம் நயேத்யதி காகுத்ஸ்தஸ்தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத்) என்றும் (முன்னின்றாய் என்று தோழிமார்களுமன்னையரும்) என்றும் (நிறைந்தவன்பழி நங்குடிக்கிவள்) என்றும் (இருநிலத்தோர்பழிபடைத்தேன்) என்றும், (சோம்பரையுகத்தி) என்றும் சொல்லுகிறபடியே பதிவ்ரதைக்கு பதியையொழிய தன்பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்கு பாதகமாக ஸ்வயத்நத்தாலே அர்த்தமார்ஜித்து ஸ்வதேஹபோஷணம் பண்ணுமாகில் அது தன் ஸ்வரூபத்துக்குச் சேராதே, தன்னளவிலும் பர்யவஸியாதே, தன்பர்த்தாவுக்கு மவத்யாவஹமாயிருக்கும். தானொன்றுஞ் செய்யாதே, அவன் ரக்ஷிக்கக் கண்டிருக்குமாகில், அது இருவர் ஸ்வரூபத்துக்கும் நன்னிறமுண்டாக்கக்கடவது. அப்படியே, தன்ஸ்வரூபத்தை யுணர்ந்து தன் ஸ்வரூபாநுகுணமாக அவனையே ப்ராப்யமும் ப்ராபகமுமாக நினைத்திருக்குமதிகாரிகளோடு அவர்களை ஸமராய்ச் சொல்லுகிறதல்ல, (ஸத்கர்மநிரதாஶ் ஶுத்தா ஸ்ஸாங்க்யயோகவிதஸ்ததா। நார்ஹந்தி ஶரணஸ்தஸ்ய கலாம்கோடிதமீமபி) (விஷ்ணூபாயோ யோऽந்யபலஸ்ஸோऽதமம்பரிகீர்த்திதஃ। அந்யோபாயோ விஷ்ணுபலோ மத்யமஃ பரிகீர்த்திதஃ। மாதவாங்க்ரித்வயோபாயோ மாதவாங்க்ரிப்ரயோஜநஃ। யஸ்ஸ ஏவோத்தமஃ ப்ரோக்தோ மாதவேநைவ தேநவை) என்னக் கடவதிறே.

ஆனால் அவஶ்யகர்த்தவ்யமான உபாயஸ்வீகாரத்துக்கு வேஷமேதென்னில், அசித்வ்யாவ்ருத்தி லக்ஷணமுமாய், ப்ரதிபந்தக நிவர்த்தகமுமாய், ஸ்வஸித்தஸமாதாநமுமாய் கிடக்கிறது. (பகவத்ப்ரவ்ருத்தி விரோதிஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்திஃ ப்ரபத்திஃ) என்று ஸோமாசியாண்டானருளிச்செய்வர்.

இவ்வுபாயந்தான், ஓராகாரத்தாலே ஸாபேக்ஷமுமாய் ஓராகாரத்தாலே நிரபேக்ஷமுமாயிருக்கும். எங்ஙனே என்னில், ஆஶ்ரயணகாலத்தி லதிகாரிஸாபேக்ஷமுமாய், பலப்ரதாநத்திலிதரநிரபேக்ஷமுமாயிருக்கும்,

ஆக வெம்பெருமான் நிருபாதிகரக்ஷகனாகையாலும், ரக்ஷணபலம் தன்னதாகையாலும், (ஆள்பார்த்துழிதருவாய்) என்கிறபடியே பூர்வமேவ ஸ்ருஷ்ட்யவதாரங்களைப் பண்ணி சேதநருடையவிச்சைக்கு அவஸரப்ரதீக்ஷனாய்ப் போருகிறவனாகையாலும் அவனுடைய நிர்ஹேதுகமான க்ருபாப்ரஸாதங்களே உபாயம் என்றதாய்த்து.

(க்ருபயா கேவல மாத்மஸாத்குரு) (கேவலம் மதீயயைவ தயயா நிஸ்ஸேஷவிநஷ்டஸஹேதுக) (கேவலம் மதீயயைவ தயயாऽतिப்ர பாத்யஸே) என்று ஆளவந்தாரு மெம்பெருமானாரும் ஸ்தோத்ரகத்ய ங்களிலே யிவ்வர்த்தத்தை யருளிச்செய்தருளினார்கள்.

"வ்ருதியஸேவைக்கு ஃபலம் அவதாரணார்த்தமறிகை" என்று பிள் ளையருளிச்செய்தருளுவர். இத்தாலும் இவ்வுபாயம் ஸ்வரூபத்துக் கநுரூபமாயிருக்குமென்றதாய்த்து.

(ரு) (ஶரணம்) என்றது (உபாயே க்ருஹரக்ஷித்ரோஸ் ஶப்தஸ் ஶரணமித்யயம்। வர்த்ததே ஸாம்ப்ரதஞ் சைஷ உபாயார்த்தைகவாசக:) என்கிறபடியே, ஶரணஶப்தம், உபாயவாசகமாய், அநிஷ்டநிவ் ருத்தி பூர்வகமான இஷ்டப்ராப்திக்கவ்யவஹிதோபாய மென்றபடி. இஶ்ஶரணஶப்தம் அவ்யவஹிதோபாய மென்னுமிடத்தைக் காட்டு கிறபடிதானெங்ஙனேயென்னில், கீழே ஸாதநாந்தரவ்யதிரிக்தஸாங்க ஸகல தர்மத்தையும் விடச்சொல்லுகையாலே.

(சு) (வ்ர-) "வ்ரஜஜநதௌ" என்கிறயாதுவிலே, கத்யர்த்தமாய் (கத்யர்த்தா புத்த்யர்த்தா:) என்கிறபடியே, "அத்யவஸி" என்றபடி. அத்யவஸாயமும் விஶ்வாஸமும் பர்யாயமாகையாலே விஶ்வாஸத் தைச் சொல்லுகிறது. ப்ரபத்திலக்ஷண வாக்யத்திலே (மஹாவிஶ் வாஸபூர்வகம்) என்று சொல்லுகையாலும், அநுஷ்டாந வாக்யத்தி லுமுபஸர்கத்தாலே மஹாவிஶ்வாஸத்தைச் சொல்லுகையாலும், இங்குமந்த விஶ்வாஸத்தையே விதித்ததாகக் கடவது.

மஹாவிஶ்வாஸமாவது:—ஶங்காத்ரய ரஹிதமான விஶ்வாஸம். ஶங்காத்ரயமாவது;— உபாயஃபல்காத்வமும், உத்தேஶ்யதுர்லப த்வமும், ஸ்வக்ருத தோஷதர்ஶநமும்.

இவை பரிஹ்ருதமாகிறதெத்தாலேயென்னில் [மாம்] என்கிற பதத்திற் சொல்லுகிற குண[ஸம்பந்த]ங்களாலே.

ஸர்வஜ்ஞனுமாய் ஸர்வஶக்தனுமாய் பரமகாருணிகனுமாய் பரமோதாரனுமாயிருக்குமென்கையாலே ஃபலகௌரவத்தால் வந்த ஶங்கைபரிஹ்ருதம்.

ஆஶ்ரிதவத்ஸலனென்கையாலே, ஸ்வக்ருத தோஷதர்ஶநமாகிற ஶங்கை பரிஹ்ருதம்.

அஶரண்யஶரண்யனுமாய் அநாலோசிதவிசேஷாஶேஷ லோக ஶரண்யனுமாயிருக்குமென்கையாலே, உபாயலாவவமாகிற ஶங்கை பரிஹ்ருதம்.

ஆக வித்தனையாலும், குணவத்தாய் த்யவஸாயஞ்சொல்லிற்று. இனிமேல் ஸ்வரூபாத்யவஸாயஞ் சொல்லுகிறது.

ஸர்வஸ்வாமியென்கையாலேஉபாயலாவவமாகிற ஶங்கை பரிஹ்ருதம்.

ஶ்ரீமானென்கையாலே ஸ்வக்ருத தோஷதர்ஶநமாகிற ஶங்கை பரிஹ்ருதம்

நாராயணனென்கையாலே ஃபலகௌரவமாகிறஶங்கை பரிஹ்ருதம்.

ஆகவித்தால் தன்னுடைய ஸ்வரூபகுணஸித்தியர்யமாகவே ஶரணாகதரக்ஷணம்பண்ணுமென்கிற மஹாவிஶ்வாஸம் ப்ரபத்தியென்றதாய்த்து.

இதுதான் ப்ரார்த்தநா கர்ஹமாயிருக்கும். (மஹாவிஶ்வாஸபூர்வகம்। தடேகோபாயதாயாச்ஞா ப்ர்பத்திஶ ஶரணாகதிஃ) என்றும். (த்வமேவோபாயபூதோமே பவேதி ப்ரார்த்தநாமதிஃ। ஶரணாகதிஃ) என்றும், லக்ஷணவாக்யங்களில் சொல்லுகையாலே, விஶேஷண ஶரணாகதியில் ப்ரார்த்தநமாவது அவனை உபாயத்வேந ஸ்வீகரிக்கை. அதாகிறது நமக்கு உபாயமிவனே யென்றிருக்கை.

ஆக கர்மமு மின்றியிலே, கர்மஸாத்யமான ஜ்ஞாநமுமின்றியிலே, ஜ்ஞாநஸாத்யமான பக்தியு மின்றியிலே, இவைத்தினுடைய த்யாகபூர்வகமுமாய், தானுபாயமுமன்றிக்கே உபேயமும் அன்றிக்கே அதிகாரிக்கு விஶேஷணமாயிருப்பதோ ரத்யவஸாயாத்மக ஜ்ஞாந விஶேஷ மென்றதாய்த்து. இனிவாசிக காயிகங்களுண்டாகவுமா மில்லையாகவுமாமென்கை.

இந்த விதியநுஷ்டாநத்துக்கு அவதியேதென்னில் (ஸக்ருதேவ ப்ரபந்நஸ்ய க்ருத்யந்நைவாந்யதிஷ்யதே) (ப்ரபத்திர் விஶ்வாஸஃ) ஸக்ருத்ப்ரார்த்தநாமாத்ரேணா பேக்ஷிதந் தாஸ்யதீதி விஶ்வாஸபூர்வகப் ரார்த்தநமிதி யாவத்) என்கையாலே, இந்த விதியநுஷ்டாந மாகிற உபாயஸ்வீகாரம் ஸக்ருத்தென்னுமிடம், ப்ரபத்திஶாஸ்த்ரங்களாலும் ப்ரபத்திவித்துக்களாலும் நிஷ்கர்ஷிக்கப்பட்டது.

இந்தவிதிவிஶேஷமான, [மாஶுசஃ] என்கிறவிதி யாவத் ப்ராப்தி அளவுமநுஷ்டேயம். அதாகிறது இனிநமக்கு கர்தவ்யாம்ஶங்களொன்றுமில்லை, ஃபலஸித்தியிலு மொருகுறையில்லை, என்று விமர்ஶதஶையில் பிறக்கும் விஶ்வாஸமாகையாலே, உபாயாநுஷ்டாநமும், அநுஷ்டிதோபாய பரிபாலநமும், கர்த்தவ்ய மென்றதாய்த்து.

(ஹ்ருதயஸ்த்வம் ஶ்ருணுஸங் க்ஷேபம் மநஸாயேதநஸூயயா। ஶ்ருத்வாச குரு யத்நேந ரக்ஷாசாப்யப்ரமாதிநீ) என்றும் சொல்லிற்றிறே.

ஆகையால் உபாயஸ்வீகாரம் ஸக்ருத்தென்னுமிடமும், ஸ்வீகார விஶேஷணமுமான விஶ்வாஸம் யாவத்ப்ராப்தியளவும் விமர்ஶதஶையிலு மநுவர்த்திக்க வேணுமென்னுமிடமுஞ் சொல்லிற்றாய்த்து.

ஸ்வர்கஸாதநமான ஜ்யோதிஷ்டோமம் ஸப்தாஹஸ்ஸிலே விஹித
மாயிருக்கச் செய்தே அந்த யாகாந்தர்பூதமான அக்நிஹோத்ரமாப்
ரயாணமஹர ஹரநுஷ்டேயமாகிறப்போலே இந்த அக்நிஹோத்ர மநு
ஷ்டியாதொழிந்தால் பலத்துக்கு விலம்பமுண்டாய் அநுஷ்டித்தால்
ப்ரதிபந்தகமின்றிக்கே விசேஷபலமுண்டாயிருக்குமாபோலே ஆவ்
ருத்திரூபமான விச்வாஸமும் நிஷ்டாவான்களுக்கு நிஷ்டாப்ரகாசகமு
மாய் காலக்ஷேபமாகிற பலத்தையுமுடைத்தாயிருக்கும். விச்வாஸத்
திநுடைய ஆவ்ருத்திகள் கிணற்றுக்குள்ளே இருந்து (ஜ்) ஜீவிப்பாரைப்
போலே யென்று பிள்ளை யருளிச் செய்தருளுவர்.

ஆக, ஸ்வீகாரத்துக்குபாயாந்தரத்யாக மங்கமென்னுமிடத்தை
யும், த்யாக பூர்வகமான ஸ்வீகாரமதிகாரிக்கு விசேஷமென்னுமிடத்
தையும், ஸ்வீக்ருதனான வதிகாரிக்கு குணவிசிஷ்டனான ஈச்வரனு
பாயமென்னு மிடத்தையுஞ் சொல்லித்தாய்த்து. ஆகையாலே, த்யாக
விசிஷ்டம் ஸ்வீகாரம், ஸ்வீகாரவிசிஷ்டம் அதிகாரம், குணவிசிஷ்
டம் உபாயம், என்றதாய்த்து.

(எ) ஆக, இதுக்குக்கீழே அதிகாரிக்கு கர்தவ்யஞ் சொல்லிற்று
இனி ஈச்வரனுக்குகர்தவ்யஞ் சொல்லுகிறது (அஹம் த்வேத்யாதி) [மோ
க்ஷயிஷ்யாமி] என்கிற உத்தமனுக்கும் "மாசுச:" என்கிற மத்யமனு
க்கும், ப்ரதிஸம்பந்திதயா (அஹம் த்வா) என்கிற சப்தங்கள் தன்ன
டையே வருவதாயிருக்க, வாசிகமாகச் சொல்லுகிற விதுக்கு ப்ரயோ
ஜநமென்னென்னில், சில வபிப்ராயத்தைப் பற்றச் சொல்லுகிறது.
இதுதான் (மாமேகம் சரணம் வ்ரஜ) என்கிற சரண்யாநுவாதமும், சர
ணாகதனுடைய வநுவாதமுமா யிருக்கிறது. அதாகிறது, "உனக்கு உபா
யபூதனான நான் என்னையே உபாயமாகப் பற்றியிருக்கிற வுன்னை"
என்றபடி.

தேஹாத்மாபிமாநி "அஹம்" என்றால், தேஹத்தைக்காட்டும். ப்ரக்
ருதிபுருஷவிவேகம்பண்ணினவன், "அஹம்" என்றால் ப்ரக்ருதே: பர
னாய் பரமசேஷபூதனான ஆத்மாவைக்காட்டும். ஈச்வரன் "அஹம்"
என்றால் உள்ளதெல்லாத்தையுங் காட்டுமிறே. இந்த (அஹம்) சப்தம்,
(மாம்) என்கிறத்தோடே சேர்ந்து அஹமாய்த்து. மாமென்கிறவிடம்
அதிகாரிக்ருத்யமான மஹாவிச்வாஸத்துக் குறுப்பாகச் சொல்லிற்று.
அஹமென்கிறவிடம் ஈச்வரக்ருத்யமான பாபவிமோசநத்துக் குறுப்
பாகச் சொல்லுகிறது. அதாகிறது, பந்தகனான நானே விமோசக
னானால், நிவாரகருண்டோவென்கை. அதாகிறது, ஸமாப்யதிகதரித்ர
னென்றபடி. இவ்விடத்திலே, விசேஷித்து, பலப்ரதாநத்துக் குபயுக்
தமான குணங்கள், அநுஸந்தேயங்கள்.

(அ) (த்வா) "கீழ்ச்சொன்னபடியே ஸகல யர்மங்களேயும் விட்டு என்னேயே நிரபேக்ஷஸாயநமாகப்பற்றின உன்னே" என்றபடி. இத்தால், மேல்சொல்லப்புகுகிற ஶோகவிமோசநஹேதுவைச் சொல்லிற்று.

(கூ) (அஹம் த்வா) வென்கிற விரண்டுபதத்தாலும், ஸ்வீகார்யமான உபாயவேஷத்தையும் ஸ்வீகர்தாவான வயிகாரிவேஷத்தையும் சொல்லி நின்றது. இனிமேல் ஸ்வீகார்யமான ஈஶ்வரக்ருத்யத்தையும், ஸ்வீக்ருதோபாய ஞனவயிகாரிக்ருத்யத்தையும் சொல்லுகிறது. [ஸர்வ பாபேஶ்யஃ] பாபமும் பஹுவசநமும் ஸர்வஶஷ்தமுமாய் இதுவும் த்ரிப்ரகாரமாயிருக்கும்.

பாபமாவது - அநிஷ்டமான ஃலத்தைத்தருவதுமாய் இஷ்ட ஃலத்துக்கு விரோயியுமா யிருப்பதொன்று. இங்குற்றைபாபமாகிறது, அநிஷ்டமான ஸாம்ஸாரிக துஃகத்தையுண்டாக்கக்கடவதாய், இஷ்டமானமோக்ஷத்துக்கு விரோயியுமா மிருப்பதொன்று.

பஹுவசநத்தாலே யவைத்தினுடைய பாஹுள்யத்தைச் சொல்லுகிறது. அதாகிறது, அவித்யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்பந்யங்கள்.

[அவித்யை] யாவது - அந்யயாஜ்ஞாநமும், விபரீதஜ்ஞாநமும் ஜ்ஞாநாநுதயமும்.

[கர்ம] மாவது புண்யபாபம். மோக்ஷத்தைப்பற்ற, பாபத்தோபாதி புண்யமுந்த்யாஜ்யம் (புண்யபாபே விதூய) என்னக்கடவதிறே.

[வாஸனே] யாவது - அஜ்ஞாநவாஸனேயும், கர்மவாஸனேயும், ப்ரக்ருதி ஸம்பந்ய வாஸனேயும்.

ருசியும் விஷயஹேதுத்தாலே பஹுவியையாயிருக்கும்.

[ப்ரக்ருதிஸம்பந்ய] மாவது-ஸ்யூலஸூக்ஷ்ம ரூபமாயிருந்துள்ள வசித்ஸம்பந்யம்.

இவ்வளவால், உபாஸகனுக்கும் ஸாயாரணமாக, ஈஶ்வரன் கழித்துக் கொடுக்குமாகாரத்தைச் சொல்லிற்று.

இனி, (ஸர்வ) ஶஷ்தத்தாலே ப்ரபந்நனுக்கு ஸாயாரணமாகக் கழித்துக்கொடுக்கு மவற்றைச் சொல்லுகிறது. அதாகிறது - (தது அதிகம உத்தர பூர்வாவயோரஶ்லேஷவிநாஶௌ தத்வ்யபதேஶாத்) (இதரஸ்யாப்யேவ மஸம்ஶ்லேஷஃபாதேது) என்று பூர்வோத்தராவங்களாகிற புண்யபாபங்களுக்கு அஶ்லேஷவிநாஶஞ் சொல்லி, (தேஹேந த்வி தரேக்ஷபயித்வாத ஸம்பத்யதே) என்று ப்ராரஷ்யமநுஹவ விநாஶ்ய மென்னுமிடஞ் சொல்லித்திறே. இங்கு அப்படி யிருப்பதொரு ஸங்கோசமில்லாமையாலே, அதுவும் ஶோகஹேதுவாமாகில் ஸர்வஶஷ்தத்தி

லே அந்தர்பூதமாகக் கடவது. எங்ஙனே என்னில், இதுக்கு ஸங்கோசகமா யிருப்பதொரு ஶப்தமிங்கில்லாமையாலே.

'ப்ரபத்தி - ப்ராரப்தகர்மத்துக்கு விநாஶநி' என்னுமிடத்துக்கு ப்ரமாணமென்னென்று எம்பெருமானாரை ஆண்டான்கேட்க, "மாஶுச:" என்றதிறே' என்றருளிச் செய்தருளினர்.

இதுதான் ப்ராரப்தத்தையும் போக்குமென்னு மிடத்துக்கு, கண்டோக்தமான ப்ரமாணங்களு முண்டு. (ஸாயநம் ஹரிவத் ப்ராப்தௌஸ ஏவேதி ஸ்திராமதி:। ஸாத்த்யபக்திஸ் ஸ்ம்ருதா ஸைவ ப்ரபத்திரிதிமீயதே। உபாயோ பக்திரேவதி தத்ப்ராப்தௌ யாது ஸாமதி:। உபாயபக்தி ரேதஸ்யா: பூர்வோக்தைவ கரீயஸீ। உபாயபக்தி: ப்ராரப்த வ்யதிரிக்தாவநாஶநீ। ஸாத்த்யபக்திஸ் து ஸா ஹந்த்ரீ ப்ராரப்தஸ்யாபி பூயஸீ) என்று. ப்ரபந்நனுக்கு ஶரீராந்த ஹேதுவான ப்ராரப்தஶேஷ மநுபவிக்க வேண்டுகிறது, ப்ராரப்த ஶரீரத்தில் ஶோகமில்லாமையாலே. (ஆரப்தகார்யாந்) என்று ப்ராரப்தமும் ப்ரபத்தியாலே க்ஷந்தவ்யம் என்று உடையவர் அருளிச்செய்தார்.

உபாஸகனுக்கு உத்தராவத்துக்குச் சொல்லுகிற அஶ்லேஷமும் ப்ராமாதிகவிஷயமென்று உடையவர் பாஷ்யத்திலே யருளிச் செய்தருளினர். இப்படி அருளிச்செய்கைக்கு ஹேது, (நாவிரதோ துஶ்சரிதாந் நாஶாந்தோ நாஸமாஹித:। நாஶாந்தமாநஸோவாபி ப்ரஜ்ஞாநேநைந மாப்நுயாத்) என்கிற வாக்யங்களோடு விரோதியாமைக்காகவும், (அபிசேத்பாத்கம் கிஞ்சித்யோகீ குர்யாத்ப்ரமாதத:। யோகமேவ நிஷேவேத நாந்யம் யத்நம் ஸமாசரேத்) என்று யோகிகளுக்கு ப்ராயஶ்சித்தத்தை விதிக்கையாலும்.

ப்ரபந்நனுக்கு உத்தராவத்தில், புத்திபூர்வமும் ஶோகஹேதுவாமாகில் அந்த புத்திபூர்வத்துக்கும் பரிஹாரமாகக்கடவது. அதாவது, ஶரீரஸம்பந்தத்தோடே யிருக்கையாலே வாஸனையாலும் ப்ரபலகர்மத்தாலும் காதாசித்கமாக புத்திபூர்வகம் ஸம்பாவிதம். இவற்றையும் பொருத்தருளவேணுமென்று பூர்வமேவ ப்ரார்த்தித்தானாகில் அவையும் பூர்வப்ரபத்திதன்னாலே க்ஷந்தவ்யமாகக் கடவதென்கை. ஆகையிறே, (வர்த்தமாநம் வர்த்திஷ்யமாணஞ்ச) என்று உடையவ ரருளிச்செய்தது.

புத்திபூர்வகமான உத்தராவத்தில் ஶோகித்து ஶரணம் புக்கானென்னுமிடம் அறியும்படியெங்ஙனேயென்னில், உத்தரப்ரவ்ருத்தியிலநுதாபம் நடக்கையும், பூர்வப்ரபத்தியை ஸ்மரித்து தீருபசித்தனைகையும்.

இன்னமும். ஶ்ரேஷ்டராயிருப்பார்க்கு ஶிஷ்யபுத்ரர்களைப் பற்ற விதிவ்யதிக்ரமம் பண்ணியநுஷ்டிக்கவேண்டிய வருவன சில பாபமுண்டு, அந்த பாபங்களையுஞ் சொல்லுகிறது.

ஆந்ருஸம்ஸ்யப்ரதாநரா யநுஷ்டித்தாலும் ஏறிட்டகட்டி ஆகாஸத்திலே நில்லாதாப்போலே, அவையுமொருபலத்தோடே ஸம்பந்திப்பிக்கக்கடவது. ஆகையாலே அவையும் பாபஸப்த வாச்யமாகக் கடவது

கலங்கி உபாய புத்தியாபண்ணும் ப்ரபத்தியும் பாபஸப்த வாச்யமாகக்கடவது.

(கO) ஆகக்கீழ், விரோதிவேஷஞ் சொல்லிநின்றது. (மோக்ஷயிஷ்யாமி) என்று விரோதிநிவ்ருத்தி ப்ரகாரஞ் சொல்லுகிறது.

[மோக்ஷயிஷ்யாமி] இவைத்தில் நின்றும் விடுவிப்பன்.

(இஷ்யாமி) என்கிற ணிச்சாலோயாவையாவை சிலபாபங்களைக் குறித்து நீ பயப்படுகிறாய், அவைதானே உன்னைக்கண்டு பயப்பட்டுப் போம்படி பண்ணுகிறேன்.

அவை தானேவிட்டுப்போம்படி பண்ணுகையாவது:—இவை நமக்கு முன்புண்டாய்க் கழிந்ததென்று தோற்றுதபடி போக்குகை. இதாகிறது இவைஸ்ம்ருதி விஷயமானாலும் தன்னுடைய ஸ்வாபாவிக வேஷத்தைப் பார்த்து ஸ்வப்நங்கண்டாப்போலே யிவை நமக்கு வந்தேறியாய்க்கழிந்ததென்றிருக்கையும், ஸ்ம்ருதியால் து:கமநுவர்த்தியாதிருக்கையும்.

கீழிவனை உபாயமாகப் பற்றிற்று அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமான இஷ்டப்ராப்திக்காயிருக்க, அநிஷ்டநிவ்ருத்திமாத்ரத்தை பலமாகச் சொல்லுவானென்னென்னில்; (யதோதபாநகரணாத் க்ரியதே ந ஜலாம்பரம்। ஸதேவ நீயதே வ்யக்திமஸதஸ்ஸம் பவ: குத:। ததா ஹேய குணத்வம்ஸா தவபோதாதயோ குணா:। ப்ரகாஸ்யந்தே நஜந்யந்தே நித்யா ஏவாத்மநோ ஹி தே) (ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே) (மம ஸஹஜகைங்கர்யவிதய:) என்கிறபடியே அநிஷ்டநிவ்ருத்தி யுண்டானால் இஷ்டப்ராப்தி தன்னடையேயுண்டாமிறே.

ஆனால் அநிஷ்ட நிவ்ருத்தி மாத்ரத்துக்கு ஈஸ்வரன் உபாயமாயிருக்கிறானோவென்னில், இஷ்டப்ராப்தியாகிற அநவதிகாதிஸயாநந்தப்ரஹ்மாநுபவத்துக்கு அர்ஹதையேயுள்ளது, இனி ஈஸ்வரனநுபவிப்பிக்கும் போதாய்த்து, இவனுக் கநுபவிக்கலாவது. ஆகையிறே கைவல்யமாகிற மோக்ஷத்துக்கு அநிஷ்ட நிவ்ருத்தி யொத்திருக்கச் செய்தேயும், ஆத்மாநுபவமாத்ரமா யிருக்கிறது. இவ்வைஷம்யத்துக்கு ஹேது, உபாஸநதாரதம்யத்தாலே ஈஸ்வரனுக்குண்டான ப்ரஸாததாரதம்யமாகையாலே. சேதநன் புருஷார்த்தத்தை ப்ரார்த்திக்கும்போது இஷ்டப்ராப்திரூபமான கைங்கர்யத்தை ப்ராதாந்யேந ப்ரார்த்திக்கக்கடவன்.

இவனுக்கு, கைங்கர்யமாகிற புருஷார்த்தம் ஸஹஜமா யிருக்கையாலே தத்விரோதி நிவ்ருத்திமாத்ரத்தையே உபாயமான ஈஸ்வரக்ருத்யமாகச் சொல்லக்கடவது. ஆகையாலே அந்த ப்ராதாந்யத்தைப்பற்ற விங்கருளிச்செய்கிறான்.

அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் ஈஶ்வரனுடைய க்ருபா ப்ரஸாதக்ருத்யமாக மஹியத்திலே உடையவரருளிச் செய்தருளினார்.

ஆகையால் இப்படி ஶரண்யன் சொல்லுகைக்கடி இஷ்டப்ராப்திரூபமான கைங்கர்ய மிவனுக்கு ஸ்வாஹவிக மென்னுமாகாரந் தோற்றுகைக்காகவும், அநிஷ்ட நிவ்ருத்தியுண்டானபோதே ஸஹஜமான இஷ்டப்ராப்தியு முண்டென்றும், அநிஷ்ட நிவ்ருத்தியினுடைய ப்ராயாந்யத்தைப்பற்ற வருளிச்செய்கிறான்.

(௧௧) கீழ், (அஹம்) என்று உபாயக்ருத்யஞ் சொல்லி நின்றது. மேல், (த்வா) என்று நிக்ஷிப்தஹரனான வயிகாரிக்ருத்யஶேஷஞ் சொல்லுகிறது.

(மாஶுச:) ஶோகியாதே கொள்ளென்றபடி. [வ்ரஜ] என்கிற வியியோபாதி (மாஶுச:) என்கிறவிதுவும் வியியாகையாலே ஸ்வீகாரத்தோபாதி ஶோகநிவ்ருத்தியும் கர்தவ்யமென்கை. ஆகையாலே, ப்ரபந்நனுக்கு யாவத் ஹலப்ராப்தி, நிர்ஹரத்வாநு ஸந்யாநம் கர்தவ்ய மென்றதாய்த்து. ஸ்வீக்ருதோபாயனான பின்பு ஶோகித்தானாகில் ப்ரபத்திநிஷ்டைக்குஹாநியுண்டாய் அத்தாலே ஹலவில்ம்ப முண்டாகக் கடவது.

ஹலியாய்த்து - ஹலாலாஹத்தில் ஶோகிப்பான். உபாயகர்தாவாய்த்து - உபாயமில்லையென்று ஶோகிப்பான். இவ்வுபாயத்தில் ஹலித்வகர்த்ருத்வங்களிரண்டு முனக்கில்லை. இனி, நானேஹலியுமாய் நானே கர்த்தாவுமாயிருக்கையாலே நீ ஶோகிக்கவேண்டா, வென்கை. (ஸக்ருதேவ ப்ரபந்நஸ்ய க்ருத்யம்நைவாந்யதிஷ்யதே) என்கையாலே, கர்த்தவ்யாம்ஶ முண்டென்று ஶோகிக்கவேண்டா.

(மாம்-அஹம்) என்கையாலே, உன்விலக்காமை பார்த்திருக்கிறோம் சிலராகையாலும், விரோயிநிரஸந ஸமர்யனாகையாலும் ஶோகிக்கவேண்டா. ஆகையாலே "உன்னைப்பார்த்தாலும்ஶோகிக்கவேண்டா. என்னைப்பார்த்தாலும் ஶோகிக்கவேண்டா,நிர்ஹரனாயிரு" என்கை.†

" உடையவனாய்த்து க்ருஷிபண்ணுவான். கர்ஷகனாய்த்து ஹலம் ஹுஜிப்பான். ஹலியாய்த்துஹலாலாஹத்தில் ஶோகிப்பான். இவை யித்தனையு முனக்கில்லாமையாலே ஶோகியாதே" என்றதாய்த்து.

இனிஶோகித்தாயாகில், உன்ஸ்வரூபத்தையுமழித்து, என்ப்ரஹாவத்தையுமழித்தாயாமித்தனை. முன்பு ஶோகித்ததில்லையாகில் அயிகாரஸித்தியி யில்லை, பின்புஶோகித்தாயாகில் ஹலஸித்தியியில்லை.

இத்தால் (அதஸ்த்வம் தத்வதோ மஜ்ஜ்ஞாந தர்ஶநப்ராப்திஷு நிஸ்ஸம்ஶயஸ்ஸுகமாஸ்ஸ்வ) என்றபடி.

† அதாகிறது - "உன்னைப்பார்த்து நிர்ஹயனாயிரு, என்னைப்பார்த்து நிஸ்ஸம்ஶயனாயிரு" என்கை, என்று அதிகபாடங்காண்கிறது.

"துஷ்கரமுமாய் ஸ்வரூபவிரோதியுமான ஸாதநங்களைத் த்யஜிக்கையாலே ஶோகிக்கவேண்டா, ஸ்வீகரிக்கப்புகுகிற உபாயம் ஸுலபமாகையாலே ஶோகிக்கவேண்டா, அதுதான் நிரபேக்ஷமாகையாலே ஶோகிக்கவேண்டா, அவ்யவஹிதஸாதநமாகையாலே ஶோகிக்கவேண்டா, மாநஸவ்யபார மாத்ரமாகையாலே வாய்நோவ உடம்புநோவ க்லேஶிக்கவேணுமென்று ஶோகிக்கவேண்டா, உபாயம் பலப்ரதாநஸமர்த்தமாகையாலே ஶோகிக்கவேண்டா, இனி கர்த்தவ்யாம்ஶ முண்டென்று ஶோகிக்கவேண்டா, விரோதி யம்ஶத்தில் ஶேஷிப்பதொன்றுண்டென்று ஶோகிக்கவேண்டா. விரோதிபோமோ போகாதோவென்று ஶோகிக்கவேண்டா" வென்கிறது.

(க) த்யாஜ்யஸ்வரூபஞ்சொல்லி, (உ) த்யாகப்ரகாரஞ்சொல்லி, (௩) உபாயஸ்வீகாரத்துக்கு த்யாகமங்கமென்னுமிடஞ்சொல்லி, (௪) ஸ்வீகரிக்கப்புகுகிற உபாயத்தினுடைய சீர்மைசொல்லி. (௫) அச்சீரியஉபாயம் நிரபேக்ஷமென்னுமிடஞ்சொல்லி, (௬) உபேயத்வம் நித்யம், உபாயத்வ மௌபாதிகமென்னுமிடஞ் சொல்லி, (எ) பற்றுமிடத்தில் மாநஸவ்யாபாரமே அமையு மென்னுமிடஞ் சொல்லி, (அ) உபாயத்தினுடைய சீர்மையைச்சொல்லி, (௯) அதிகாரியினுடைய அபூர்த்தி சொல்லி, (க0) அவ்வதிகாரியினுடையவிரோதிபாபஸமூஹத்தைச் சொல்லி, (கக) விரோதிகளில் கிடப்ப தொன்றில்லையென்னுமிடஞ்சொல்லி, (கஉ) அவையடையத்தானே போமென்னுமிடஞ்சொல்லி, (க௩) "நிர்பரனுயிரு" என்கிறுன்.

ஆக இத்தால், (க) ஸ்வீகாராங்கங்களையும், (உ) த்யாஜ்யதர்மவிஶேஷங்களையும், (௩) அந்ததர்மங்களினுடைய த்யாகப்ரகாரத்தையும், (௪) அந்த தர்மத்யாகபூர்வகமாகப் பற்றும் விஷயத்தினுடைய ஸௌலப்யாதிகுண யோகத்தையும், (௫) தத்விஶிஷ்டவஸ்துவினுடைய ஸஹாயாஸஹத்வலக்ஷணமான நைரபேக்ஷ்யத்தையும், (௬) அந்த நிரபேக்ஷவஸ்துவினுடைய உபாயபாவத்தையும், (எ) அத்தை உபாயத்வேந ஸ்வீகரிக்கையும், (அ) ஸ்வீக்ருதோபாயனுடைய ஜ்ஞாநஶக்த்யாதிகுணயோகத்தையும், (௯) தத்விஶிஷ்டவஸ்துவில் ந்யஸ்தபரனன வதிகாரியையும், (க0) தத்விரோதி பாபஸமூஹத்தையும், (கக) தத்விமோசநப்ரகாரத்தையும், (கஉ) தத் விமோசகனைப் பற்றின வதிகாரியினுடைய நைர்பர்யத்தையுஞ் சொல்லிற்றாய்த்து.

ப்ரபத்தி, நிர்பரத்வாநுஸந்தாநஶிரஸ்கமாகையாலே, நிர்பரத்வாநு ஸந்தாநம் ஸர்வதா கர்த்தவ்யமென்றதாய்த்து "வ்ரஜ" என்கிற ஸ்வீகாரத்துக்கு.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

தனிசரமம் முற்றிற்று.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# தனிப்ரணவம்.

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே।
ஸம்ஸாரபோகிஸந்தஷ்டஜீவஜீவாதவே நம:॥

ஸகலவேததாத்பர்யமாய் ஸகலஶாஸ்த்ரஸங்க்ரஹமாய், ஸகலபல ப்ரதமாய், ஸகலமந்த்ரங்களிலுமதிகமான, திருவஷ்டாக்ஷரமான, திருமந்த்ரத்துக்கு, நம்பூர்வசார்யர்கள், "ஸ்வரூபஞ் சொல்லுகிறதென்றும், ப்ராப்யஞ் சொல்லுகிறதென்றும், இரண்டுபடி வாக்யார்த்தம்" என்றருளிச்செய்வர்கள்.

இம்மந்த்ரந்தான் "ஓம்" என்றும், "நம:" என்றும் "நாராயணாய" என்றும், மூன்றுபதமாயிருக்கும்.

இதில் முதல்பதம் - ப்ரணவமென்று திருநாமமாய், அகாரமென்றும், உகாரமென்றும், மகாரமென்றும், மூன்று பதமாயிருக்கும்.

இம்மந்த்ரத்துக்கு நம்பிள்ளை யருளிச்செய்த தாத்பர்யம்:— (க) ஆஶ்ரயியையும், (உ) ஆஶ்ரயியினுடைய வைஶிஷ்யத்தையும், (ங) ஆஶ்ரயத்தையும், (ச) ஆஶ்ரயத்தினுடைய வைஶிஷ்யத்தையும், (ரு) ஆஶ்ரயணீயவைபவத்தையும், (சா) ஆஶ்ரயணபலத்தையும், சொல்லுகிறதென்று.

இங்கு ஆஶ்ரயியென்கிறது ஶேஷத்வத்தை; இது ப்ரதமாக்ஷரமான அகாரத்திலே சொல்லுகிறது.

ப்ருஹ்மவாசியான அகாரத்தை ஶேஷத்வவாசியாக்கினபடியென்னென்னில், இப்பதம் ப்ருஹ்மப்ரயோக மன்றியிலே ஸ்வரூப ப்ரயோகமாகையாலே.

இங்கு ப்ருஹ்மவாசகம் வந்தது,—அந்த ஸ்வரூபத்துக்கு அந்தரங்கநிரூபகமான ஶேஷத்வம், ப்ரதிஸம்பந்திஸாபேக்ஷமாகையாலே.

இதில், விபக்தியில் ஶேஷத்வஞ்சொல்லுகிறது; பதந் தன்னாலே ப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிறது.

ப்ரதிஸம்பந்திவேஷமிருக்கும்படி யென்னென்னில், ஸகல ஜகத்காரணமுமாய், ஸகலஜகத்ரக்ஷகமுமாய், அகிலஹேயப்ரத்யநீகமுமாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகமுமாய், நிருபாதிகஸர்வஶேஷியுமாய், ஸலக்ஷ்மீகமுமாயிருக்கும் வஸ்து வென்று, இவ்வக்ஷரஸ்வபாவத்தாலும், தாதுஸ்வபாவத்தாலும், இந்ததாத்வர்த்தஸ்வபாவத்தாலும், விபக்திஸ்வபாவத்தாலும் இவ்வஸ்துஸ்வபாவத்தாலும் சொல்லிற்று.

ஸகல ஜகத்காரணத்வம் இவ்வக்ஷரஸ்வபாவத்தாலே சொல்லுகிறதெங்ஙனேயென்னில், இந்த ப்ரஹ்மவாசகமான அகாரம் ஸகலவாசகங்களுக்கும் காரணமாகையாலே வாச்யமான ப்ரஹ்மம் ஸகலவாச்யங்களுக்கும் காரணமாகக்கடவதென்று, வாச்யவாசகஸம்பந்தத்தாலே சொல்லிற்று.

இன்னமுமிவ்விடத்திலே காரணத்வமநுஸந்திப்பதொரு வழியுண்டு; எங்ஙனேயென்னில், வாசகங்களோடு வாச்யங்களோடுவாசியற ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தத்துக்கும் இவ்வகாரமாகிறவாசகமே காரணமாகக்கடவதென்றார்கள். ஆனபடியென்னென்னில், "இவ்வகாரமாகிறேன் நான்" என்று அவன்தானே யருளிச்செய்கையாலும், இவ்வாசகம் காரணமென்கிறவிடத்தில் வாச்யங்களுக்கு காரணமன்றென்கிற நிஷேதவிதியில்லாமையாலும், இவ்வாசகமே காரணமாகவற்றென்னலாம்; இத்தால் வாசகப்ரபாவஞ் சொல்லிற்றாய்த்து.

இன்னமு மிவ்விடத்திலே காரணத்வமநுஸந்திப்பதொருவழியுண்டு; எங்ஙனேயென்னில்; இது ஈஶ்வரவாசகமாகையாலும், ஈஶ்வரத்வமாகிறது-ஆபத்ரக்ஷணம்பண்ணுகையாலும், ஆபத்ரக்ஷணத்தில் ப்ரதாநம்-அகரணரான சேதநரை ஸகரணராக்குகையும், அஸம்ஸ்தாநரூபமான வசித்தை ஸம்ஸ்தாநரூபமாக்குகையும். இத்தால் காரணத்வஞ் சொல்லிற்றாய்த்து.

ஈஶ்வரனென்றபோதே, ஜகத்காரணவஸ்து வென்றதாய்த்தென்றார்கள். இத்தால் வாச்யலக்ஷணஞ்சொல்லிற்றாய்த்து. எங்ஙனேயென்னில், இவ்வாச்யமான ஈஶ்வரத்வம் மோக்ஷப்ரதவஸ்துவுக் கொழியவில்லாமையாலும், மோக்ஷப்ரதத்வமுள்ளது ஜகத்காரணவஸ்துவுக்கேயாகையாலும், ஈஶ்வரனென்றபோதே ஸகலஜகத்காரணமென்றார்கள்.

இப்படி ப்ரமாணோபபத்திகளாலே, இவ்வகாரத்தில் சொன்னகாரணத்வத்தை, நம்மாசார்யர்கள் ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபேண பலவகையாலும் அநுஸந்தித்து உபதேஶித்துப் போருவர்கள். அவைகளெவையென்னில் ;

இக்காரணத்வந்தான்—

(க) ஔபாயிக காரணத்வமென்றும்,

(௨) நிருபாயிக காரணத்வமென்றும்,

(௩) ஸத்வார ஔபாயிக காரணத்வமென்றும்,

(௪) அத்வார ஔபாயிக காரணத்வமென்றும்,

(௫) ஸத்வாரக நிருபாயிக காரணத்வமென்றும்,

(௬) அத்வாரக நிருபாயிக காரணத்வமென்றும் ஆறுபடியாயிருக்கும்.

(க) இதில் ஔபாயிக காரணத்வமாவது:—பூர்வபூர்வ யுகங்களிலே சேதநர் ஶரீரங்களாலே பண்ணின புண்ய பாபங்கள் ஹேதுவாகஸ்ருஷ்டிக்கை.

(௨) நிருபாயிக காரணத்வமாவது:—அநாதியாக அசித்விஶிஷ்டராய் அஶரீரிகளாய்த் திரிகிற சேதநர்க்கு நிரவயிகக்ருபையாலே ஶரீராதிகளைக் கொடுக்கை.

(௩) ஸத்வார ஔபாயிககாரணத்வமாவது:—புண்யபாபங்களை நிறுத்து, அவற்றின் வழியே தேவாதிசதுர்வித ஶரீரங்களையும் ஸ்ருஷ்டிக்கை.

(௪) அத்வாரஔபாயிககாரணத்வமாவது:—புண்யலேஶமுடையவர்களுக்கும், ஸஹஜகாருண்யத்தாலே விலக்ஷண ஸ்ருஷ்டியைப்பண்ணியும் பாபமேயானவர்களையும் ஸத்தாஹாநி பிறக்குமளவில், ஸம்பந்தமே பற்றாசாகவங்கீகரித்து ஆதிமுலீய ஜநகமான ஸ்ருஷ்டியைப்பண்ணுகை.

(௫) ஸத்வாரகநிருபாயிக காரணத்வமாவது:—இப்படி ஸ்ருஷ்டிப்பதாகப்புரிந்த ஈஶ்வரன், ப்ரஹ்மாதிகளை காரணமாக்கிக் கொண்டு ஸ்ருஷ்டிக்கை.

(௬) அத்வாரகநிருபாயிக காரணத்வமாவது:— காருண்யாதிகளே காரணமாகத்தானே ஸ்ருஷ்டிக்கை.

இவ்வகாரத்தால் அப்படி ஜகத்காரணத்வஞ் சொன்னபோதே, இவனுடைய ஸர்வஸ்மாத்பரத்வமும், அதஏவ அகிலஹேயப்ரத்யநீகத்வமும் அநுஸந்தேயம்.

உடையவர்க்குத் திருகோட்டியூர்நம்பி, காரணத்வம் அருளிச்செய்யச்செய்தே, "பெற்றதாயை யறியாமல் பிறந்து வளருவாரைப் போலேயிறே-காரணத்வம் காணாமல் கண்டநுஸந்திக்கும் உர்ஶ நார்யங்களெல்லாம்" என்றருளிச் செய்தாராம்.

ஹட்டர் நஞ்சீயர்க்கிவ்வர்த்தமருளிச் செய்யச்செய்தே, "ஜகத்காரணத்வ நிரூபணம் பண்ணுமவனுக்கு, மோக்ஷத்திலே யொழிய அந்வயமில்லை" என்றருளிச்செய்தார்.

நம்பிள்ளை, பின்பழகிய பெருமாள் ஜீயர்மடத்திலே யெழுந்தருளியிருக்கச்செய்தே, “ஈஸ்வரபரத்வத்தை யநுஸந்திக்கையாவது - ஜகத்காரணத்வத்தை யநுஸந்திக்கை” என்றருளிச்செய்தாராம்.

ஆச்சான்பிள்ளை, நடுவிற்றிருவீதிப்பிள்ளை பட்டரை “பகவத் குணங்களெல்லாம் சேரவநுஸந்திக்கலாந்துறையேது” என்றுகேட்க, “ஜகத்காரணத்வத்தை யநுஸந்திக்கவே, எல்லாக் குணங்களையு மநுஸந்தித்ததாம்” என்றருளிச்செய்தாராம்.

பிள்ளை யெங்களாழ்வான், நடாதூரம்மாளுக்கு இவ்வர்த்தமருளிச் செய்யச்செய்தே, “ஜகத்காரண நிரூபணம் பண்ணினவனுக்கு, நிஷித்யாநுஷ்டாநத்தி லந்வயமில்லை” என்றருளிச் செய்தார்.

ஆகையால் நம் பூர்வாசார்யர்கள் ஜகத்காரண நிரூபணமே நிரந்தரம் பண்ணாநிற்பர்கள்.

அநந்தரம், ஜகத்காரண வஸ்துவினுடைய ரக்ஷகத்வஞ் சொல்லுகிறபடி யென்னென்னில், இது “அவ-ரக்ஷணே” என்கிற தாதுவை யுடைத்தாகையால், ஸாவீக்ஷமாகச் சொல்லிற்று.

இன்னமுமிப்பக்ஷத்திலே ரக்ஷகத்வ மநுஸந்திப்பதொரு ப்ரகாரமுண்டு. எங்ஙனே யென்னில்; ஜகத்காரணத்வஞ் சொன்னபோதே ரக்ஷகத்வஞ் சொன்னதாகலாம். ஆகிறபடி யென்னென்னில்; “குடற்றுடக்குடையவர்களை ரக்ஷிக்கை குணப்ரயுக்தம்” என்கிற ந்யாயத்தாலே.

ஜகத்தில் குடற்றுடக்குடையவர்களெல்லாம் ரக்ஷிக்கிறார்களோ வென்னில்; ஜகத்திலுள்ளார் அந்யோந்யம் அஸ்நேஹிகளுமாய் அஸ்வதந்த்ரருமாய் அப்ராப்தருமாகையாலே ரக்ஷிக்கமாட்டார்கள். இங்கு ஜகத்காரணபூதன் ஸ்நேஹியுமாய் ஸ்வதந்த்ரனுமாய் காருணிகனுமாய் ப்ராப்தனுமாகையாலே “இவனையொழியரக்ஷகரில்லை” என்கிறந்யாயத்துக்குக் குறையில்லை.

நம்பிள்ளை யிவ்வர்த்த மருளிச்செய்யச்செய்தே † “அயிற்றுப்பரவிக்குப் பொகடப்போம்” என்றருளிச் செய்தாரிறே.

---

† அயிற்றுப்பரவிக்கு - அகாரத்தினுடைய ஈறுவது, ‘அவ ரக்ஷணே’ என்கிற தாத்வர்த்தமான ரக்ஷகத்வம்; அந்த ரக்ஷணார்த்தமாக ஸர்வத்ர, பரவிக்கு - வ்யாபித்திருக்கிறவனுக்கு, பொகடப்போம் - அந்த ரக்ஷகத்வத்தை தன் தலையிலே யேறிட்டுக்கொள்ளாதே தன்னை ரக்ஷ்யயாக நினைத்து ஸமர்பிக்கவடுக்கும். ‘போயொழிந்தான்’ என்னுமாபோலே வார்த்தைப் பாடிருந்தபடி. அன்றிக்கே அகாரமாகிற யில்லிலே, பரவிக்கு-பொருந்தினவனுக்கென்றவுமாம்.

இன்னமுமிவ்விடத்திலே ரக்ஷகத்வமநுஸந்திப்ப தொருவழியுண்டு. எங்ஙனே யென்னில்; இப்பதம் விஷ்ணுவாசகமாகையாலும், விஷ்ணுவாகிறான்-வ்யாபநஶீலனாகையாலும், வ்யாப்தியாவது - ஸ்வவ்யதிரிக்த ஸகலத்தினுடையவும் ஸத்தாஸம்ரக்ஷணங்களாகையாலும், ரக்ஷணப்ரகாரத்தில் ப்ரதாந ரக்ஷணமிதுவேயாகையாலும், இவ்வழியாலேவரும் ரக்ஷகத்வத்துக்கும் குறையில்லை யென்றார்கள்.

இன்னமு மிவ்விடத்திலே ரக்ஷகத்வ மநுஸந்திப்பதொரு வழியுண்டு. எங்ஙனே யென்னில்; இப்பதம் ஈஶ்வரவாசக மாகையாலும், ஸமஸ்த ஜகத்துக்கும் தாரகனுமாய், நியந்தாவுமா யிருக்கையாலும், ஈஶ்வரனென்றபோதே ரக்ஷகத்வத்துக்குக் குறையில்லை யென்பர்கள் நம்பூர்வாசார்யர்கள்.

இந்த ரக்ஷகத்வந்தான், (I) ஔபாயிக ரக்ஷகத்வமென்றும், (II) நிருபாயிக ரக்ஷகத்வ மென்றும், த்³விவிதம்.

[I] இதில் ஔபாயிக ரக்ஷகத்வந்தான்:—(௧) ஸத்³வாரகௌபாயிக ரக்ஷகத்வமென்றும், (௨) ஸத்³வாரகௌபாயிக ரக்ஷகத்வ ப்ரகார மென்றும், (௩) அத்³வாரகௌபாயிக ரக்ஷகத்வமென்றும், (௪) அத்³வாரகௌபாயிக ரக்ஷகத்வ ப்ரகாரமென்றும்,

[II] நிருபாயிக ரக்ஷகத்வந்தான்:—(௧) ஸத்³வாரக நிருபாயிக ரக்ஷகத்வ மென்றும், (௨) ஸத்³வாரக நிருபாயிக ரக்ஷகத்வ ப்ரகார மென்றும், (௩) அத்³வாரக நிருபாயிக ரக்ஷகத்வமென்றும், (௪) அத்³வாரக நிருபாயிக ரக்ஷகத்வ ப்ரகாரமென்றும், பலவகையா யிருக்கும்.

I, இதில், ஔபாயிக ரக்ஷகத்வ மாவது—எதிர்த்தலையில் அபேக்ஷை கண்டு ரக்ஷிக்கை.

II. நிருபாயிக ரக்ஷகத்வமாவது—அபேக்ஷாநிரபேக்ஷமாக ரக்ஷிக்கை.

[I] (௧) ஸத்³வார கௌபாயிக ரக்ஷகத்வமாவது—ஏதேனு மபேக்ஷிக்க ஏதேனும் ஃபலங்கொடுக்கை யன்றிக்கே அபேக்ஷா ப்ரகாரங்களுக்குத் தகுதியாக ஃபலங்கொடுக்கை.

(௨) ஸத்³வாரகௌபாயிக ரக்ஷகத்வ ப்ரகாரமாவது—தன்னை யபேக்ஷித்தவர்களுக்கே யன்றிக்கே, தன் ஶரீரங்களான ப்³ரஹ்மருத்³ராதி³களை யபேக்ஷித்த வர்களுக்கும் அவர்களுக்குள்ளீடாய் நின்று அவ்வோ அபேக்ஷித ஃபலங்களைக் கொடுக்கை.

(௩) அத்³வாரகௌபாயிக ரக்ஷகத்வமாவது — எதிர்த்தலையில் ஆபிமுக்யம்பற்றாசாக, அபூர்ணோபாயர்க்கும் பூர்ணஃபலங்களை கொடுக்கை.

(ச) அநிவாரகௌபாயிக ரக்ஷகத்வ ப்ரகாரமாவது— தன்னளவில் ஆபிமுக்யமின்றிக்கே கீழ்ச்சொன்ன தேவதைகள் பக்கலிலே ஆபிமுக்யம் பிறக்கிலும், அவர்களுக்குள்ளீடாய் நின்று அவர்களபேக்ஷிதங்களைக் கொடுக்கை.

[II] (க) ஸநிவாரக நிருபாயிக ரக்ஷகத்வமாவது—ஃபலஸாபேக்ஷையுடையராய் ஃபலப்ரதவிஷய மறியாதவர்களுக்கும் அநிவேஷமே பற்றாசாகத்தானே யறிந்து ஃபலப்ரதானம் பண்ணுகை.

(உ) ஸநிவாரக நிருபாயிகரக்ஷகத்வப்ரகாரமாவது—துஷ்கரங்களுமாய் ஸ்வரூபவிருத்தங்களுமான உபாயாந்தரங்களிலே மண்டினவர்களுக்கும் உபாயபூர்த்தியைப் பிறப்பித்து மோக்ஷப்ரதானம் பண்ணுகை.

(ங) அநிவாரக நிருபாயிக ரக்ஷகத்வமாவது—ஃபலாபேக்ஷையில்லாதவர்களுக்கும் ஸம்பந்தமே பற்றாசாக ருசியை விளைத்து ஃபலத்தைக்கொடுக்கை.

(ச) அநிவாரகநிருபாயிக ரக்ஷகத்வ ப்ரகாரமாவது — தனக்கு நிலைநின்றவடிவான மோக்ஷப்ரதானம் பண்ணுமிடத்தில், சேதந க்ருத வ்யாபார ஸாபேக்ஷனாயிருக் கையன்றிக்கே, சேதந விஷய ஸாபேக்ஷனாய்க் கொண்டு மோக்ஷம் கொடுக்கை.

இத்தால், சேதநக்ருதமான உபாயஸ்வீகாரமும் உபகாரஸ்ம்ருதியும், சைதந்யக்ருத்ய மென்றதாய்த்து.

இத்தால் நிருபாயிக ரக்ஷகத்வத்துக்கு லக்ஷணஞ்சொல்லிற்றாய்த்து. இந்த லக்ஷணமாகிறது-இப்படிரக்ஷியாதபோது தன்ஸத்தையில்லையாம் படியா யிருக்கையிறே.

ஆக, இவ்வகாரம்-விஷ்ணுவாசகமாகையாலே, ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தத்துக்கும் ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வப்ரகாரத்தாலும் ஸர்வரக்ஷகனென்று நிர்ணயித்ததாய்த்து.

இவ்விடத்தில் இந்தரக்ஷகத்வப்ரயுக்தங்களான (க) ஸர்வஜ்ஞத்வ (உ) ஸர்வஶக்தித்வ - (ங) பரமகாருணிகத்வ-(ச) பரமோதாரத்வ - (ரு) ஆஶ்ரிதவத்ஸலத்வ - (சு) அஶரண்யஶரண்யத்வ - (எ) அநாலோசித விஶேஷாஶேஷ லோகஶரண்யத்வ - (அ) நிருபாயிக ஸர்வஸ்வாமித்வ- (கூ) ஶ்ரியஃபதித்வ - (கo) நாராயணத்வங்களாகிற ஸமஸ்த கல்யாண குணங்களு மநுஸந்தேயம்.

என்செய்ய வென்னில்;

(க) ரக்ஷிக்கும்போது ஸர்வத்தையும் அறியவேண்டுகையாலே ஸர்வஜ்ஞத்வஞ் சொல்லிற்று.

(உ) அஶக்தனுக்கு ரக்ஷகத்வமில்லாமையாலே ஸர்வஶக்தித்வஞ் சொல்லிற்று.

(ங) அகாருணிகனுக்கு ரக்ஷகத்வமில்லாமையாலே பரமகாருணிகத்வஞ் சொல்லிற்று.

(ச) லுப்தனுக்கு ரக்ஷகத்வ மில்லாமையாலே பரமோதாரத்வஞ் சொல்லிற்று.

(ரு) தோஷாஸஹனுக்கு ரக்ஷகத்வ மில்லாமையாலே ஆஶ்ரிதவாத்ஸல்யஞ் சொல்லிற்று.

(சு) தன்னையொழிய ரக்ஷிப்பாரில்லாமையாலே அஶரண்ய ஶரண்யத்வஞ் சொல்லிற்று.

(எ) சிலரை ரக்ஷிக்கிறோம், சிலரை ரக்ஷியோம் என்னவொண்ணாமையால், அநாலோசித விஶேஷாஶேஷலோக ஶரண்யத்வஞ் சொல்லிற்று.

(அ) ரக்ஷிக்கை தன்பேறுகையாலே நிருபாயிகஸர்வஸ்வாமித்வஞ் சொல்லிற்று.

(கூ) ரக்ஷிக்கும்போது சேரவிடுவார் வேண்டுகையாலே, ஶ்ரியஃபதித்வஞ் சொல்லிற்று.

(க0) ரக்ஷியாதபோது தானில்லாமையாலே, நாராயணத்வஞ் சொல்லிற்று.

இப்படி ஸர்வரக்ஷகன் ஸமஸ்தகல்யாண குணாத்மகனென்றபோதே, காரணத்வோபயுக்தமான அகிலஹேயப்ரத்யநீகத்வஞ் சொல்லிற்று.

அகிலஹேயப்ரத்யநீகத்வமாவது-தன்னையொழிய ஸகலசேதநாசேதநங்களோடு தானிருக்கச்செய்தே, சிறைக்கூட்டத்திலே சிறையனோடே கூடப்படையிலானும் வர்த்திக்கச் செய்தேயும், சிறையில் துஃகம் படையிலானுக்கு வாராதாப்போலே, ஶரீரத்தில் ஆத்மாவோடே ஈஶ்வரனும் வர்த்தியாநிற்கச் செய்தேயும் ஆத்மாவினுடைய துஃகங்கள் ஈஶ்வரனுக்கு வாராதிருக்கை.

ஆக, காரணத்வ ரக்ஷகத்வோபயுக்தங்களாகிற உபயலிங்கத்வமுஞ்சொல்லிற்று.

அநந்தரம், இப்பக்ஷம் சதுர்த்யந்தமாகையாலே, நிருபாயிகஸர்வப்ரகார ஸர்வஶேஷித்வமுஞ் சொல்லிற்று.

இப்பக்ஷத்திலே லக்ஷ்மீஸம்பந்தமும் அநுஸந்தேயம். எங்ஙனே என்னில்?

(௧) ஸகல ப்ரமாணங்களும், லக்ஷ்மீ-தர்மம், ஈஶ்வரன்-தர்மி. என்று சொல்லுகையாலும்,

(௨) கீழ்ச்சொன்ன காரணத்வ ரக்ஷகத்வங்களும் லக்ஷ்மீப்ரேரிதங்களாகையாலும்,

(௩) இவனுடைய ஸ்வரூப நிரூபகங்களான ஸமஸ்த கல்யாண குணங்களிலும் ப்ரதாநம்-லக்ஷ்மீஸ்வரூப மாகையாலும்,

(௪) இப்பதவிவரணமான நாராயணபதத்தில் நாரபதத்திலே லக்ஷ்மீஸ்வரூபம் வ்யக்தமாகச் சொல்லுகையாலும்,

(௫) மேற்சொல்லுகிற ஶேஷத்வத்துக்கு ப்ரதிஸம்பந்தியொரு மிதுநமாக வேண்டுகையாலும்,

(௬) இவனுக்கு தேவதாந்தரவ்யாவ்ருத்தி லக்ஷணங்களிலே ப்ரதாநம் - லக்ஷ்மீபர்த்ருத்வமாகையாலே இவனுடைய ஸ்வரூபரூப குணவிபூதிகளெல்லா மிவளோட்டை ஸம்பந்தத்தாலே நிறம் பெறுகையாலும்.

ஆகவிப்படி யிவளுடைய ஸ்வரூபம், ப்ருதக்ஸ்திதிப்ருதங்நிர் தேஶாநர்ஹமாயல்லதிராமையால், இவ்விடத்திலே பெரியபிராட்டியாருடைய ஸ்வரூபம் ஆர்த்தமாகவநுஸந்திக்க ப்ராப்தமாயிருக்கக் கடவது என்று பிள்ளையருளிச்செய்வர்.

இன்னமும் சில ஆசார்யர்கள் இங்ஙனே யருளிச்செய்வர்கள். எங்ஙனேஎன்னில்; "அபத்நிகனுக்கு யாகத்திலே அந்வயமில்லாதாப் போலேயும், ப்ரதாநமஹிஷீவ்யதிரேகேண ராஜாவுக்கு அபிஷேகமில்லாதாப்போலேயும், இவனுடைய ரக்ஷகத்வஶேஷித்வங்கள் லக்ஷ்மீவ்யதிரேகேணவில்லை" என்று.

நஞ்சீயர், இவ்வர்த்தமருளிச் செய்யச்செய்தே, "பிராட்டிக்கு ஸத்தாஸித்தி யெம்பெருமானாலே, எம்பெருமானுக்கு நிரூபகஸித்தி பிராட்டியாலே" என்றிறேயருளிச்செய்தது.

ஆக இப்பதத்தில், ஶேஷத்வப்ரதிஸம்பந்தியானஶேஷி, ஸகல ஜகத்காரணபூதனாய், ஸர்வஸ்மாத்பரனாய், அதஏவ அகிலஹேயப்ரத்யநீகனாய், ஸர்வவிஷயஸர்வப்ரகார ரக்ஷகனாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், நிருபாதிக ஸர்வப்ரகார ஸர்வஶேஷியாய் ஶ்ரிய:பதியாயிருக்குமென்றதாய்த்து.

இவ்வகாரத்தில் மிதுநஶேஷத்வஞ்சொல்லுகிற சதுர்த்தீவிபக்தியை நிரூபித்தவிடத்தில், லுப்தமாய்க்கிடந்தது. லுப்தமென்றது ஏறிக்கழிந்த தென்றபடி. ஆனால் கழிந்து போனவிபக்தியை, சதுர்த்திவிபக்தியென்றறிந்தபடி என்னென்னில்; இதினுடைய விவரணமான நாராயணபதத்திலே சதுர்த்தியேறிக்கிடக்கையாலே, அதினுடைய ஸங்க்ரஹமான விதிலும் சதுர்த்தியாகக்கடவது.

இச்சதுர்த்²யர்த்த²மான ஶேஷத்வந்தானிருக்கும்படி யென்னென்னில்,

சிலர் க்³ருஹ க்ஷேத்ர தா³ரதா³ஸ புத்ராதி³வத் ஶேஷமென்றார்கள்.

சிலர் பா⁴ர்யாவச்சே²ஷமென்றார்கள்.

சிலர் ஶரீரவத் ஶேஷமென்றார்கள்.

இவையித்தனையும் பார்த்தவிடத்தில், இது தாத³ர்த்²யசதுர்த்²தி யாகையாலும், தாத³ர்த்²யத்துக்கு அர்த்த²ம் ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தத்துக்கும் ப்ருத²க்ஸ்தி²தி ப்ருத²ங்நிர்தே³ஶத்துக்கு யோக்³யதையில்லை யென்கையாலும், இங்குசொன்ன க்³ருஹ க்ஷேத்ர தா³ரதா³ஸபுத்ர பா⁴ர்யா ஶரீரங்களுக்கு ப்ருத²க்ஸ்தி²தி ப்ருத²ங்நிர்தே³ஶத்துக்கு யோக்³யதை யுண்டாகையாலும் இவ்வோஸாமாந்யமான ஶேஷத்வம் தாத³ர்த்²யத்துக்கு அர்த்த²மாகமாட்டாது.

இனியிந்த தாத³ர்த்²ய சதுர்த்²திக்கர்த்த²ம் - த⁴ர்மிவிஷயத⁴ர்மவத் ஶேஷத்வமே யாகக்கடவது.

இத்தால், அகாரவாச்யமான பரப்³ரஹ்மம், ஸூக்ஷ்மசித³சித்³விஶிஷ்டமானபோது காரணமாயும், ஸ்தூ²லசித³சித்³விஶிஷ்டமானபோது கார்யமாயு மிருக்குமென்றதாய்த்து.

இவ்வர்த்த²மிவ்விடத்தில் சொல்லுகிறபடி யென்னென்னில், ஸ்வவ்யதிரிக்தஸகலத்தினுடைய த⁴ர்மத்வமுமிங்கு சொல்லுகையாலே.

ஆக, சதுர்த்²திவிப⁴க்தியால் ஶேஷத்வஸித்³தி⁴யும், ஶேஷத்வலாப⁴மும், சொல்லிற்றாய்த்து.

இங்கு ஶேஷத்வஸித்³தி⁴யாகிறது - பரார்ஹதையும், ஸ்வாநர்ஹதையும். ஶேஷத்வலாப⁴மாகிறது - ப⁴க³வத்³வ்யதிரிக்தஸகலத்துக்கும் ஶேஷத்வமொழிய ஸத்தையில்லையாயிருக்கை.

ஆக அகாரார்த்த²ம் தீர்ந்தது.

அநந்தரம், அவ்யயமாய் அவதா⁴ரணார்த்த²மான உகாரமும், கீழ் தாத³ர்த்²யஸித்³த⁴மான ஶேஷத்வலாப⁴ம் ஸ்வலாப⁴மோ, பரலாப⁴மோ வென்கிற ஶங்கையிலே, ஸ்வலாப⁴மன்று, பரலாப⁴ம், என்கிறது.

இவ்வவதா⁴ரணார்த்த²த்துக்குச் சொல்லும் ப்ரமாணங்களெல்லாம் அவனுக்கே யென்றிறே கிடப்பது.

இவ்விடத்திலே ததீ³யஶேஷத்வமும் அநுஸந்தி⁴த்துப் போருவாருமுண்டென்றருளிச்செய்வார்கள். எங்ஙனேயென்னில்; இப்பக்ஷம் (௧) ஶேஷத்வவைஶத்³யப்ரதிபாத³கமாகையாலும், (௨) இஶ்ஶேஷத்வத்துக்கு வைஶத்³யம் ததீ³யபர்யந்தமேயாயிருக்கையாலும், (௩) ததீ³யஶேஷத்வவ்யவஹாரம் பண்ணுமிடத்தில் இவ்வவதா⁴ரண நிஷ்டன் பக்கல் கொள்ளும் ஶேஷத்வமே ஸ்வரூப ப்ரயுக்தமாயிருக்கையாலும், (௪) மேல்

ப்ரதிபாதிக்கப்படுகிற வஸ்து ஸாக்ஷியஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயமாக வேண்டுகையாலும், (௫) இப்பதந்தான் ததீய ஶேஷத்வப்ரதிபாதகமான மத்யமபதஸங்க்ரஹமாகையாலும் இவ்விடத்தில் ததீயஶேஷத்வஸூசநத்வஞ் சொல்லுகையில் சோத்யமில்லை.

"இப்பதம் - ஸம்பந்தயாதாத்ம்யஜ்ஞாந ப்ரதிபாதகம்" என்றருளிச் செய்வர்கள். இப்பதத்தில், ப்ரதமசரமங்களிலே ஜீவ பரர்களைச் சொல்லி, நடுவே அவதாரணங்கிடக்கையாலே, இது ஸம்பந்த வாசியாகக்கடவது.

ஆக, அவதாரணார்த்தமான உகாரத்தாலே - ஸாக்ஷியஶேஷத்வ லக்ஷணமும், ஶேஷத்வபூர்த்தியும், ஶேஷத்வஜ்ஞாநயாதாத்ம்யமும் சொல்லிற்றாய்த்து.

அன்றியிலே, சில ஆசார்யர்கள், இவ்வர்த்தமித்தனையும்—தாதர்த்ய விதேயமாய், அவதாரணத்தை ஆர்த்தமாக்கி, இவ்வுகாரம் லக்ஷ்மீ வாசகமென்றார்கள்.

ஆக, உகாரார்த்தம் தீர்ந்தது.

அநந்தரம், மகாரம் - தாதர்த்யவிதேயமுமாய், அவதாரணவிதேயமுமான ஶேஷத்வத்துக்கு, ஆஶ்ரயமாய், ப்ரக்ருதேர்பரனாய் ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமான ஆத்மாவை சொல்லுகிறது.

இம்மகாரத்தில், ப்ரக்ருதேர்பரத்வமும் ஜ்ஞாநாநந்தஸ்வரூபத்வமும் சொல்லுகிறபடி யென்னென்னில்; இம்மகாரத்தில் சொல்லுகிற ப்ரமாணங்களிலே ப்ரக்ருதேர்பரத்வம் சொல்லிற்று. இதில் யாதுவாலே - ஜ்ஞாநாநந்தஸ்வரூபத்வம் சொல்லிற்று. இந்த யாது - "மந-ஜ்ஞாநே" என்று ஜ்ஞாநமாத்ரப்ரதிபாதகமாயிருக்க, ஜ்ஞாதாவைச் சொல்லுகிறபடி என்னென்னில், குணத்தைச் சொன்னபோதே குணியையும் சொல்லிற்றாமென்று வேதாந்தஸூத்ரத்திலே நிர்ணயிக்கையாலே.

கீழ்ச்சொன்ன ஶேஷத்வம் - சேதநாசேதந ஸாதாரணமாயிருக்க, இங்கு சேதநைகாந்தமான மகாரத்தை ப்ரயோகிப்பானென்னென்னில்;

(க) ஶேஷத்வஜ்ஞாநம்பிறப்பது சேதநனுக்கேயாகையாலும்,

(உ) ஶேஷத்வஜ்ஞாநப்ரதிபந்தகமான ஸ்வாஹங்காரமமகார நிவ்ருத்தியுள்ளதும் சேதநனுக்கே யாகையாலும்,

(௩) ஶேஷத்வஜ்ஞாநகார்யாந்வய முள்ளதும் சேதநனுக்கேயாகையாலும்,

(௪) தத்ஸாதந ஸ்வரூபஸமர்ப்பண கர்த்ருத்வமுள்ளது சேதநனுக்கே யாகையாலும்,

(௩) தசநந்தரத்தில் ஸ்வரூபாநு ஸந்தாநத்தாலே லஜ்ஜாபயங்களுண்டாவதும் சேதநனுக்கேயாகையாலும்,

(௪) அகாரத்தில் சொன்ன ஸ்வாமித்வத்துக்கு ப்ரதிஸம்பந்தியான தாஸத்வமுள்ளதும் சேதநனுக்கேயாகையாலும்,

(௫) (தசநந்தரத்தில்) இப்பதந்தான் ப்ரணவத்துக்கு த்ருதீயாக்ஷரமாக வேண்டுகையாலும்.

ஆக, இப்படி ஶேஷத்வாஶ்ரய ப்ரதிபாதக பதம் சேதநைகாந்தமான மகாரமாகவேணும்.

ஆனாலிங்கு அசித்ஶேஷத்வம் சொல்லுகிறபடி யெங்ஙனேயென்னில்,

இவ்வாத்மாவைச் சொல்லுகிறபோது, ப்ரக்ருதேஃபரன் என்று அசித்தைச் சொல்லி அநந்தரம் சொல்லுகையால், இப்பதங்கள் போலே சொன்னவிடத்திலே அசித்தையும் சொல்லிற்றாகக்கடவது.

ஆஶ்ரயியாய் ஆநந்தத்தை முந்தறச் சொல்லுகிறந்யாயத்தாலும், அசித்ஶேஷத்வமுமிவ்விடத்திலே சொல்லிற்றாகக்கடவது.

இத்தால், அநந்யார்ஹதாஶ்ரயம் ஜ்ஞாந ஸ்வரூபஜ்ஞாநகுணகனான வாத்மாவென்றதாய்த்து; ஆஶ்ரயியான ஶேஷத்வத்தை முதல் சொல்லி ஆஶ்ரயமான ஜ்ஞாநாநந்தத்தைப்பின்பு சொல்லுவானேன்னென்னில்,

(௧) ஆஶ்ரயியான ஶேஷத்வத்தை யொழிய ஜ்ஞாநாநந்தம் அஸந்நேவ வாய்க்கிடக்கையாலும்,

(௨) புஷ்பத்துக்கு பரிமளத்தாலே ஶ்லாக்யதை யானாற்போலே இவ்வாத்மாவுக்கும் ஔஜ்ஜ்வல்யம் ஶேஷத்வத்தாலேயாகையாலும்,

(௩) நெருப்புப்பட்ட வகத்திலே யகப்பட்டு நின்றவனை நீரைச் சொரிந்துகொண்டு புறப்படப்படுத்துமாபோலே, அஹங்காரமாகிற அழலிலே யகப்பட்டுருவழிந்து கிடக்கிற வாத்மாவை அடியானென்றே யுணர்த்திக்கொண்டு (மிழி) அறியவேண்டுகையாலும்,

(௪) தன்னுண்ணிப்பகைபோலே அந்தராயமான ஆத்மாநுபவமாத்ரமான படுகுழியிலே விழாமைக்காகவும்.

ஆக, இப்படி ஆஶ்ரயியான ஶேஷத்வத்தையொழிய, ஆஶ்ரயமான ஜ்ஞாநஸ்வரூபனாய் ஜ்ஞாநகுணகனான வாத்மாவுக்கு ஸத்தையில்லாமையாலே, இவ்வந்தரங்கமான ஶேஷத்வத்தையே முற்படச் சொல்லிற்று.

இஶ்ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மாவினுடைய ஸ்வரூபம்—(௧) ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாஶமுமாய், (௨) ஆநந்தாத்மகமுமாய், (௩) ஸங்கோசவிகாஸாயோக்யமுமாய் (௪) அணுவாயிருக்குமென்னுமிடமும்; ஸ்வபாவம்—(௧) பரஸ்மைஸ்வயம்ப்ரகாஶமுமாய், (௨) ஆநந்தஜநகமு

மாய், (௩) ஸங்கோசவிகாஸயோக்யமுமாய், (௪) அவிநாசியாயிருக்கு மென்னுமிடமும், இதினுடைய உபப்ரஹ்மணங்களிலே கண்டுகொள்வது.

இதிற் சொன்ன லக்ஷணங்கள், மற்றுமிவ்வாத்மாவுக்குச்சொல்லும் லக்ஷணங்களெல்லாவற்றுக்கு முபலக்ஷணம்.

இதில் ஏகவசநம்—ஜாத்யேகவசநமாய், த்ரிவிதாத்மவர்க்கத்தையும் சொல்லுகிறது.

ஆக, இம்மகாரத்தால்—ப்ரக்ருதே:பரனாய், ஶேஷத்வாஶ்ரயமாய், ஜ்ஞாநாநந்தஸ்வரூபனாய், ஜ்ஞாநகுணகனான வாத்மாவைச் சொல்லுகிறது.

("மூன்றெழுத்ததனை") இத்யாதிப்படியே-அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவத்தில், ப்ரதமசரமங்களினாலே ஜீவபரர்களைச்சொல்லி நடுவே அவதாரணத்தைச் சொல்லுகையாலே ஜீவபரர்களிருவரையும் ஏகதத்வம் என்னலாயிருக்க பிரியச்சொன்னபடி யென்னென்னில்; ஏகாக்ஷரமான ப்ரணவத்தை அக்ஷரத்ரயாத்மகமாக ப்ரமாணங்களில் பிரித்தாப்போலே, ஏகதத்வம்போலே யிருக்கிற விவர்களையும் ப்ரமாணங்களாலே பிரிக்கக்கடவதித்தனை.

இப்படி, ஸ்வஸ்வரூபத்தை ஸ்வபாவதப்ருதக்ஸித்த விஶேஷணமென்றிருக்கையே ஸ்வரூபப்ராப்தம்; இந்தஜ்ஞானமே மோக்ஷவிஷயயோக்யம்.

இத்தால்—ஸ்வரூபவிஷயாந்யதாப்ரதிபத்தி நிவ்ருத்தியைச் சொன்னபடி.

இத்தால்—ஆத்மஸமர்ப்பணம் சொல்லிற்றாய்த்து; ராஜஹண்டாரத்துள்ளறையிலே களவுகொண்டு உபகரிப்பாரைப்போலேயிறே.

இத்தால் பழைய சௌர்யமழகியதென்னும்படியிறே ஆத்மஸமர்பணப்ரகார மிருக்கும்படி.

ஆனால் ஸமர்பணம் கூடும்படி யென்னென்னில்; இருக்கிற ஸம்ஸாரத்தில் கொடுமையாலும், பேற்றில் த்வரையாலும், ஸமர்பணம்பண்ணி யல்லது நில்லாதிறே சைதந்யஸ்வபாவம்.

ஆனால் ஸ்வரூபவிரோதமான ஸமர்பணம் பண்ணினவன் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் ப்ராயஶ்சித்தம் பண்ணவேண்டாவோவென்னில்; வேண்டா. எங்ஙனேயென்னில்; அந்யதாப்ரதிபத்தியான ஆத்மாபஹாரம் பண்ணினவன் ஸர்வபாபமும் பண்ணி தன்னையுமழித்துக்கொண்டாப்போலே யதாவத்ப்ரதிபத்தியான ஆத்மஸமர்ப்பணம்பண்ணினவனுக்கு ஸர்வப்ராயஶ்சித்தமும்கூடி ஸர்வப்ராயஶ்சித்தமும் பண்ணினானாகக்கடவன்.

அன்றியே, ஸ்வர்ணபஹாரம் பண்ணினவன் அபஹரித்தயநத்தைக்கொடுக்கத் தானுண்டாகையாலே ப்ராயஸ்சித்தம் பண்ணலாம். இங்குகொடுத்தது தன்னையாகையாலே ப்ராயஸ்சித்தம் பண்ணிகைக்கு தானில்லலமையால். ஸர்வப்ராயஸ் சித்தமும், ஸ்வரூபலாஹமும், ஆத்மஸமர்ப்பணமென்னுமிடமும் ப்ரமாணாந்தரங்களில் கண்டுகொள்வது.

ஸ்வரூபலாஹமே புருஷார்யமாகையாலே யிவ்விடத்திலே புருஷார்யஸ்வரூபம் சொல்லிற்றாய்த்து.

ஆக, ப்ரணவத்தால்- ஆத்மயாகம்சொல்லித் தலைக்கட்டித்து. ஆத்மயாகம் வந்தபடி யென்னென்னில்; நிருபாயிக தேவதா பரமாத்மா. நிருபாயிகம்ஹவிஃ ஆத்மா, நிருபாயிகோ யாகஃ- ஆத்மஸமர்பணம், நிருபாயிகோமந்த்ரஃ ப்ரணவஃ, நிருபாயிகபலம்-மோக்ஷஃ" என்று ப்ரமாணாந்தரங்கள் சொல்லுகையாலே.

ஆக, பதத்ரயாத்மகமான ப்ரணவத்தால் - அகாரவாச்யமான பரப்ரஹ்மத்துக்கு மகாரவாச்யமான ஜீவஸ்வரூபம் அநந்யார்ஹ ஶேஷமென்றதாய்த்து.

இனி, மந்த்ரஶேஷமுமிப்பதத்திலே விவ்ருதம்.

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

---

தனிப்ரணவம் முற்றிற்று.

அஷ்டாதஶ
ரஹஸ்யங்கள்
முற்றிற்று.

## * நிகமநப்படி.

### தனியன்.

ஸ்ரீமத்ரஹஸ்யராஜநகம் ஶ்ருதிஶிரஸ்ஸித்தம்
வேதாந்தாசார்ய ஸதஸ்ஸ்ரீ வேங்கடாசல
ஜ்ஞாநாதிராஜ தேஶிகேந்த்ர பாதா
தேஶிகேந்த்ர பாதா ஶரணம் ப்ரபத்யே॥

## திருமந்த்ரப்ரகரணம்.

திருமந்த்ரம், எட்டுத் திருவக்ஷரமாய் மூன்று பதமாயிருக்கும். எங்ஙனேயென்னில்?—'ஓம்' என்றும், 'நம:' என்றும், 'நாராயணாய' என்றும் மூன்றுபதமா யிருக்கும். அதில் முதற்பதம் ஏகாக்ஷரமான ப்ரணவம். இது அகாரமென்றும், உகாரமென்றும், மகாரமென்றும் மூன்றுபதமாயிருக்கும். இரண்டாம்பதம் நமஸ்ஸு. இது 'ந' என்றும், 'ம:' என்றும் இரண்டு திருவக்ஷரமாய், இரண்டு பதமாயிருக்கும். மூன்றாம்பதமான நாராயணபதம் அஞ்சு திருவக்ஷரமாய், 'நார' என்றும், 'அயந' என்றும் இரண்டு பதமாய், மேல் 'ஆய' என்று சதுர்த்தியாயிருக்கும்.

எம்பெருமானுடைய ஸர்வரக்ஷகத்வமும் ஸர்வஶேஷித்வமும் ஶ்ரிய:பதித்வமும் இவை, அகாரார்த்தம். அந்யஶேஷத்வ நிவ்ருத்தியும் ஸ்வஸ்வதந்த்ர்யார்ஹ ஶேஷத்வமும் இவை, உகாரார்த்தம். ஆத்மாவினுடைய ஜ்ஞாநாநந்தத்வமும், ஜ்ஞாநகுணகத்வமும், நித்யத்வமும், அணுத்வமும், ஏகரூபத்வமும், ஸ்வஸ்மைஸ்வயம் ப்ரகாஶத்வமும், ப்ரக்ருதே: பரத்வமும் இவை, மகாரார்த்தம்.

ஸ்வாஹங்கார மமகார நிவ்ருத்தியும், நிவ்ருத்தமான ஸ்வரூபத்தினுடைய அத்யந்த பாரதந்த்ர்யமும், பாரதந்த்ர்ய பராகாஷ்டையான ததீயஶேஷத்வமும், பரதந்த்ரனுக்கு அநுரூபமான உபாயத்வமும் இவை, நமஶ்ஶப்தார்த்தம்.

சேதநாசேதநங்களுடைய நித்யத்வமும், அவற்றினுடைய ஸமூஹத்வமும், ஸமூஹாஸங்க்யாதத்வமும் இவை, நாரஶப்தார்த்தம். ஈஶ்வரனுடைய ஆதாரகத்வமும், வ்யாபகத்வமும், நியந்த்ருத்வமும், ஸர்வவிஷய ஸம்பந்தத்வமும், ப்ராப்யத்வமும், ப்ராபகத்வமும், ஸகலஜகத்காரணத்வமும் இவை, அயநஶப்தார்த்தம். நித்யகைங்கர்ய ப்ரார்த்தனை - ஆயஶப்தார்த்தம்.

* பரந்தரஹஸ்யத்திற்கு நிகமந மாகையாலே நிகமநப்படி என்று பேர்பெற்றது.

எம்பெருமானை யொழிய ரக்ஷகாந்தரப்ரதிபத்தி நடையாடிற்றாகில், அகாரார்த்தம் நெஞ்சிற்பட்ட தில்லையாகக்கடவது. அந்யஶேஷத்வம் நடையாடிற்றாகில், உகாரார்த்தம் நெஞ்சிற்பட்டதில்லையாகக்கடவது. அநாத்மாவான தேஹத்தில் ஆத்மபுத்தி நடையாடிற்றாகில், மகாரார்த்தம் நெஞ்சிற்பட்டதில்லையாகக்கடவது. ஸ்வஸ்வாதந்த்ர்யமும், ஸ்வரக்ஷண ப்ரதிபத்தியும், ஸ்ரீவைஷ்ணவ ஸமத்வபுத்தியும், உபாயாந்தரமும் நடையாடிற்றாகில், நமஶ்ஶப்தார்த்தம் நெஞ்சிற்பட்ட தில்லையாகக்கடவது. ஈஶ்வரஶரீர பூதங்களான சேதநாசேதநங்களோடே ராகத்வேஷம் நடையாடிற்றாகில், நாரஶப்தார்த்தம் நெஞ்சிற்பட்ட தில்லையாகக்கடவது. அபந்துக்கள் பக்கலிலே பந்துத்வப்ரதிபத்தி நடையாடிற்றாகில், அயநஶப்தார்த்தம் நெஞ்சிற்பட்ட தில்லையாகக்கடவது. அபோக்யமான ஶப்தாதிவிஷயங்களிலே போக்யதாபுத்தி நடையாடிற்றாகில், ஆயஶப்தார்த்தம் நெஞ்சிற்பட்ட தில்லையாகக் கடவது.

திருமந்த்ரத்துக்குத் தாத்பர்யார்த்தம் எது? வாக்யார்த்தம் எது? ப்ரதாநார்த்தம் எது? அநுஸந்தாநார்த்தம் எது? என்னில்:—தாத்பர்யார்த்தம்—ஸகலவேதஶாஸ்த்ர ருசிபரிக்ருஹீதத்வம். வாக்யார்த்தம் - ப்ராப்ய ஸ்வரூப நிரூபணம். ப்ரதாநார்த்தம் - ஆத்மஸ்வரூப நிரூபணம். அநுஸந்தாநார்த்தம்- ஸம்பந்தாநு ஸந்தாநம்.

ஸம்பந்தமேது? என்னில் :— அகாரத்தாலே பிதாபுத்ர ஸம்பந்தஞ்சொல்லி, 'அவ-ரக்ஷணே' என்கிற தாதுவினாலே ரக்ஷ்யரக்ஷக ஸம்பந்தஞ்சொல்லி, லுப்தசதுர்த்தியாலே ஶேஷ ஶேஷி ஸம்பந்தஞ் சொல்லி உகாரத்தாலே பர்த்ருபார்யா ஸம்பந்தஞ் சொல்லி, மகார பதத்தாலே ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்பந்தஞ் சொல்லி, நமஃபதத்தாலே ஸ்வஸ்வாமி ஸம்பந்தஞ் சொல்லி, அயநபதத்தாலே ஆதார ஆதேய ஸம்பந்தஞ் சொல்லி, ஆயபதத்தாலே போக்த்ருபோக்ய ஸம்பந்தஞ்சொல்லி ஆக திருமந்த்ரத்தால் நவவித ஸம்பந்தஞ் சொல்லித்தலைக்கட்டுகிறது.

நைநாராச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

## த்வயப்ரகரணம்.

த்வயம், இரண்டுவாக்யமாய், ஆறுபதமாய் பத்தர்த்தமாய், இருபத்தஞ்சு திருவக்ஷரமா யிருக்கும். அதில் பூர்வவாக்யம் பதினஞ்சு திருவக்ஷரமாய், உத்தரவாக்யம் பத்துத்திருவக்ஷரமா யிருக்கும். எங்ஙனே? என்னில்:—'ஸ்ரீமந் நாராயண சரணௌ ஶரணம் ப்ரபத்யே' என்றும், 'ஸ்ரீமதே நாராயணாய நம:' என்றும் இரண்டுவாக்யமா யிருக்கும். 'ஸ்ரீமந்நாராயணசரணௌ' என்றும், 'ஶரணம்' என்றும், 'ப்ரபத்யே' என்றும், 'ஸ்ரீமதே' என்றும், 'நாராயணாய' என்றும், 'நம:' என்றும் ஆறுபதமாய், 'ஸ்ரீ' என்றும் 'மதுப்' என்றும்

'நாராயண' என்றும், 'சரணௌ' என்றும் 'ஶரணம்' என்றும், 'ப்ரபத்யே' என்றும், 'ஸ்ரீமதே' என்றும், 'நாராயண' என்றும், 'ஆய' என்றும் 'நம:' என்றும் பத்தர்த்தமா யிருக்கும்.

'ஸ்ரீ' என்கையாலே எம்பெருமானுக்கே மறுக்கவொண்ணாத பெரிய பிராட்டியாருடைய புருஷகாரத்வஞ்சொல்லி, 'மதுப்' என்கையாலே அப்புருஷகாரத்தினுடைய நித்யயோகஞ்சொல்லி, 'நாராயண' என்கையாலே இப்படி புருஷகாரபூதையான பெரியபிராட்டியார்தாம் குறைசொல்லிலும், "என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்" என்னும்படியான வாத்ஸல்யாதிகுணயோகஞ்சொல்லி, 'சரணௌ' என்கையாலே, அக்குணங்களுக்கும் பெரியபிராட்டியாருக்கும் ஆஶ்ரயணீயமான விலக்ஷணவிக்ரஹயோகஞ்சொல்லி, 'ஶரணம்' என்கையாலே அவ்விக்ரஹமே உபாய மென்னுமிடஞ்சொல்லி 'ப்ரபத்யே' என்கையாலே உபாயஸ்வீகாரம் பண்ணின அதிகாரியினுடைய அத்யவஸாயஞ்சொல்லி, 'ஸ்ரீமதே' என்கையாலே மிதுநமே ப்ராப்யமென்னுமிடஞ் சொல்லி, 'நாராயண' என்கையாலே எம்பெருமானுடைய ஸர்வஸ்வாமித்வஞ்சொல்லி, 'ஆய' என்கையாலே அவன் திருவடிகளிலே பண்ணும் வ்ருத்திவிஶேஷஞ்சொல்லி, 'நம:' என்கையாலே அவ் வ்ருத்திக்கு விரோதியான ஸ்வாஹங்கார மமகாரநிவ்ருத்தியைச் சொல்லித் தலைக்கட்டுகிறது.

த்வயத்துக்குத் தாத்பர்யார்த்தம் எது? வாக்யார்த்தம் எது? ப்ரதாநார்த்தம் எது? அநுஸந்தாநார்த்தம் எது? என்னில்:— தாத்பர்யார்த்தம் — ஆசார்யருசிபரிக்ருஹீதத்வம். வாக்யார்த்தம் - ப்ராபகஸ்வரூப நிரூபணம். ப்ரதாநார்த்தம் - மிதுநகைங்கர்யம், அநுஸந்தாநார்த்தம் - ஸ்வதோஷாநுஸந்தாநம். ஆக த்வய மிவ்வர்த்தத்தைச் சொல்லித் தலைக்கட்டுகிறது.

நைநாராச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

## சரமஶ்லோக ப்ரகரணம்.

சரமஶ்லோகம், இரண்டு வாக்யமாய்ப் பதினேருபதமாய், முப்பத்திரண்டு திருவக்ஷரமா யிருக்கும். எங்ஙனே? என்னில்:—'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ। அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாஶுச:' என்று இரண்டு வாக்யமாயிருக்கும். 'ஸர்வதர்மாந்' என்றும், 'பரித்யஜ்ய' என்றும், 'மாம்' என்றும், 'ஏகம்' என்றும், 'ஶரணம்' என்றும், 'வ்ரஜ' என்றும், 'அஹம்' என்றும், 'த்வா' என்றும், 'ஸர்வபாபேப்ய:' என்றும், 'மோக்ஷயிஷ்யாமி' என்றும், 'மாஶுச:' என்றும், பதினேருபதமா யிருக்கும்.

'ஸர்வதர்மாந்' என்கையாலே இதரோபாயங்களைச் சொல்லி, 'பரித்யஜ்ய' என்கையாலே இதரோபாய நிவ்ருத்தியைச் சொல்லி, 'மாம்' என்கையாலே, ஸம்யக்கான வுபாயஞ் சொல்லி, 'ஏகம்' என்கையாலே உபாயநைரபேக்ஷ்யஞ் சொல்லி, 'ஶரணம்' என்கையாலே உபாயத்வஞ் சொல்லி, 'வ்ரஜ' என்கையாலே உபாயஸ்வீகாரஞ்சொல்லி, 'அஹம்' என்கையாலே தன்னுடைய ஸர்வஶக்தித்வஞ் சொல்லி, 'த்வா' என்கையாலே உபாயஸ்வீகாரம் பண்ணின அதிகாரி ஸ்வரூபஞ் சொல்லி, 'ஸர்வபாபேப்⁴ய:' என்கையாலே ப்ராப்யப்ரதிபந்தகங்களைச்சொல்லி, 'மோக்ஷயிஷ்யாமி' என்கையாலே ப்ராப்ய ப்ரதிபந்தக நிவ்ருத்தியைச் சொல்லி, 'மாஶுச:' என்கையாலே நிர்ப⁴ரத்வாநு ஸந்தாநஞ்சொல்லித் தலைக்கட்டுகிறது.

சரமஶ்லோகத்துக்குத் தாத்பர்யார்த்தம் எது? வாக்யார்த்தம் எது? ப்ரதாநார்த்தம் எது? அநுஸந்தாநார்த்தம் எது? என்னில்:— தாத்பர்யார்த்தம்—ஶரண்யருசிபரிக்ருஹீதத்வம். வாக்யார்த்தம் - ப்ராபகஸ்வரூப நிருபணம். ப்ரதாநார்த்தம் - ஈஶ்வரஸ்வரூப நிருபணம். அநுஸந்தாநார்த்தம்- நிர்ப⁴ரத்வாநு ஸந்தாநம். ஆக சரமஶ்லோக மிவற்றைச்சொல்லித் தலைக்கட்டுகிறது.

நைநாராச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

* நிகமநப்படி முற்றிற்று.

---

* ரஹஸ்யமும் நைநாராச்சான்பிள்ளையே யருளிச்செய்தது. திருமந்த்ரார்த்த வ்யாவ்யாநாதிகளில் விஶதம். ஆச்சான்பிள்ளை என்பது யிவரையே. பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்ததாகில் தத்வத்ரயாதிகளிற்போ லிவ்விடத்திலும் பெரியவாச்சான் பிள்ளை என்றே அருளிச்செய்யலாம். நைநாராச்சான்பிள்ளை என்றே ஸம்ப்ரதாயம்.

𑌕 𑌖 𑌗 𑌘 𑌙

क ख ग घ ङ

𑌚 𑌛 𑌜 𑌝 𑌞

च छ ज झ ञ

𑌟 𑌠 𑌡 𑌢 𑌣

ट ठ ड ढ ण

𑌤 𑌥 𑌦 𑌧 𑌨

त थ द ध न

𑌪 𑌫 𑌬 𑌭 𑌮

प फ ब भ म

𑌶 𑌷 𑌸

श ष स

𑌹 𑌕𑍍𑌷

ह क्ष

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
|---|---|---|---|---|---|---|---|---|
| ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௮ | ௯ |